# சுவடிச் சுடர்


பதிப்பாசிரியர்கள்

முனைவர் தி. மகாலட்சுமி

முனைவர் சு. நிர்மலாதேவி

திரு. த. பூமிநாகநாதன்






INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை - 600 113

# சுவடிச் சுடர்

பதிப்பாசிரியர்கள்

முனைவர் தி. மகாலட்சுமி

முனைவர் சூ. நிர்மலாதேவி

திரு. த. பூமிநாகநாதன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
சி.ஐ.டி. வளாகம், தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Cuvaṭic Cuṭar |
| Editors | : | Dr. T. Mahalakshmi,<br>Dr. S. Nirmala Devi &<br>Thiru. D. Boominaganathan<br>International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai - 600 113. |
| Edition | : | First |
| Date of Publication | : | 2001 |
| Publication No. | : | 401 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | xxviii + 508 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 120/- |
| Printed by | : | United Bind Graphics<br>189, (101-D), Royapettah High Road<br>Mylapore, Luz, Chennai - 600 004 |
| Subject | : | Manuscriptology |

**முனைவர் ச.சு. இராமர் இளங்கோ**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை *600 113*

# அணிந்துரை

பொருப்பிலே பிறந்து தென்னன்
புகழிலே கிடந்து, சங்கத்(து)
இருப்பிலே யிருந்து, வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர்
நினைவிலே நடந்து ஓரேன
மருப்பிலே பயின்ற பாவை

என்று வில்லிபாரதம் தமிழின் பெருமையை எடுத்துரைக்கிறது. அத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழ் மொழியில் இலக்கியம், இலக்கணம், நிகண்டு முதலியவை தொன்மைக் காலத்தில் பனையோலையில் எழுதப்பட்டன. பனை ஓலையில் எழுதி வைத்தால் *300* ஆண்டுகள் கெடாமல் இருக்கும் என்பதாலேயே நம் முன்னோர்கள் பனை ஓலையைப் பெரிதும் பயன்படுத்தினர்.

அச்சுப்பொறி தமிழுக்கு அறிமுகமானவுடன் பனை ஓலையில் இருந்தவை அச்சு வடிவம் பெற்றன. ஆயின் பனை ஓலையில் எழுதப்பட்டவை அனைத்தும் அச்சிடப்பட்டன என்று சொல்லமுடியாது.

இன்னும் தமிழில் அச்சுவடிவம் பெறாத பனைஓலைச் சுவடிகள் உலகெங்கும் பல உள. அவை இலக்கியம், இலக்கணம், நிகண்டு, சிற்றிலக்கியம், வரலாறு, கணிதம், நாட்டுப்புறவியல் எனப் பல்வகையின.

இந்நிறுவனம் சுவடியியல் பட்டய வகுப்பினை *1979* ஆம் ஆண்டுத் தொடங்கி தொடர்ந்து நடத்தி வருகிறது. சுவடிகள் இங்குச் சேர்க்கப்படுகின்றன.

முனைவர் கு. நிர்மலாதேவி கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ள தமிழ் சுவடிகளைத் தொகுத்து "தமிழ்ச் சுவடிகள் (அட்டவணை)" என்ற சுருக்க அட்டவணையையும், "கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக விளக்க அட்டவணை தொகுதி-*1*" என்ற மற்றொரு நூலையும் வெளியிட்டுள்ளார்.

இதே போலச் சென்னையில் உள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ள பல்வேறு சுவடிகளைத் தொகுத்து *4* பகுதிகளாக

முனைவர் ஆ. தசரதன், திரு. மொ. மருதமுத்து, திரு. மூ. பரிமணம் ஆகியோர் நூலாக்கம் செய்துள்ளனர்.

நிறுவனத்தில் இருக்கும் சுவடிகளைப் பற்றி விளக்க அட்டவணைய் (மூன்று தொகுதிகள்) இந்நிறுவனத்தில் பணிபுரியும் முனைவர் தி. மகாலட்சுமி எழுதியுள்ளார்.

இந்நிறுவன வாயிலாக 'சின்ன மகிபன் குளுவ நாடகம்', வண்டுவிடு தூது, மனைநூல், பிரபந்த தீபிகை, திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், சித்தமருத்துவ மணிகள், முத்தாரம்மன் கதை, எட்டையபுரப்பள்ளு, கண் மருத்துவம், மூலிகை கற்பம், காசிவிசுவநாத சதகம் ஆகிய நூல்கள் முனைவர் ஏ.என். பெருமாள், திரு. மு.கோ. ராமன், முனைவர் பூ. சுப்பிரமணியன், முனைவர் அன்னிதாமசு, முனைவர் ச. சிவகாமி, முனைவர் தி. மகாலட்சுமி, முனைவர் சூ. நிர்மலாதேவி, திரு. த. பூமிநாகநாதன், முனைவர் மாதவன், முனைவர் சத்தியபாமா, முனைவர் இராஜேஸ்வரி ஆகியோரால் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

மேலும் சுவடிகள் தொடர்பான விழிப்புணர்வை ஆய்வாளர் களிடையே ஏற்படுத்தப் பயிலரங்குகளையும், கருத்தரங்குகளையும் இந்நிறுவனம் நடத்தி வருகிறது.

'சுவடிச் சுடர்' எனும் தலைப்பில் அமைந்த இந்நூல் சுவடிப்புலம் நடத்திய கருத்தரங்குகளில் படிக்கப்பட்ட கட்டுரைகளின் தொகுப்பாகும். இந்நிறுவனமும், தஞ்சையில் உள்ள சரசுவதி மகால் நூலகமும் இணைந்து *1997* ஆம் ஆண்டு சனவரி *2, 3, 4* ஆகிய நாட்களில் நடத்திய தேசியக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட *32* கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இக்கருத்தரங்கக் கட்டுரைகளை முனைவர் தி. மகாலட்சுமி, முனைவர் சூ. நிர்மலாதேவி, திரு. த. பூமிநாகநாதன் ஆகியோர் நூலாகப் பதிப்பித்துள்ளனர். அவர்களுக்கு நன்றி. இணைந்து நடத்திய சரசுவதி மகால் நூலகத்தார்க்கும் நன்றி.

நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி அமைச்சர் முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை மற்றும் அறநிலையத்துறை செயலாளர் திரு. பி.ஏ. இராமையா, இ.ஆ.ப. அவர்களுக்கும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறைக் கூடுதல் செயலாளர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை நன்கு அச்சிட்டுத்தந்த யுனெடெட் பைண்டிங் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

**இயக்குநர்**

# பொருளடக்கம்

# கட்டுரைத் தலைப்புகள்

சுவடி அட்டவணை



இலக்கியம்



வரலாறு



மொழி

பொது

# ஆசிரியர் பெயர் அகரவரிசை

1. இராசகோபால், சு., கல்வெட்டாய்வாளர், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.
2. இராசு, செ., தமிழ்ப் பல்வலைக் கழகம், தஞ்சாவூர்.
3. இராஜலட்சுமி, எஸ்., வடமொழிப் பண்டிதர், சரசுவதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர்.
4. சூ. இன்னாசி, முன்னாள் பேராசிரியர், கிறித்தவ இலக்கியத் துறை, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.
5. கலீலுல்லா, ஆசிரியர், மியாசி மேல்நிலைப் பள்ளி, சென்னை.
6. கிருஷ்ணமூர்த்தி, A., ஓய்வுபெற்ற பேராசிரியர், தஞ்சாவூர்.
7. கோவைமணி, மோ.கோ., ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.
8. சத்தியபாமா, மா., தமிழ் விரிவுரையாளர், அரசுக் கல்லூரி, தஞ்சாவூர்.
9. சீனிவாசன், என்., சமஸ்கிருதப் பண்டிதர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.
10. சுந்தரமூர்த்தி, இ., தமிழ்ப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.
11. சுப்பிரமணியம், பூ, சுவடித் துறை, ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை.
12. செல்வரங்கம், சு., சித்த மருத்துவர், சென்னை, மாநகராட்சி.
13. செளந்தரபாண்டியன், எஸ்., காப்பாட்சியர், அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், சென்னை.
14. தசரதன், ஆ., சென்னை.
15. திலகம், ச., தமிழ்ப் பண்டிதர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.
16. நாகராசன், ப.வெ.,
17. நிர்மலாதேவி, சூ., இலக்கியம் மற்றும் சுவடிப்புலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.
18. பழநிச்சாமி, கா., சித்த மருத்துவ அலுவலர், அறிஞர் அண்ணா அரசினர் இந்திய முறை, சென்னை.
19. பாரதராஜா, ஆ.இரா., தமிழ் ஆசிரியர், வேளாங்கன்னி மெட்ரிகுலேசன் மேனிலைப்பள்ளி, சென்னை-83.
20. பாலசுப்பிரமணியன், குடவாயில்., சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

21. பூமி நாகநாதன், த., இலக்கியம் மற்றும் சுவடிப்புலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

22. பெருமாள், ப., காப்பாளர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

23. மகாலட்சுமி, தி., இலக்கியம் மற்றும் சுவடிப் புலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

24. மணிகண்டன், ய., தமிழ்ப் பண்டிதர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சை.

25. மதிவாணன், பா., தமிழ் விரிவுரையாளர், கரந்தைக் கலைக் கல்லூரி, தஞ்சாவூர்.

26. மாதவன், வே.இரா., ஓலைச் சுவடித் துறை, சுவடிப்புலம், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

27. Mohanvelu, C.S., Professor, History Department, Presidency College, Madras.

28. ரங்கராசன், ச., சித்த மருத்துவர், தஞ்சாவூர்.

29. வாசுகி, சா., சித்த மருத்துவர், சென்னை.

30. விசுவநாதன், நா., முன்னாள் தெலுங்குப் பண்டிதர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

31. விவேகானந்த கோபால், இராக., சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

32. ஜெயராஜ், வே., அருங்காட்சியகம், சென்னை.

# பதிப்பாசிரியர் முன்னுரை

பழங்காலம் முதல் எழுதப்படும் பொருட்களாகக் கல், களிமண் பலகை, உலோகம், மரப்பட்டை, தோல், மரம், தந்தம், சங்கு, சிப்பி, துணி, பாப்பிரைஸ் என்ற ஒருவகைக் கோரைப்புல், ஓலை போன்றன பயன்படுத்தப் பட்டிருக்கின்றன. கி.மு. நூற்றாண்டு தொடங்கிக் கடந்த 60 ஆண்டுகளுக்கு முன்பு வரையும் தமிழகத்தில் பனை ஓலைகள் எழுதப் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. ஏறத்தாழ 300 ஆண்டுகள் வரையும் பாதுகாப்பாக வைக்கப்பெற்றால் கெடாதவை என்ற நிலையில் பனை ஓலைகள் மிகுதியும் பயன்படுத்தப்பட்டன எனலாம்.

அச்சு எந்திரம் கண்டறியப்பட்ட பின்னர், அச்சுக் கலையானது இந்தியாவிற்குள் நுழைந்தது 6.9.1556ஆம் ஆண்டு எனக் குறிப்புக் கிடைக்கிறது*. தொடக்கத்தில் கிறித்தவ மதத்தைப் பரப்புவதற்காக மதப் பிரசுரங்களை அச்சிட்டு வெளியிடத் தொடங்கினர். தமிழறிஞர்கள் சுவடிகளில் மக்கி மடிந்து கொண்டிருக்கும் தமிழ் நூல்களையும் அச்சேற்றிக் கரை சேர்த்துவிடத் துடியாய்த் துடித்தனர். அச்சு நூலாக்கி விட்டால் காலத்தாலும், கரையானாலும், அறியாமையாலும் அழிந்துகொண்டிருக்கும் தமிழ்ப் புதையல்களைக் காப்பாற்றிவிடலாம் என்ற பெரு நம்பிக்கையுடன் செயல்படத் தொடங்கினர். இந்த வகையில் முதன்முதலாக அச்சு வாகனம் ஏறிய பெருமையை உலகத் திருமறையாம் திருக்குறள் பெற்றது. 1812ஆம் ஆண்டில் வெளிவந்த திருக்குறள் பதிப்பு இன்று நமக்குக் கிடைக்கும் இலக்கிய நூல்களுள் முதல்

---

* அச்சும் பதிப்பும், மா.சு. சம்பந்தன், 1980, பக்.31.

பதிப்பாகக் கருதப்பெறுகின்றது. இப்பதிப்பு மரவெழுத்தால் அச்சடிக்கப்பெற்றது. பழந்தமிழ்ப் பதிப்பாசிரியர்களாலும் தமிழ்ச் சுவடிப் பதிப்பு முன்னோடிகளின் முயற்சியாலும், இவர்களின் வழிவந்த பிற பதிப்பாசிரியர்களாலும், பல தமிழ்ச் சுவடிகள் பதிப்பித்து நூல் வடிவில் வெளிக் கொணரப் பெற்றன. சங்க இலக்கிய, காப்பியப் பதிப்பு வெளியீடுகள் தமிழின் பரந்து, விரிந்த எல்லையை வெளிக்காட்டின. தமிழ் இலக்கியம் ஆழ்ந்தது, அகன்றது என்ற எண்ணம் வேரூன்றத் தொடங்கியது.

என்றாலும் இதுவரையும் தமிழில் வெளிவந்த சுவடிப்பதிப்புகள் 21 விழுக்காடு என்றும் 70 விழுக்காடுடைய சுவடிகளுக்கு மேல் அச்சில் வெளிக்கொணரப் பெறாதவை என்றும் தெரியவருகின்றது. வெளிவராத சுவடிகளை வெளிக் கொண்டு வருதல், வெளிவந்த சுவடிப் பதிப்புகளை ஆராய்தல் என்ற நோக்குகளில் சுவடிப் பயிலரங்குகள், சுவடிக் கருத்தரங்குகளைத் தனியார், அரசு நிறுவனங்களும், பல்கலைக் கழகங்களும், சுவடி நூலகங்களும் மேற்கொண்டு வருகின்றன. இத்தகு நன் முயற்சிகளின் ஒரு முன் முயற்சியாகவே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும், தஞ்சை சரசுவதி மகால் நூலகமும் இணைந்து ஒரு தேசியக் கருத்தரங்கை நடத்தின.

1997ஆம் ஆண்டு ஜனவரி 2,3,4ஆம் தேதிகளில் இக் கருத்தரங்கு இந்த நிறுவனக் கட்டிட வளாகத்தில் நடைபெற்றது. 5 அமர்வுகளில் 132 கட்டுரைகளை அறிஞர் பெருமக்கள் அரங்கில் படித்துத் தம் கருத்துக்களைப் பகிர்ந்து கொண்டனர். சுவடிப்பதிப்பு வரலாறு, சுவடி அட்டவணை, இலக்கியம், வரலாறு, மொழி, சித்தமருத்துவம், நாட்டுப் புறவியல் மற்றும் சுவடி தொடர்பான பொது, சிறப்புக் கூறுகளை வெளிப்படுத்தும் வகையினவாக அக்கட்டுரைகள் அமைந்திருந்தன. படித்த கருத்துகள் காற்றோடு கலந்து மறைந்து போய்விடாமல் தமிழ் மக்கள் நெஞ்சங்களில் வாழ்ந்து சிந்தனைக்கு விருந்து படைப்பனவாய்த் திகழ வேண்டும் என்ற நன்னோக்கத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இக்கருத்தரங்கக் கட்டுரைகளைத் தற்போது நூலாக வெளிக்கொண்டு வருகின்றது. சுவடிச் சுடர் என்ற பெயரில் நூல் வெளியிடப் பெறுகின்றது.

கட்டுரைகளின் மையக் கருத்துக்கள் கீழே தரப் படுகின்றன.

## *TAMIL PALMLEAVES IN GERMANY*

*Dr. C.S. Mohanavelu*

ஜெர்மனியில் உள்ள நூலகங்களில் இடம்பெற்றுள்ள தமிழ்ச்சுவடிகள் எவையெவை என்ற விளக்கத்தைத் தருவதாகக் கட்டுரை அமைந்துள்ளது. முன்னூறு ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டுக்கு வந்த ஜெர்மானியர் ஓலைகளில் எழுதப்பட்டுள்ளவற்றை அரிய கருவூலங்களாகக் கருதி விலைகொடுத்தும், செல்வாக்கினாலும் பெற்றுத் தங்கள் நாட்டுக்குக் கொண்டு சென்றுள்ளனர். ஜெர்மனியிலுள்ள சுவடிகளில் குறிப்பிடத் தக்கவைகளாகத் திருப்பல்லாண்டு, திவ்யபிரபந்தம், திருவாய்மொழி, திருவந்தாதி, மகாபாரதம் போன்றன உள்ளன எனக் கட்டுரையாளர் குறிப்பிடுகின்றார். சுவடிகள் தொடர்பான ஆய்வுகள், பதிப்புகளை மேற் கொள்பவர்கள் வெளிநாடுகளிலுள்ள இத்தகு சுவடிகளையும் கணக்கில் கொண்டு பயன்படுத்திக் கொண்டால் அத்தகு ஆய்வும், பதிப்பும் முழுமை பெற்றதாக அமையும் என்பதில் ஐயமில்லை.

## பெரியபுராணம் சுவடிவழி ஆய்வுப் பதிப்பிற்கான வாய்ப்பு

*பா. மதிவாணன்*

பெரியபுராணப் பதிப்புகளைக் கால வரிசைப்படி, சுவடி ஆதார நோக்கில் தேவையான சில எடுத்துக் காட்டுகளுடன் அறிமுகப்படுத்திப் புதியதோர் ஆய்வுப் பதிப்பிற்கான வாய்ப்பைச் சுட்டிக்காட்டுவதாகக் கட்டுரை அமைந்துள்ளது. இதுவரையும் பெரியபுராணத்தைப் பதிப்பித்தவர்கள் குறித்தும் பதிப்பகங்கள் மூலமாக வெளிவந்த பெரியபுராணப் பதிப்புகள் குறித்தும் திறனாய்வு செய்வதாக இக்கட்டுரை அமைந்துள்ளது. மழவை மகாலிங்கையர், காஞ்சீபுரம் சபாபதி முதலியார், திருமயிலை சுப்பராய ஞானியார், சிதம்பரம் இராமலிங்கம்பிள்ளை, யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், யாழ்ப்பாணம் சதாசிவப்பிள்ளை, ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள், சுப்பராய

நாயகம், திருமயிலை செந்தில்வேலு முதலியார், திரு.வி.க., ஆலாலசுந்தரம் பிள்ளை, சி.கே. சுப்பிரமணிய முதலியார் ஆகியோர் பதிப்பித்து வெளியிட்ட பெரியபுராணப் பதிப்புகள் குறித்தும் சைவசித்தாந்த மகாசமாஜம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருவாவடுதுறையாதீனம், வர்த்தமானன் பதிப்பகம், சேக்கிழார் ஆராய்ச்சி மையம் ஆகிய பதிப்பகங்கள் வெளியிட்ட பெரியபுராணப் பதிப்புகள் குறித்தும் கட்டுரை திறனாய்வு செய்துள்ளது. மேலும் சுவடிவழிப் பதிப்புக்கான வாய்ப்பு உள்ளதைக் கட்டுரை வலியுறுத்துகின்றது.

### அகத்துறை வண்ணப்பதிப்பு

**புலவர் ப.வெ. நாகராசன்**

இக்கட்டுரை யாப்பு வகைகள் வளர்ந்து, ஓசை வகைகள் சிறப்பாக இனங்காணப்பெற்ற பிறகு தோன்றிய யாப்பு வகை ஆகிய வண்ணம் பற்றி விளக்குகிறது. இலக்கணச் சூடாமணி கூறும் வண்ண இலக்கணம், அகப்பொருள் வண்ணம் குறித்த சிறப்பு நோக்கு, 201 வண்ணங்களைப் பற்றிய செய்தித்தொகுப்பு, வண்ணப்பதிப்புகள், பதிப்பாசிரியர்கள் பற்றிய விளக்கங்கள், வண்ணப்பாடல்கள் அச்சேறும்போது எழும் சிக்கல்கள் என்ற முறையில் கட்டுரை விளக்கங்கள் தருகின்றது.

### அயல்நாடுகளில் தமிழ்ச் சுவடிகள்

**முனைவர் வே.இரா. மாதவன்**

உலகெங்கும் தமிழ்ச் சுவடிகள் பரவிக் கிடக்கின்றன. பாரிசு, இலண்டன், ஸ்காட்லாந்து கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழக நூலகம், ஆக்ஸ்போர்டு, ரோம், டென்மார்க், கிழக்கு ஜெர்மனி, ஸ்வீடன், சோவியத் யூனியன் ஆகிய இடங்களிலுள்ள தமிழ்ச் சுவடிகள் பற்றிய விவரங்களைக் கட்டுரை விளக்கிக் கூறுகிறது. பாரீசு தேசீய நூலகத்திலுள்ள வீரமாமுனிவரின் சுவடிகள், திருக்குறள் முதல் இரண்டு பால்களுக்குரிய உரைச்சுவடி, வீரமாமுனிவரின் தமிழ்-இலத்தீன் இலக்கணச் சுவடிகளின் பல பிரதிகள், இலக்கியச் சுவடிகள், அகராதிகள், மத நூல்கள், வரலாற்றுச் சுவடிகள், தமிழ் இலக்கியங்களின் பிரெஞ்சு மொழிபெயர்ப்புச் சுவடிகள்,

சோதிடம், மருத்துவச் சுவடிகள் போன்றன குறித்துக் கட்டுரை விரிவான குறிப்புகள் தருகிறது. இதுபோன்ற பிற இடங்களிலுள்ள சுவடிகள் குறித்த விளக்கங்களும் இடம்பெற்றுள்ளன.

### முத்திரை ஓலைகள்
#### முனைவர் செ. இராசு

கட்டுரைத் தொடக்கத்தில் ஓலை ஆவணங்கள் என்ற நிலையில் வரலாற்று முக்கியத்துவம் உடைய ஓலைச் சுவடிகள் குறித்த விளக்கங்கள் அமைந்துள்ளன. ஓலை ஆவணங்களுள் முத்திரை ஓலைகள் குறித்து கட்டுரை விவரித்துள்ளது. முத்திரை இல்லாத வெற்று ஓலை ஆவணங்கள் வழக்கிலிருந்தமை, முத்திரைகள் கொண்ட ஓலை ஆவணங்களின் அமைப்புகள், சிறப்புகள், உள்ளடக்கங்கள், இவை விற்கப்பட்ட முறைகள், இவற்றிலமைந்துள்ள எழுத்து வடிவங்கள், மொழிநடை, கையெழுத்துகள், பதிவு செய்த முறை என்பன பற்றிச் சான்றுகளுடன் கட்டுரை விவரிக்கிறது.

### தமிழகத்தில் மலர்ந்த தெலுங்குச் சுவடிகள்
#### பண்டிதர் நா. விசுவநாதன்

தமிழகத்தில் தெலுங்குச் சுவடிகள் எழுதத் தொடங்கப்பட்ட காலகட்டம், தஞ்சை நூலகத்தில் இடம் பெற்றுள்ள தெலுங்குச் சுவடிகளின் எண்ணிக்கைகள், சில முக்கியமான தெலுங்குச் சுவடிகள் குறித்த விளக்கங்கள் இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளன. தெலுங்கு மொழியில் அமைந்துள்ள தமிழ்ப் புராணங்கள் பற்றிய குறிப்புகள், தேவார மூவர் போன்று திருக்கோயில்கள் தோறும் பாடிய சகஜி பற்றிய கருத்துகள் மற்றும் தியாகராச விலாசம், மன்னாருதாச விலாசம் பற்றிய செய்திகள், பாவைக்கூத்து என்ற பொம்மலாட்டம் பற்றிய தெலுங்குச் சுவடித் திறனாய்வு ஆகியவற்றை இக்கட்டுரை உள்ளடக்கியுள்ளது.

### மோடிப் பலகணி ஆவணங்கள் - ஓர் ஆய்வு
#### திரு. இராக. விவேகானந்த கோபால்

மோடி எழுத்துகள் எவை?, இவற்றை உருவாக்கியவர் யார்? இவை யாரால், எக்காலக் கட்டத்தில் பயன்படுத்தப் பட்டன? என்ற வினாக்களுக்கு விடைகளாகக் கட்டுரையின்

முற்பகுதி அமைந்துள்ளது. அடுத்ததாக மோடி ஆவணங்கள், தமிழ் ஆவணங்கள் குறித்த விளக்கமும், இதுவரை வெளியான மோடி ஆவணங்கள் பற்றிய குறிப்புகளும் தரப்பட்டுள்ளன. இக்கட்டுரையின் மையப் பொருளாக C-78-லிருந்து பிரித்தெடுக்கப்பட்ட, வெளிவராத 22 ஆவணங்கள் குறித்த ஆய்வு அமைந்துள்ளது. இந்த 28 ஆவணங்களுள் அமைந்துள்ள வழக்குகள், அரச ஆணைகள், உடன்படிக்கைகள், விண்ணப்பங்கள், பட்டியல்கள், கடிதத் தொடர்பு ஆவணங்கள், பொதுச் செய்திகளைக் கூறும் ஆவணங்கள் என்ற பொருண்மை கொண்ட ஆவணங்கள் பற்றிய ஆய்வை இக்கட்டுரை மேற்கொண்டுள்ளது.

## சரசுவதி மகால் நூலகத்தில் காணப்பெறும் தமிழ்மொழித் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள்

**வித்துவான் என். சீனிவாசன்**

சரசுவதி மகால் நூலகத்தில் இடம்பெற்றுள்ள 40,000 வடமொழிச் சுவடிகளுள் தமிழ்மொழித் தொடர்புடைய சுவடிகள் குறித்து இக்கட்டுரை பேசுகிறது. ஒப்புமையுடைய இலக்கணச் சுவடிகளும், பெரியபுராணம், திருவாய்மொழி என்ற தமிழிலக்கிய ஒப்புமைச் சுவடிகளும், பிறமொழி எழுத்துகளில் அமைந்த விஷ்ணு சாகராஜ விலாசம், மோகினி விலாஸ குறவஞ்சி போன்ற 8 சுவடிகள் குறித்தும், வடமொழி நூலுக்குரிய தமிழுரைச் சுவடிகள் பற்றியும் இக்கட்டுரை குறிப்புகள் தருகின்றது.

## சுவடிகளில் காணும் தாய்சேய் நோய்களும் மருத்துவமும்

**மருத்துவர் சு. செல்வரங்கம்**

மகளிர் நோய்களான பூப்புத் தொடர்பான நோய்கள், உறுப்புத் தொடர்பான நோய்கள், மகப்பேறு தொடர்பான நோய்கள் குறித்த அறிகுறிகள், விளக்கங்களுடன் இந்நோய்கள் நீங்குவதற்கான சித்த மருத்துவ மருந்துச் சரக்குகள், விவரங்கள் தரப்பட்டுள்ளன. குழவிப் பருவ நோய்களான கிரந்தி, தோடம், மாந்தம், கணம் முதலியவற்றின் அறிகுறிகள், பாதிப்புகள் குறித்தும், இவற்றை நீக்குவதற்கான சித்த மருந்துச் சரக்குகள் குறித்தும் இக்கட்டுரை விளக்குகின்றது.

## தமிழக வரலாறு மற்றும் கலைத் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள்

பண்டிதர் எஸ். இராஜலட்சுமி

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள வடமொழிச் சுவடிகளை இயற்றியவர்கள் தஞ்சைத்தரணியில் பிறந்து வாழ்ந்தவர்களாகவும், தமிழகத்தைச் சேர்ந்தவர்களுமாக இருந்தனர். எனவே அவர்களது வடமொழிச் சுவடிப் படைப்புகளில் தமிழகத்தின் வரலாறு, கலை, பண்பாட்டின் தாக்கங்கள் காணப்பட்டன. இவற்றை அடையாளம் காட்டுவதாக இக்கட்டுரை அமைந்துள்ளது. வடமொழிச் சுவடிகள் குறிப்பிடும் தஞ்சை மராட்டிய மன்னர்களின் போர்கள் குறித்த விவரங்களும், தஞ்சை அரண்மனையைப் பற்றிய செய்திகளும், தமிழ்ப் பண்பாடு தொடர்பான செய்திகளும், மருத்துவச் செய்திகளும் இத்தகு செய்திகளை உள்ளடக்கிய வடமொழிச் சுவடிகள் எவ்வெவை என்பதும் கட்டுரையில் விவரிக்கப் பெற்றுள்ளன.

## சுவடிப் பதிப்பு வரலாறு (1950 வரை)

முனைவர் பூ. சுப்பிரமணியம்

அச்சுப்பொறி வந்த காலத்தில் இருந்து பதிப்பிற் காணும் நெறிமுறைகள் பற்றிய கருத்துகளை ஆய்வு முறையில் தொகுத்துக் கூறும் இக்கட்டுரையில் சுவடிப் பதிப்பு வரலாறு இரண்டு நிலைகளில் ஆராயப்படுகிறது. 1. நூல் பதிப்பாசிரியர் என்னும் காலநிலை வரலாற்று வரிசை 2. பதிப்பு முறைகளின் வளர்ச்சி நிலை என்னும் வரலாற்று வரிசை. மேலும் பதிப்பு வரலாறு, கருத்துப் பதிவு, அச்சுக்கலை, தமிழகத்தில் அச்சுக் கலை, தமிழில் அச்சுநூல் என்ற வகையில் பதிப்பு வரலாறும், சுவடிப்பதிப்பு - கால வரலாறு என்ற பொருண்மையில் தமிழில் பதிப்பிக்கப்பெற்ற திருக்குறள், நாலடியார், தொல்காப்பியம், காப்பியங்கள், சங்க நூல்கள் முதலியனவும் ஆராயப்பட்டுள்ளன. பதிப்பு முறை வரலாறு என்ற பகுதியில் திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் தொடங்கிப் பல்வேறு அறிஞர்களின் பதிப்புகள் ஆய்வு நோக்கில் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன. இறுதியில் பதிப்பு முறை எவ்வாறெல்லாம் செழுமைப்படுத்தப்பட வேண்டும் என்ற குறிப்போடு கட்டுரை நிறைவடைகிறது.

## சீவகசிந்தாமணிப் பதிப்புகள்

### முனைவர் தி. மகாலட்சுமி

காப்பிய நூல்களுள் ஒன்றான சீவகசிந்தாமணியின் பதிப்பு வரலாற்றின் நெடிய பயணத்தைச் சுருக்கி ஒரு வரைபடமாகக் காட்டுவதே இக்கட்டுரையின் கருவாகும். சமாஜப் பதிப்பு, பவர் பதிப்பு, தி.க. சுப்பராயச் செட்டியார் பதிப்பு, உ.வே. சாமிநாதையர் பதிப்பு ஆகிய பதிப்புகளிடையே காணப்பெறும் ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் கூறுவதோடு அவ்வப் பதிப்பின் தனித்த வரலாறுகளும் எடுத்தியம்பப்பட்டுள்ளன. மேலும் இந்நூல் சார்ந்த வேறுசில பதிப்புகளில் பதிப்பாண்டுகள் அறிய முடியாதபடி உள்ள பதிப்புச் செய்திகளை உள்வாங்கியும், முழுமைப் பதிப்பாக வெளிவந்த உ.வே.சா. பதிப்பு பற்றிய சிறப்புகளையும், தனித்தனி இலம்பகங்களாக வெளியிட்ட சைவ சித்தாந்தக் கழகத்தின் தமிழ்ப்பணி குறித்தும் இக்கட்டுரையில் விரிவாகப் பேசப்பெற்றுள்ளது. இப்படி ஒரு நூலைப் பற்றி முழுமையாக ஆராயும்போது, பதிப்பு வரலாறு, வளர்ச்சி, தேக்க நிலைகள் போன்ற செய்திகளை அறிந்துகொள்ள ஏதுவாக அமைவதோடு அவ்வகையில் அமைந்த குறைபாடுகளைத் தெளிவு செய்வதற்கான முயற்சிகளை நாம் கண்டறியவும் இத்தகைய ஆய்வுகள் பயன்படுகின்றன என்ற கருத்தோடு கட்டுரை முடிவடைகிறது.

## பதிப்பு நெறி

### முனைவர் இ. சுந்தரமூர்த்தி

இக்கட்டுரையில் தொடக்கக் காலத்தில் இருந்து காணப்படும் பதிப்பு நெறிமுறைகள் பற்றிக் கூறப் பெற்றுள்ளது. தொன்மையான பழஞ்சுவடிகளைப் பதிப்பித்தலே தொடக்கக் காலத்தில் முதன்மையான பணியாக அமைந்தது. முன்னையோரின் இப்பதிப்புப் பணியே இன்றைய ஆய்வுப் பணிக்கு வித்திட்டது. தமிழ்ப் பதிப்புப் பணியில் தலைசிறந்து விளங்கிய பெரியோர்களை நினைவுகூர்வதோடு பதிப்பு முயற்சிகள், சுத்தபாடம், பாட வேறுபாடு, சந்தி பிரித்தல், குறியீடுகள், பதிப்பாசிரியர் பணி போன்ற பல்வேறு பொருண்மைகளும் ஆராயப்பட்டுள்ளன.

பதிப்பாசிரியர்கள் பல்வகைத் திறனும் பெற்றுத் திகழ்வதோடு நடுநிலையாளர்களாகவும், இலக்கண இலக்கிய மொழித் திறன் உடையவர்களாகவும், பன்மொழிப் புலமை உடையவர் களாகவும் இருத்தல் வேண்டுமென்றும் இக்கட்டுரை வலியுறுத்தி நிறைவடைகிறது.

## சரசுவதி மகால் நூலகத் தமிழ்ச் சுவடிகள் - ஆய்வுப் பதிப்புகள் - ஓர் அறிமுகம்

**ய. மணிகண்டன்**

இக்கட்டுரை இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற்பகுதி நூலகத்தின் தோற்றம், வரலாறு போன்ற வற்றைப் பற்றியும், அந்நூலகத்தில் இடம்பெற்றுள்ள சுவடிகளின் வகை, தொகை பற்றியும் பேசுகின்றது. இந் நூலகத்தில் பண்டை இலக்கியச் சுவடிகள் மிகக் குறைந்துள்ள நிலையில், சமய இலக்கியம், சிற்றிலக்கியம், இலக்கணம், புராணம், மருத்துவம் முதலான சுவடிகள் மிக அதிகமாக உள்ளதாகக் கட்டுரையாசிரியர் கூறுகின்றார். அடுத்த பகுதி சரசுவதி மகால் நூலகம் ஆற்றிய பதிப்புப் பணி பற்றிப் பேசுகிறது. இதுவரை இந்நூலகம் 175-க்கும் மேற்பட்ட தமிழ்ச் சுவடிப் பதிப்பு நூல்களை வெளியிட்டுள்ளது. இப்படி வெளியிடப்படும் நூல்கள் பெரும்பாலும் தனி நூலாகவே வெளியிடப்படுகின்றன. இப்படிப் பதிப்பிக்கப்பெற்ற பதிப்பு நூல்கள் இலக்கண நூல், நீதி நூல், சிற்றிலக்கியம், அம்மானை என்ற வகையில் ஆய்வு செய்யப்பட்டு அவை பற்றிய பல்வேறு செய்திகள் தரப்பெற்றுள்ளன. ஒலை, அச்சுநூல் ஆவது போல அக்காலக் கட்டத்தில் அச்சு நூலும் ஓலையில் பதிவாகி யிருந்ததாக ஒரு குறிப்பு கட்டுரையில் காணப்படுகிறது.

## சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் சுவடிப் பதிப்புகள்

**மோ.கோ. கோவைமணி**

இக்கட்டுரை தமிழகத்தில் பலநிலைகளில் வெளியாகியுள்ள சுவடிப் பதிப்பு நூல்கள் குறித்து முதலில் தெரிவிக்கிறது. தமிழறிஞர், புரவலர், அரசு நூலகம், தனியார் சுவடி நூலகம், அரசு நிறுவனம், தனியார் நிறுவனம், பல்கலைக்கழகம், தனியார் பதிப்பகம், அரசு சார்ந்த பருவ

இதழ், அரசு சாரா பருவ இதழ், தமிழ்ச்சங்கம், ஆதீனம் ஆகியவற்றின் சுவடிப் பதிப்பு நூல்கள் பற்றித் தகவல் தருகின்றது. மேலும் சுவடிப் பதிப்பில் பருவ இதழ்கள் கொணர்ந்த பத்து நிறுவனங்கள் பற்றியும் ஆய்கிறது. அதில் குறிப்பாகச் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகப் பருவ இதழ்கள் பற்றி 1948 தொடங்கி 1976 வரையிலான ஆண்டுகளில் தொடர்ந்தும் சில நேரங்களில் நின்றும், மீண்டும் தொடர்ந்தும் அந்நிறுவனம் ஆற்றிய பணியைப் பருவ இதழ்ப் பதிப்பாசிரியர்கள் என்ற தலைப்பில் பதிப்பாசிரியர்கள் பற்றியும், பொருள் நிலையில் அமைந்தது, மூலம் மட்டும் கொண்டது என்ற இரண்டு நிலைகளில் பருவ இதழில் சுவடிப்பதிப்புகள் எவ்வாறு வெளிவந்தன என ஆய்ந்து 48 தொடங்கி 76 வரை 21 தொகுதிகளின் வாயிலாக 58 நூல்கள் பதிப்பிக்கப்பெற்றதாகக் கூறிக் கட்டுரை முடிவடைகிறது.

### படைப்புக் கலையும் பதிப்புக் கலையும்

முனைவர் சூ. இன்னாசி

இக்கட்டுரையில் படைப்புக்கும் பதிப்புக்குமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைத் தெளிவுபடுத்தும் வாயிலாகப் படைப்பாளனுக்கும் பதிப்பாசிரியருக்குமுள்ள கடமைகள் விளக்கம் பெறுகின்றன. படைப்பு அசல் என்றால் பதிப்பு அதன் நகல் என்பது போலப் படைப்பாளன் சுயமாகச் சிந்தித்தவற்றைப் பதிப்பாளன் தன்வயப்படுத்தி வாங்கி அவனது மொழிநடையில் தருவது பதிப்புப் பணியாகும். அச்சுக்கலை தமிழகத்தில் அறிமுகமாகிய உடன் படைப் பாளனும், பதிப்பாளனும் பல்வேறு நூல்களைத் தமிழில் கொணர்ந்தனர். இவர்கள் முயற்சிக்கு அக்காலத்து அச்சு வரி வடிவங்கள் எந்த அளவிற்குத் துணை நின்றன என்பது ஆராயப்படுகிறது. தமிழில் முதன்முதல் தொகுக்கப்பெற்ற சதுரகராதி என்ற நூலின் பதிப்பு வரலாறும், பதிப்பாசிரியன் பதிப்புப்பணி செய்யும் காலத்து என்னென்ன வகையான இடர்ப்பாடுகளுக்கு உள்ளாகிறான் என்பதும் எடுத்துக்காட்டப் பட்டுப் படைப்பாளன் படைப்பைப் படைக்க எடுத்துக் கொள்ளும் முயற்சித் திறனுக்குச் சற்றும் குறைந்ததில்லை ஒரு பதிப்பாளரின் பதிப்புப் பணி என்ற முத்தாய்ப்போடு கட்டுரை நிறைவு பெறுகிறது.

## சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிப் பதிப்புகள் ஆய்வுக் கட்டுரை

திரு. ஆ.இரா. பாரதராஜா

இக்கட்டுரையின் தொடக்கத்தில் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தின் வரலாறும், பதிப்புப் பணியும் விரிவாகப் பேசப்படுகிறது. அந்நூலகம் வெளியிட்ட சுவடி விளக்க அட்டவணை பற்றிப் பறவை நோக்கில் செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. 1948 தொடங்கி புராணம், இலக்கியம், சமயம், கீர்த்தனைகள், நிலநூல், வரலாறு, நாடகம், இலக்கணம், சிற்றிலக்கியம், சாத்திரம், இசை, அகராதி, காப்பியம், யட்சகானம், கப்பல் கட்டுதல், மருத்துவம் போன்ற பல்வேறு துறைகளில் வெளிவந்த நூல்கள் ஈண்டுச் சுருக்கமாக ஆராயப்பட்டுள்ளன. அக்காலக் கட்டத்தில் வெளிவந்த மேற்கண்ட நூல்களுக்கான பதிப்பு நெறி உத்திகளும், பாடவேறுபாடுகள் போன்ற செய்திகளும் உள்வாங்கப்பட்டு அந்தந்த நூல்களில் விளக்கிக் கூறப்பெற்றுள்ளன.

## இஸ்லாமியத் தமிழ்ச் சுவடிகளின் பதிப்பு

திரு. கலீலுல்லா

இக்கட்டுரை இசுலாமியத்தின் சிறப்புக் கூறுகளை எடுத்துக் கூறுவதோடு அம்மார்க்கத்தைப் பறைசாற்றும் நூல்களின் பதிப்பு வரலாற்றையும் விரிவாகக் கூறுகிறது. அவ்வகையில் வணிகத் தொடர்பு, இசுலாமியர்களும் தமிழர்களும், பதிப்பின் தொடக்கம், இசுலாமியத் தமிழ் இலக்கியப் பதிப்புகள், செந்நெறிப் புலவர் நாயகத்தின் பதிப்பின் தனித்தன்மைகள், பதிப்பாளரின் படைப்புகள், மறுபதிப்புச் செய்திகள், பதிப்பின் அகநிலை, பாட வேறுபாடுகள் போன்ற தலைப்புகளில் ஆய்வு செய்யப்பட்டு இசுலாமியத் தமிழ்ச் சுவடிகளின் பதிப்புச் சிறப்பு வெளிக் காட்டப்படுகின்றது. தமிழ் இசுலாமியரின் வேத நூலாகக் கருதப்பெறும் சீறாப்புராணமே தமிழ் ஏட்டுச்சுவடிகளில் இருந்து பதிப்பாகிய முதற்காப்பியமெனக் கட்டுரையாசிரியர் விதந்து கூறியிருப்பது ஈண்டுச் சுட்டத்தக்கது.

## பழமையான சித்தமருத்துவ நூல் பதிப்புகள்

### மருத்துவர் ச. ரங்கராசன்

மருத்துவம் சார்ந்த தொன்மையான நூல்களை அவற்றின் பதிப்பு விளக்கங்களோடு இக்கட்டுரை தொகுத்துத் தந்துள்ளது. அச்சு இயந்திர வரலாறு தொடங்கி, பதிப்பு வரலாறு பேசப்பட்டு 18ஆம் நூற்றாண்டில் வெளியான நூல்கள் வகை தொகை செய்து காட்டப்பட்டுள்ளன. மூலப் பதிப்புகள் என்ற நோக்கில் பல்வேறு நிலைகளில் கருத்துகள் தொகுக்கப்பட்டு, அம்மூலப் பதிப்புக்கான நோக்கமும் ஆராயப்பட்டுள்ளது. அடுத்துப் பதிப்பின் காரணம், பதிப்பு பற்றிய பொதுக்கண்ணோட்டம் இதற்கிடையே இலக்கியத்தில் காணும் இசைக்குறிப்புகள், நிகண்டுகள், அகராதிகள், உரையாசிரியர்கள் போன்ற செய்திகளும் ஆய்ந்து கூறப் பெற்றுள்ளன. பழைய உரைநடை நூல்கள், மூலமும் உரைநடையும் மற்றும் பதிப்புகளில் காணும் விளம்பரங்கள், ஏடு தந்தோர் பற்றிய குறிப்புகள் போன்ற நோக்கிலும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இலக்கியமும் மருத்துவமும் இணையக் கற்ற அறிஞர் அதிகமான ஆர்வத்தோடு உழைப்பின் சித்த மருத்துவ நூல்கள் பல ஆண்டுதோறும் பல்கிப் பெருகும் என்பதும், கல்வி நிறுவனங்கள் பயிற்சிப் பட்டறைகள், கருத்தரங்குகள் போன்றவற்றை நடத்துவதன் மூலம் விழிப்புணர்வை ஏற்படுத்தினால் சுவடிப்பதிப்பு இன்னும் சிறப்படையும் என்பதும் இறுதியில் சுட்டப்பெறுகின்றது.

## *The Tamil Palm-Leaf Manuscripts in the Libraries of Europe - 1960*

### *Prof. A. Krishnamurthy*

ரஷ்ய நாட்டில் இருந்து தாயகம் திரும்பிய காலை பல்வேறு மேற்கு நாடுகளைச் சுற்றிப்பார்த்து அந்நாடுகளின் நூலகங்களில் உள்ள சுவடிகள் மற்றும் தமிழ்ச்சுவடிகள் பற்றிய கட்டுரையாசிரியரின் விவரத் தொகுப்பு இடம்பெறுகிறது. ஐரோப்பிய நாட்டு நூலகம் - பல்கலைக்கழகம், அருங்காட்சியகம் மற்றும் பண்பாட்டு மையங்கள் ஆகிய இடங்களில் காணக்கிடைக்கும் சுவடிகளை ஆய்ந்து அறிந்து தகவல் சேர்ப்பதே தனது பயணத்தின் நோக்கமெனக்

## தமிழகத்தில் மனுநீதிச் சோழன் கதைச் சுவடிகள்
**புலவர் ச. திலகம்**

இக்கட்டுரையில் அச்சாகாத மூன்று நாட்டுப்புற இலக்கியத்தைச் சேர்ந்த ஏடுகள் ஆய்வுக்குட்படுத்தப் பட்டுள்ளன. மனுநீதிச் சோழன்கதை, தேரூர்ந்த சோழன் கதை, மனுநீதிச் சோழ மகாராச நாடகம் என்பவற்றுள் முன்னது இரண்டும் பாவடிவம். பின்னது உரைநடை வடிவம். மூலக்கதையின் கருவானது சிலம்பில் தொடங்கி இராமலிங்க வள்ளலார் காலம் வரை தொடர்ந்து வந்துள்ளது. ஈண்டுப் பேசப்படும் நாட்டுப்புறக் கதைப்பாடல்களுக்கும் செவ்வியல் இலக்கியப் படைப்புகளுக்கும் உள்ள தொடர்புகளை இக்கட்டுரை ஒப்புநோக்கியுள்ளது.

## சுவடிகளில் காணும் குறிப்புகளும் குறியீடுகளும்
*திரு. த. பூமிநாகநாதன்*

சுவடி காட்டும் குறிப்புகள், கால ஆராய்ச்சிக்குப் பயன்படும் தன்மை பற்றியும், அப்படிக் கால ஆராய்ச்சிக்கு எவ்வகையான கணித முறைகளைப் பயன்படுத்த வேண்டு மென்பது பற்றியும் கட்டுரை எடுத்தியம்புகிறது. மேலும் நூலாசிரியர் பற்றிச் சுவடி தரும் குறிப்பின் துணைகொண்டு எப்படியெல்லாம் கண்டறியலாம் என்பதையும் கட்டுரை விளக்குகிறது. அடுத்துச் சுவடி எழுதியவர் பற்றிய தகவல்களைச் சுவடிக் குறிப்பின் வழியாக எப்படிக் கொண்டு கூட்டி அறியலாம் என்பதையும் விளக்குகிறது. சுவடி தரும் குறிப்புகளாக இன்னார் படித்து வருவது, ஏடு பாடியவர், சுவடிப் பாதுகாப்புக் கருதித் தரப்படும் கவன ஈர்ப்புக் குறிப்பு அல்லது எச்சரிக்கைக் குறிப்பு, அவையடக்கக் குறிப்பு போன்ற பல்வேறு குறிப்புக்கள் பற்றியும் குறியீடுகளில் கணிதக் குறியீடுகள், மருத்துவக் குறியீடுகள், இலக்கியக் குறியீடுகள் போன்றன பற்றி எடுத்துக்காட்டுகளோடு இக்கட்டுரை விளக்கி அமைகிறது.

## சுவடி நோக்கில் நவீனக் கருவிகள்
**முனைவர் வெ. ஜெயராஜ்**

சுவடிப் பாதுகாப்புக்கு என்னென்ன செய்தல் வேண்டும் என்ற நோக்கில் சுவடியைப் படம்பிடிக்கும் நுண்

நிழற்படக் கருவியின் தேவை பற்றியும், அதனைப் பயன் படுத்துதல் மற்றும் பாதுகாத்தல் குறித்தும் கூறப்பட்டுள்ளது. அடுத்து வளர்ந்து வரும் அறிவியல் இக்காலக் கட்டத்தில் கணினியின் பயன்பாடு இன்றியமையாத ஒன்றாக எல்லாத் துறைகளிலும் இடம்பெற்று இருக்கிறது. சுவடித்துறையிலும் நூல்கள் பதிப்பித்தல் என்ற வகையில் கணினியின் பயன் மிக இன்றியமையாததாக அமைகிறது. மேசைப் பதிப்பகம் என்று சொல்லக்கூடிய *Desk Top Publication* என்ற நிலையில் சுவடிப் பதிப்புத் துறை அமைய கணினி எவ்வகையிலெல்லாம் பயன்படும் என்பதையும் ஆப்செட் பயன்பாடு சுவடியிலிருந்து நூலாக்கத்திற்கு எவ்வகையி லெல்லாம் துணைபுரியும் என்பன போன்ற அறிவியல் சார்ந்த செய்திகள் இக்கட்டுரையில் பேசப்படுகின்றன.

### சிற்பங்கள் ஓவியங்களில் சுவடிகள்
#### குடவாயில் பாலசுப்பிரமணியன்

சிற்பங்களில் சுவடிகள் என்ற வகையில் அமராவதி சிற்பம், குப்தர் காலத்து தேங்கர் சிற்பம், சுவடியில் தாமரை மலர் ஏந்திய வாகீசர் சிற்பம், ஏடு ஏந்திய நிலையில் மணிவாசகர் சிற்பம் போன்ற சிற்பங்கள் பற்றியும், தாராசுரத்துச் சிற்பங்கள் எனப் பல்வேறு சிற்பங்கள் பற்றியும் இக்கட்டுரை பேசுகின்றது. வெண்ணெய் நல்லூர் ஆவண ஓலை பற்றித் தஞ்சை ஓவியம் காட்டும் சிற்பமும் சிறப்பாக இக்கட்டுரையில் பேசப்பட்டுள்ளது. இராமநாதபுர சேதுபதி சமஸ்தானத்து மன்னரவைக் கூடத்தின் ( தர்பார் ) மேல் விதானத்தில் காணப்படும் சிறப்புமிகு ஓவியங்கள் சுவடியோடு எவ்வாறு தொடர்புடையன என்று ஆராய்ந்து கூறப்பட்டுள்ளது. இவையன்றி ஆரூர் ஓவியக்கூடம், பொன் ஓலை, ஏடுகளில் ஓவியம் என்ற பொருண்மைகளில் பல்வேறு தகவல்கள் கூறப்பட்டுள்ளன.

### கணிதச் சுவடிகள்
#### மா. சத்தியபாமா

இக்கட்டுரையில் பண்டைக்காலத்து அளவை முறைகள், கணக்கியல் முறைகள் என்பன பற்றித் தொல்காப்பியர் காலத்தில் இருந்து ஆய்வு செய்யப்

பட்டுள்ளது. கணக்குச் சுவடிகளை எண்சுவடிகள் எனவும், வரவு செலவுக் கணக்குச் சுவடிகள் எனவும், கணக்கதிகாரச் சுவடிகள் எனவும் வகைப்படுத்தி அந்தந்த இனத்திற்கான விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. மேலும் கணக்கு நூல்கள் என்ற தலைப்பில் ஆஸ்தான கோலாகலம், கணக்கு ரத்னச் சுருக்கம், குழிபெருக்கம், பெருங்குழி மாறல் போன்ற சுவடி நூல்களும் இதில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. கணக்கதிகார நூற்பதிப்புகள் என்ற பகுதியில் பழைய பதிப்புகள் பற்றியும், பிற்காலப் பதிப்புகள் பற்றியும் பேசப்பட்டுள்ளன. இறுதியாகக் கணக்குச் சுவடிப் பதிப்பில் ஏற்படும் சிக்கல்களும் அவற்றுக்கான தீர்வுகளும் கூறப்பட்டுள்ளன. தமிழ்க் கணக்குச் சுவடிகளின் பதிப்பு நெறிமுறைகள் என்ற பகுதியில் பன்னிரு நெறிமுறைகள் பற்றிப் பேசி இக்கட்டுரை நிறைவடைகிறது.

### சுவடிப் பாதுகாப்பு

*திரு. ப. பெருமாள்*

கால மாறுபாடு, இயற்கைச் சீற்றம், வெளிச்சம், வெப்பம், குளிர்ச்சி போன்றவற்றைக் கருத்தில் கொண்டு அதற்குத் தக்கபடியான தற்காப்பு வளையங்களை அமைத்திடல் வேண்டுமெனக் கட்டுரை கூறுகிறது. ஓலையில் ஏற்படும் நிறமாற்றம், துளை மற்றும் புள்ளிகள், பூஞ்சைக் காளான் பாதிப்பு, பூச்சிகளினால் ஏற்படும் அரிப்பு, சிதலமடைதல், எழுத்து மங்குதல் போன்ற ஓலையில் ஏற்படும் மாற்றங்களுக்கான தீர்வுகளையும் இக்கட்டுரை எடுத்துக் கூறுகிறது. அடுத்து ஓலைகளைச் செப்பனிடும் முறை, பாதுகாப்பு முறையில் மரபுவழிக் கைமுறைகள், மேலை நாட்டார் நல்கிய நவீன அறிவியல் கை முறைகள் போன்ற செய்திகளும் இக்கட்டுரையில் விரிவாகப் பேசப்பட்டுள்ளன.

### பழந்தமிழரின் வாசிப்புப் பழக்கம்

*முனைவர் எஸ். சௌந்தரபாண்டியன்*

இக்கட்டுரை வாசிப்புப் பழக்கம் ( *Reading Habit* ) என்பது பற்றியும் அது எந்த அளவுக்குச் சங்க காலம் தொடங்கித் தமிழர்களிடையே இருந்து வந்தது என்பது பற்றியும் ஆய்வு செய்கிறது. வாசித்தல் என்பதற்கும், கற்றல் என்பதற்குமுள்ள வேறுபாடு வகை பிரித்துக் காட்டப்

படுகிறது. தூதுவன் கொண்டுவரும் ஓலையை வாசித்தல், அரசவையில் அரசு ஆணையை வாசித்தல், கோயில்களில் பஞ்சாங்கம் வாசித்தல் போன்ற வாசிப்புப் பற்றிய சுவையான தகவல்கள் இதில் கூறப்பட்டுள்ளன. க்ாலங்காலமாக இவ்வாசிப்பு இலக்கியத்தில் எவ்வெவ் வூடகங்களில் ஊடாடிக் கிடக்கிறது என்பதனை எடுத்துக்காட்டும் ஒரு சிறு விளக்கமாக விளங்குகிறது இக்கட்டுரை.

### டாக்டர் நா. வானமாமலை அவர்களின் சமூகக் கதைப்பாடற் பதிப்புகள்

முனைவர் சூ. நிர்மலாதேவி

இக்கட்டுரையில் முத்துப்பட்டன் கதை, காத்தவராயன் கதை, வீணாதிவீணன் கதை என்ற சமூகக் கதைப்பாடற் பதிப்புகள் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொரு கதைக்கும் கதைச் சுருக்கம் தரப்பட்டும் பதிப்புத் தொடர்பான செய்திகள் இணைத்தும் தரப்பட்டுள்ளன. நா.வா.வின் பதிப்பில் காணும் கள ஆய்வு மேற்கொள்ளல், பிற்சேர்க்கை, இடைச்செருகல்களை அறிதல் போன்ற சிறப்புகளையும், சுவடி எழுத்து வடிவக் குழப்பத்தால், வடிவ ஒற்றுமையால் பதிப்பில் நிகழ்ந்துள்ள சில தவறுகளையும் இக்கட்டுரை சுட்டிக்காட்டி இத்தகு தவறுகள் நீங்கிய மறுபதிப்புகள் வரவேண்டும் என வற்புறுத்துகின்றது. இத்தகு சிறந்த சமூகக் கதைப்பாடற் பதிப்புகள் கிடைக்கப் பெற்றிருப்பது தமிழர் பெற்ற பெரும்பேறு என்ற முத்தாய்ப்போடு கட்டுரை நிறைவு பெறுகின்றது.

# 1. சுவடிப் பதிப்பு வரலாறு (1950 வரை)

முனைவர் பூ. சுப்பிரமணியம்

மக்கள் தம் உணர்வுகளை, எண்ணங்களை, கருத்துகளை இரண்டு வழிகளில் வெளியிடுகின்றனர். ஒன்று பேச்சுவழி; மற்றொன்று எழுத்துவழி. எழுத்துவழி வெளியிடப்படுபவை நிலைபெற்று விடுகின்றன. காலத்தால் அழியாது நம்மிடையே கிடைக்கும் தமிழ் ஓலைச்சுவடிகள் தமிழர்தம் எண்ணங்களைத் தாங்கியவை. ஓலைகளில் உருவாகித் தாளும் அச்சும் தோன்றியபின்பே அச்சுநூல் வடிவமாக மாறியுள்ளன. இந்த வடிவ மாற்றத்திற்குத் தேவையான பணிகளுள் ஒன்றே பதிப்புப் பணியாகிறது. சுவடிகள் தாங்கி நிற்கும் தமிழர்தம் கருத்துகளை அச்சிட்டு நூல்வடிவில் கொடுக்கும் பணியே சுவடிப்பதிப்புப் பணியாகிறது.

ஒரு நூலை எழுதி வெளியிடுவதில் நூலாசிரியர், அச்சிடுவோர், வெளியீட்டாளர், விற்பனையாளர் என்னும் நான்கு நிலையினரின் பணிகள் தேவைப்படுகின்றன. ஆனால் சுவடிச் செய்திகளை வெளியிடுவதில் பதிப்பாசிரியர் ஒருவரின் பணியும் இன்றியமையாததாகிவிடுகிறது. ஒரு புதிய நூலை எழுதி உருவாக்கி, அதை அச்சிட்டு வெளியிடுவதும் விற்பனைக்கு அளிப்பதுமாகிய பணிகள் இக்கால நூல் வெளியீடுகளுக்குரியவையாகும். ஒரு நூலை எழுதி உருவாக்கும் பணிக்கு மாறாக, முன்னோர் சுவடிகளில் எழுதி வைத்துள்ள செய்திகளைத் தொகுத்துப் பதிப்பித்து வெளியிடும் பணி, புதியநூல் வெளியீட்டுப் பணியிலும் வேறுபட்ட ஒன்றாகும். எனவே ஒரு நூலை எழுதுவது அல்லது இயற்றுவது என்பது வேறு; ஒரு நூலைப் பதிப்பிப்பது என்பது வேறு என்பது தெளிவாகும். அதேபோல பதிப்பிப்பது என்பது

வேறு; அச்சிடுவது என்பது வேறு என்பதும் பெறப்பட வேண்டும். இவ்வாறே வெளியீட்டாளர்களும் விற்பனை யாளர்களும் வெவ்வேறானவர்களாகின்றனர். இயற்றுதல், அச்சிடுதல், வெளியிடுதல், விற்றல் என்ற நான்கு பணிகளையும் ஒருவரே மேற்கொள்ளுவதும் உண்டு. என்றாலும் பணிகள் வெவ்வேறானவையே. இந்த நான்கு நிலையினும் அப்பாற்பட்ட பணியே பதிப்புப் பணியாகும்.

ஓலைச்சுவடிகளில் முடங்கிக் கிடக்கும் அரிய கருத்துகளை அப்படியே சுவடி வடிவில் எடுத்துக் கொடுத்து அச்சிடச் செய்வது என்பது இயலாத ஒன்று. ஓலைச் சுவடியிலிருந்து எடுத்துத் தாள்களில் எழுதுவது முதல், அச்சுநூல் எப்படி அமைய வேண்டுமோ அந்த அமைப்பில் எழுத்துப்படியை முழுமையாக்கித் தரும் பணியே பதிப்புப் பணியாகிறது.

சுவடியில் செய்யுள் நடையில் எழுதப்பட்ட ஒரு நூலை அச்சிட்டு வெளியிட விரும்பி எடுத்துக் கொள்ளுவோமே யானால், முதலில் அதே நூல் எழுதப்பட்டுள்ள சுவடிகள் வெவ்வேறு இடங்களில் இருப்பனவற்றையும் திரட்டிக் கொள்ள வேண்டும். அவற்றுள் காலத்தால் முந்தியது, பிழை இல்லாதிருப்பது, முழுமையாக இருப்பது, நல்லநிலையில் இருப்பது, உரையுடன் எழுதப்பட்டிருப்பது என்னும் தன்மைகளில் சிறந்து இருப்பதைத் தேர்ந்து அதை மூலச்சுவடியாக வைத்துக்கொண்டு, பிறவற்றை ஒப்பிட்டுப் பாடவேறுபாடுகளைக் காணவும், மூலபாடத்தைத் தேர்ந்தெடுக்கவும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். சுவடியைத் தேர்ந்தெடுக்கும் இப்பணி பதிப்பாசிரியரின் முதற்பணியாகும்.

உரைநடைபோலவே தொடர்ந்து எழுதப்பட்டிருக்கும் பாடல்களை முழுமையாகப் படித்துணர்ந்து, சீர்தளைகள் சிதறாத அடிகளாக அமைத்துத் தாளில் எடுத்து எழுதுவது இரண்டாவது பணியாகிறது. எளிய படிப்பாளர் முதல் ஆய்வாளர் வரை அனைத்து நிலை மக்களுக்கும் பயன்படும் வகையில் அந்த நூலை உருவாக்கி முழுமைபெறச் செய்வது பதிப்பாசிரியரின் மூன்றாவது கடமையாகிறது. இந்த மூன்றாவது நிலையில், பாடல் நடைக்கேற்றவாறு

பொழிப்புரை அல்லது குறிப்புரைகள் தந்து நூலின் பொருள் விளங்கச் செய்தல், தேவையான இடங்களில் விளக்கவுரைகள், பிறநூல் சான்றுகள் போன்றவற்றைத் தந்து எளிமையாக விளங்கச் செய்தல், ஆய்வாளர்களுக்குப் பயன்படும் முறையில் பாடவேறுபாடுகள், திருத்தச் சொற்கள், சொல்லடைவுகள் போன்றவற்றைத் தயாரித்துச் சேர்த்தல் ஆகியவையும் பதிப்பாசிரியரின் பணிகளாகின்றன. இப்பணிகளால் நூலை முழுமையாக்கிய பிறகு பதிப்பாசிரியரின் உழைப்பை எடுத்துக்காட்டும் பதிப்புரையும், நூலை முழுமையாகப் படிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தை அனைத்து நிலை மக்களிடத்தும் தூண்டுவதாக அமையும் ஆய்வுரையும் எழுதிச் சேர்ப்பதும் பதிப்பாசிரியரின் பணியாகிறது. நூலாசிரியர், பதிப்பாசிரியருக்கு ஏற்படும் ஐயங்களைப் போக்கிக் கருத்து வழங்கித் துணைபுரியும் நிலை சுவடிப்பதிப்புப் பணிக்கு ஏற்படுவதில்லை. எனவே நூல் முழுமை பெறவும் தூய்மையடையவும் தெளிவுடையதாக வெளிவரவும் பதிப்பாசிரியர் தம் முழுத்திறமையைப் பயன்படுத்தி உழைக்க வேண்டிய பொறுப்புடையவராகி விடுகிறார்.

சுவடிப்பதிப்பு வரலாறு என்னும் பொருளுக்குரிய வரலாற்று அமைப்பு இரண்டு வகையில் அமைகிறது. அவை: 1. நூல், பதிப்பாசிரியர் என்னும் காலநிலை வரலாற்று வரிசை. 2. பதிப்பு முறைகளின் வளர்ச்சிநிலை என்னும் வரலாற்று வரிசை என்னும் இரண்டு வகையாகின்றன. அதாவது, சுவடிப்பதிப்பின் முதல் நூல் எது? அது எந்த ஆண்டில் வெளியாயிற்று? யாரால் வெளியிடப்பட்டது? தொடர்ந்து எந்தெந்த நூல்கள் எந்தெந்த ஆண்டுகளில் யார்யாரால் வெளியிடப்பட்டுள்ளன என்னும் நிலைகளில் காணும் பதிப்பு நூல்களின் வரலாற்றையும் அவற்றின் பயன்பாட்டையும் ஆய்வது முதல் வகை. தொடக்ககாலப் பதிப்புகளில் தலைப்புப் பக்கம் முதல், நூல் எவ்வாறு அமைகிறது? பாடல்கள் எவ்வாறு பதிப்பிக்கப்பெற்றுள்ளன? பாடலுக்கான உரை, விளக்க உரை, எடுத்துக்காட்டுகள் போன்ற அகஅமைப்புகள் எவ்வாறு தோன்றி வளர்ந்துள்ளன? நூலுக்கான பதிப்புரை, முன்னுரை, ஆய்வுரை, சொல்லடைவு முதலான புற அமைப்புகள் எவ்வெவ்வாறு அமைந்து

வளர்ந்துள்ளன என்னும் முறைகளை ஆய்ந்து அவற்றின் பயன்பாடு எந்த நிலையை அடைந்துள்ளது என்பதை வரலாற்று அடிப்படையில் காட்டுவது இரண்டாவது வகையாகும்.

இந்த இரண்டு வகை வரலாற்று முறைகளும் வெறும் பதிப்பு வளர்ச்சி வரலாற்றை மட்டும் உணர்த்தாமல், இன்று கையாள வேண்டிய பதிப்பு முறைகளையும் வெளியீடுகள் வளரவேண்டிய உணர்வுகளையும் உணர்த்துவனவாயமைய வேண்டும். பொதுவாக ஒரு நூல் வெளியீட்டின் நிலைகளைப் பட அமைப்பின் வழி சுருக்கிக் காட்டித் தெளிவுபடுத்தலாம்.

## நூல் வெளியீடு

1 எழுதி வெளியிடுதல் — 2 சுவடியிலிருந்து வெளியிடுதல்

1 எழுதுதல் 2 அச்சிடுதல் 3 வெளியீடு 4 விற்பனை

1 எழுதுதல் 2 பதிப்பித்தல் 3 அச்சிடுதல் 4 வெளியீடு 5 விற்பனை

## வரலாறு

1 பதிப்பு-காலவரலாறு — 2 பதிப்புமுறை வரலாறு

ஒரு நூல் வெளியிடுவது என்பது ஒருவர்தம் கருத்துகளை நூல் அளவில் எழுதி அதை அச்சிட்டு வெளியிடுவது எனவும், தமிழர்தம் எண்ணங்கள் பொறிக்கப் பெற்றுள்ள சுவடிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றை அச்சிடும் அளவில் முறைப்படுத்தி அச்சிட்டு வெளியிடுவது எனவும் இரண்டு வகையில் அமைகிறது என்பதைப் புலப்படுத்தும் இப்பாடம்,

1. எழுதி வெளியிடும் பணியில் நூலாசிரியர், அச்சிடுவோர், செலவு முதலியவற்றை ஏற்று வெளியிடுவோர், விற்பனையாளர் ஆகியோர் ஈடுபடுகின்றனர்;

2. சுவடியிலிருந்து எடுத்து வெளியிடும் பணியில் மேற்குறித்த நால்வரோடு பதிப்பாசிரியர் ஒருவரும் ஈடுபடுகிறார் என்னும் நிலைகளையும் எடுத்துக் காட்டுவதாகும்.

3. சுவடிப்பதிப்பு வரலாறு என்பது பதிப்பித்து வெளியிடப்பட்ட நூல்களின் காலவரிசை, அவற்றைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் காலவரிசை என அமைந்த காலவரிசை வரலாறு எனவும்,

4. உரை, முன்னுரை, ஆய்வுரை, சொல்லடைவு முதலான பல வகைச் செய்திகளோடு எளிமையும், தெளிவும் உடைய பதிப்பு முறை வரலாறு எனவும் இரண்டு வகையில் இடம்பெறுகிறது என்பதையும் படம் சுட்டுகிறது.

**பதிப்பு வரலாறு - 1. கருத்துப் பதிவு**

திண்ணைப் பள்ளிக்கூடத்திலும், குருகுலமுறையில் ஆசிரியர்களிடத்திலுமாகக் கல்வி பயின்றவர்கள் பல நூல்களை மனப்பாடமாகவே பயின்றிருந்தனர். மனப்பாடத்திலுள்ள அந்த நூல்களையும் எழுத்துவடிவில் பதிவு செய்து வைக்கும் பணியில் ஈடுபட்டபோது அவர்களுக்கு எழுதுபொருளும் எழுதப்படுபொருளும் எழுதுகருவிகளும் தேவைப்பட்டன.

சுருங்கிய கருத்துகளையும் செய்திகளையும், களிமண் பலகை, கல், ஓடு, தோல், இலை, பூர்ஜப்பட்டை, மரப்பலகை, துணி, மூங்கில் பத்தை, உலோகத் தகடு போன்றவற்றில் எழுதி வைத்தார்கள். மிகப் பழங்காலத்திலிருந்தே நைல் நதிக்கரையில் விளைந்த பபைரஸ் என்னும் கோரைப்புல்லைப் பல நாடுகளிலும் எழுதப்படு பொருளாகப் பயன்படுத்தியுள்ளனர். பபைரஸ் விரைவில் அழிவதால் தோலைப் பயன்படுத்தியுள்ளனர். இந்த அனைத்து நிலைகளிலும் பெரிய அளவிலான நூல்களை எழுதிவைக்க நம்நாட்டில் பனைஓலையையே பயன்படுத்தியுள்ளனர் என்பது இன்றய வழக்காற்றில் கிடைத்திருக்கும், கிடைத்துவரும் ஓலைச்சுவடிகளால் தெளிவாகிறது.

## 2. அச்சுக்கலை

கல்லிலும் செம்பிலும் வெட்டியதைத் துணிகளிலும் தாள்களிலும் மையின் உதவியால் படியெடுத்தனர். கி.பி. 618 முதல் 907 வரையில் சீனாவில் அரசுபுரிந்து வந்த தாங் பரம்பரையினர் மர அச்சுப் படிமையைக் கண்டுபிடித்துப் பலபடிகளை அச்சிடத் தொடங்கினர். இதைப் பயன்படுத்தி ஐரோப்பியர், அச்சுக்கலையை வளர்த்தனர். முதன்முதலில் கூட்டன்பர்க் என்பாரின் கண்டுபிடிப்பாகிய அச்சு இயந்திரத்தினால் அச்சுப்பணி வளரத் தொடங்கியது.

கி.பி. 1556இல் கோவாவிலும், 1557இல் கொல்லம், அம்பலக்காடு ஆகிய இடங்களிலும், 1558இல் புன்னைக்காயல், வைப்புக்கோட்டை ஆகிய இடங்களிலும் கிறித்தவப் பாதிரிமார்கள் அச்சகங்களை நிறுவிக் கிறித்தவச் சமயப் பணிகளுக்குரிய நூல்களை வெளியிடத் தொடங்கினர்.

## 3. தமிழகத்தில் அச்சுக்கலை

கி.பி. 1712இல் தரங்கம்பாடியில் பதிப்பு வரலாறு மிக்க அச்சகம் தோற்றுவிக்கப்பட்டது. தொடர்ந்து பொறையாறு என்னுமிடத்தில் முதல் அச்சு வார்ப்படசாலையும் ( Type Foundary ), 1715இல் காகித ஆலையும் தோற்றுவிக்கப்பட்டன.

## 4. தமிழில் அச்சு நூல்

துறவி ஜேவியர் அவர்கள் எழுதிய கிறித்தவ சமய வினா விடை விளக்கமாகிய டாக்டிரினா கிறிஸ்தம் ( Doctorina Christa ) என்னும் நூல் ஹென்றி ஹென்றிகுவிஸ் பாதிரியார் அவர்களால் தமிழில் மொழி-பெயர்க்கப்பட்டுத் தம்பிரான் வணக்கம் என்னும் பெயரால் 20.2.1557இல் 16 பக்கமுடைய நூலாகக் கொல்லத்தில் அச்சிடப்பட்டது. இதுவே தமிழில் வெளியான முதல் அச்சு நூலாகும். தொடர்ந்து,

1578இல் சித்தியானி வணக்கம், 1675இல் ஞானோபதேச காண்டம், 1679இல் தமிழ்-போர்ச்சுகீஸ்; போர்ச்சுகீஸ்-தமிழ் அகராதி, 1749இல் புதிய ஏற்பாடு, 1753இல் சத்தியத்தின் ஜபம் எனப் பல கிறித்தவ நூல்கள்

தமிழில் வெளியாயின. இவை அம்பலக்காடு அச்சகத்தின் வழி வெளியிடப்பட்டவை. 1712 முதல் 1804 வரை இதேபோல பல நூல்கள் தமிழில் வெளியாகியுள்ளன.

இந்நூல்கள் அனைத்தும் பல ஆசிரியர்களால் உருவாக்கப்பட்டுச் சமயத் தொண்டர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றவையேயாகும். ஓலைச்சுவடிகளிலிருந்து பதிப்பித்து வெளியிடப் பெற்றவையல்ல. என்றாலும் பொதுவான நிலையில், பதிப்புப் பணிக்கு அடிப்படையான கருத்துப்பதிவு, அச்சுக்கலை, தமிழகத்தில் அச்சுக்கலை, தமிழில் அச்சு நூல்கள் என்ற அடிப்படைக் கருத்துகள் பல சுருங்கிய அளவில் தரப்பட்டன.

**சுவடிப் பதிப்பு - 1. காலவரலாறு**

பழந்தமிழர்தம் கருத்துகளடங்கிய ஓலைச் சுவடிகளே தமிழ்மொழிக்கும் தமிழ்ப்பணிக்கும் அடிப்படையாகின்றன. தமிழ் ஆய்வுக்குப் பெரிதும் துணை நிற்பனவும் அந்தத் தமிழர்தம் பழஞ் செல்வங்களேயாகின்றன. இந்தச்செல்வங்கள் நம்மிடையே எளிமையாகப் பரவுவதற்கு வழிவகுத்தவை சுவடிப்பதிப்பு வெளியீடுகளேயாகும். இந்தச் சுவடிப் பதிப்பின் வரலாற்றை அறிவது மேலும் பதிப்பு நூல்கள் வெளிவருவதற்குத் துணையாகின்றன.

தமிழ் நூல்கள் பல எழுதி வெளியிடப்பட்ட நிலை கி.பி. 1557இலேயே தொடங்கியுள்ளது என்றாலும், பழந்தமிழ் ஓலைச்சுவடிச் செய்திகள் கி.பி. 1812 முதலே அச்சு இயந்திரத்தில் ஏற்றப்பெற்றுள்ளன. தஞ்சை, மலையப்ப பிள்ளை அவர்களின் குமாரன் ஞானப்பிரகாசன் அவர்கள் கி.பி. 1812இல் திருக்குறள் மூலநூலைப் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார். இதில் நாலடியார் மூலமும் திருவள்ளுவமாலையும் சேர்த்து வெளியிடப்பட்டுள்ளன. அதே ஆண்டில், திருக்குறள் அறத்துப்பாலின் முதற்பதின்மூன்று அதிகாரங்கள் ஆங்கில உரையுடன், எல்லீஸ் துரையவர்களால் வெளியிடப்பெற்ற (தொடர்ந்து சுவடிப் பதிப்புகளாகக்

கிடைப்பனவற்றுள் ஒருசில இணைப்பாகத் தரப் பெற்றுள்ளன. )

## திருக்குறள் பதிப்புகள்

மேலே கூறிய இருவர் பதிப்புகளைத் தவிரத் திருக்குறளுக்கு, "தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த திருக்குறளினுரை" என்னும் தலைப்புடன் சரவணப்பெருமாளையர், விசாகப்பெருமாளையர் ஆகியோரால் 1830இல் ஒரு பதிப்பு வெளியாகியுள்ளது. இதுவே திருக்குறளின் மூலமும் உரையும் அடங்கிய முழுமையான முதற்பதிப்பு ஆகும்.

திருக்குறள் இல்லறவியல் 24 அதிகாரங்களும் உரையுடன் இராமாநுசகவிராயரால் 1840இல் வெளியாகியுள்ளது. இந்த 24 அதிகாரங்களுக்குரிய ஆங்கில மொழிபெயர்ப்பு துறு ஐயர் ( W.H. Drew ) அவர்களால் எழுதப்பட்டு நூலின் பிற்பகுதியில் இணைக்கப்பட்டுள்ளது. இராமாநுச கவிராயரின் திருக்குறள் பதிப்பு 2ஆம் பாகம் 1852இல் வெளிவந்துள்ளது. இதிலும் துறு அவர்களின் மொழிபெயர்ப்பு இடம்பெறுகிறது.

'திருக்குறள் தெளிபொருள் விளக்கம்' என்னும் தலைப்புடன் 1849இல் களத்தூர் வேதகிரி முதலியார் அவர்களால் ஒரு பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. திருக்குறள் மூலமும் உரையும் என்னும் நூற்பெயருடன் களத்தூர் வேதகிரி முதலியார் பதிப்பு ஒன்று 1856இல் வெளிவந்துள்ளது.

திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும் - ஆறுமுக நாவலர் - 1861.

திருக்குறள்-மணக்குடவர் உரை-வ.உ.சிதம்பரனார்- 1917.

திருக்குறள்-மணக்குடவர் உரை-கா.பொன்னுசாமி நாட்டார் - 1925.

திருக்குறள் உரைவளம்-தண்டபாணி தேசிகர் - 1950.

ஆகிய பதிப்புகளும் திருக்குறளுக்குரிய குறிப்பிடத்தக்க பதிப்புகளாகும்.

### நாலடியார்

1812இல் திருக்குறளுடன் இணைத்துப் பதிப்பிக்கப் பெற்ற நாலடியார், நீதிமொழித் திரட்டு என்னும் தொகுப்புப் பதிப்பிலும் (1841) இடம்பெறுகிறது. நாலடிநானூற்றின் மூலம், நாலடியார் மூலமும் உரையும், நாலடியார் என்னும் பெயர்களால் பலபதிப்புகள் வெளிவந்துள்ளன (இணைப்பு காண்க).

### தொல்காப்பியம்

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரை 1847இல் மழவை மகாலிங்கையரால் வெளியிடப்பட்டது. இந்நூல் மீண்டும் 1891இல் சி.வை. தாமோதரம் பிள்ளையவர்களாலும், 1-1-1937இல் கணேசையர் உரை விளக்கத்துடன் நா. பொன்னையாபிள்ளையவர்களாலும் வெளியிடப்பட்டன. இதேபோல தொல். எழுத்து இளம்பூரணர் உரை 1868இலும், 1928இலும் வெளியாயின. தொல். சொல்லதிகாரம் சேனாவரையர் உரை 1868இல் இருவேறு பதிப்பாசிரியர்களால் வெளியிடப்பட்டுள்ளது. தொடர்ந்து 1923, 1938 ஆகிய ஆண்டுகளிலும் வெளி வந்துள்ளது. சொல்லதிகார இளம்பூரணர் உரை 1927இலும், தெய்வச்சிலையார் உரை 1929இலும், நச்சினார்க்கினியருரை 1942இலும், கல்லாடர் உரை 1964இலும் வெளியிடப்பெற்றுள்ளன.

தொல்காப்பியப் பொருளதிகாரம், நச்சினார்க்-கினியருரை, பேராசிரியருரை இளம்பூரணருரை ஆகிய மூன்று உரைகள் கி.பி. 1885 முதல் 1943இலும், கல்லாடர் உரை 1964இலும் வெளியிடப்பெற்றுள்ளன.

தொல்காப்பியப் பொருளதிகாரம், நச்சினார்க் கினியருரை, பேராசிரியருரை, இளம்பூரணருரை ஆகிய மூன்று உரைகள் கி.பி. 1885 முதல் 1943 வரை ஏறத்தாழ 12 பதிப்புகள் வெளியாகியுள்ளன. தொல்காப்பியப் பொருளதிகார மூலமும், செய்யுளியல் நச்சர் உரையும் தனித்தனிப் பதிப்புகளாக வெளிவந்துள்ளன (தொல். பதிப்புகளின் பட்டியல் - இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது). தொல்காப்பிய-நன்னூல்-ஒப்பாய்வு நூல் ஒன்று 1858இலேயே வெளி வந்துள்ளது குறிப்பிடத்தக்க ஒன்று.

### காப்பியங்கள்

சீவகசிந்தாமணியின் நாமகள் இலம்பகம், நச்சினார்க்கினியருரையுடன் 1868இல் வெளியிடப்பட்டது. 42 பக்க முன்னுரையுடன் கூடிய இப்பதிப்பு Rev. H. Bower என்பவரின் வெளியீடாகும். தொடர்ந்து 1883இல் முதல் ஐந்து இலம்பகங்களும், 1887இல் நூல் முழுமையுமாக வெளியிடப் பெற்றுள்ளன.

சிலப்பதிகாரம், புகார்க் காண்டம் மூலம் 1876இலும், உரையுடன் 1880இலும் வெளியாயின. அடியார்க்கு நல்லாருரை, அரும்பதவுரைகளுடன் 1892இல் முழு நூல் வெளியிடப்பட்டது.

மணிமேகலை மூலம் 1891இலும், 1894இலும், அரும்பதவுரையுடன் 1898இலும் வெளியாயின.

இவற்றுள் சீவகசிந்தாமணி 1907, 1922, 1942 ஆகிய ஆண்டுகளில் முறையே இரண்டாம், மூன்றாம், நான்காம் பதிப்புகள் வெளியாயின. சிலப்பதிகாரம் 1920இல் இரண்டாம் பதிப்பு தொடங்கி 1950இல் ஐந்தாம் பதிப்பு வரை வெளியாகியுள்ளது. 1921இல் முழு நூலாகிய மணிமேகலையின் இரண்டாம் பதிப்பு வெளிவந்தது.

### பத்துப்பாட்டு

பத்துப்பாட்டு நூல்களுள் முதலாவதான திருமுருகாற்றுப்படை தனி நூலாக முதன்முதலில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இந்நூலினை 1839இல் இலக்குமணன் என்பவர் வெளியிட்டிருக்கிறார். தொடர்ந்து ஆறுமுகநாவலர் அவர்களால் 1853இல் வெளியிடப்பெற்றுள்ளது. 1889இல் உ.வே. சாமிநாதையர் அவர்கள் நச்சர் உரையுடன் முழு நூலையும் வெளியிட்டுள்ளார்.

### எட்டுத்தொகை - கலித்தொகை

தொகைநூல்களுள் ஆறாவது இடத்தில் கூறப்படும் ( நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகம், புறம் என்பன தொகை நூல்களின் முறைவைப்பு ) கலித்தொகையே முதன்முதலில்

அச்சேறியிருக்கிறது. சி.வை. தாமோதரம் பிள்ளையவர்களால் வெளியிடப்பெற்ற 1887ஆம் ஆண்டு வெளியீடே கலித்தொகையின் முதல் வெளியீடாகும். தொடர்ந்து 1924இல் மற்றொரு வெளியீடும் வந்துள்ளது. இது இ.வை. அனந்தராமையருடைய பதிப்பாகும்.

### புறநானூறு

தொகைநூல்களுள் எட்டாவதான புறநானூறு, 1894இல் மூலமும் உரையுமடங்கிய பதிப்பு உ.வே.சா. அவர்களால் வெளியிடப்பட்டு அது 1923இல் இரண்டாம் பதிப்பாகவும், 1935இல் 3ஆம் பதிப்பாகவும் வெளிவந்தது. பிறகு முதல் 200 பாடல்களை 1947இலும், அடுத்த 200 பாடல்களை 1951இலும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டுள்ளது.

### ஐங்குறுநூறு

தொகை நூல்களுள் மூன்றாவதாகிய ஐங்குறுநூறு 1903இல் உ.வே.சா. அவர்களாலும், 1957, 58களில் ஔவை சு. துரைசாமிபிள்ளை அவர்களாலும் வெளியிடப்பட்டது.

### அகநானூறு

அகநானூறு மூலமும் உரையும் இரா. இராகவையங்கார் 1904இலும், வே. இராசகோபாலையங்கார் 1923இலும் வெளியிட்டனர். தொடர்ந்து 1933, 44, 46களிலும் வெளியாகியுள்ளது.

### பதிற்றுப்பத்து

உ.வே.சா. அவர்கள் 1904ஆம் ஆண்டிலும், ஔவை சு. துரைசாமிபிள்ளை 1950ஆம் ஆண்டிலும் பதிற்றுப்பத்து என்னும் நூலை வெளியிட்டுள்ளனர்.

### நற்றிணை

பின்னத்தூர் அ. நாராயணசாமி அவர்கள் நற்றிணையை 1914இல் பதிப்பித்தார். இதே நூலை 1952இல் சை.சி. நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது.

### குறுந்தொகை

குறுந்தொகைப் பதிப்பு 1915இல் சௌரிப்பெருமாளரங்கனாரால் வெளியிடப்பட்டது. 1920 அதன் மூலமும் 1930, 33இல் உரையுடனும் வெளியாகியுள்ளது. 1937இல் உ.வே.சா.வின் பதிப்பு வெளியாயிற்று. பரிபாடல், 1918இலும், பெருங்கதை 1924இலும் உ.வே.சா. அவர்களால் வெளியிடப்பெற்றன.

சங்க இலக்கிய ஆய்வாளர்களுக்கு உறுதுணையாகுமளவில் சங்கப்பாடல்களைப் பாடிய புலவர்களின் வரிசையில் அவர்கள் பாடிய சங்கப்பாடல்கள் தொகுக்கப் பட்டு 1940இல் எஸ். வையாபுரிப்பிள்ளையவர்களால் சங்க இலக்கியம் என்னும் நூல் வெளியாயிற்று. அகம்பன் மாலாதனார் முதல் வேம்பத்தூர் குமரனார் ஈறாக 473 புலவர்கள் பாடிய 3181 பாடல்களும் பாடியவர் பெயர் காணமுடியாத 102 பாடல்களுமாக 3283 பாடல்கள் தொகுக்கப்பெற்று, அவற்றுள் 1443 பாடல்கள் முதற்பகுதியாகவும், பிறவாகிய 1840 பாடல்கள் இரண்டாம் பகுதியாகவும் வெளியிடப்பெற்றன.

பிறவாகிய சுவடிப்பதிப்புகள் இணைப்பில் கொடுக்கப்பெற்றுள்ள அட்டவணையில் இடம்பெற்றுள்ளன.

## 2. பதிப்புமுறை வரலாறு

தமிழ்மொழிக்கும் தமிழ்ப்பணிக்கும் தமிழாய்வுக்குந் துணை செய்துள்ளதோடு, தமிழர்தம் பழஞ்செல்வங்களை நிலைநிறுத்திப் பரவச் செய்தவர்கள் பதிப்பாசிரியர்களே. அச்சிடுவோரோ வெளியீட்டாளரோ இந்தப் பணியை முழுமையாக்கியிருக்க முடியாது. தமிழர்தம் பழஞ் செல்வங்களை நிலைநிறுத்தியதோடல்லாது, நீர்மேலெழுத்துப் போன்ற தங்கள் வாழ்க்கையைக் கல்மேல் எழுத்தாக ஆக்கிக்கொண்டவர்களும் பதிப்பாசிரியர்களே.

1883இல் வெளியான சீவகசிந்தாமணிக்குப் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் அவர்கள் சிறப்புப் பாயிரம் கொடுத்துள்ளார்கள். அதில் அமையும்,

கனக சபைமால் தனதுநல் லுதவியால்
எழுதா எழுத்தில் இயைவித் தனனால்

என்னும் அடிகளில் அச்செழுத்து எழுதா எழுத்து என்று குறிப்பிடப்படுகிறது. இதேபோல அச்செழுத்து தீட்டுதலில்லா எழுத்து என்றும் வழங்கப்பட்டுள்ளது.

திருநெல்வேலி அம்பலவாண கவிராயர் அவர்களால் ஆய்வு செய்யப்பட்டு, தஞ்சை ஞானப்பிரகாசன் அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றுள்ள திருக்குறள்-நாலடியார் மூலம் (1812) சுவடிப்பதிப்புகளில் முதலாவதாக வெளிவந்தது என்ற சிறப்புக்குரியது. அந்தப் பதிப்பில் அமையும் பதிப்பு வரலாறு பதிப்பாசிரியர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாய் அமைவது. அப்பதிப்பின் முதல்பக்கத்தில்,

திருக்குறள் மூலபாடம்

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்தது எனத் தலைப்பு கொடுப்பதிலேயே நூலாசிரியருக்குச் சிறப்பு சேர்த்திருக்கும் பதிப்புப் பண்பு இடம்பெறுகிறது. இப்பண்பு, '.....' என்னும் வரதராசன் கருத்து இதனை உறுதிப்படுத்தும் என்று எழுதும் இன்றைய ஆய்வறிஞர்கள் எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்றாகும். அச்சிட்டு வெளியிட்ட ஞானப்பிரகாசன் அவர்கள், தொண்டை மண்டலத்தைச் சார்ந்த, சென்னைப் பட்டினத்தை அடுத்த தஞ்சைமா நகரத்தைச் சார்ந்தவர்கள்; மலையப்பபிள்ளை அவர்களின் குமாரர் என்னும் வரலாறு சுருக்கமாகக் கிடைக்கிறது. இப்பதிப்பின் அடுத்த பக்கங்களில்,

"கற்றுணர்ந்த தமிழாசிரியர்கள் அருமையின் இயற்றிய இலக்கணவிலக்கியங்களாகிய அரிய நூல்களெல்லாம், இந்நாட்டில் அச்சிற் பதிக்கும் பழக்கமின்றிக் கையினாலெழுதிக்கொண்டு வருவதில் எழுத்துக்கள் குறைந்தும் மிகுந்தும் மாறியுஞ் சொற்கடிரிந்தும் பொருள் வேறுபட்டும்... பிழைகள் மிகுதியும் உண்டாகின்றவாதலால்... அச்சிற் பதிக்குமுன்... பிழையற, இலக்கணவிலக்கிய வாராய்ச்சி யுடையவர்களா லாராய்ந்து சுத்த பாடமாக்கப்பட்டன. ... பாடந்தீர்மானஞ்செய்து ஓரெழுத்து ஒருசொல் நூதனமாகக் கூட்டாமற் குறையாமலனேக மூலபாடங்க ளுரைபாடங்களுக் கிணங்கினதாகத் தீர்மானம் பண்ணி... மறுபடி

கண்ணோட்டத்துட னாராயப்பட்டன” என்னும் பதிப்புப் பணிகள் பற்றிய விரிவான செய்திகள் கிடைக்கின்றன. இவை இன்றைய பதிப்பாசிரியர்களின் பதிப்புரைக்கு மிகவும் துணை செய்வனவாகும்.

இலக்கணவிலக்கிய வாராய்ச்சியுடையவர்களால் லிகிதப் பிழையற, மறுபடி, மறுபடி கண்ணோட்டத்துட னாராயப்பட்டன என்னும் தொடர்கள், பதிப்புப் பணியில் பலருடைய உண்மையான உழைப்பைப் பயன்படுத்திக் கொள்ளும் திறன் பதிப்பாசிரியருக்குத் தேவை என்பதைப் புலப்படுத்துவன. இவை பதிப்புப் பணிகளைத் தம்மைத் தவிர வேறு யாருமே காணக்கூடாது என்று கருதும் பதிப்பாசிரியர்களும் ஆய்வுநெறியாளர்களும் எண்ணிப்பார்க்க வேண்டிய தொடர்களாகும்.

பிரான்சிஸ் ஒயிட் எல்லீஸ் அவர்களின் உரை விளக்கமும் மொழிபெயர்ப்புமமைந்த திருக்குறள் பதிப்பில் (கி.பி. 1812) முதல் குறளுக்கு ஆங்கிலம், தமிழ் மேற்கோள்களோடு இடம்பெறும் உரைவிளக்கம் மூன்று பக்க அளவினையுடையது. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் என்னும் குறளுக்குத் திருவாய்மொழி, திருவாசகம், சிவவாக்கியார் பாடல், தேம்பாவணி ஆகியவற்றிலிருந்து 26 செய்யுள் மேற்கோள்களோடு அமையும் உரைவிளக்கமும் மொழிபெயர்ப்பும் ஒன்பது பக்க அளவினை உடையது.

தங்கள் மொழியிலுள்ள குறைபாட்டினை நீக்க வேண்டும் என்னும் தன்னல நோக்கமுடையது இப்பதிப்பு என்று கூறுவது மிகையாகாது என்றாலும் முதன்முதலில் அச்சுயந்திரத்தைக் காணும் வாய்ப்பினைச் சுவடிகளுக்கு அளித்துச் சுவடிப்பதிப்பின் வழிகாட்டியாய் விளங்கியவர் ஒரு வெளிநாட்டவர் என்ற பெருமையைத் தேடிக்கொண்டவர் F.W. எல்லீஸ் அவர்கள்.

டாக்டர் ஜியார்ஜ் யுக்ளோ போப் ஐயர் அவர்கள், திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய நூல்களில் ஊறித் திளைத்ததன் பயனாய் அக்கருத்துகளைத் தம் நாட்டினரும் அறியவேண்டும் என்ற நோக்கில் முழுமையான மொழிபெயர்ப்புப் பணியை மேற்கொண்டு

வெளியிட்டிருக்கிறார். இம்மொழிபெயர்ப்புப் பதிப்புகளில் சிறந்த முகவுரை, சொற்பொருள் அகராதி, பாட்டு முதற் குறிப்பு அகராதி ஆகியவற்றால் நூலை எளிமைப்படுத்திக் காட்டியிருக்கிறார். திருவாசக மொழிபெயர்ப்பின்வழி மாணிக்கவாசகர் வரலாறு, சைவசித்தாந்தக் கருத்துகள் ஆகியவற்றைத் தம் நாட்டினரும் உணருமாறு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது.

மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை யில்லை
திறமான புலமையெனில் வெளிநாட்டார்
அதைவணக்கஞ் செய்தல் வேண்டும்.
(பாரதியார்)

என்னும் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய நமக்குச் சுவடிப்பதிப்பின்வழி வழிகாட்டியாயிருந்ததோடு தமிழர்தம் திறமான புலமையை வெளிநாட்டார் போற்றும் பணியை மேற்கொண்டவருமாகிறார் போப் அவர்கள்.

யாழ்ப்பாணம்-ஆறுமுகநாவலர் அவர்கள் திருமுருகாற்றுப்படையைப் பதிப்பித்து, சங்க இலக்கியத்தின் முதல் பதிப்பாசிரியர் என்ற சிறப்பினைப் பெற்றவர். எழுதி வெளியிட்டவையுட்பட அறுபது நூல்களுக்குமேல் வெளியிட்டவர்.

1) "பெரியபுராணம் என்று வழங்குகிற
திருத்தொண்டர் புராணம்"

"தமிழ் வேதமாகிய திருக்குறள் மூலமும்
பரிமேலழகர் உரையும்"

"தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்தது"

"வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரைய ருரை"

என முறையே பதிப்புக்குரிய நூல்களுக்கும், நூலாசிரியர்களுக்கும் பண்படைமொழிகளோடு பெயர் வைத்துப் பதிப்பித்தவர் நாவலர்.

> திருவாவடுதுறை ஆதீனத்துச் சுப்பிரமணிய சுவாமிகளின் கட்டளைப்படியும் (இலக்கணக் கொத்து), இராமநாதபுரம் சமஸ்தானம் ஸ்ரீ பொன்னுசாமித் தேவரவர்களின் வேண்டுகோளின் படியும் (திருக்குறள்) நூல்களை வெளியிட்டவர் நாவலர்.

முகவுரை, சிறப்புப்பாயிரம், நூலாசிரியர் வரலாறு, நூல் பற்றிய சிறப்புச் செய்திகள் ஆகியவற்றுடன் நூல்களை வெளியிட்டிருப்பவர். சிறப்பாக நன்னூலின் நூற்பாக்கள் ஒவ்வொன்றிற்கும் பொருட் தலைப்பு கொடுத்து இனங்காணச் செய்தவர். அத்தலைப்புகள் சுவடிகளில் காணப்பட்டவையல்ல என்பதைக் குறிக்க அவற்றை அடைப்புக்குறிக்குள் அமைத்துக் காட்டியவர்.

1. சுவடி வடிவில் உள்ளவற்றைப் பதிப்பித்து வெளியிட வேண்டும். 2. மூலபாடத்தில் மாற்றஞ் செய்தல் கூடாது 3. அச்சுநூலில் ஐயத்தை உண்டாக்கும் அச்சுப்பிழைகள் இருத்தல் கூடாது 4. தலைப்புப்பக்கம், உள்ளுறை, இணைப்பு, பக்க அமைப்பு, கட்டமைப்பு போன்றவற்றில் முழுமையான கவனம் செலுத்த வேண்டும் என்னும் ஆழ்ந்த பதிப்பு நெறிகள் நாவலர் அவர்களால் பின்பற்றப்பட்டன.

1812இல் வெளியிடப்பெற்ற திருக்குறள் பதிப்பின் உரைநடைப் பகுதிகளில் காற்புள்ளி, அரைப்புள்ளி, முற்றுப்புள்ளி போன்ற நிறுத்தற் குறிகள் ஏதுமில்லை. மூலபாடத்தில் மட்டும் முற்றுப்புள்ளியிடப்பட்டது. எல்லீஸ் அவர்களின் ஆங்கிலப் பதிப்பில் இப்புள்ளிகள் இடம் பெற்றுள்ளன. இந்தத் தமிழ்ப் பதிப்புகளைப் போலல்லாமல் ஆறுமுக நாவலர் தம் பதிப்பில் இடமறிந்து, ஏற்ற நிறுத்தற் குறிகளையிடும் முறையைப் பின்பற்றியுள்ளார். திருத்தணிகை சரவணப்பெருமாளையர் & விசாகப் பெருமாளையர் அவர்களின் திருக்குறள் பதிப்பின் இறுதியில்,

“திருத்தணிகைச் சீர்கருணீகர் மடாலயத்திற்கு அதிபர் விருபாட்சையர்; இவர் குமாரர் முத்தையர்; இவர் குமாரர் சாம்பசிவ ஐயர்; இவர் குமாரர் கந்தப்பையர்; இவர் குமாரர்களாகிய விசாகப்பெருமாளையரும் சரவணப்பெருமாளையரும்

அச்சிற் பதிப்பித்த திருவள்ளுவர் உரையும் திருவள்ளுவ மாலையும் முற்றுப்பெற்றன" என்னும் முந்தையோர் வரலாறும், பதிப்பாசிரியர்களின் உறவுமுறையும் இடம்பெறுகின்றன.

வ.உ. சிதம்பரனார் அவர்கள் திருக்குறள் மணக்குடவர் உரை பதிப்புப் பணியை மேற்கொண்டபோது தாம் பெற்றிருந்த சுவடியோடு, அரசினர் சுவடி நூலகச் சுவடி உ.வே.சா. அவர்களின் சுவடி ஆகியவற்றை ஒப்பிட்டுப் பார்த்ததோடு, தி. செல்வக்கேசவராய முதலியார், த. கனகசுந்தரம்பிள்ளை, சகசானந்த சுவாமிகள் ஆகியோரையும் உடன் வைத்துக்கொண்டு முழுமையாக ஆய்வு செய்து பதிப்பித்திருக்கிறார்.

சி.வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தமிழ்ச் சுவடிப் பதிப்புக்கு அடிகோலிச்சென்ற ஆறுமுக நாவலரைத் தொடர்ந்து பதிப்புப் பணிக்குச் சுவர் எழுப்பியவர் என்பர்.

பழைய சுவடிகள் யாவும் கிலமாய் ஒன்றொன்றாய் அழிந்து போகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதிவைப்பாருமிலர். துரைத்தனத்தாருக்கு அதன்மேல் இலட்சியமில்லை. சரஸ்வதியைத் தம்பால் வகிக்கப்பெற்ற வித்துவான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கிறாளில்லை...

திருவுடையீர்! நுங்கருணை இந்நாட்தவறினால் பின்பு தவம்புரிந்தாலும் ஒருதரம் அழிந்த தமிழ்நூற்களை மீட்டலரிது. ...சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா? அயலான் அழியக்காண்கிலும் மனந்தளும்புகின்றதே! தமிழ்மாது நும் தாயல்லவா? இவள் அழிய நமக்கென்னென்று வாளா இருக்கின்றீர்கள்! ...இதனைத்தயை கூர்ந்து சிந்திப்பீர்களாக ( கலித்தொகை - பதிப்புரை ) என்று எழுதி அபயக்குரல் எழுப்பியிருக்கிறார்கள். பொறாமை காரணமாகப் பழித்துப் பேசியோர் பலர். அவற்றை அறிந்த சி.வை.தா. அவர்கள் என் பதிப்பிலுள்ள பிழைகளை எழுதியனுப்பினால் எழுதினோர் பெயர்களோடு வெளியிடப்பெறும். 50 பிழைகளைக் காட்டினால் ஒருநூல் இலவசமாக அனுப்பி வைக்கப்படும் என்றெல்லாம் பத்திரிகையில் வெளியிடும் நிலை

அவருக்கு ஏற்பட்டிருந்தது. சி.வை.தா. அவர்கள் சுட்டிக்கூறிய அனைத்து நிலைகளும் சுவடிப்பதிப்பு பணிகளில் இன்றும் நிலவி வருவனவாகும். தமிழ்நாடு அரசு பலமுறைகளைக் கையாண்டு நூல்கள் வெளிவரப் பொருளுதவி செய்யும் திட்டம் வரை வகுத்துள்ளது. இருந்தும் சி.வை.தா. அவர்கள் சுவடிப்பதிப்பில் நஷ்டத்தையே காணுகிறேன் என்று கூறிய நிலையே இன்றைய சுவடிப்பதிப்பாசிரியர்களுக்கும் நீடித்து வருவது குறிப்பிடத்தக்கது. சுவடிப்பதிப்புகளுக்குத் தடையில்லாது பொருளுதவி செய்யும் நிலையும், கிளை நூலகங்கள், பள்ளி, கல்லூரி நூலகங்கள் அனைத்திலும் சுவடிப்பதிப்புகள் இடம்பெறச் செய்யும் நிலையும் சுவடிப்பதிப்புகள் வெளிவரத் தூண்டுவனவாக அமையும். தமிழிலுள்ள அனைத்துச் சுவடிகளும் அச்சுயந்திரத்தைக் கண்டாக வேண்டும். அந்த நாளே சுவடிகளின் அழிவைப் போக்கிய நாளாகும் என்னும் அவர்தம் உள்ளக்கருத்து நிறைவேறிய தாகவும் அமையும்.

டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் சுவடிப் பதிப்பாகிய பணிக்குக் கூரை வேய்ந்து நிழலைத் தந்தவர் என்று திரு.வி.க. அவர்களால் பாராட்டப் பெற்றவர்.

மேற்கோள்களும் ஒப்புமைப்பகுதிகளும் ஆய்வுரையிலும் விளக்க உரைகளிலும் இடம்பெறுவது பதிப்பு நூல்களை எளிமைப்படுத்த உதவுவன. இப்பணிக்கு நினைவாற்றல் இன்றியமையாத ஒன்று.

ஆய்வில் தனிப்பட்டவர் உழைப்பிற்குத் தக்க சான்றோர் துணை நாடுதற்குத் தனித்திறனும் பொறுமையும் மிகுதியும் தேவைப்படும்.

ஆய்வுக்குத் தேவையான சுவடிகளையும் துணை நூல்களையும் முழுமையாகத் திரட்டி வைத்துக்கொள்வது ஆய்வைப் பயனுடையதாக்கும்; நிறைவுபெறவும் செய்யும். அனைத்துப் பொருள்களையும் பெற்ற அடுக்களையிலிருந்து உணவு ஆக்கும் பணிக்கும், தேவையானபோது கடைக்குச் சென்று வாங்கி வந்து ஆக்குவார் பணிக்குமிடையே வேறுபாடுகள் உண்டு. அவற்றின் பயனும் இன்பமும் சுவையும் பெரிதும் வேறுபட்டே காணப்படும். அத்தன்மை போல ஆய்வுத்துணைகளைத் திரட்டி வைத்துக்கொண்டு ஆய்வில்

ஈடுபடும் பணிக்கும், அவ்வப்போது நூலைத் தேடித் தேடி அலைந்து ஆய்வுசெய்யும் பணிக்குமிடையே வேறுபாடுகள் மிகுதியாகும். பயனும் அத்தகையதே.

சிறப்பாகப் பதிப்புப் பணிக்கு உழைப்பின் திறனே தேவைப்படுவது. கால விரைவு பயன் தராத ஒன்று.

பதிப்புப் பணிகளுக்குரிய இத்தகு ஆற்றல் அனைத்தையும் ஒருங்கே, இயல்பாகவே பெற்ற ஒரு நல்லுருவத்தின் பெயரே உ.வே.சா. என்பது மிகையாகாது. இவை பதிப்பாசிரியர் அனைவரும் பெறவேண்டிய திறன்களாகின்றன. சுவடிகளைப் படிக்கும்போதும் ஒப்பிடும்போதும் சுவடிச் செய்திகளில் மட்டுமே உள்ளம் ஊறித்திளைக்கும் உ.வே.சா.வின் பண்பு அனைவருக்கும் பொருந்தவேண்டிய ஒன்று.

1. பதிப்பு நூலுக்குக் கிடைக்கும் அனைத்துச் சுவடிகளையும் முயன்று திரட்டுதல்.
2. சிறப்புடைய ஒன்றைத் தேர்ந்து படியெடுத்துக்கொண்டு பிறவற்றை ஒப்பிடப் பயன்படுத்துதல்.
3. பதிப்பு நூலைப் பலமுறை ஆழ்ந்து படித்தல்; பொருளை முழுமையாக மனத்தில் பதித்தல்; தொடர்புடைய பிற நூல்களையும் படித்தறிதல்; விளக்கம் எழுதத் தொடங்குதல்.
4. வடமொழி, தென்மொழி வல்லுநரை வினவியறிதல்.
5. நூலுக்குரிய சமய சாத்திர வல்லுநர்களை அணுகி முழுமையாகக் கேட்டறிதல் போன்ற அனைத்துச் செயற்பாடுகளும் உ.வே.சா. அவர்கள் நமக்களித்தவை.

அச்சுப்படி திருத்தும் பணி ஒன்றை மட்டும் முதல் ஓரிரு பதிப்புகளிலே அறிந்திருந்ததாகக் கூறும் அவர்கள்,

1. மூலத்தைப் பெரிய எழுத்திலும் உரையைச் சிறிய எழுத்திலும் அச்சிடவேண்டும் 2. பொழிப்புரை, சிறப்புரைகளைத் தனித்தனி பத்திகளாக அமைத்தல் 3. நூல்

பெயர், இலம்பகப் பெயர், தலைப்பு, மூலம், உரை ஆகியவற்றிற்கு வெவ்வேறு எழுத்துகளைத் தேர்ந்தெடுத்து அச்சிடச் செய்தல் 4. அடிக்குறிப்புகளுக்கு உடுக்குறி போன்றவற்றைப் பயன்படுத்துதல் 5. சொல்லகராதி தயாரிக்கப் பல அறைகளடங்கிய பெட்டியைப் பயன்படுத்துதல் 6. நூலுக்குரிய புதிய செய்திகளை அமைக்க முயற்சி செய்தல் ஆகிய அனைத்துப் பதிப்புப் பணி வரன்முறைகளும் பதிப்பாசிரியர்களுக்கு உ.வே.சா. அவர்கள் செய்து காட்டிய வழிகளாகின்றன.

பதிப்பிக்கத் தொடங்கிய நூல் எனக்கு ஒரு தெய்வ விக்கிரகம் போல் இருந்தது. அதன் அழுக்கைத் துலக்கிக் கவசமிட்டுத் தரிசிக்க வேண்டுமென்பதே என் ஆசை. கை கோணி இருக்கிறது; வேறுவிதமாக அமைக்கலாம்; நகத்தை மாத்திரம் சிறிது திருத்தலாம் என்ற எண்ணம் எனக்கு உண்டானதே இல்லை என்னும் கொள்கைகளை வரையறுத்துக்கொண்டு பதிப்புப் பணிகளை மேற்கொண்டவர் உ.வே.சா. தாம் மேற்கொண்ட கொள்கைகளைத் தம் என் சரித்திரத்தில் பொறித்து வைத்துச் சென்றுள்ளது எதற்காக?!

எஸ். வையாபுரிபிள்ளையவர்கள் ஆழ்ந்த காரண காரியங்களோடு கூடிய ஆய்வு நெறிக்கு வழிகாட்டியவர். நல்லவற்றைப் போற்றும் மனப்பான்மையினாலேயே தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தம் பெறச் செய்யும் உயர்ந்த பண்பையும் மேற்கொள்ள பதிப்பாசிரியருக்கு வழிகாட்டியவர். இவர் தம்பதிப்புகள் ஆழ்ந்த ஆய்வு நிறைந்தவை ( இணைப்பில் ) .

தமிழ்நூல் கி.பி. 1557இலேயே அச்சிடப்பட்டு வெளியாகியிருக்கிறது என்றாலும், சுவடிப்பதிப்பு கி.பி. 1812இலேயே வெளியாகியிருக்கிறது. இந்தப் பதிப்பு முறைகளில் நெறிப்படுத்தியவர்கள் ஆங்கிலேயர்கள் என்பதும் பெறப்படுகிறது.

தமிழ்ச்சுவடிப் பதிப்புகள் சுவடிகளில் உள்ளவாறே, பாக்களின் அடிகளும் பிரித்து அமைக்கப்பெறாத பதிப்புகள் தொடங்கிப் படிப்படியே வளர்ந்து, அனைத்துப் பயனுடைய இணைப்புகளோடு வெளியிடப்பெற்றுள்ள பதிப்புமுறை கி.பி.

1950க்குள் நிறைவு பெற்றிருக்கிறது என்பதும் அம்முறைகள் பதிப்பாசிரியர்களுக்குப் பெரிதும் துணைபுரிவன என்பதும் இவ்வரலாற்றால் பெறப்படும் பயன்களாகின்றன.

## இணைப்பு

( வெளியீடுகள் - பதிப்பாசிரியர் வரிசை சில, நூல் வரிசை சில என்று அமைவதால் - சில நூல்கள் திரும்பவும் இடம்பெறும் )

1. ஞானப்பிரகாசன் - திருக்குறள் படலம் - 1812
2. பெஸ்கி அவர்கள் தொகுத்த சதுரகராதி - 1824
3. இராமசாமி நாயகர் வெளியிட்ட கணித தீபிகை-1825
4. அழகரந்தாதி, திருவேங்கடத்தந்தாதி, திருவரங்கத்தந்தாதி, திருவரங்கத்து மாலை, கலம்பகம் போன்றவற்றின் முதற்பதிப்புகள் 1830களில்
5. திருத்தணிகை விசாகப் பெருமாளையர், சரவணப் பெருமாளையர் வெளியிட்ட திருக்குறள் நீதிநெறி விளக்கம் } 1830
6. சரவணப் பெருமாளையர்-வாக்குண்டாம் நல்வழி, நன்னெறி 1833
7. தாண்டவராய முதலியார், முத்துசாமி பிள்ளை, நன்னூல் மூலம், நம்பியகப் பொருள் மூலம் புறப்பொருள் வெண்பா மாலை மூலம் } 1835
8. புதுவை நயனியப்ப முதலியார் - தஞ்சைவாணன் கோவை, நேமிநாதம் 1836
9. சுப்பராய ஐயர் - திருவாசகம் 1836
10. சரவணப்பெருமாளையர் - வருணகுலாதித்தன் மடல் 1838
    கோளதீபிகை பணவிடு தூது, சேந்தன் திவாகரம் 1839
11. விசாகப் பெருமாளையர் - நன்னூல் காண்டிகை 1839
12. மழவை மகாலிங்க ஐயர் - ஈட்டி எழுபது, வெற்றி வேற்கை 1847
    தொல். நச்சினார்க்கினியர் உரை
13. இராமாநுசக் கவிராயர்-நன்னூல் விருத்தியுரை 1847

| | | |
|---|---|---|
| 14. | வேதகிரி முதலியார் - திருக்குறள் பதிப்பு | 1849 |
| 15. | யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் | 1822-79 |
| | சூடாமணி நிகண்டு உரை | |
| | சௌந்தரிய லகரி உரை | 1849 |
| | நன்னூல் விருத்தி | |
| | திருச்செந்தூர் நீரோட்டக யமக அந்தாதி | |
| | திருமுருகாற்றுப்படை | 1851 |
| | நன்னூல் காண்டிகை, நைடத உரை, | |
| | திருவிளையாடற் புராணம் | |
| | திருவாசகம், திருக்கோவையார் மூலம் | 1860 |
| | குறள் - பரிமேலழகர் | 1861 |
| | திருக்கோவையார் நச்சினார்க்கினியர் உரை | 1861 |
| 16. | சி.வை. தாமோதரம் பிள்ளை | 1832-1901 |
| | நீதிநெறி விளக்கம் | 1854 |
| | வீரசோழியம் | 1881 |
| | தொல்.சொல். சேனாவரையம் | 1868 |
| | தொல்.சொல். நச்சினார்க்கினியம் | 1882 |
| | தணிகைப் புராணம், இறையனர் அகப்பொருள் | 1883 |
| | தொல்.பொருள். நச்சினார்க்கினியர், பேராசிரியர் உரை | 1885 |
| | கலித்தொகை - நச்சர் உரை | 1887 |
| | இலக்கண விளக்கம், சூளாமணி | 1889 |
| | தொல்.எழுத்து. நச்சினார்க்கினியம் | 1891 |
| 17. | உ.வே. சாமிநாத ஐயர் | 1855-1942 |
| | சுப்பிரமணிய தேசிக விலாசம் | -- |
| | திருக்குடந்தைப் புராணம் | -- |
| | சிந்தாமணி | 1887 |
| | பத்துப்பாட்டு நச்சர் உரை | 1888 |
| | சிலம்பு | 1892 |
| | புறநானூறு | 1894 |
| | மணிமேகலை | 1898 |
| | ஐங்குறு நூறு | 1903 |
| | பதிற்றுப்பத்து | 1904 |
| | பரிபாடல் | 1918 |
| | பெருங்கதை | 1924 |

குறுந்தொகை 1935

தலபுராணம் - 14

இலக்கண நூல்கள்-4, கோவைகள்-5 தனிப்பிரபந்த உலாக்கள்-9, தூதுகள்-6, குறவஞ்சி-1, நூல்கள்-24 கலம்பகம்-1, பரணி-2

பெரிய பிரபந்த திரட்டுகள் - 3

விருத்தம், வெண்பா, மாலை,
அந்தாதி, இரட்டைமணிமாலை, ஆக - 16
மும்மணிக்கோவை, பஞ்சரத்தினம்

18. தி. செல்வக்கேசவராய முதலியார் 1864-1921

ஆசாரக்கோவை 1893
அறநெறிச்சாரம் 1905
முதுமொழிக்காஞ்சி 1919

19. கா. நமச்சிவாய முதலியார் 1876-1931

தொல்.பொருள் அகத்திணை,
புறத்திணையியல் - இளம்பூரணம் 1920
தொல்.எழுத்து.சொல். மூலம் 1920
தொல்.பொருள். மூலம் 1924
தொல்.சொல். இளம்பூரணம் 1927
வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி
நீதிசாரம், ஆத்திசூடி, கொன்றை வேந்தன் 1931
நீதிவெண்பா, தணிகைப்புராணம், அறப்ப-
ளீசுவரர் சதகம், வெற்றி வேற்கை, உலகநீதி
இறையனார் களவியல் 1932
தஞ்சைவாணன் கோவை 1943
திருவாசகம், திருக்கோவையார்
பத்துப்பாட்டு மூலம், பெருந்தொகை
சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

<u>மொழிபெயர்ப்புடன் கூடிய பதிப்புகள்</u> ( ஆங்கிலம் )

1. திருக்குறள்-அறத்துப்பால்- முதல் 13 அதிகாரம் ஆங்கில உரையுடன் - F.W. எல்லீஸ் 1812
2. திருக்குறள் ( இல்லறவியல் 24 அதிகாரம் ) - இராமாநுச கவிராயர் துறு ஐயர் ஆங்கில மொழிபெயர்ப்புடன் 1840
3. -- ” -- பாகம்-2 1852
4. திருக்குறள், ஜி.யு. போப் 1886

5. நாலடியார் ஜி.யு. போப் 1893
6. திருவாசகம் ஜி.யு. போப் 1900
7. புறநானூறு (பதிப்பு மட்டும்) ஜி.யு.போப்
8. புறப்பொருள் வெண்பாமாலை ஜி.யு.போப் 1905-1907
9. திருவருட்பயன் ஜி.யு. போப் மொழிபெயர்ப்பு-பிரெஞ்சு
10. திருக்குறள் - புதுச்சேரி - ஞானத்தியாகு 1942
11. நாலடியார் 1946
12. ஆசாரக்கோவை 1950
13. நான்மணிக்கடிகை 1954
14. திரிகடுகம், அறநெறிச்சாரம் 1956

திருக்குறள்-நாலடியார்-மூலம்
ஞானப்பிரகாசன் (அம்பலவாண கவிராயர்) 1812

திருக்குறள், எல்லிஸ், எஃப்.டபிள்யூ. 1812

திருக்குறள் மூலமும் உரையும், விசாகப்
பெருமாளையர்.க, சரவணப் பெருமாளையர்.க. 1830

திருக்குறள், இராமாநுச கவிராயர் 1840

திருக்குறள் தெளிபொருள் விளக்கம்
வேதகிரி முதலியார் 1849

திருக்குறள் மூலமும் உரையும்
வேதகிரி முதலியார் 1856

திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும்
நல்லூர் ஆறுமுக நாவலர் 1861

திருக்குறள்-மணக்குடவர் உரை
வ.உ. சிதம்பரனார் 1917

திருக்குறள் மணக்குடவருரை
கா. பொன்னுசாமி நாட்டார் 1925

திருக்குறள் - உரைவளம்
தண்டபாணி தேசிகர் 1950

நீதிமொழித்திரட்டு - நாலடியார்
வாக்கர்.J., 1841

நாலடி நானூற்றின் மூலம்
வேங்கடாசல முதலியார் 1843

நாலடியார் மூலமும் உரையும்
முத்துசாமி முதலியார் 1844

நாலடியார் மூலமும் உரையும்
ஆற்காடு முனியப்ப முதலியார் 1852

நாலடியார்-களத்தூர் வேதகிரி முதலியார்
உரையுடன் 1855
நாலடியார்-மூலமும் உரையும்
(வேதகிரி முதலியார் பதிப்பைத் தழுவி
செய்யப்பெற்றது)
கந்தசாமி முதலியார், பூவிருந்தவல்லி 1860
நாலடியார் - மூலமும் உரையும்
கந்தசாமி முதலியார் 1863
நாலடியார் - மூலமும் உரையும்
கேசவ முதலியார் 1869
தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-
நச்சினார்க்கினியம்
வீரபத்திர ஐயர், திருவண்ணாமலை 1847
தொல்காப்பியம் - நன்னூல்
S. சாமுவேல் பிள்ளை 1858
தொல்.சொல். சேனாவரையம்
சி.வை. தாமோதரம்பிள்ளை 1868
தொல்.எழுத்து.இளம்பூரணம்
சு. கன்னியப்ப முதலியார் 1868
தொல்.சொல். சேனாவரையம்
இராசகோபாலப்பிள்ளை 1868
தொல்.பொருள்.நச்சினார்க்கினியம்
சி.வை. தாமோதரம்பிள்ளை 1885
தொல்.எழுத்து.நச்சினார்க்கினியம்
சி.வை. தாமோதரம்பிள்ளை 1891
தொல்.பொருள்.நச்சினார்க்கினியம்
(இரண்டு பகுதிகள்)
ச. பவானந்தம் பிள்ளை 1916
தொல்.பொருள்.பேராசிரியம்
ச. பவானந்தம் பிள்ளை 1917
தொல்.செய்யுளியல்-நச்சினார்க்கினியம்
ரா. இராகவையங்கார் 1917
தொல்.பொருள். இளம்பூரணம்
கா. நமச்சிவாய முதலியார் 1920
தொல்.சொல். சேனாவரையம்
பேரா. கந்தசாமியார் 1923

தொல்.பொருள். மூலம்
கா. நமசிவாய முதலியார் 1924
தொல்.சொல். இளம்பூரணம்
கா. நமசிவாய முதலியார் 1927
தொல். எழுத்து. இளம்பூரணம்
வ.உ. சிதம்பரனார் 1928
தொல்.பொருள்.இளம்பூரணம்,
வ.உ. சிதம்பரனார் 1928
தொல்.சொல்.தெய்வச்சிலையார் உரை
அரங்க வேங்கடாசலம் பிள்ளை 1929
தொல்.பொருள். இளம்பூரணம் ( இரண்டு பகுதிகள் )
வ.உ. சிதம்பரனார் 1933-1936
தொல்.பொருள்.நச்சினார்க்கினியம்; பேராசிரியம்
S. வையாபுரிப்பிள்ளை
வே. துரைசாமி அய்யர் 1934
தொல்.எழுத்து.நச்சினார்க்கினியம்
சி. கணேசையர்
நா. பொன்னையாபிள்ளை 1937
தொல்.சொல். சேனாவரையம்
சி. கணேசையர் 1938
தொல்.சொல். நச்சினார்க்கினியம்
மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை 1942
தொல்.பொருள். பேராசிரியம்
சி. கணேசையர் 1943
தொல்.பொருள். நச்சினார்க்கினியம்
சி. கணேசையர் 1948
தொல்.சொல். கல்லாடருரையும் பழையவுரையும்
கு. சுந்தரமூர்த்தி 1964
சீவகசிந்தாமணி-முதற் புத்தகம்
( நாமகள் இலம்பகம்-நச்சினார்க்கினியம் )
எச். பவர் ( Rev. H. Bower ) 1868
சீவகசிந்தாமணி - முதற் பாகம்
( முதல் ஐந்து இலம்பகங்கள் )
ப. அரங்கசாமிப்பிள்ளை 1883
சீவகசிந்தாமணி - உ.வே. சாமிநாதையர் 1887
சீவகசிந்தாமணி - உ.வே. சாமிநாதையர் 1907

சீவகசிந்தாமணி - உ.வே. சாமிநாதையர் 1922
சீவகசிந்தாமணி - உ.வே. சாமிநாதையர் 1942
சிலப்பதிகாரம்-புகார்க்காண்டம்
தி.ஈ.சீனிவாச ராகவாச்சாரியார் 1874
சிலப்பதிகாரம்-புகார்க்காண்டம் உரையுடன்
தி.க. சுப்பராய செட்டியார் 1880
சிலப்பதிகாரம்-அடியார்க்கு நல்லாருரை
அரும்பதவுரை ஆகியவற்றுடன்
உ.வே. சாநமியாதையர் 1892
சிலப்பதிகாரம்-அடியார்க்கு நல்லாருரை
அரும்பதவுரை ஆகியவற்றுடன்
(இரண்டாம் பதிப்பு)
உ.வே. சாநமியாதையர் 1920
சிலப்பதிகாரம்-அடியார்க்கு நல்லாருரை
அரும்பதவுரை ஆகியவற்றுடன்
(5-ம் பதிப்பு)
உ.வே. சாநமியாதையர் 1950
கலித்தொகை-மூலமும் உரையும்
சி.வை. தாமோதரம்பிள்ளை 1887
கலித்தொகை-மூலமும் உரையும்
இ.வை. அனந்தராமையர் 1924
சூளாமணி - சி.வை. தாமோதரம்பிள்ளை 1889
சூளாமணி - குறிப்புரையுடன்
உ.வே.சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு 1954
சூளாமணி - மூலமும் உரையும்
சைவசித்தாந்த கழக வெளியீடு 1962
திருமுருகாற்றுப்படை, இலக்குமணன் 1839
திருமுருகாற்றுப்படை
நல்லூர் ஆறுமுகநாவலர் 1853
பத்துப்பாட்டு - உ.வே. சாமிநாதையர் 1889
மணிமேகலை - மூலம்
சண்முகம்பிள்ளை, திருமயிலை 1891
மணிமேகலை - மூலம்
முருகேச செட்டியார் 1894
மணிமேகலை, அரும்பதவுரையுடன்,
உ.வே. சாமிநாதையர் 1898

புறநானூறு - மூலமும் உரையும்
உ.வே. சாமிநாதையர் 1894

புறநானூறு - மூலமும் உரையும்
( 2-ம் பதிப்பு )
உ.வே. சாமிநாதையர் 1923

புறநானூறு - மூலமும் உரையும்
( 3-ம் பதிப்பு )
உ.வே. சாமிநாதையர் 1935

புறநானூறு - மூலமும் உரையும்
( முற்பகுதி )
சைவசித்தாந்த நூ.க.
( ஔவை சு. துரைசாமிப்பிள்ளை ) 1947

புறநானூறு - மூலமும் உரையும்
( பிற்பகுதி )
( ஔவை சு. துரைசாமிப்பிள்ளை ) 1951

ஐங்குறு நூறு
உ.வே. சாமிநாதையர் 1903

ஐங்குறு நூறு - மூலமும் விளக்கவுரையும்
( மூன்று தொகுதிகள் )
ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை 1957-58

அகநானூறு-மூலமும் உரையும்,
இரா. இராகவையங்கார் 1904

அகநானூறு - மூலமும் உரையும்
வே. இராசகோபாலையங்கார் 1923

பதிற்றுப்பத்து - டாக்டர் சாமிநாதையர் 1904

பதிற்றுப்பத்து - மூலமும் உரையும் ( கழக வழி )
வேந்தர் ஔவை துரைசாமிபிள்ளை 1950

# 2. பதிப்பு நெறி

முனைவர் இ. சுந்தரமூர்த்தி

தமிழாய்வு இன்று பல்வேறு நிலைகளிலும் வளர்ச்சி பெற்றுத் துலங்குகிறது. தொடக்ககாலத்தில் தொன்மையான பழஞ்சுவடிகளைப் பதிப்பித்தலே முதன்மையான பணியாக அமைந்தது. முன்னையோரின் இப்பதிப்புப் பணியே இன்றைய ஆய்வுப்பணிக்கு வித்திட்டது என்றால் மிகையாகாது. தமிழ்ப் பதிப்பு முன்னோடிகளான அ. தாண்டவராய முதலியார், இராமச்சந்திர கவிராயர், முகவை இராமாநுச கவிராயர், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், களத்தூர் வேதகிரி முதலியார், ஆறுமுகநாவலர், மகாவித்துவான் திருமயிலை சண்முகம் பிள்ளை, வீராசாமி செட்டியார், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், ச. வையாபுரிப்பிள்ளை ஆகியோர் தமிழ்ப் பதிப்புகளை உருவாக்கும்போது பல்வேறு நெறிகளைக் கொண்டு தத்தம் பணிகளைச் செவ்வையுறச் செய்தனர்.

## பதிப்பு முயற்சிகள்

1812ஆம் ஆண்டில் வெளிவந்த திருக்குறள் பதிப்பு இன்று நமக்குக் கிடைக்கும் இலக்கிய நூல்களுள் முதல் பதிப்பாகக் கருதப்பெறுகின்றது. இதற்கு முன்னரும் தமிழில் பல நூல்கள் வெளிவந்துள்ளனவாயினும் இந் நூலில் முதன்முதலாகப் பல்வேறு பதிப்புநெறிகள் சுட்டப்படுகின்றன. மரவெழுத்தால் அச்சடிக்கப்பெற்ற இப்பதிப்பில் ஒருநூலை அச்சிற்கு எடுத்துக்கொள்ளுமுன் மேற்கொண்ட முன் முயற்சிகளும், குழு முயற்சிகளும், மூலபாட ஆய்வு நெறிமுறைகளும் பின்பற்றியுள்ள தொடர் முயற்சிகளிலும் தெரியவருகின்றன. பிற இலக்கிய, இலக்கணங்களையும் துணை

கொண்டு மூலபாடத்தை வரையறை செய்த தன்மை, அறிஞர் பெருமக்களுக்கு அனுப்பி அவர்தம் கருத்துக்களைக் கேட்டுப் பாடத்தை வரையறை செய்தமை முதலாய செய்திகள் அக்காலத்தில் அவர் கொண்டிருந்த பதிவு நெறிமுறைகளைக் காட்டும்.

## சுத்தபாடம்

பதிப்பாசிரியர் ஒருநூலினைப் பதிப்பிக்குமுன் அந்நூலினைப் பற்றிய பல்வேறு செய்திகளையும் முயன்று தொகுத்து வைத்துக்கொள்ளல் இன்றியமையாததாகும். சுவடியினின்றும் பதிப்பிக்கும் முதல் நூலாயின் அச்சுவடி நூலின் பல்வேறு பிரதிகளையும் பார்வையிட்டுப் பின்னர் பதிப்பித்தல் வேண்டும். உ.வே.சா., வையாபுரிப்பிள்ளை ஆகியோர் தம் பதிப்பு ஆய்வு முன்னுரைகளில் பல இடங்களிலும் தேடிச் சென்று அரிதின் முயன்று பெற்ற சுவடிகளைக் குறிப்பிடுவது இங்கு நினைவுகூர்தற்குரியது. பல்வேறு சுவடிகளில் அமைந்துள்ள பாடவேறுபாடுகளைத் தொகுத்து வைத்துக் கொண்டு நன்கு ஆராய்ந்து சுத்தபாடம் தெரிதல் வேண்டும். நெடிய கால இடைவெளிக்குப்பின் ஒரு நூலினைப் பதிப்பிக்கும்போது ஆசிரியரின் உண்மைப் பாடத்தைத் தெளிந்து பதிப்பிப்பது சிக்கலான செயலாகும். பல்வேறு சுவடிகள் கிட்டினால் பாடவரையறை செய்து பதிப்பிக்க அவை துணையாய் அமையும்.

## பாடவேறுபாடு

அண்மைக் காலத்தே பதிப்பிக்கப் பெற்ற பாரதியார் பாடல்களிலும் கூடப் பாடவேறுபாடுகள் இருப்பதை அறிஞர் ஆராய்ந்து கூறியிருப்பது இங்கு எண்ணத்தக்கது ( காண்க. பாரதி ஆய்வுகள், க. கைலாசபதி, என்சிபிஎச் வெளியீடு, 1987 ). பாரதி பாடல்களின் தலைப்பிலேயே இத்தகைய பாடவேறுபாடுகள் மிகுந்துள்ளன. குயில்பாட்டு, குயிலின் கதை, குயில், குயிலி, குயிற் பாட்டு எனப் பல்வேறு வகைகளில் தலைப்புத் தந்து பதிப்பித்துள்ளமையைச் சுட்டிக்காட்டிப் பாரதியாரது மூலபாடத்தைத் திடமாக அறியும் வாய்ப்புச்

கிட்டவில்லை என்பர். மூலநூலாசிரியரின் சொற்களைப் படிப்போருக்காக எளிமை கருதிச் சிலர் பதிப்பித்து விடுகின்றனர். வடசொற்களை நீக்கித் தமிழ்ச் சொற்களைச் சிலர் அமைத்துப் பதிப்பிக்கின்றனர். இத்தகைய பதிப்புநெறி உரிய பதிப்பு நெறியாகாது என்பர். இதனால் மூலநூலாசிரியரின் மொழிநடையும் மாற்றம் கொள்ளும். பதிப்பு நெறியில் மிக இன்றியமையாத ஒன்று எவ்வகையிலும் நூலாசிரியரின் சொற்களை மாற்றாது அப்படியே பதிப்பித்தலாம். அண்மைக்கால நூல்களுக்கே இத்தகைய பாடவேறுபாடு உண்டாகின்றதெனின் தொன்மை நூல்களின் நிலை பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. முன்னையோர் பாடங்களில் ஐயம் ஏற்படின், அவற்றை அவ்வப்பக்கங்களின் கீழ் உரிய விளக்கங்களோடு பதிப்பித்த நெறியையும் எண்ணத்தக்கது.

### சந்தி பிரித்தல்

பதிப்புக்கலை வளர வளர நூல்களை வெளியிடும் முறையிலும் மாற்றம் நேர்ந்தது. அவற்றுள் ஒன்று சந்தி பிரித்துப் பதிப்பித்தலாகும். பொருள் விளக்கத்திற்காகச் சொற்களைப் பிரித்துப் பதிப்பித்தனர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை இவ்வாறு சொற்களைப் பிரித்துப் பதிப்பிப்பது குறித்துத் தம்முடைய பதிப்பு நெறிகளிலே சுட்டியுள்ளார். நான்மணிக்கடிகைப் பதிப்புரையில் இவர் இது குறித்து விளக்குவது வருமாறு:

இந்நூலினைப் பதிப்பிடுதலில் ஒருசில நியமங்களைக் கையாண்டுள்ளேன். இவற்றைக் குறித்துச் சில ஆண்டுகளாக நான் கருத்தூன்றி ஆலோசனை செய்ததுண்டு. புதுநியமங்களுக்கு அவசியம் உண்டா என்ற ஐயப்பாடும் இடையிடையே தோன்றியது. ஆங்கிலத்தில் சாஸர் இயற்றிய கவிகளைத் தற்காலத்துள்ளார் பொருளுணர்ந்து கொள்வதற்கு அருமையாயிருத்தல் பற்றிச் சொல்லின் எழுத்தமைதியை ( Spelling ) மாற்றி அச்சியற்றல் தகுமா? இது போன்றதுதானே செய்யுளில் சொற்களைப் பிரித்து

அச்சிடுதல்? இங்ஙனம் பிரிப்பதால் செய்யுளின் ஓசை கெட்டுவிடுமல்லவா? இவை போன்ற கேள்விகளுக்கு விடையளிப்பது எளிதல்ல. ஆனால் பொருள் எளிதில் விளங்கும்படி அச்சியற்ற வேண்டும் என்ற நோக்கமும் கைக்கொள்ள வேண்டுவாயுள்ளதே. இருவகை மனப்பாங்கிற்கும் ஒரு சமரசம் ஏற்பட வேண்டியதவசியம். இந்நெறியில் நான் சிறிது முயற்சி செய்திருக்கிறேன். அனுபவம் பெருகப் பெருக இந்நியமங்கள் திருந்தியமையலாம். செய்யுள் பயிலுவோரின் தொகை அதிகரித்து வரும் இந்நாளில் இந்நியமனங்கள் தக்கபடி ஆராயப்பட்டு அனைவருக்கும் உடன்பாடான சில நியமங்கள் ஏற்படக்கூடும். அக்காலம் விரைவில் வரின் நலமாகும் எனப் பல ஆண்டுகளுக்கு முன்னே கூறினார். ஆனால் இன்று பலர் பெரும்பாலும் சந்தி பிரித்தே பல்வேறு பதிப்புகளை உருவாக்குகின்றனர். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை அவர்கள் தம் பதிப்புகளில் சில சொற்றொடர்களைப் பிரித்தும், அவற்றிற்கான விளக்கங்களைக் குறித்தும் பதிப்பித்தனர்.

## குறியீடுகள்

சுவடிகளில் உள்ள பாடல்களைப் பதிப்பிக்கும்போது தொடக்ககாலத்தில் சந்தி பிரிக்காமலும், குறியீடுகளை அமைக்காதும் பதிப்பித்தனர். அரைப்புள்ளி, நிறுத்தப்புள்ளி, முற்றுப்புள்ளி முதலாய குறியீடுகளைப் பதிப்பு நெறிகளில் பயன்படுத்தத் தொடங்கினர். மர்ரே பதிப்புகளில் இம் முறைகள் பெரிதும் பின்பற்றப்பட்டன. பின்னர்த் தொடர்ந்து பல பதிப்பாசிரியர்கள் இதனைப் பின்பற்றினர். நிட்டானுபூதி என்னும் நூலில் இக்குறியீடுகளுக்கான விளக்கங்களைக் காணலாம். முளை, சிறுகீற்று, பெருங்கீற்று, இருதலைப்பிறை, இருதலைப்பகரம், தாரகை என அவற்றிற்கான சொற்களைப் பயன்படுத்தினர்.

1875ஆம் ஆண்டில் பூமகள் விலாசம் அச்சுக்கூடத்தார் வெளியிட்ட நிட்டானுபூதி என்னும் நூலில் முதன் முதலாக பதிப்பில் அமைக்கும் குறியீடுகள் பற்றிய செய்திகள்

தரப்பட்டுள்ளன. இன்று பதிப்பிக்கும்போது படிப்போர் எளிமையில் புரிந்துகொள்வதற்கு ஏதுவாகப் பல குறியீடுகளைப் பயன்படுத்துகின்றோம். அந்நூலில் குறித்துள்ள குறியீட்டு விளக்கங்களில் அவை எவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளன என்பதும் தரப்பட்டுள்ளமை சிறப்பாக எண்ணத்தக்கன.

(1) , இம்முளை கூட்டுச் சொல் முதலியவற்றின் பின்னும்

(2) - இச்சிறுகீற்றுச் சொற்களின் பிரிவுக்குப் பின்னும்

(3) _____ இப்பெருங்கீற்றுப் பதசாரத்திற்குப் பின்னும்

(4) ( ) இவ்விருதலைப் பிறை வருவிக்கப்பட்ட சொற்களுக்குப் பின்னும்

(5) [ ] இவ்விருதலைப் பகரம் தாத்பரியத்துக்கும்

* இத்தாரகை அடியிற் காட்டப்பட்டவற்றிற்கும் வைக்கப்பட்டன.

## பதிப்பாசிரியர் பணி

பதிப்பாசிரியர்கள் பல்வகைத் திறனும் பெற்றிருந்தமையை அவர்தம் பதிப்பாய்வு முன்னுரைகள் காட்டும். உ.வே.சா.வின், சி.வை.தாவின் அரிய ஆராய்ச்சி முன்னுரைகள் அவர்தம் பல்துறைப் புலமையைக் காட்டுவனவாகும். மரபுவழிப்புலமையும், இலக்கண நெறியமைந்த மொழித்திறன், தனிப்பயிற்சி ஆகியவை பதிப்புப்பணியை எளிமையாக்கும். ஒரு சுவடிப் பதிப்பாசிரியர் நல்ல சுவடிப்பெயர்ப்பாளர்களாகவும் ( Transcriber ), எழுத்தமைதியில் அறிவு ( Paleographic Knowledge ) கொண்டவராகவும், மொழியியல் சிந்தனை உடையவராகவும், சிறந்த இலக்கண அறிஞராகவும் ( Grammarian ), சொல்வளம்

கைவரப்பெற்றவராகவும், திறனாய்வாளராகவும் இருக்க வேண்டும் என்று பதிப்பாசிரியர் பற்றிக் கூறுவதும் இங்கு எண்ணத்தக்கது (சுவடிப் பதிப்பு நெறிமுறைகள், அ. கிருஷ்ணமூர்த்தி, பக்.82).

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை திராவிட மொழிகளில் ஆராய்ச்சி (1946) என்னும் நூலில் பதிப்புச் சிந்தனைகள் குறித்துக் கூறியுள்ளமையும் இங்குப் பெரிதும் கருதத்தக்கது.

# 3. சீவகசிந்தாமணிப் பதிப்புகள்

முனைவர் தி. மகாலட்சுமி

ஓலைச்சுவடிகளில் நிறைந்திருந்த, நிறைந்திருக்கின்ற முன்னோரின் கருத்து வளங்களை அச்சுச் சாதனங்களில் கொணர்தலே சுவடிப்பதிப்பாகும். சுவடிப்பதிப்பு வரலாறு என்பது சுவடிகளிலிருந்து பதிப்பித்து வெளியிடப்பட்ட அனைத்து நூல்களின் காலவரிசை, பொருள் அடிப்படையில் பதிப்பித்து வெளியிடப்பட்ட நூல்களின் காலவரிசை, அவற்றைப் பதிப்பித்த பதிப்பாசிரியர் காலவரிசை, பொருளடிப்படையில் பதிப்பித்த பதிப்பாசிரியர் காலவரிசை எனவும், உரை, முன்னுரை, ஆய்வுரை, சொல்லடைவு முதலான பல்வகைச் செய்திகளோடு எளிமையும் தெளிவும் உடைய பதிப்பு முறை வரலாறு எனவும் இரண்டு வகையில் இடம்பெறுகிறது. பொருள் அடிப்படையில் பதிப்பித்து வெளியிடப்பட்ட நூல்களின் காலவரிசை என்ற வகையில் அமையும் ஒரு காப்பியப் படைப்பான சீவகசிந்தாமணிப் பதிப்புகள் எழுந்த வரலாறு இவண் சுட்டப்பெறுகின்றது.

சீவகசிந்தாமணிக்கு எழுந்துள்ள மூலநூல், உரைநூல் பதிப்புகளின் பதிப்பு வரலாற்றை, சுவடி ஆக்கத்திற்கு மேற்கொண்ட பதிப்பு முறையை, பதிப்பு வேறுபாடுகளை அடியொற்றி இப்பதிப்புகள் ஆய்வுக்குட்படுத்தப்படுகிறது.

## மூலநூல்கள்

சீவகசிந்தாமணிக்கு மூலநூல் பதிப்புகள் என்ற நிலையில் 1883இலும், 1941இலும் இரண்டு பதிப்புகளே எழுந்துள்ளன.

## ப. அரங்கசாமி பிள்ளையின் பதிப்பு (1883)

அஷ்டலட்சுமி விலாச அச்சுக்கூடம் பதிப்பித்த இவரது பதிப்பில் 5 இலம்பகங்களுடன் சாற்றுக்கவிகள், பதிகம்,

அரும்பதப்பொருள், பிழைத்திருத்தம் ஆகியன காணப் படுகின்றன. இலம்பகங்களின் இடையிடையே சச்சந்தன் சரித்திரம், சீவகன் உற்பத்தி (நாமக ளிலம்பகத்தில்) என உட்தலைப்புகள் இடப்பட் டுள்ளன. அட்டாவதானம் சபாபதி முதலியார் சிறப்புப் பாயிரம் கொடுத்துள்ளார். பாடல்களில் சீர்பிரிப்பு, பாடவேறுபாடு முதலியன இல்லை. ஒவ்வொரு பாடல் இறுதியிலும் முற்றுப்புள்ளி உண்டு. முதற்பாகம் என்று இருப்பதால் நூலை முழுமையாக்க வேண்டுமென்றக் கருத்து ப. அரங்கசாமிக்கு இருந்திருக்கிறது (சமாஜப் பதிப்பு, முகவுரை, ப.8). எனவே இவருக்கு முன்பு சீவகசிந்தாமணி முழு அளவில் அச்சிடப்பட்டு வரவில்லை என்பதும் முழுவதையும் வெளியிட விரும்பி இதை முதற்பாகமாக முதன்முதலில் அச்சிட்டுள்ளார் என்பதும் தெரிகிறது.

## சமாஜப் பதிப்பு

உரையின்றி மூலம் முழுமையும் சைவசித்தாந்த மகா சமாஜத்தின் வழி 1941இல் மா. பாலசுப்பிரமணியம் பதிப்பித்துள்ளார். உரிமையுரை (ப.3) என்பதில் ராவ் சாகிப் த.வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்களுக்கு உரிமையாக்கப்படுகிறது என்றுள்ளது. அபிதான விளக்கம், அரும்பதவுரை, அவையடக்கம், கடவுள் வாழ்த்து, பாட்டு முதற் குறிப்பு, சீவக சரித்திரம் முதலான 27 தலைப்புகள் உள்ளுறையில் அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளன. பாடலின் உட்பொருளினை அறியத் துணைபுரியும் வகையில் 13 இலம்பகங்கள் சிறுசிறு உட்தலைப்புகளாகப் பிரிக்கப் பட்டுள்ளன. பாடல்களின் ஓசை மாற்றங்களைத் தெளிவு படுத்த வேறுவேறு எனப் பிரித்து, சீர்பிரிக்கப்பெற்று இடப் பக்கம் தொடரெண்ணும், வலப்பக்கம் இலம்பகங்களுக் குரிய பாடல் எண்களும் கொடுக்கப்பட்டு பாடல் இறுதியில் முற்றுப் புள்ளி இடப்பட்டு பாடல்கள் அமைகின்றன. இலம்பக முறை வைப்பு மற்ற பதிப்புகளிலிருந்து சமாஜப் பதிப்பில் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

“உ.வே.சா.வின் முதல் பதிப்பில் பல குறைகள் இருந்தன. இதில் குணமாலையாரிலம்பகம் வரையிலுள்ள பிழைகளையெல்லாம் திரட்டி ஒரு சிறு புத்தகமாக யாழ்ப்பாணத்திலிருந்து பொன்னம்பல தேசிகர் என்பவர்

வெளியிட்டனர். ஞானமிர்தம் என்ற பத்திரிகையிலும் இப்பதிப்பிலுள்ள பிழைகளை எடுத்துக் காட்டிய நீண்ட மதிப்புரையொன்று வெளிவந்ததாகத் தெரிகிறது. இவ்வெளியீடுகளால் ஐயரவர்கள் பின்பு வெளியிட்ட பதிப்புகள் பயனடைந்தன என்று கூறுதல் மிகையாகாது" என்ற செய்தி இப்பதிப்பின் முகவுரையில் (ப.9) இடம்பெறுகின்றது.

மூலபாடம் திருந்த வேண்டிய இடங்கள் பலவுள்ளன. பதிப்பு மேன்மேலும் திருந்த வேண்டுமென்னும் ஒரு நோக்கம் பற்றியே சில பிழைகள் இங்கே எடுத்துக் காட்டப்படுகின்றன என்று உ.வே.சா.வின் 3ஆம் பதிப்பில் காணப்படும் பாடவேறுபாடுகளைச் சுட்டும்போது குறிப்பிடப்படுகின்றது; புறத்திரட்டிலுள்ள 315, 1064 எண்ணிடப்பட்ட இருபாடல்கள் ஒரு பிரதியிலும் இல்லை; பெருமற் கள்ளுண்டார், தானமிடைந்தபூனிற்சீர், அழுந்திளையர் எனத் தொடங்கும் பாடல்களுக்கு உரைகள் இருந்து பிரதிகளில் செய்யுள்களில்லை; 1814, 2625 ஆகிய இருபாடல்கள் பிழைபட்டதால் சேர்க்கப்படவில்லை என்பவை முகவுரையில் (பக்.10,12,15,16) கூறப்படுகிறது. இம்முகவுரையிலுள்ள பாடவேறுபாட்டின்வழி உண்மையான மூலத்தினை அறிய முடிகிறது.

இவ்வாய்வுக் குறிப்புகளின்வழி எவ்வெவ்விடத்தில் எவ்வித நோக்கில் பதிப்பின் உட்கூறுகள் வளர்ச்சியடைய வேண்டும் என்பதையும், பதிப்பாய்வின் இன்றியமையாமையும், திருத்தம் பெற வேண்டிய பதிப்புகளும் உள்ளன என்பதையும், திருந்திய பதிப்புகள் வெளிவர வேண்டுமென்ற நோக்கினையும் அறிய முடிகிறது. மேலும் சமாஜப் பதிப்பிற்கு உ.வே.சா. பதிப்பினைத் திருத்தும் நோக்கமும், மூலம் முழுமையும் வெளியிடும் நோக்கமும் இருந்திருக்கிறது.

சீவகசிந்தாமணிக்கு வெளிவந்த இரு மூலப் பதிப்புகளில் 1883இல் வந்த பதிப்பில் பதிப்பு நோக்கம், ஆய்வுக்குறிப்புகள் முதலானவை தென்படவில்லை. நூல் முழுமைக்கும் ஆய்வுரையுடன் நன்முறையில் பதிப்பிக்கப்பட்ட சமாஜப் பதிப்பு 1883இல் வந்த முதல் பாகத்திற்குப் பின் 58 ஆண்டுகள் கழித்தே வெளியாகியுள்ளது. இதற்கிடையில்

உ.வே.சா.வின் மூன்று பதிப்புகள் மூலம் உரையுடன் வெளிவந்தமை மூலம் தனித்து விரைந்து வருவதன் அவசியத்தைக் குறைத்திருக்கலாம்.

### மூல உரைநூல்கள்

### தனி இலம்பகங்கள்

### பவர் பதிப்பு

எச். ரெவரெண்ட் பவர் 1868இல் நாமகளிலம்பகத்தை நச்சினார்க்கினியருரையுடன் முதன்முதலில் சென்னைப் பல்கலைக் கழகப் பாடப்பகுதியாக அமைந்ததால் இ. முத்தையாபிள்ளை என்பவரது உதவியுடன் பதிப்பித்துள்ளார். Preface. Introduction, பதிகம், நாமகளிலம்பகம், Index, English Index, பிழைதிருத்தம் என்றவாறு உள்ளுறை அமைகிறது. அரும்பதவுரை (உரைப்பகுதியில்), உட்தலைப்புகள், கருத்துரை ஆகியன ஆங்கிலத்திலும், தமிழிலும், முன்னுரை, விளக்கவுரை (அடிக்குறிப்பில்) ஆகியன ஆங்கிலத்திலும் தரப்பட்டுள்ளன. பாடல்கள் சீர்பிரிக்கப்படவில்லை. இவை உட்தலைப்புகளின் கீழ் கொடுக்கப்பட்டுத் தொடரெண்களைப் பெற்றுள்ளன. 42 பக்கங்களில் அமைந்த முன்னுரை ஆய்வுக் குறிப்புகளையுடையதாய் சிறந்த முறையில் அமைந்துள்ளது.

### தி.க. சுப்பராயச் செட்டியார் பதிப்பு

நாமகளிலம்பகம், கோவிந்தையாரிலம்பகம், காந்தருவதத்தையார் இலம்பகம் என்ற மூன்று பகுதிகளும் சென்னைப் பல்கலைக் கழகப் பட்ட வகுப்பிற்குப் பாடங்களாக வைக்கப்பட்டிருந்தன. இப்பகுதிகளைத் தி.க. சுப்பராயச் செட்டியார் பதவுரை, நச்சினார்க்கினியருரை முதலியவற்றோடு வெளியிட்டுள்ளார். மேலும் இவரது மறைவிற்குப் பின்னும் இவற்றிற்கு ஒருசில மறுபதிப்புகள் வந்துள்ளன என்ற குறிப்பினை சமாஜப் பதிப்பின் முன்னுரையில் (ப.7) காணமுடிகின்றது. இப்பதிப்புகள் வெளியான ஆண்டினை அறிதற்கியலவில்லை.

பூண்டி அரங்கநாத முதலியார் உ.வே.சா.வுக்கு உதவும் நோக்குடன் சிந்தாமணி நாமகள் இலம்பகத்தை பி.ஏ. வகுப்பிற்குப் பாடமாக வைக்க உ.வே.சா.வினுடைய

சீவகசிந்தாமணிக்கு அச்சுப்படி திருத்திக்கொண்டிருந்த சுப்பராயச் செட்டியார் உ.வே.சா.வுக்கும் தெரியாமலே இதனை அச்சிட்டு வெளியிட்டுவிடுகிறார். இதனை அறிந்த உ.வே.சா. மிகவும் மனம் வருந்தி அன்று முதல் மெய்ப்புத் திருத்தும் பணியைத் தருவதை நிறுத்திக்கொண்டார் என்ற குறிப்பினை இவரது என் சரித்திரத்தில் (ப.606) காணமுடிகிறது. நமக்கு என ஏற்படுத்தப்பட்ட வாய்ப்பிற்கு செட்டியார் நமக்குமுன் முந்திக்கொண்டாரே என்பது இவரது மனவருத்தத்திற்குக் காரணமாக இருக்கலாம். ஆயின் அதுமுதல் மெய்ப்புத் திருத்தத் தருவதை நிறுத்திக் கொண்டேன் என்று கூறுவது மனவருத்தம் ஏற்பட்டதனால் மட்டுமா இல்லை, மெய்ப்புத் திருத்தும் இவர் தன்னுடைய நூலையும் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம். இதற்குமேல் இதுபோன்ற நிலை ஏற்பட வேண்டாம் என நினைத்தாரா என்பது தெரியவில்லை. கல்லூரி, உயர்நிலைப்பள்ளிப் பாடப்புத்தகங்களுக்கு உரையெழுதிப் பதிப்பித்து விற்றுவரும் முயற்சியில் செட்டியார் ஈடுபட்டு வந்திருப்பதால் உ.வே.சா.வின் சிந்தாமணிப் பகுதிகளைப் பயன்படுத்தி யிருப்பார் என்று கருதமுடியாது. எப்படியிருப்பினும் என் சரித்திரத்திலுள்ள குறிப்புகளைக் (ப.599) கொண்டு பார்க்கும்போது செட்டியார் நாமகள் இலம்பகத்தை 1887இல் வெளியிட்டிருக்கின்றார் என்பது தெளிவாகத் தெரிகிறது. எனவே சமாஜ முன்னுரையில் சுட்டப்பட்ட நாமகள் இலம்பகம் வெளிவந்ததும் 1887ஆம் ஆண்டே ஆதல் வேண்டும்.

மேற்சுட்டிய மூன்று இலம்பகங்களும் குறிப்பிட்ட ஒரே ஆண்டில் பாடப்பகுதியாக வைக்கப்பட்டவை அல்ல. எனவே செட்டியாரின் மற்ற இரு இலம்பகங்களும் 1887ஆம் ஆண்டை ஒட்டி (முன்பின்) வெளிவந்திருக்கும்.

## உ.வே.சா. பதிப்பு

உ.வே.சா. 1902, 1908ஆம் ஆண்டுகளில் சிந்தாமணியின் தனித்தனி இலம்பகங்களைப் பட்டப்படிப்பு மாணவர்களுக்காகத் தேர்வு கருதி பதிப்பித்ததற்கான குறிப்பு ஆவணக்காப்பகத்திலுள்ள நூல் விவரப் பட்டியலில் காணப் படுகிறது. ஆயின் இலம்பகங்களின் பெயர்கள் கூறப்படவில்லை. இவர் 1928இல் மூன்றாம் பதிப்பாகக் கோவிந்தையார்

இலம்பகத்தை மாணவர்களுக்காக எளிய நடையில் 64 பக்கங்களில் எழுதிப் பதிப்பித்துள்ளார். முகவுரை ( பக்.1-4 ), திருத்தக்க தேவர் வரலாறு, நூலைப்பற்றிய சில குறிப்புகள், சீவகசிந்தாமணிச் சுருக்கம் ஆகியன உள்ளுறையாக அமைகிறது. இதனையடுத்துப் 'பிரகடனப் பத்திரம்' என்ற தலைப்பில் பயன்படுத்திய நூல்களின் விபரம் உள்ளது. ஒன்று முதல் 84 பாடல்கள் 42 பக்கங்களில் அமைகின்றன. கதைச் சுருக்கம் ( 43-64 ) 21 பக்கங்களில் இடம்பெறுகிறது.

### சி. குமாரசுவாமி முதலியார் பதிப்பு

சி. குமாரசுவாமி முதலியாரின் ( 1908 ) உரையுடன் கூடிய நாமகள் இலம்பகம் முன்னுரை, சச்சந்தன் சரித்திரம், நாமகளிலம்பகக் கதைச்சுருக்கம் என்ற மூன்று பகுதிகளையுடையது. பாடலின்கீழ் இதன் பொருள் என்ற தலைப்பின்கீழ் பொருள் தரப்பட்டு, பாடவேறுபாடு, இலக்கணக் குறிப்பு ( அடிக்குறிப்பில் ) ஆகியன சுட்டப் பட்டுள்ளன.

### ஆண்டுகள் தெரியாத பதிப்புகள்

நாமகளிலம்பகம், கோவிந்தையாரிலம்பகம், காந்தருவதத்தையார் இலம்பகம் என்ற தனித்தனி நூல்கள் மூன்று நச்சர் உரையுடன் பதிப்பித்தவர், வெளியீடு, ஆண்டு என்ற விபரங்களின்றி உ.வே. சாமிநாதையர் நூலகத்தில் காணப்படுகின்றன. ஒன்று முதல் 104 பக்கங்களுள்ள நாமகளிலம்பத்தில் பாடல் எண் 201இல் தொடங்கி 375இல் முடிகிறது. இறுதியில் நாமகளிலம்பக வரலாற்றுச் சுருக்கம் ( 103-104 ) இடம்பெறுகின்றது. நூலின் பக்க எண் ரோமன் எழுத்து; பாடல் எண் தமிழ் எழுத்து.

ஒன்று முதல் 50 பக்கங்களிலுள்ள கோவிந்தையா-ரிலம்பகம் ஒன்று முதல் 80 பாடல்களைக் கொண்டுள்ளது. நூற்பக்கங்களுக்குத் தமிழில் எண்ணும், பாடல்களுக்கு, இடதுபக்கம் ரோமன் எழுத்தில், வலதுபக்கம் தமிழ் எழுத்தில் எண்ணும் உள்ளன. இறுதியில் இலம்பகச் சுருக்கம் உள்ளது.

ஒன்று முதல் 175 பக்கங்களையுடைய காந்தருவ தத்தையாரிலம்பகம் ஒன்றுமுதல் 358 பாடல்களையுடையது.

பாடலும், பக்கமும் தமிழ் எண்களைப் பெற்றுள்ளன. இலம்பகச் சுருக்கம் இல்லை. முகவுரை 5 முதல் 24 பக்கங்களில் அமைகிறது. இம்மூன்று நூல்களும் பட்டப்படிப்பு பாட நூல்களாக எழுந்தவை என்பதை நூல் இறுதியிலுள்ள ('...... என்ற பகுதி மாணவர்க்குத் தேர்வுக்கு இல்லை') குறிப்பு காட்டுகிறது.

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் மருகர் பொன்னம்பலம் பிள்ளை சிந்தாமணியில் 20 பாரங்களைப் பதிப்பித்துள்ளார் என்ற செய்தி நாளிதழில் வந்துள்ளது (என். சரி. ப.594). இந்நூல் வெளிவந்ததா என்பது தெரியவில்லை.

சீவகசிந்தாமணி பட்டப்படிப்புக்குப் பாடமாக வைக்கப்பட்டிருந்ததால் தனித்தனி இலம்பகங்கள் பல வெளிவந்திருக்கின்றன. இவற்றிற்கு மறுபதிப்புகள் சில வந்திருப்பினும் உ.வே.சா.வின் கோவிந்தையாரிலம்பகத்திற்கு மட்டுமே 3ஆம் பதிப்பு வெளிவந்த ஆண்டு (1928) தெரிகிறது. ஆண்டுகள் தெரியாத மூன்று நூல்களும் உ.வே.சா.வினுடைய, சுப்புராயச் செட்டியாருடைய மறுபதிப்புகளாக இருக்கலாம்.

## முழுமைப் பதிப்பு

### உ.வே.சா. பதிப்பு

உ.வே.சா. பதிப்பின் சிறப்புகள் வரலாற்று நோக்கோடும், ஆய்வுநோக்கோடும், பாடவேறுபாடு மற்றும் இயைபுக் குறிப்புகளோடும் அமைந்த பாங்கினை அறிஞருலகு நன்கறியும். சீவகசிந்தாமணி இவரது காப்பியப் பதிப்புப் பணியின் தொடக்கமாக அமைகிறது. இவர் 1887இல் சிந்தாமணி முழுவதையும் நச்சினார்க்கினியருரையோடு பதிப்பித்துள்ளார். பல புதிய செய்திகளைச் சேர்த்தும். பிழைகளைத் திருத்தியும், தேவையற்றவற்றை விடுத்தும் பல புதிய வேறுபாடுகளுடனும் 1907இல் இரண்டாம் பதிப்பும், 1922இல் மூன்றாம் பதிப்பும் வெளிவந்துள்ளன. 4,5,6,7ஆம் பதிப்புகளில் குறிப்பிடத்தக்க மாற்றம் இல்லையெனினும் 4ஆம் பதிப்பில் ஒருசில மாற்றங்களைக் காணமுடிகின்றது.

இவரது பதிப்புகளில் ஓசை மாற்றங்களைத் தெளிவுபடுத்த வேறுவேறு எனப்பிரித்து, உட்தலைப்புகளிட்டு, கருத்துத் தொகுப்புச் செய்யுட்களை ஒரு தொடர் எனச்சுட்டி பாடல்களை வகைப்படுத்தி, சீர்பிரித்துப் பாடல்களுக்குத் தொடரெண் தரப்பட்டுள்ளன.

முதல் மூன்று பதிப்புகளிடையே மூலமும் உரையும் பெற்ற மாற்றங்கள் பல. இவற்றில் மூலபாடம் திருத்தப் பட்டமையும், புதிய பாட பேதங்கள் இடம்பெற்றதும், பாட வேறுபாடாகத் தரப்பட்டவை (முதற்பதிப்பில் பாட வேறுபாடு இல்லை). பின்னர் மூலபாடமாக ஏற்கப்பட்டதும் உண்டு. சில புதிய பாடல்களும் பிற்பதிப்புகளில் இடம் பெற்றுள்ளன. முதற்பதிப்பில் 3143 பாடல்கள் இடம்பெற, மூன்றாம் பதிப்பில் 3145 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இங்ஙனம் இம்மூன்று பதிப்புகளிடையே மூலத்திலும் உரையிலும், ஆராய்ச்சிக் குறிப்புகளிலும் மிகுந்துள்ள வேறுபாடுகளை முதற்பக்க அமைப்பு முதல் நூல் இறுதிவரை ஒவ்வொரு பகுதியிலும் காணமுடிகிறது. பொருளடக்கம் என்பதில் மூன்று பதிப்புகளும் முறையே 10, 18, 13 - தலைப்புகளில் அமையும். 13ஆவது தலைப்பு 2ஆம், 3ஆம் பதிப்புகளில் முறையே 13,20 உட்சிறு தலைப்புகளாக வகை செய்யப்படுகிறது.

பிற்பதிப்புகளிலும், பிறகாப்பியப் பதிப்புகளிலும் முகவுரை பொருளடக்கப் பகுதியில் ஓர் உறுப்பாக அமைய முதற் பதிப்பில் மட்டும் பொருளடக்கத்தில் சேர்க்கப்படாமல் தனித்து நிற்கிறது. சிந்தாமணியின் மூன்று பதிப்புகளின் முகவுரைகளும் தனித்தனியே எவ்வித மாற்றமும் இல்லாமல் பிற்பதிப்புகளில் இடம்பெற்றுள்ளன.

முதற்பதிப்பில் அரும்பதம் முதலியவற்றின் அகராதி இடம்பெறாது பிற்பதிப்புகளில் இடம்பெற்றுள்ளது. இது 2,3ஆம் பதிப்புகளில் 101,126 பக்கங்களில் தரப்பட்டுள்ளன. 2ஆம் பதிப்பில் அரும்பதம் முதலான வருமிடம் பற்றிய பக்க எண் தரப்பட, மூன்றாம் பதிப்பு முதல் பாடல் எண் தரப்பட்டுள்ளது. 2ஆம் பதிப்பில் அடிக்குறிப்பு தமிழ் எண்ணில் அமைய, பிற்பதிப்புகளில் ரோமன் எண்ணில் அமைகின்றது.

முதற்பதிப்பிலுள்ள 'ஒப்புமை மேற்கோள் அகராதி' 2,3ஆம் பதிப்புகளில் மட்டுமே 'சீவகசிந்தாமணி ஆராய்ச்சி விளக்கம்' என்ற தலைப்பில் முறையே 42,113 பக்கங்களில் இடம்பெறுகிறது. மூன்றாம் பதிப்பில் இடம்பெற்ற 'அபிதான விளக்கம்', 'மேற்கோள் விளக்கம்' பிற்பதிப்புகளிலில்லை.

முதற்பதிப்பில் இடம்பெறாத விசேடக்குறிப்பு 2, 3ஆம் பதிப்புகளில் முறையே 31, 45 பக்கங்களில் நூலிறுதியில் அமைகிறது. 4ஆம் பதிப்பு முதல் இது அடிக்குறிப்பில் குறிப்புரையாக இடம்பெற்று விளக்கமும் விரிவும் பெற்றுள்ளது. 3ஆம் பதிப்பிற்குப் பின் வந்தவற்றில் சீவகசிந்தாமணி உரையில் வரும் மேற்கோள் நூல்களும், அவை வந்துள்ள இடங்களும், மேற்கோள் பாடல்களின் அகரவரிசையும் தரப்பட்டுள்ளன. 4ஆம் பதிப்பு உ..வே.சா. இறந்த 1942ஆம் ஆண்டிலேயே வெளிவந்துவிட்டதால் உ.வே.சா. அவர்களால் 4ஆம் பதிப்பு செப்பம் பெற்றிருக்க வேண்டும் என்கிறார் இரா. காசிராசன் (ப.38).

சிந்தாமணியில் வரும் உவமை பிற இலக்கியங்களில் வரின் அவை தொகுத்தளிக்கப்பட்டுள்ளது (சிந். 2233; புறம். 19:8-9; களவழி. 8, மேரு. 15). மூலநூல் பகுதி பிறநூல்களில் பலவிடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளமை எடுத்துக் காட்டப்படுகிறது. மூவா முதலா (சிந். 1) என்ற பாடல் 14 ஆசிரியர்களால் மேற்கோள்களாக எடுத்தாளப்படுகிறது. சொற்களை மாறிக் கூட்டுதல், ஒரு சொல்லைப் பல பாடல்களுக்கு அப்பால் கொண்டு கூட்டுதல், பிரித்து இயைத்தல், அடியை மாற்றி அமைத்துக் கொளல் முதலான பொருள்கோள் மரபைப் பின்பற்றியுள்ளார் (சீவக. 103; 553).

23 சிந்தாமணி ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு பதிப்புப் பணியைத் தொடங்கிய இவர் அச்சாகிக் கொண்டிருக்கும் காலத்தும் சில பிரதிகளைப் பெற்று இருக்கிறார். ஏடு தேடும் முயற்சி, பயன்பட்ட ஏடுகள், பொருளுதவி பெற முயற்சி, பதிப்புக்குத் துணைநின்றோர், பதிப்பிப்பதில் ஏற்பட்ட இன்னல்கள், இடையூறுகள் பதிப்பு வரலாறு என்ற பல பதிப்புப்பணிகளை இவரது என் சரித்திரத்தின் வழியும் அறிய முடிகிறது.

## கழகப் பதிப்பு

### தனி இலம்பகங்கள்

கழகம் ( 1958-1974 ) சீவகசிந்தாமணியின் இலம்பகங்களை ஆறு நூல்களாகத் தனித்தனியாகப் பதிப்பித்துள்ளது. இதற்குச் சோமசுந்தரனாரும் புலவர் அரசும் உரை எழுதியுள்ளனர். இவற்றின் நோக்கம் ஒவ்வொன்றின் பதிப்புரையிலும் கழகத்தால் கொடுக்கப் பட்டுள்ளது. அவற்றில் பட்டப்படிப்பு மாணவர்களுக்கென எளிமைப்படுத்தி, உரைநடை வகையில் சொற்பொருள், விளக்கம், குறிப்புரை, தெளிபொருள் ஆகியவற்றையும் இணைத்து விளக்க நூலாக வெளியிடுவதாகக் கூறப்பட்டுள்ளது.

கேமசரியார் இலம்பகம், நாமகளிலம்பகம் ஆகியவற்றில் பதிப்புரை, இலம்பகக் கதைச் சுருக்கம், மூலம், உரை, செய்யுள் முதற்குறிப்பகராதி ஆகியன உள்ளன. காந்தருவதத்தையார் இலம்பகம், இலக்கணையார் இலம்பகம் என்ற இரண்டிலும் பதிப்புரை, ஆராய்ச்சி முன்னுரை, நூலாசிரியர் வரலாறு, கதைச் சுருக்கம் ஆகிய பகுதிகள் உள்ளன. இந்நூல்களுக்கெழுந்த மறுபதிப்புகளில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் இல்லை.

### முழுமைப் பதிப்பு

நச்சர் உரையை எளிமைப்படுத்தி, கற்போருக்கு எளிமை பயக்கும்படி சொற்பொருளும், விளக்கவுரையும் எழுதி வெளியிடக் கழகம் 1959இல் சிந்தாமணி முழுமையையும் இருபகுதிகளாக வெளியிட்டது. இதில் பாடல் எண்ணிக்கை, நூலாசிரியர் பெயர், குலம், காலம் கொண்டு வழங்கப்பட்ட பதிப்புரையும், அணிந்துரையும் ஆய்வு நோக்கிலுள்ளன. அடிக்குறிப்பில் பாடவேறுபாடுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதல் பாகத்தில் விளக்கங்களிலுள்ள கடினச் சொற்களுக்கு அடிக்குறிப்பில் பொருள் தரப்பட்டுள்ளது.

கழகப் பதிப்பு எட்டும் ( 1956-1974 ) சீர்பிரிக்கப்பட்டு, வரிசைப்படி எண்ணிடப்பட்டு, உட்தலைப்புகளின் கீழ் பாடல்கள் கொடுக்கப்பட்டு, ஓசை வேறுபாட்டைக் குறிக்க

வேறு வேறு எனப் பிரித்து, ஒரு தொகுப்பெனச் சுட்டி வகைப்படுத்தப்பட்டுள்ளன. இலக்கணக் குறிப்பு, மேற்கோள் பகுதி ஓரளவு வழங்கப்பட்டுள்ளன.

### உரைக்குறிப்பு

மூலநூலின் விரிவு கருதி எளிதில் நூற்பொருளை அனைவரும் படித்துப் பயன்பெறும் நோக்கில் 1941இல் 771 சிந்தாமணிப் பாடல்களுக்கு ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளையின் உரைக்குறிப்பு ஒன்றினைக் கழகம் வெளியிட்டுள்ளது. உள்ளுறை என்ற தலைப்பின்கீழ் பதிப்புரை, ஆராய்ச்சி முன்னுரை, கடவுள் வாழ்த்து, இலம்பகச் சுருக்கம், செய்யுற்முதற்குறிப்பகராதி ஆகியன உள்ளன. ஆய்வு முன்னுரையில் பாடல் எண்ணிக்கை, நூலாசிரியர் குலம், காலம், பெயர், யாப்பு போன்றவை ஆராயப்பட்டுள்ளன.

இங்ஙனம் கழகம் 1941ஆம் ஆண்டிலும், 1956 முதல் 1974 வரையிலும் முறையே சிந்தாமணியைச் சுருக்க வடிவில் உரைக்குறிப்பாகவும், தனித்தனி இலம்பகமாகவும், முழுமையாகவும் பதிப்பித்துள்ளது.

### ஜெ. ஸ்ரீ சந்திரன் தெளிவுரை

சீவகசிந்தாமணி முழுமைக்கும் மூலமும் தெளிவுரையும் ஐந்து பகுதிகளில் 1984 முதல் 1987 வரை வர்த்தமான பதிப்பகம் வெளியிட்டுள்ளது. கற்றவரன்றி மற்றவரும் புரிந்துகொள்ளும் வகையில் வெளிவந்த எளிமையும், தெளிவும் கொண்ட இப்பதிப்பின் உரை கழகப் பதிப்புகளைப் போன்றே அமைவதால் இதில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க செய்திகள் எதுவுமில்லை. இவற்றில் முன்னுரை, பொருளடக்கம் ஆகியவற்றை அடுத்து நூற்பகுதி தொடங்குகின்றது. அரைப்பக்க அளவிலமைந்த முன்னுரையின் பதிப்பு தொடர்பான செய்திகள் எதுவுமில்லை.

### வசனப் பதிப்பு

வீ. ஆறுமுகஞ் சேர்வை எழுதிய சீவகசிந்தாமணி வசனம் என்ற நூலை 1913இல் கலாரத்நாகரம் அச்சுக்கூடம் பதிப்பித்துள்ளது. கா.ர. கோவிந்தராஜ முதலியார், வசனப் புத்தகங்களில்லை எனுங் குறையை நீக்கிய புத்தகங்களுள்

ஒன்றான இந்நூல் உயர்தரப் பாட வகுப்புகளுக்குப் பயன்படும் என்று முகவுரையில் (ப.9) கூறுகிறார். பொதுவாக முகவுரை என்பது ஆசிரியரின் முன்னுரையாக அமைகிறது. பிறர் எழுதுவது அணிந்துரை, வாழ்த்துரை, மதிப்புரை, சிறப்புரை என்ற பெயர்களில் அமைய இந்நூலில் முகவுரை என்றே அமைகிறது. நூலாசிரியர் எழுதிய விஞ்ஞாபனம் (முன்னுரை: பக்.10-14) எனும் பகுதியில் நூல் எழுந்த நோக்கம், உ.வே.சா.வின் இரண்டாம் பதிப்பு தமக்கு உதவியமை, தூண்டுகோலாயிருந்தவர், அச்சிட ஆகும் பணச்செலவு, வாங்குவோருக்கு விலைமிகுதியால் ஏற்படும் சிரமம் என்ற காரணங்களால் நூலை முதல்பாகம் என்ற அளவில் வெளியிட்டமை, நூலைப் பிறர் உதவியின்றித் தாமே எழுதியமை முதலான செய்திகளைச் சுட்டுகிறார்.

நூல் பற்றிய கருத்துகளை ஆங்கிலத்திலும், தமிழிலும் ஏழுபேர் அபிப்பிராயங்கள் என்ற தலைப்பில் தெரிவித்துள்ளனர். சிறப்புக்கவிகள் சிலரால் தரப்பட்டுள்ளன. திருத்தக்கதேவர் சரித்திரம் கூறப்படுகிறது. நூலின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு பக்கம் நூற்பெயர், மறுபக்கம் உட்தலைப்பு என்றமைகிறது.

மூல உரைநூல் பதிப்புகளின் வரலாற்றிற்குச் சிந்தாமணி பற்றி எழுந்த அனைத்து நூல்களைப் பற்றிய ஆய்வுக் கண்ணோட்டம் தேவையில்லை. எனினும் இதுபோன்ற வசன நடையிலமைந்ததும் தொடக்ககாலத்தில் எழுந்ததுமான நூல்களின் அமைப்பு முறை மூல உரைநூல் பதிப்புகளை ஒப்பு நோக்குதற்குப் பயன்படும்.

## முடிவுரை

சீவகசிந்தாமணியைப் பதிப்பிக்கும் எண்ணமும், முயற்சியும் ஒருசிலருக்கு இருந்திருக்கிறது. மூலத்தின் ஒரு பகுதியை முதலில் வெளியிட்ட தகுதியினை அரங்கநாதன் பதிப்பு பெறுகின்றது. மூலம் மட்டும் முழுமையும் வெளியிட்டது சமாஜப் பதிப்பே. மூலத்துடன் உரையை ஓர் இலம்பகத்திற்கு வெளியிட்ட தகுதி பவரைச் சாருகிறது. மூலமும் உரையும் முழுமையாக முதன்முதலில் வெளியிட்ட பெருமையும் சிறப்புத் தகுதியும் உ.வே.சா. ஒருவருக்கு மட்டுமே உரியதாகின்றது.

இரண்டு மூலப்பதிப்புகள், முழுமையாக வந்த மூல உரைப்பதிப்புகள் மூன்று, பகுதிகளாக வந்தவை பவர் பதிப்பு, தி.க. சுப்பராயச் செட்டியார் பதிப்பு, உ.வே.சா. பதிப்பு, குமாரசாமி பதிப்பு, ஆண்டுகள் தெரியாத பதிப்புகள் மூன்று, கழகப்பதிப்பு ஆறு முதலியன. பகுதிகளாக வந்தவற்றின் எண்ணிக்கை பற்றி மேலுமறிய வேண்டியுள்ளது. ஆய்வுச் சிறப்பினை நோக்க உ.வே.சா. பதிப்பு முதல் நிலையிலும், கழகப் பதிப்பு அடுத்த நிலையிலும், பவர் பதிப்பு அதற்கடுத்த நிலையிலும் அமைகிறது.

இங்குப் பதிப்புகள் பற்றிய செய்திகள் ஓரளவே சுட்டப்பெற்றுள்ளன. மேலும், சீவகசிந்தாமணிக்கு எழுந்த பதிப்புகளை விரிவாக, ஆழமாகத் தொகுத்து ஒப்புநோக்குதல்; முதற்பதிப்பு, சிறந்த பதிப்பு, இறுதிப் பதிப்பு, மொத்தப் பதிப்புகள் முதலியன அறிதல்; முதற்பதிப்பையும், மறுபதிப்புகளையும் ஆய்வுக்குட்படுத்துதல்; பிறகாப்பிய, பிற இலக்கியப் பதிப்புகளுடன் ஒப்புநோக்குதல்; உ.வே.சா.வின் பதிப்புகளையும் கழகப் பதிப்புகளையும் பிற காப்பிய, பிற இலக்கியப் பதிப்புகளுடன் ஒப்பு நோக்கல்; இவை அனைத்திற்கும் இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைக் கூறுகள், வளர்ச்சி, தேக்கம் முதலியன நோக்கல். இதுபோன்ற பல நிலைகளில் சீவகசிந்தாமணிப் பதிப்புகளை ஆய்வுக்குட் படுத்தும்போது இதன் பதிப்பு வரலாறு, பதிப்புமுறை, பதிப்பு வேறுபாடு, பாட வேறுபாடு ஆகியவற்றை முழுமையாக அறிதற்கியலும்.

மேலும் பதிப்பாசிரியர்களின் ஆராய்ச்சித்திறன், அதில் அவர்களுக்கிருந்த ஆழ்ந்த ஈடுபாடு, பன்னூற் புலமை, நூற்கருத்துகளை அறிமுகம் செய்யும் முறை முதலான கருத்துரைகளை எடுத்துக்காட்ட இயலும். முதற்பதிப்பிற்கும், பிற பதிப்பிற்குமுள்ள மூலபாட ஆய்வையும், பாட வேறுபாடுகளையும் முழுநிலையில் தொகுக்கப் பெற முடியும். இம்முயற்சி மூலபாட ஆய்வில் ஈடுபட்டு, அனைத்துப் பண்டை இலக்கியங்களுக்கும் முறையான மூலபாடம் காண வழி வகுக்கும். இம்முயற்சி தமிழிலக்கிய வரலாற்றின் காலக்கணிப்பிற்கும், வரலாற்று மொழியியல் (Historical Linguistics) ஆய்விற்குத் துணையாக அமையும் (டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்பு, ப.vii).

உ.வே.சா. தாம் பதிப்பித்த நூல்களை இதற்கு முன் யார் யார் பதிப்பித்துள்ளனர் என்பதைக் குறிப்பிடுவதில்லை என்று வையாபுரிப்பிள்ளையார் குறிப்பிடுவர் ( தமிழ்ச் சுடர் மணிகள், ப.280 ). பதிப்பிக்கும்போது இதற்கு முன்பாக வந்தவற்றை முகவுரையில் சுட்டுதல் பதிப்பு வரலாறு அறிதற்கும், பதிப்புகள் பற்றிக் குறிப்பிடும்போது சில பதிப்புகள் விடுபடுவது தவிர்க்கப்படுவதற்கும் உதவிபுரியும்.

தொடக்ககாலம் முதல் இன்றுவரை எழுந்துள்ள சுவடிப்பதிப்பு நூல்கள் அனைத்தையும் இத்தகைய ஆய்வுக்குட்படுத்தும்போது சுவடிப்பதிப்பு வரலாற்றின் முழுமையினைப் பெறமுடியும். இதன்வழி பதிப்புகளின் வரலாறு, வளர்ச்சி, தேக்கநிலைகள், பதிப்புகள் பெருகாமைக்கான காரணங்கள், பெருகுதற்குரிய வழிமுறைகள், பதிப்புகள் ஒழுங்குபட மேற்கொள்ளப்பட வேண்டிய உத்தி முறைகள் முதலானவை பற்றிய வரையறையினை அறிதல் இயலும்.

### சீவகசிந்தாமணிப் பதிப்புகள்

ப. அரங்கசாமி, 5 இலம்பகங்கள், 1883.
எச். ரெவரெண்ட் பவர், நாமகளிலம்பகம் உரையுடன், 1868.
தி.க. சுப்பராயச் செட்டியார், நாமகளிலம்பகம் உரையுடன், 1887.

உ.வே.சா. மூலமும் உரையும்.

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | - | 1887 |
| இரண்டாம் பதிப்பு | - | 1907 |
| மூன்றாம் பதிப்பு | - | 1922 |
| நான்காம் பதிப்பு | - | 1942 |
| ஐந்தாம் பதிப்பு | - | 1949 |
| ஆறாம் பதிப்பு | - | 1957 |
| ஏழாம் பதிப்பு | - | 1969 |
| கோவிந்தையாரிலம்பகம் | | |
| மூன்றாம் பதிப்பு | - | 1928 |

குமாரசுவாமி முதலியார், நாமகளிலம்பகம் உரையுடன், 1908.
சமாஜம், மூலம் முழுவதும், 1941.

கழகம், மூலமும் உரையும்,
கேமசரியார் இலம்பகம், 1956
இலக்கணையாரிலம்பகம்
சிந்தாமணி முழுமை இருபகுதிகள், 1959
காந்தருவதத்தையார் இலம்பகம்
நாமகள் இலம்பகம், 1969
குணமாலையார் இலம்பகம், 1973
கமலையார் இலம்பகம், 1974
ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை உரைக் குறிப்பு, 1941.
ஸ்ரீ சந்திரன், மூலமும் தெளிவுரையும், 5 பகுதிகள், 1984-1987.
ஆண்டு தெரியாதவை:
நாமகளிலம்பகம்
காந்தருவதத்தையார் இலம்பகம்
கோவிந்தையாரிலம்பகம்.

*****

## துணை நின்றவை

என் சரித்திரம், டாக்டர் உ.வே. சாமிநாதையர், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை, 1982 ( இ.ப. ) .

சீவகசிந்தாமணி உரைபாடம், காந்தருவதத்தையாரிலம்பகம்.

சீவகசிந்தாமணி காந்தருவதத்தையார் இலம்பகம், புலவர் அரசு, பெ.வே. சோமசுந்தரனார் ( உரை ) , கழக வெளியீடு, சென்னை, 1959.

சீவகசிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம்.

சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம்.

சீவகசிந்தாமணியின் இரண்டாவதாகிய கோவிந்தையாரிலம்பக மூலமும் நச்சினார்க்கினியருரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர், கேசரி அச்சுக்கூடம், சென்னை, 1923 ( மூ.ப. ) .

சீவகசிந்தாமணி மூலமும் தெளிவுரையும், ஜெ. ஸ்ரீ சந்திரன் ( உரை ) , வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, முதல் பாகம், 1984, பாகம் 2 - 1985, பாகம் 3, 4 - 1986, பாகம் 5 - 1987.

சீவகசிந்தாமணி வசனம் முதற்பாகம், வித்வான் வீ. ஆறுமுகஞ்சேர்வை, கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை, 1913.

டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்புகள், இரா. காசிராசன், உ.த.நி. சென்னை, 1985.

தமிழ்ச் சுடர்மணிகள், எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரி நிலையம், சென்னை, 1952.

சீவகசிந்தாமணி இலக்கிய வரலாறு, செ. கலைவாணி, எம்.பில். ஆய்வேடு, செ.ப.க. 1982.

# 4. சரசுவதி மகால் நூலகத் தமிழ்ச் சுவடிகள் - ஆய்வுப் பதிப்புகள் - ஓர் அறிமுகம்

திரு. ய. மணிகண்டன்

சரசுவதி மகால் நூலகத் தமிழ்த்துறையில் மொத்தம் 3672 ஓலைச்சுவடிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் இலக்கியம், இலக்கணம், சோதிடம் முதலான பொருண்மைகளில் தோன்றிய சுவடிகள் 2045 ஆகும். மருத்துவச் சுவடிகள் 1627 ஆகும். இச்சுவடிகளுக்கான விளக்க அட்டவணைகள் இதுகாறும் 13 தொகுதிகள் வெளியிடப்பட்டுள்ளன. மருத்துவச் சுவடிகள் குறித்து எட்டு விளக்க அட்டவணைத் தொகுதிகளும், இலக்கியம் முதலானவை குறித்து ஐந்து விளக்க அட்டவணைத் தொகுதிகளும் வெளியிடப்பட்டுள்ளன. சரசுவதி மகால் நூலகத் தமிழ்த்துறையில் இப்பொழுது உள்ள சுவடிகள், அரண்மனை நூலகத்தில் முன்னர் இருந்தவையும், ஆண்டுதோறும் அன்பளிப்பாக வந்து சேர்கின்றவையும் ஆகும். ஆதலால் சுவடிகளின் மொத்த எண்ணிக்கை நாளும் வளரும் நல்வாய்ப்பைக் கொண்டதாகும்.

## இலக்கிய இலக்கணச் சுவடிகள்

இந்நூலகத்தில், சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனும் பதினெண் மேற்கணக்கில் திருமுருகாற்றுப்படைச் சுவடிகளும், அவற்றின்பின் தோன்றிய பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறள், நாலடியார், திரிகடுகம் ஆகிய நூற்சுவடிகளும் மட்டுமே உள்ளமை குறிப்பிடத்தக்கது. ஐம்பெருங் காப்பியங்களில் சிந்தாமணி, சிலப்பதிகாரம் ஆகிய இரு நூற்சுவடிகள் மட்டுமே உள்ளன. இந்நூலகச் சுவடிகளில்

திருக்குறள் 27 பிரதிகளும், கம்பராமாயணம் 54 பிரதிகளும், சூடாமணி நிகண்டு 37 பிரதிகளும் உள்ளமை குறிப்பிடத்தக்கது.

பண்டை இலக்கியச் சுவடிகள் மிகக் குறைந்துள்ள நிலையில், சமய இலக்கியச் சுவடிகள், சிற்றிலக்கியச் சுவடிகள், இலக்கணச் சுவடிகள், புராணச் சுவடிகள் முதலியன இந்நூலகத்தில் மிக அதிகமாகக் காணப்படுகின்றன.

தேவாரம், திருவாசகம், நாலாயிரம், திருப்புகழ், பாரதம், இராமாயணம் முதலிய சமய, காப்பிய இலக்கியச் சுவடிகள் பல பிரதிகளைக் கொண்டுள்ளன.

தொல்காப்பியம், வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, நம்பியகப்பொருள், சிதம்பரப் பாட்டியல், தண்டியலங்காரம், தொன்னூல் விளக்கம் முதலான இலக்கணச் சுவடிப் பிரதிகளும், திவாகர நிகண்டு, சூடாமணி நிகண்டு, ஆசிரிய நிகண்டு, பிங்கல நிகண்டு, அகராதி நிகண்டு முதலான நிகண்டு நூற் சுவடிகளும் இந்நூலகத்தில் பல உள.

அருணகிரி புராணம், அருணாசலப்புராணம், அரிச்சந்திர புராணம், ஆத்திசூடி புராணம், அவிநாசிப் புராணம் முதலான புராண இலக்கியச் சுவடிகள் ஏறத்தாழ 50 தலைப்புகளிலும், பிள்ளைத்தமிழ் நூற்சுவடிகள் 12 தலைப்புகளிலும், கோவை நூற் சுவடிகள் 13 தலைப்புகளிலும், மாலை இலக்கியச் சுவடிகள் 40 தலைப்புகளிலும், அந்தாதி இலக்கியச் சுவடிகள் 27 தலைப்புகளிலும், வண்ண இலக்கியச் சுவடிகள் 11 தலைப்புகளிலும், அம்மானை இலக்கியச் சுவடிகள் 19 தலைப்புகளிலும், நாடக நூல்கள் 15 தலைப்புகளிலும், கதைச் சுவடிகள் 31 தலைப்புகளிலும் இங்கு உள்ளமை குறிப்பிடத்தக்கது.

வராகர் ஓரா சாத்திரம், பஞ்ச பட்சி சாத்திரம் முதலான சோதிட நூற் சுவடிகளும் இங்கு இடம்பெற்றுள்ளன.

அண்மையில் பிரம்மோத்திர காண்ட அம்மானை என்னும் தலைப்பிலான ஓலைச்சுவடி, இந்நூலகத்திற்குக்

கிடைத்துள்ளது. இச்சுவடி அரிய ஒன்றாய்த் தெரிகின்றது. அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகள் அட்டவணையிலும் (தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு) இச்சுவடி குறிக்கப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## மருத்துவ நூற்சுவடிகள்

இந்நூலகத்தில் உள்ள 1627 மருத்துவநூற் சுவடிகளில் சித்தர்கள் பெயரால் அமைந்த நூற்சுவடிகள், வைத்தியத்திரட்டு சுவடிகள், அனுபவ வைத்திய முறை கூறும் சுவடிகள் எனப் பலவகையின உள்ளன. தமிழ்த்துறையில் உள்ள பல புகழ்பெற்ற சித்தமருத்துவச் சுவடிகள் சித்த மருத்துவ ஆய்வாளர்க்கும் மாணவர்களுக்கும் பெரிதும் பயன்படுகின்றன.

இந்நூலகத்தில் உள்ள மருத்துவச் சுவடிகளில், சரபேந்திர வைத்திய முறைகள் என்னும் தலைப்பிலான ஓலைச்சுவடிகள் தனித்தன்மை வாய்ந்தவை. இந்நூலகத்தின் தனிச்சொத்தாக அமைந்தவை.

சரபேந்திர வைத்திய முறைகள்: காச சுவாச சிகிச்சை, குன்ம ரோக சிகிச்சை, உள்மாந்தை, க்ஷயரோக சிகிச்சை, கர்ப்பிணி பாலரோக சிகிச்சை, சந்நி ரோக சிகிச்சை, சிரோரோக சிகிச்சை, சூலை குட்டம் மூலம் பித்த சிகிச்சை, நயனரோக சிகிச்சை, நீரிழிவு சிகிச்சை, பாண்டு காமாலை சிகிச்சை, பித்த ரோக சிகிச்சை, பேதிமுறைகளும் அதிசார சிகிச்சையும், வாதரோக சிகிச்சை, விரணம், கரப்பான் ரோக சிகிச்சை, விஷரோக சிகிச்சை, ஜ்வரரோக சிகிச்சை ஆகியனவாகும் அவை.

சரபோஜி மன்னர் மருத்துவர்களையும் புலவர்களையும் கொண்டு, மருத்துவர்கள் அனுபவ வைத்திய முறைகளைச் சொல்லச் சொல்ல, தமிழ்ப் புலவர்கள் அவற்றைச் செய்யுள் வடிவில் இயற்றிய பாடல்களே சரபேந்திர வைத்திய முறைகள் என்னும் தலைப்பிலான சுவடிகளில் இடம்பெற்றுள்ளன. இச்சுவடிகளில் உள்ள பாடல்கள், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், திருவேங்கடத்தா பிள்ளை, காரைக்குறிச்சி வேலாயுத

உபாத்தியாயர், வேங்கடாசலம் பிள்ளை, சுப்பராயக் கவிராயர் முதலியோரால் இயற்றப்பெற்றவையாகும்.

## அச்சில் வெளிவந்த நூல்களைப் பார்த்து எழுதப்பட்ட ஓலைச்சுவடிகள்

அவ்வாறான சுவடிகள் ஒருசில, இந்நூலகத்தில் உள்ளன. கர்ணமகாராசன் சண்டை, நளவெண்பா முதலியன அவ்வகையின.

அச்சுவடிகளில் தொடக்கத்திலும் ஈற்றிலும், அச்சுவடி எந்த அச்சுநூலைப் பார்த்துப் பிரதி செய்யப்பட்டது, எந்த அச்சகத்தில் எந்த ஆண்டு அச்சிடப்பட்டது, விலை என்ன முதலிய விவரங்கள் இடம்பெற்றுள்ளமை சுவைபயக்கும் செய்தியாகும். இத்தகைய சுவடிகள் சுவடியியலில் குறிப்பிடத்தக்கனவாகும்.

## சரசுவதி மகால் நூலகப் பதிப்புகள்

சரசுவதி மகால் நூலகம் இதுவரை, 175க்கும் மேற்பட்ட தமிழ்ச்சுவடிப் பதிப்பு நூல்களை வெளியிட்டுள்ளது. இலக்கியம், இலக்கணம், மருத்துவம், சோதிடம் ஆகிய பொருண்மையிலான நூல்கள் பல இதுவரை வெளிவந்துள்ளன. நூலகத் தமிழ்ப் பண்டிதர்கள் சுவடிகளைப் பதிப்பித்து வெளியிடும் பணியை மேற்கொண்டு வருகின்றனர். அத்துடன் சிறந்த பிற தமிழறிஞர்களையும் சித்த மருத்துவர்களையும் சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்களாகக் கொண்டு சுவடிகள் பதிப்பித்து வெளியிடப்பட்டு வருகின்றன. நூலகச் சுவடிகள் பெரும்பாலும் தனிநூலாகவே வெளியிடப்படுகின்றது. சில குறுஞ்சுவடிகள் நூலகப் பருவ இதழின் மூலமாகப் பதிப்பித்து வெளியிடப்படுகின்றன. இதுவரை வெளிவந்துள்ள 175க்கும் மேற்பட்ட நூல்களுள் ஆய்வுப் பதிப்பாக மிளிரும் சிலவற்றைப் பற்றி இங்குக் காண்போம்.

## இலக்கண நூற்பதிப்புகள்

இலக்கணக் கொத்து, இலக்கண விளக்கம், பிரயோக விவேகம், தொல்காப்பியம் ஆகிய இலக்கண நூல்கள் இதுவரை பதிப்பிக்கப்பட்டுள்ளன. நேமிநாதம், தொன்னூல் விளக்கம்

ஆகியவற்றைப் பதிப்பிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

பதிப்பிக்கப் பெற்றவற்றுள், இலக்கண விளக்கத்தின் எழுத்து, சொல், பொருள் ( அகத்திணையியல், புறத்திணையியல் ), யாப்பு, பாட்டியல் பகுதிகள் தனித்தனித் தொகுதிகளாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. தமிழ்க்கடல் தி.வே. கோபாலையர் இந்நூற்றொகுதிகளைப் பதிப்பித்துள்ளார்.

ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு எவ்வகையில் திகழவேண்டும் என்பதற்கு முன்மாதிரியாக இப்பதிப்பு உருப்பெற்றுள்ளது. நூற்பா, உரை, ஒத்த நூற்பாக்கள், மேற்கோள் ஆட்சி முதலியன அமையவும், பல்வகை அகராதிகள், அடைவுகள், பிற்சேர்க்கைகள் இடம்பெறவும் இப்பதிப்பு ஆய்வுப்பதிப்பாக மலர்ந்துள்ளது. இலக்கண விளக்கத்திற்குத் தமிழுலகில் நூலால் சிறப்பு என்பதைவிட இப்பதிப்பால் சிறப்பு எனலே சரியாகும்.

புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப் பெற்ற ஆசிரிய நிகண்டும் ஒரு சிறந்த ஆராய்ச்சிப் பதிப்பு நூலாகத் திகழ்கிறது. பிற நிகண்டுகளோடு ஒப்புநோக்கி, ஒப்புமை காட்டப்பெற்றும், விரிவான ஆய்வு முகவுரை அளிக்கப்பெற்றும், பெயரடைவு, அகரநிரல்கள் அமைக்கப்பெற்றும் இப்பதிப்பு விளங்குகின்றது.

## நீதிநூற் பதிப்புகள்

நாலடியார் நூலைப் பலசுவடிகளை ஒப்புநோக்கிப் பாடவேறுபாடு காட்டியும், சுவடிகளிலிருந்து அரிய மூன்று உரைகளை இடம்பெறச்செய்தும், ஒப்புமை, மேற்கோட் பகுதிகளை அளித்தும், பல்வேறு விசேடக் குறிப்புகளையும், அடிக்குறிப்புகளையும், அகரநிரல்களையும் அமைத்தும் திருவாளர்கள் முத்துரத்தின முதலியாரும், எம்.ஆர். கந்தசாமிப் பிள்ளையும் இணைந்து பதிப்பித்துள்ளனர். நாலடியார் உரைவளம் எனும் இந்நூல் சரசுவதி மகாலின் தலைசிறந்த பதிப்புகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது.

மேலும் நீதித் திரட்டு எனும் தொகைநூற் சுவடி பாவலர் ச. பாலசுந்தரனார் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. 32 நூல்களிலிருந்து பாக்கள் தொகுக்கப்பெற்றனவாக இச்சுவடி அமைந்துள்ளது. இந்நூலும் விரிவான ஆய்வு முகவுரை, யாப்புக் குறிப்பு, குறிப்புரை, பல அகரநிரல்கள் ஆகியனவற்றைக் கொண்டு சிறந்த ஆய்வுப்பதிப்பாக விளங்குகின்றது.

மூதுரை நூற்சுவடி, தமிழ், வடமொழி நீதிநூல்களுடன் ஒப்பிட்டு ஒப்புமைப் பாக்கள் காட்டியும், சுவடி - அச்சு நூல்களுடன் ஒப்பிட்டுப் பாடபேதங்காட்டியும் இக்கட்டுரையாளனால் நூலகப் பருவ இதழில் ( 1996 ) பதிப்பிக்கப்பட்டுள்ளமை குறிக்கத்தக்கது.

## பிற சிற்றிலக்கியப் பதிப்புகள்

பிற சிற்றிலக்கியப் பதிப்புகளில், ஆத்திசூடி புராணம், தனிப்பாடல் திரட்டு, திருவேட்டைநல்லூர் அய்யனார் பள்ளு, செப்பறை கனகசபை நாதன் உலா முதலியன சிறந்த ஆய்வுப் பதிப்புகளாகத் திகழ்கின்றன.

புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப் பட்ட ஆத்திசூடி புராணம், ஆத்திசூடி - ஆத்திசூடி வெண்பா ஆகியவற்றுடன் ஒப்பிடப்பெற்றும், ஆய்வுக்குறிப்புகள் அமையவும் பதிப்பிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. பாவலர் ச. பாலசுந்தரனார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ள தனிப்பாடற்றிரட்டு இரு தொகுதிகளும் நற்பதிப்பு நூல்களாகத் திகழ்கின்றன. புலவர் ப.வெ. நாகராசன் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ள திருவேட்டை நல்லூர் அய்யனார் பள்ளு, உலா ஆகிய இரு நூல்களும் குறிப்புரை, விரிவான ஆராய்ச்சி முகவுரை, சிறப்புப்பெயர் அகரநிரல் முதலானவையும், முறையே பள்ளு நூற்பட்டியல், உலா நூற் பட்டியல் ஆகியவையும் அமையச் சிறந்த பதிப்புகளாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ள தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சியில் குறவஞ்சி நூல்களின் பட்டியலும், கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ், பரசமய

கோளரியார் பிள்ளைத்தமிழ் நூல்களில் பிள்ளைத்தமிழ் நூல்களின் பட்டியலும், நண்ணாவூர் சங்கமேசுவரர் விறலிவிடு தூது நூலில் தூது நூல்களின் பட்டியலும் அளிக்கப் பட்டுள்ளமை அப்பதிப்புகளின் தரத்தை உயர்த்துகின்றன.

## அம்மானைப் பதிப்புகள்

இந்நூலகம் பல அம்மானை இலக்கியங்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளது. இராமய்யன் அம்மானை, சீவக சிந்தாமணி அம்மானை, அரிச்சந்திரன் அம்மானை முதலியவற்றை அவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

இக்கட்டுரையாளனால் பதிப்பிக்கப்பட்ட அரிச்சந்திரன் அம்மானையில், நான்கு சுவடிகள் ஒப்புநோக்கப் பெற்றுப் பாடவேறுபாடுகள் குறிக்கப் பெற்றுள்ளன. இந்நூலின் முதனூல்களான அரிச்சந்திர புராணத்துக்கும் அரிச்சந்திர வெண்பாவுக்கும் இந்நூலுக்கும் உள்ள ஒப்புமை, வேற்றுமைகள் பக்கந்தோறும் மூலத்துக்குக் கீழே குறிப்பிடப் பெற்றுள்ளன. வடமொழியிலும் தமிழிலும் காணப்படுகின்ற அரிச்சந்திரன் பற்றிய குறிப்புகள் அனைத்தும் நூலின் தொடக்கத்தில் திரட்டியளிக்கப்பெற்றுள்ளன. நூலாராய்ச்சி, அரிச்சந்திரன் கதைநூல்கள் பற்றிய ஆய்வுரை முதலியனவும் நூலின் தொடக்கத்தில் இடம்பெற்றுள்ளன. பிற்சேர்க்கைகள், சொல்லடைவு அகரநிரல்கள் ஆகியன நூலின் நிரைவில் அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வாறு அம்மானைப் பதிப்புகளில் குறிப்பிடத்தக்க பதிப்பாக விளங்கும் வண்ணம், 1995இல் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

## மருத்துவ நூற் பதிப்புகள்

சரபேந்திர வைத்திய முறைகள் எனும் பொதுத் தலைப்பில் பாண்டு காமாலை, க்ஷயம், சூலை, குட்டம், மூலம், பித்தம் முதலான தனித்தலைப்புகள் பெற்றிலங்கும் சுவடிகள் அனைத்தும் தெளிவான உரை எழுதப்பெற்றுப் பதிப்பிக்கப் பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## விரைவில் வெளிவரவுள்ள ஆய்வுப் பதிப்புகள்

மூலைமுடுக்கெல்லாம் முடங்கிக்கிடக்கின்ற சுவடிகளிலிருந்து வண்ணப்பிரபந்தங்களைத் தேடித்

தொகுத்துப் பாங்குறச்சேர்த்துப் பதிப்பிக்கப்பெற்றதாக வண்ணப்பெருந்திரட்டு எனும் நூல் அச்சுக்குச் செல்லும் நிலையில் உள்ளது. ஏறத்தாழ எண்ணூறு பக்க அளவிலான, அகத்துறை வண்ணத் தொகை நூலான இந்நூல் புலவர் ப.வெ. நாகராசன் அவர்களால் தொகுத்துப் பதிப்பிக்கப் பெற்றதாகும். ஆய்வு முகவுரை, பலவகைக் குறிப்புகள், பாடவேறுபாடுகள், அகரநிரல்கள் அமையச் சிறப்பாகப் பதிப்பிக்கப்பெற்றுள்ள இந்நூல் வெளிவந்தபின் வண்ணங் குறித்த ஆய்வுகள் மேலும் தெளிவும் செழுமையும் பெறுதல் உறுதி. இந்நூலின் வண்ணங்களில் கலவி மகிழ்தல் துறையைச் சார்ந்தனவே மிகுதி என்பதும் குறிக்கத்தக்கது. கம்பராமாயணப் பாக்களுடன் ஒப்பிட்டு ஒப்புமை காட்டியும், பலவகை அகரநிரல்கள், ஆய்வு முகவுரை, சிறப்புச் செய்தி அடைவுகள் முதலியன தந்தும் பாவலர் ச. பாலசுந்தரனார் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ள இராமநாடகக் கீர்த்தனைகள் அச்சு முடிந்து விரைவில் வெளிவர உள்ளது. தமிழிலும் வடமொழியிலும் உள்ள நீதிநூல்களுடன் ஒப்புநோக்கிக் கிட்டிய ஒப்புமைப் பக்கம் இடம்பெற, பாடவேறுபாடுகள், சொல்லடைவுகள் முதலியன அமையப் பதிப்பிக்கப்பெற்றுள்ள குமரேச சதகம் ஆய்வுப் பதிப்பு நூலும் அச்சாகி வருகின்றது. அதேபோல நீதிவெண்பா எனும் நூலும் ஆய்வுப் பதிப்பாகப் பதிப்பிக்கப்பெற்று அச்சுக்குச் செல்ல உள்ளது. பிரமோத்திர காண்டத்துடன் ஒப்பிட்டுப் பிரமோத்திர காண்ட அம்மானை எனும் அரிய சுவடியை ஆய்வுப் பதிப்பாக்கும் பணி தற்போது நடைபெற்று வருகிறது.

# 5. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் சுவடிப்பதிப்புகள்

திரு. மோ.கோ. கோவைமணி

மனிதன் சிந்திக்கத் தொடங்கிய நாள்தொட்டு தம் சிந்தனைகளைப் பதிவு செய்யத் தொடங்கினான். பதிவு செய்யும் பொருள்கள் (கல், களிமண்பலகை, தோல், உலோகத்தகடு, மரப்பலகை, பூர்ஜமரப்பட்டை, துணி, மூங்கில்பத்தை, பனையோலை, எலும்பு போன்றன) காலந்தோறும் மாறுபடலாயின. பதிவுப் பொருள்களில் சிறப்பாகக் கருதத் தக்கது பனையோலையே ஆகும். மற்ற பதிவுப் பொருள்களைக் காட்டிலும் தமிழகத்திலும் அதைச் சுற்றிய நாட்டெல்லைகளிலும் பனையோலைகள் எளிதிலும் மிகுதியாகவும் மலிவாகவும் கிடைத்த காரணத்தால் பெரும்பாலானவற்றைப் பனையோலைகளிலேயே பதிவு செய்யத் தொடங்கினான். இவ்வாறு மனிதர்கள் தம் சிந்தனைகளைப் பனையோலைகளில் பதிவு செய்தவற்றையே ஓலைச்சுவடிகள் எனலாம். இவ்வோலைச் சுவடிகளில் இலக்கிய இலக்கண மருத்துவம் உள்ளிட்ட பல செய்திகள் இடம் பெறலாயின. இவ்வோலைச் சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதி எல்லோரும் படிக்கும் வண்ணம் அச்சேற்றிப் பதிப்பித்த நூல்களே சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். சுவடிப் பதிப்பின் தொடக்க காலம் கி.பி. 1812 என்று சுட்டலாம். திருக்குறள் அறத்துப்பாலினை எஃப்.டபிள்யூ. எல்லீஸ் என்பவர் சுவடியிலிருந்து எடுத்துப் பதிப்பித்தார் (அச்சுக் கலை, ப.234) என அறியமுடிகிறது. எனவே கி.பி. 1812இல் தொடங்கிய சுவடிப்பதிப்புப்பணி இன்றும் தொடர்ந்து வருவது மகிழ்வுக்குறியதாகும்.

## சுவடிப்பதிப்பு நூல்கள்

சுவடிப்பதிப்பு நூல்கள் பல நிலைகளில் வெளியாகியுள்ளன. அவை, தமிழறிஞர், புரவலர் சுவடிப்பதிப்பு நூல்கள், அரசு சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள், தனியார் சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள், அரசு நிறுவனச் சுவடிப் பதிப்பு நூல்கள், தனியார் நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள், பல்கலைக் கழகச் சுவடிப்பதிப்பு நூல்கள், தனியார் பதிப்பகப் பதிப்பு சுவடிப்பதிப்பு நூல்கள், அரசு சார்ந்த பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள், அரசு சாரா பருவ இதழ்ச் சுவடிப் பதிப்பு நூல்கள், தமிழ்ச்சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள், ஆதீனச் சுவடிப்பதிப்பு நூல்கள், பிற சுவடிப்பதிப்பு நூல்கள் எனப் பன்னிரண்டு நிலைகளாகப் பிரிக்கலாம். இவற்றின் அட்டவணையைப் பின்னிணைப்பு-3இல் காணலாம்.

### 1. தமிழறிஞர், புரவலர் சுவடிப்பதிப்பு நூல்கள்

தமிழறிஞர்களால் தம் முயற்சியாலும் புரவலர்கள் சிலரின் உதவியாலும் பதிப்பிக்கப்பெறும் நூல்களையே தமிழறிஞர், புரவலர் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் உ.வே.சாமிநாதையர் அவர்கள் பதிப்பித்த நூல்களையும், சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் பதிப்பித்த நூல்களையும், பேரா. எஸ். வையாபுரிப்பிள்ளை அவர்கள் பதிப்பித்த நூல்களையும் குறிப்பிடலாம்.

### 2. அரசு சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அரசு சுவடி நூலகங்கள் வாயிலாகப் பதிப்பிக்கப்பெற்ற நூல்களையே அரசு சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள், தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

### 3. தனியார் சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள்

தனியார் சுவடி நூலகங்கள் வாயிலாகப் பதிப்பிக்கப்பெற்ற நூல்களையே தனியார் சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள்; பேரூர், சாந்தலிங்க அடிகளார் தமிழ்க்கல்லூரி சுவடி நூலகச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

## 4. அரசு நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அரசால் நிறுவப்பட்ட நிறுவனங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்படும் நூல்களையே அரசு நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

## 5. தனியார் நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அரசால் நிறுவப்படாத புரவலர்கள் சிலரின் உதவியோடு நிறுவப்பட்ட நிறுவனங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்படும் நூல்களே தனியார் நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் சென்னை, ஆசியவியல் நிறுவனச் சுவடிப்பதிப்பு நூல்கள், சென்னை, பழந்தமிழ்ச் சுவடிகள் பாதுகாப்பு மையச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

## 6. பல்கலைக்கழகச் சுவடிப்பதிப்பு நூல்கள்

பல்கலைக்கழகங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்படும் நூல்களையே பல்கலைக் கழகச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், கேரளப் பல்கலைக்கழகம் ஆகியவற்றின் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

## 7. தனியார் பதிப்பகச் சுவடிப்பதிப்பு நூல்கள்

தனியார் பதிப்பகங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்படும் சுவடிப்பதிப்பு நூல்களையே தனியார் பதிப்பகச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் மணிவாசகர் பதிப்பகச் சுவடிப்பதிப்பு நூல்கள், பாவை வெளியீட்டகச் (தஞ்சாவூர்) சுவடிப்பதிப்பு நூல்கள், சென்னை நர்மதா பதிப்பகச் சுவடிப்பதிப்பு நூல்கள், கலை மகள், ஸ்ரீமகள், இரத்தினநாயகர் & சன்ஸ், கபீர் அச்சுக் கூடம் மற்றும் பலப்பல தனியார் பதிப்பகங்களின் வாயிலாகக் கிடைத்தச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

### 8. அரசு சார்ந்த பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அரசு சார்ந்த பருவ இதழ்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்களையே அரசு சார்ந்த பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாய்வு மற்றும் உயராய்வுச் சுவடிப்பதிப்பு நூல்கள், தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகப் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள், கேரளப் பல்கலைகழகப் ப்ராசீன கைரளி (தமிழ்)ச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

### 9. அரசு சாரா பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள்

அரசு சாராத பருவ இதழ்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்பெற்ற சுவடிப் பதிப்பு நூல்களையே அரசு சாரா பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில், மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள், கலாநிலையச் சுவடிப்பதிப்பு நூல்கள், கலைமகள் சுவடிப்பதிப்பு நூல்கள், கொங்கு மற்றும் நல்லறச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

### 10. தமிழ்ச் சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள்

தமிழ்ச் சங்கங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்படும் சுவடிப்பதிப்பு நூல்களையே தமிழ்ச் சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் மதுரைத் தமிழ்ச் சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள், புதுவைத் தமிழ்ச்சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள், கோவை மற்றும் திருச்சித் தமிழ்ச் சங்கச் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

### 11. ஆதீனச் சுவடிப்பதிப்பு நூல்கள்

ஆதீனங்களின் வாயிலாகப் பதிப்பிக்கப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்களே ஆதீனச் சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம். இவ்வகையில் சிரவை, பேரூர், திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை ஆகிய ஆதீனங்களின் சுவடிப்பதிப்பு நூல்கள் குறிப்பிடத்தக்கனவாம்.

## 12. பிற சுவடிப்பதிப்பு நூல்கள்

மேற்குறிப்பிட்ட பதினொரு வகைகளில் அடங்காது தனித்து நிற்கும் மற்ற சுவடிப்பதிப்பு நூல்களையே பிற சுவடிப்பதிப்பு நூல்கள் என்கிறோம்.

### பருவ இதழ்களில் சுவடிப்பதிப்புகள்

பருவ இதழ் என்றால் பொழுதுபோக்கிற்காகப் படிக்கப்படும் இதழ்களைத் தான் நாம் நினைத்துக்கொண்டு இருக்கிறோம். இந்நினைவிலிருந்து நம்மை விலக்கி முழுமையாக இலக்கண இலக்கியங்களில் மூழ்கடிக்கும் பருவ இதழ்களும் உண்டு. இப்பணியில் முதன்மை பெற்றது மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ் ஆகும். இதனைத் தொடர்ந்து பல பருவ இதழ்கள் தமிழ்ப்பணியை ஆற்றியுள்ளன. இப்பருவ இதழ்கள் திங்களிதழாகவும், காலாண்டு இதழாகவும், அரையாண்டிதழாகவும், ஆண்டிதழாகவும் வெளிவந்துள்ளன. இப்பருவ இதழ்களில் இலக்கண இலக்கிய விவாதங்களும், இலக்கியக் கட்டுரைகளும், நூல் அறிமுகங்களும், சுவடிப்பதிப்பு நூல்களும் வெளியாகியுள்ளன.

அளவில் பெரிய நூல் முதல் சிறிய நூல் வரை இப்பருவ இதழ்களில் வெளியாகியுள்ளன. தனி நூலாக வெளிக்கொணர முடியாத சூழ்நிலையில் அளவில் பெரிய நூல்களைப் பல தொகுதிகளில் பல பகுதிகளின் வாயிலாகவும்; அளவில் சிறிய நூல்களை ஒருதொகுதியின் ஒரு பகுதி வாயிலாகவும் வெளியிட்டுள்ளனர்.

அளவில் பெரிய நூல்களைப் பருவ இதழ்களின் வாயிலாக முதன் முதல் வெளியிட்டு அறிமுகப்படுத்திய பிறகு பல நூல்கள் தனி நூலாக ஆக்கம் பெற்றதையும் காணமுடிகிறது. மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழில் பதிப்பான குருகைமான்மியம், குருபரம்பரை, நான்மணிக் கடிகை, திருவாரூருலா, மாறனகப்பொருளும் திருப்பதிக் கோவையும், மாறனலங்காரம், பெருந்தொகை போன்ற சுவடிப்பதிப்பு நூல்களும்; தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகப் பருவ இதழில் பதிப்பான வலைவீசு புராணம், முருகர் கதம்பம், தன்வந்திரி வைத்தியம் பாகம் ஒன்று மற்றும்

இரண்டு, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், ஞானவம்மானை, கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ், குயில் ராமாயணம், விறலிவிடு தூது, காஞ்சி மன்னன் அம்மானை, சரப புராணம், நாசிகேது புராணம், ஞானக்குறவஞ்சி, தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி ஆகிய சுவடிப்பதிப்பு நூல்களும்; சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் பதிப்பித்த பிரபந்த மரபியல் என்னும் சுவடிப்பதிப்பு நூலும்; சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாய்வில் பதிப்பித்த அல்லி கதை, அப்பாண்டை நாதர் உலா ஆகிய சுவடிப்பதிப்பு நூல்களும்; பல்கலைக் கழக 'உயராய்வில்' பதிப்பித்த 'இருபுராண விருத்தம்' என்னும் சுவடிப்பதிப்பு நூலும் தனி நூல்களாக வெளிவந்துள்ளன.

சிறிய அளவுடைய நூல்களை வேறெந்த வகையிலும் தனி நூலாக்க முடியாத சூழ்நிலை இருப்பதால் பருவ இதழில் வெளியிட்டதை நாம் வரவேற்கலாம். இவ்வகையான சிறிய நூல்கள் ஓலைகளில் மறைந்து இருப்பதை வெளிக்கொணர்ந்து காட்டிய பருவ இதழ்களைப் பாராட்டாமல் இருக்கமுடியாது. இவ்வாறு வெளிக்கொணர்ந்த நூல்களில் 90% நூல்கள் சிற்றிலக்கிய வகையைச் சார்ந்தனவே என்பதைப் பார்க்கும்போது சிற்றிலக்கிய வளர்ச்சிக்கு இப்பருவ இதழ்கள் ஆற்றிய தொண்டு புலனாகும்.

குறையுடைய சுவடிப்பதிப்பு நூல்களும் இப்பருவ இதழ்களில் வெளியாகியுள்ளன. இக்குறைச் சுவடி நூல்கள் வேறெந்த சூழ்நிலையிலும் பதிப்பிக்க முடியாததாகையால் இவற்றைப் பதிப்பிக்கப் பருவ இதழ்களைத் தேர்ந்தெடுத்தது கண்டு அறிஞர் உலகம் மகிழத்தான் வேண்டும். குறைச்சுவடி நூல்களைப் பதிப்பித்ததால் மாற்றுச் சுவடிகள் கிடைத்துப் பின்னர் அந்நூல் முழுமை பெற்ற செய்தியையும் நாம் பருவ இதழ்களின் வாயிலாக அறியமுடிகிறது.

பருவ இதழ்களில் வெளியான சுவடிப்பதிப்பு நூல்களைத் தொகுத்து ஆய்வு செய்யின் சுவடிப்பதிப்பு வரலாறு மற்றும் தமிழ் இலக்கிய வரலாற்றின் பரப்பு மேலும் விரியும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

## சுவடிப்பதிப்பு இதழ்கள்

சுவடிப்பதிப்பில் தமக்கே உரிய பங்கைத் திறம்படச் செய்த இதழ்கள் 10. அவை பின்வருமாறு:

1. சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்
2. சரஸ்வதி மகால் நூலகப் பருவ இதழ்
3. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழாய்வு
4. சென்னைப் பல்கலைக்கழக உயராய்வு
5. செந்தமிழ்
6. கலாநிலையம்
7. கலைமகள் ( புதுவை & சென்னை )
8. கொங்கு
9. நல்லறம்
10. ப்ராசீன கைரளி ( தமிழ் )

இக்கட்டுரை, சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் வெளிவந்த தமிழ்ச்சுவடிப் பதிப்புகளை அறிமுகம் செய்யும் வண்ணம் எழுதப்படுகிறது.

## சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்

1948ஆம் ஆண்டு இப்பருவ இதழின் முதற்றொகுதி-முதற்பகுதி வெளியானது. 1948ஆம் ஆண்டு முதல் 1976ஆம் ஆண்டு வரை தொடர்ந்தும் இடையிடையே சில ஆண்டுகள் விடுபட்டும் வெளியாகியுள்ளதைக் காணமுடிகிறது. இதுவரை மொத்தம் 21 தொகுதிகள் 41 பகுதிகளில் வெளியாகியுள்ளன. இவ்விதழின் முதல் பதிப்பாசிரியர் தி. சந்திரசேகரன் ஆவார். இன்றைய நிலையில் இப்பருவ இதழின் இறுதிப் பதிப்பாசிரியர் சி.ஆர். விட்டோபாபு ஆவார். இப்பருவ இதழின் வெளியீட்டு விவரம் ( தொகுதி-பகுதி-ஆண்டு ) பின்வருமாறு:

தொகுதி 1, பகுதி 1, 1948;
தொகுதி 1, பகுதி 2, 1949;
தொகுதி 2, பகுதி 1, 1949;
தொகுதி 2, பகுதி 2, 1950;
தொகுதி 3, பகுதி 1, 1950;
தொகுதி 11, பகுதி 2, 1959
தொகுதி 12, பகுதி 1, 1959
தொகுதி 12, பகுதி 2, 1959
தொகுதி 13, பகுதி 1, 1960
தொகுதி 13, பகுதி 2, 1960

| | |
|---|---|
| *தொகுதி 3, பகுதி 2, 1950;* | *தொகுதி 14, பகுதி 1, 1961* |
| *தொகுதி 4, பகுதி 1, 1951;* | *தொகுதி 14, பகுதி 2, 1961* |
| *தொகுதி 4, பகுதி 2, 1951;* | *தொகுதி 15, பகுதி 1, 1962* |
| *தொகுதி 5, பகுதி 1, 1952;* | *தொகுதி 15, பகுதி 2, 1962* |
| *தொகுதி 5, பகுதி 2, 1952;* | *தொகுதி 16, பகுதி 1, 1963* |
| *தொகுதி 6, பகுதி 1, 1953;* | *தொகுதி 16, பகுதி 2, 1964* |
| *தொகுதி 6, பகுதி 2, 1953;* | *தொகுதி 17, பகுதி 1, 1965* |
| *தொகுதி 7, பகுதி 1, 1954;* | *தொகுதி 17, பகுதி 2, 1965* |
| *தொகுதி 7, பகுதி 2, 1954;* | *தொகுதி 18, பகுதி 1, 1968* |
| *தொகுதி 8, பகுதி 1, 1955;* | *தொகுதி 18, பகுதி 2, 1968* |
| *தொகுதி 8, பகுதி 2, 1955;* | *தொகுதி 19, பகுதி 1, 1969* |
| *தொகுதி 9, பகுதி 1, 1956;* | *தொகுதி 19, பகுதி 2, 1972* |
| *தொகுதி 9, பகுதி 2, 1956;* | *தொகுதி 20, பகுதி 1, 1972* |
| *தொகுதி 10, பகுதி 1, 1957;* | *தொகுதி 20, பகுதி 2, 1972* |
| *தொகுதி 10, பகுதி 2, 1957;* | *தொகுதி 21, 1976* |
| *தொகுதி 11, பகுதி 1, 1958;* | |

இவ்விருபத்தொரு தொகுதிகளின் 41 பகுதிகளில் முதல் 29 பகுதிகளுக்கு (1-15:1) தி. சந்திரசேகரன் அவர்களும், அடுத்த ஒரு பகுதிக்கு (15:2) பி. திருஞானசம்பந்தம் அவர்களும், அடுத்த மூன்று பகுதிகளுக்கு (16, 17:1) ஏ.ஏ. இராமநாதன் அவர்களும், அடுத்த, பகுதி நான்கிற்கு (17:2, 18, 19:1) ஆர்.கே. பார்த்தசாரதி அவர்களும், அடுத்த பகுதி மூன்றிற்கு (19:2, 20) ஆர்.என். சம்பத் அவர்களும், இறுதித் தொகுதிக்கு சி.ஆர். விட்டோபாவு அவர்களும் இதழ்ப் பதிப்பாசிரியர்களாக இருந்துள்ளனர்.

### சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்ச் சுவடிப் பதிப்பாசிரியர்கள்

இப்பருவ இதழில் வெளிவந்த சுவடிப் பதிப்புகள் ஒருசில சுவடிப்பதிப்பாசிரியர்களையே கொண்டுள்ளன. அவர்கள் வருமாறு:

1. மு. அருணாசலம் (1 நூல்)
2. வ.ரா. கல்யாணசுந்தரம் (6 நூல்கள்)

3. த. கிருட்டிணமூர்த்தி ( 5 நூல்கள் )
4. வி.எஸ். கிருஷ்ணன் ( 9 நூல்கள் )
5. கிருஷ்ணா சஞ்சீவி ( 2 நூல்கள் )
6. தி. சந்திரசேகரன் ( 3 நூல்கள் )
7. பூ. சுப்பிரமணியம் ( 5 நூல்கள் )
8. பி.எஸ். சுலோசனா ( 2 நூல்கள் )
9. மு. பசுபதி ( 11 நூல்கள் )
10. பத்மாவதி ( 1 நூல் )
11. ஆர்.கே. பார்த்தசாரதி ( 1 நூல் )
12. த. பெரியாண்டவன் ( 3 நூல்கள் )
13. முத்தம்மாள் கௌரிநாதன் ( 2 நூல்கள் )
14. ந. வேங்கடாசர்யன் ( 3 நூல்கள் )
15. இ.பா. வேணுகோபால் ( 2 நூல்கள் )
16. ஆர்.கே. பார்த்தசாரதி & பூ. சுப்பிரமணியம் ( 2 நூல்கள் )

## சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் சுவடிப்பதிப்புகள்

இப்பருவ இதழில் வெளிவந்த சுவடிப்பதிப்பு நூல்கள் 57. இவற்றில் இரண்டு சுவடிப்பதிப்பு நூல்கள் இடையிடையே பாடல்கள் விடுபட்ட குறைச் சுவடிப்பதிப்பாகவும் மற்ற 55 சுவடிப்பதிப்பு நூல்கள் நிறைச் சுவடிப்பதிப்பாகவும் அமைந்துள்ளன. இந்நூல்களைத் தனித்தனியே கூறினால் கட்டுரை விரியும் என்பதால் அனைத்துப் பதிப்புகளுக்கும் பொதுவான விதிகளை வகுத்தும் பகுத்தும் இக்கட்டுரை அமைகிறது. இப்பருவ இதழில் வெளிவந்த தமிழ்ச் சுவடிப்பதிப்புகள் அனைத்தையும் ஒன்பது வகைகளாகப் பகுக்கலாம். அவையாவன:

### 1. பொருள் நிலையில் அமைந்த சுவடிப்பதிப்புகள்

இப்பருவ இதழில் வெளிவந்த சுவடிப்பதிப்பு நூல்களைப் பொருள் நிலையில் பார்க்கும்போது பெரும்பாலான சுவடிப்பதிப்பு நூல்கள் சிற்றிலக்கிய வகைகளாகவும்; ஏனையவை நீதி நூல்களாகவும், தோத்திரப் பாடல்களாகவும், தத்துவ நூல்களாகவும், இலக்கண நூல்களாகவும், நாட்டுப்புறக் கதைப்பாடல்களாகவும் அமைந்துள்ளன.

## 2. மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்புகள் (*)

பதிப்பாசிரியரின் குறிப்புரையோ விளக்கவுரையோ எதுவும் இன்றிச் சுவடியில் உள்ளதை உள்ளவாறே சிறு முன்னுரையுடன் பதிப்பித்த நூல்கள் 48. இவற்றை இக்கட்டுரையின் பின்னிணைப்பு-1இல் ( * குறியிடப் பெற்றவை ) காணலாம்., இந்நூல்களில் சிறப்பான சில நூல்களை மட்டும் இங்குக் கூற விரும்புகின்றேன்.

**எக்காலக் கண்ணி**: இந்நூல், 201 கண்ணிகளைக் கொண்டுள்ளது. ஒவ்வொரு கண்ணியின் இறுதியிலும் எக்காலம் என்று முடிவதால் இதற்கு எக்காலக்கண்ணி என்ற பெயர் இடப்பட்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. இந்நூல் இனிய எளிய நடையிலமைந்த அரிய பெரிய வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் மக்களனைவரும் உணருமாறு தெளிவாக விளக்குவதாக அமைந்துள்ளது.

**கோதைநாய்ச்சியார் தாலாட்டு**: இந்நூல், 316 செய்யுள் அடிகளைக் கொண்டுள்ளது. இந்நூற் தலைவி கோதைநாய்ச்சியார் ஆவார். இவரை ஆண்டாள் என்றும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடி நாய்ச்சியார் என்றும் அழைப்பர். இக் கோதைநாய்ச்சியாரின் வரலாற்றினை எளிய இனிய செய்யுள் நடையில் மக்களுக்குப் புரியும் வகையில் எடுத்து விளக்குகின்றது. மேலும் இந்நூலுள் முதலில் சேனையர்கோன், திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள அரங்கநாதப் பெருமான் ஆகியோர் மீது பாடப்பெற்ற காப்புச் செய்யுட்களிரண்டுள்ளன. ஸ்ரீவில்லிபுத்தூரைப் பற்றிய வருணனைகளும் இதனுள் இடம்பெற்றுள்ளன.

**சிறுத்தொண்டர் சிந்து**: இந்நூல், சிறுத்தொண்ட நாயனார் வரலாற்றை எளிய இனிய நடையில் பாமரரும் படித்து உணரும் வகையில் அமைந்துள்ளது. இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

**நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா**: இந்நூல், ஆழ்வார்களால் பாடப்பெற்ற நூற்றெட்டுத் திருமால் திருப்பதிகளைப் பற்றிக் கூறுகின்றது. காப்புச் செய்யுளுடன் 109 ( 1+108 ) வெண்பாக்களைக் கொண்ட இந்நூல் 88 திருப்பதிகளைப் பற்றியே குறிப்பிடுகின்றது. அவை, சோழ

நாட்டில் 20 திருப்பதிகள், பாண்டிய நாட்டில் 18 திருப்பதிகள், மலை நாட்டில் 13 திருப்பதிகள், தொண்டை நாட்டில் 23 திருப்பதிகள், வட நாட்டில் 12 திருப்பதிகள், திருப்பாற்கடல் 1, பரமபதம் 1 ஆக 88 திருத்தலங்களாகும்.

**நெஞ்சறிவிளக்கம்**: இத்தலைப்பில் இரண்டு நூல்கள் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. அவை, ஒன்று, கணபதிதாசரின் நெஞ்சறிவிளக்கம்; மற்றொன்று, இதிலிருந்து வேறுபட்ட ஆசிரியர் பெயர் தெரியாத நெஞ்சறிவிளக்கம் ஆகும். கணபதிதாசரின் நெஞ்சறிவிளக்க நூல், மனத்தை நோக்கி "நாகநாதரை வணங்கு" என்று கூறுவதாக அமைந்த நூறு இனிய, எளிய செய்யுட்களைக் கொண்டது. ஆசிரியர் பெயர் தெரியாத மற்றொரு நெஞ்சறி விளக்க நூல், 'யோகம்', 'ஞானம்' என்னும் பொருள்களை மிகச் சுருக்கமாக எடுத்துக் கூறுகின்றது. பன்னிரண்டு வெண்பாக்களால் அமைந்துள்ளது.

**பழனியாண்டவர் கலித்துறை**: நூறு செய்யுட்களைக் கொண்ட இந்நூல் அழகிய சிற்றம்பலக் கவிராயரால் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலின்கண், முருகப்பெருமான் விண்புவி அனைத்திலும் நீக்கமற நிலைபெற்று சச்சிதானந்தமாய் நின்றுள்ளாரென்பதும், நாரதரால் வள்ளியின் இயல்புகளறிந்து தினைப்புனஞ் சென்று மணந்தனரென்பதும் மறைமுடிவை ஈசற்குரைத்தன ரென்பதும், நான்முகனைச் சிறைவைத்தனரென்பதும், பூதத்தால் சிறைவைக்கப்பட்ட நக்கீரரைச் சிறைமீட்டன ரென்பதும் நன்கு விளக்கப்பட்டுள்ளது என்கிறார் இந்நூற் பதிப்பாசிரியர்[1].

**வில்லிபாரதம் - மௌனி சூட்டுச் சுருக்கம்**: இந்நூல் ஆய்வுக்குரிய பகுதியாகத் தெரிகின்றது. இந்நூல் பதிப்பாசிரியர் இப்பதிப்பு முன்னுரையில், "வில்லிபாரதத்தின் 'மௌனி சூட்டுச் சருக்கம்' என்ற வித்தலையங்கத்தின் கீழ் இஃது எழுதப்பட்டுள்ளது. 54 செய்யுட்களாலாயது. முற்றுப்பெற்றுமிருக்கிறது. இஃதுள்ள இவ்வோலை யேட்டுப்பிரதியினது ஏடுகளின் தொடரெண்களும் அடிதொட்டுக் கடைவரை ஒரு பான்மையினவாகவே காண்கின்றன. அதாவது ஒன்று முதல் 367 ஏடுகள் இப்பிரதியிலுள்ளன. அவற்றுள் 362ஆம் ஏட்டினது

பின்புறத்தோடு பதினெட்டாம் போர்ச் சருக்கம் முடிய அடுத்தவேடான 363ஆம் ஏட்டினது முதற்பக்கத்திலேயே இச்சருக்கமும் தொடங்கப்பட்டு 367ஆம் ஏட்டினது முற்பக்கத்தோடு முடிக்கப்பட்டுள்ளது. இக்காரணங்களால் இதுவும் வில்லிபாரதத்தைச் சார்ந்ததாகவேயிருத்தல் வேண்டுமென்பது துணிபு" என்கிறார்.

**மூவர் அம்மானை:** 95 செய்யுட்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூல், சிவன், திருமால், அம்பிகை, பிள்ளையார், முருகன் ஆகியோர்களின் சிறப்பியல்புகளைப் பற்றிக் கூறுகின்றது. எனினும், பிள்ளையாரும் முருகரும் சிவன்-திருமால்-அம்பிகை ஆகிய மூவரைப் பின்பற்றி வருவதால் இந்நூலிற்கு மூவர் அம்மானை எனப் பெயரிட்டழைத்தனர். இம்மூவர்களுடைய திருவிளையாடல்களையும், அருமை பெருமைகளையும் பற்றிச் சிறப்பாகக் கூறுகின்றது இந்நூல்.

**ஞானவுலா:** தத்துவ தேசிக நாயனார் இயற்றிய உலாவினும் வேறாயது இந்நூல். இந்நூலைச் சங்கராச்சாரியார் இயற்றியிருக்கலாமோ என்ற எண்ணம் தோன்றும் வகையில் இச்சுவடிக் குறிப்பு காணப்படுகிறது. நேரிசைக் கலிவெண்பாவால் 160 அடிகளால் அமைந்த இந்நூல், 'மனித உடம்பு எவ்வாறு ஏற்பட்டது? உயிர்களை ஆக்கிக் காத்து, இறுதியில் வீட்டுலகத்தை யடைவிக்கச் செய்வது எது? எந்தெந்தத் தொழில்கள் யார்யாரால் இயற்றப்படுகின்றன? யோக வழியில் ஞான நிலையை யடைவது எப்படி என்பன போன்ற அரிய விடயங்களைச் சுருங்கிய முறையில் தெளிவான நடையில்' அமைந்துள்ளது என்கிறார் இந்நூற் பதிப்பாசிரியர்[2].

### 3. மூலமும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்பு

இவ்வகையில், மு. அருணாசலம் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு தொகுதி 21இல் வெளிவந்த 'பிரபந்த மரபியல்' என்னும் இலக்கண நூல் ஒன்று மட்டுமே பதிப்பாகியுள்ளது.

இந்நூல் தெளிவான முன்னுரையுடன் காணப்படுகிறது. இலக்கணங்களின் வகைப்பாடுகள் பற்றியும் விரிவாக

ஆராய்ந்து 46 பக்க முன்னுரையைத் தந்துள்ளது. நூலுக்குள் ஒவ்வொரு பிரபந்தத்திற்குமெனத் தலைப்புகளையும், விளக்கக் குறிப்புகளையும், இருதலைப்பகரக்குறிக்குள் மாற்றம் செய்யப்பட்ட எழுத்துகளையும் கொடுத்துள்ளார் இப்பதிப்பாசிரியர். இந்நூலின் பிற்பகுதியில், பிற்குறிப்பாக நூலோடு தொடர்புடைய பிறசெய்திகளையும்; நூற்றாண்டு தோறும் பிரபந்த வளர்ச்சி பற்றிய குறிப்பு; அனுபந்தம் 1இல் ஐந்திலக்கணமும் பாட்டியல் நெறியும்; அனுபந்தம் 2இல் பிரபந்த மரபியல் கூறும் 96 பிரபந்தங்களின் அட்டவணை; அனுபந்தம் 3இல் பிரபந்த மரபியல் - சிதம்பரப்பாட்டியல் ஒப்புமை; மற்றும் செய்யுள் முதற் குறிப்பு அகராதி போன்றவை இடம்பெற்றுள்ளன. இந்நூல் அதேயாண்டு (1976) தனி நூலாகவும் வெளிவந்துள்ளது. இந்நூல், (பருவ இதழ்களில்) இவ்வாறான சிறந்த பதிப்பு முன்னுரையுடன் பதிப்பித்த முதற்பதிப்புநூல் என்றே சொல்லலாம்.

### 4. மூலமும் குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்புகள்

இவ்வகையில், இப்பருவ இதழில் வெளியான நூல்கள் ஏழு. அவை, ஆத்திசூடி வெண்பா, கதிர்காமச்சிந்து, நல்லபிள்ளை சித்திரமடல், நெல்லைக்குமரன்துதி, பரிபூரண சித்தி, பாலையானந்தர் ஞானக்கும்மி, வருகைப்பத்து ஆகியவையாம். இவற்றுள், கதிர்காமச் சிந்துவை மட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன்.

முப்பத்தொரு செய்யுட்களைக் கொண்ட இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இந்நூற் பதிப்பாசிரியர் பூ. சுப்பிரமணியம் அவர்கள் இந்நூலை அடிக்குறிப்புடன் பதிப்பித்திருக்கிறார். இவர்தம் பதிப்புரையில், "குறிஞ்சிக் கடவுளாம் முருகனின் ஞானசக்தியாகிய வேலாயுதத்தை வைத்து வழிபடும் வழக்கமைந்த ஈழநாட்டு முருகனின் திருத்தலங்களில் ஒன்று கதிர்காமம். செப்போடு வேய்ந்த சிறிய கொட்டகை வடிவிலமைந்த கதிர்காம வேலவனின் ஆலயம் மாணிக்க கங்கை எனும் ஆற்றினருகிலமைந்து விளங்குவதாகும். ஆண்டுதோறும் சிறப்புற நடைபெறும் ஆடிவேல் விழாவில் எந்திர வடிவிலமைந்த முருகனின் பெட்டகம் காட்டு யானை மேலேற்றப்பட்டு பவனிவருங் காட்சியும் பிறவுமாய சிறப்புகளை நேரில் கண்டு களித்து

ஆண்டவனின் திருப்பணியில் தம்வயமிழந்த இந்நூலின் ஆசிரியர், தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமென, முருகனைத் தாம் வழிபடுமாற்றால் பாடிய இக்கதிர்காமச் சிந்து மிகவும் எளிய நடையுடைத்தாயினும், முருகனின் எழிலும் எளிமையும், மறனும் திறனும், வடிவும் வரலாறும் நிறைந்த பெருமைகளனைத்தினையும் தன்னகத்தே கொண்டிலங்குகிறது[3]" என்பதால் இந்நூலைப் பற்றி நன்கு அறியமுடிகிறது.

## 5. மூலமும் உரையும் கருத்துக்குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்புகள்

இவ்வகையில் "அருங்கலச்செப்பு" என்னும் நீதிநூல் பதிப்பாகியுள்ளது. இந்நூலின் பதிப்பாசிரியர் பூ. சுப்பிரமணியம் அவர்கள். இந்நூல் 180 குறட்பாக்களைக் கொண்டது. இந்நூலின் ஆசிரியர் பெயரும் உரையாசிரியர் பெயரும் தெரியவில்லை. உரையானது உரைநடையில் அமையாமல் ஒவ்வொரு தமிழ்ச் சொல்லிற்கும் சமஸ்கிருதத்தில் பொருள் தரும் வகையில் உள்ளது. ஒவ்வொரு குறட்பாக்குக் கீழேயே பதிப்பாசிரியரால் கருத்துக்குறிப்பு சேர்க்கப்பட்டுள்ளது. முதல் 165 குறட்பாக்களுக்கு பூ. சுப்பிரமணியம் அவர்களும், 166-180 குறட்பாக்களுக்கு ர.ந. சம்பத் அவர்களும் கருத்துக்குறிப்பு எழுதியுள்ளார்கள். இந்நூல் இப்பருவ இதழ்த் தொகுதி 20இன் இரண்டு பகுதிகளிலும் வெளியாகியுள்ளது.

## 6. பாடலும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்புகள்

இவ்வகையில் 'விராலிமலை சுப்பிரமணிய சுவாமி குறவஞ்சி நாடகம்' என்னும் ஒரு நூல் மட்டும் பதிப்பாகியுள்ளது. இந்நூலாசிரியர் பெயர் பிள்ளைப் பெருமாள் கவிராயர் ஆவர். இதனை 'விராலிமலை வேலவர் குறவஞ்சி' என்றும் அழைப்பர். இந்நூல் பதிப்பாசிரியர் திரு. மு. பசுபதி அவர்கள் நூல் முன்னுரைக்கு இடப்படும் தலைப்பில் விராலிமலை வேலவர் குறவஞ்சி என்றும், நூல் தொடங்குகையில் விராலிமலை சுப்பிரமணியசுவாமி குறவஞ்சி நாடகம் என்றும் குறித்துள்ளார். இந்நூல், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த விராலிமலை என்னும் தலத்தில் அமர்ந்துள்ள முருகவேலைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டமைந்துள்ளது.

## 7. ஒப்பீடு செய்யப்பெற்ற சுவடிப்பதிப்புகள்

இவ்வகையில் அமைந்த சுவடிப்பதிப்புகள் ஆறு. அவை. நீதிசாரக்கரு, நல்வழிப்பாடல்கள், பர்த்ருஹரி சிருங்கார சதகம், பர்த்ருஹரி நீதி சதகம், ஆத்திசூடி வெண்பா, திருத்தணிகை முருகன் தாலாட்டு ஆகியவையாம். இப்பருவ இதழில் வெளியான சுவடிப்பதிப்பு நூல்களில் ஒப்பீடு செய்யப்பட்ட சுவடிப்பதிப்பு நூல்களுக்கு, பிற ஒப்பீட்டுச் சுவடிகளையோ காகிதப் பிரதிகளையோ பார்க்காமல் தங்கள் நூலகப் பிரதிகளையே ஒப்பிட்டிருக்கின்றனர் என்பது குறிக்கத்தக்கதாகும். இவற்றுள், பர்த்ருஹரி சிருங்கார சதகம் மற்றும் பர்த்ருஹரி நீதிசதகம் மட்டும் இங்குக் குறிப்பிடுகின்றேன்.

இந்நூல், 'சதகத்திரயம்' என்னும் வடமொழி நூலின் மூன்று பகுதிகளில் முதல் இரண்டு பகுதிகளின் தமிழ் மொழிபெயர்ப்பே பர்த்ருஹரி நீதி சதகமும், பர்த்ருஹரி சிருங்கார சதகமும் ஆகும். இந்நூலின் தமிழ் மொழிபெயர்ப்பாளர் சுவாமிநாத தேசிகர் ஆவர். வடமொழியில் பதிப்பான நூலைக் கொண்டும், இந்நூல் நிலையத்திலேயே இருக்கும் இரண்டு பிரதிகளைக் கொண்டும் ஒப்பிட்டு இந்நூல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

## 8. வானொலியில் சிறப்புரை பெற்ற சுவடிப்பதிப்புகள்

இவ்வகையிலமைந்த சுவடிப்பதிப்பு நூல்கள் மூன்று. அவை, மூவர் அம்மானை, எக்காலக் கண்ணி, கோதைநாய்ச்சியார் தாலாட்டு ஆகியனவாகும். இந்நூல்கள் இப்பருவ இதழில் பதிப்பாவதற்கு முன்னரே இந்நூலகத்தைச் சேர்ந்தவர்களால் சென்னை வானொலியில் நூலின் சிறப்பியல்புகள் குறித்து உரையாற்றப்பெற்றுள்ளது. மூவர் அம்மானையின் சிறப்பியல்புகள் குறித்து தி. சந்திரசேகரன் அவர்கள் 28.4.1951இலும், எக்காலக் கண்ணியின் சிறப்பியல்புகள் குறித்து வ.ரா. கல்யாணசுந்தரம் அவர்கள் 14.6.1952இலும், கோதைநாய்ச்சியார் தாலாட்டின் சிறப்பியல்புகள் குறித்து வி.எஸ். கிருஷ்ணன் அவர்கள் 20.9.1952இலும் உரையாற்றியுள்ளனர். இவ்வுரைகளுக்குப் பிறகே இந்நூல்கள் இப்பருவ இதழில் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

## 9. பதிப்பு வரலாறு கொண்ட சுவடிப்பதிப்புகள்

இவ்வகையில் அமைந்த சுவடிப்பதிப்பு நூல்கள் இரண்டு. அவை, இலக்கண தீபம், விராலிமலை சுப்பிரமணியசுவாமி வேலவர் குறவஞ்சி நாடகம் (விராலிமலை வேலவர் குறவஞ்சி) ஆகும்.

**இலக்கண தீபம்:-** இந்நூல், தமிழ்மொழியிலுள்ள இலக்கண வகைகளை விரிவுபடக் கூறும் முறையிலே அமைந்துள்ளது. எழுத்திலக்கணம் முதலாக அணியிலக்கணம் இறுதியாக ஐந்திலக்கணங்களிலும் காணப்பெறும் பிரிவுகளனைத்தும் விளங்கக் கூறப்பட்டுள்ளன. இதில் மொத்தம் 15 செய்யுட்கள் உள்ளன. 13, 14, 15ஆம் எண்ணுள்ள செய்யுட்கள் முறையே தலை, இடை, கடைச்சங்கங்கள் இருந்த இடங்கள், காலம், அக்காலத்தில் வாழ்ந்த தமிழ்ப்புலவர் பெயர்கள், அரங்கேற்றப்பட்ட நூல்கள் முதலியவற்றைக் கூறுகின்றன.

இந்நூல், ஏற்கெனவே மதுரைத் தமிழ்ச்சங்கத்து செந்தமிழ்த் தொகுதி 4, பகுதி 6, ஏப்ரல்-மே 1916, பக்கம் 238-245இல் 1-14 பாடல்களை நாராயணையங்கார் அவர்களால் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. செந்தமிழில் இந்நூல் பதிப்பாகி சுமார் 40 ஆண்டுகள் கழித்து, சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் (தொகுதி8, பகுதி 1) வி.எஸ். கிருஷ்ணன் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. செந்தமிழில் பதிப்பான விவரத்தை இப்பதிப்பாசிரியர் எங்கும் குறிப்பிடவில்லை. எனவே, இவர் முன் பதிப்பை கண்ணுறவில்லையோ என்ற எண்ணத்தை உண்டாக்குகிறது.

**விராலிமலை சுப்பிரமணியசுவாமி (வேலவர்) குறவஞ்சி நாடகம்:-** இந்நூல் இப்பருவ இதழில் மட்டுமல்லாமல் இதே சுவடியைக் கொண்டு விராலிமலை வேலவர் குறவஞ்சி என்னும் தலைப்பில் வே.இரா. மாதவன் அவர்கள் 1983ஆம் ஆண்டு மெய்யம்மை பதிப்பகம் வாயிலாக வெளியிட்டுள்ளார். இந்நூல் சிறந்த முன்னுரையுடனும் ஆராய்ச்சிக் குறிப்புடனும் பதிப்பாகியுள்ளது. மேலும் பாடல்முதற்குறிப்பும், அருஞ்சொற்பொருளும் நூலின் பிற்பகுதியில் அமைக்கப்பட்டுள்ளன. நூல், அடிக்குறிப்புடன் பதிப்பிக்கப்பெற்றுள்ளது. மேலும், இந்நூல் நாட்டிய

நாடகமாகவும் திருமதி பத்மாசுப்பிரமணியம் அவர்களால் நடத்தப்பட்டுள்ளது. எனவே, இந்நூல் மக்கள் மத்தியில் பெற்ற சிறப்பினையும் பெருமையினையும் இதனால் உணரலாம்.

## இப்பருவ இதழில் ஆண்டுதோறும் பதிப்பான சுவடிப்பதிப்பு நூல்கள்

இப்பருவ இதழில் பதிப்பான சுவடிப்பதிப்பு நூல்கள் 58ம் 22 ஆண்டுகளில் பதிப்பாகியுள்ளன.

### சில எண்ணங்கள்

1. இப்பருவ இதழில் வெளிவந்த சுவடிப்பதிப்புகளில் பெரும்பான்மை சிற்றிலக்கிய நூல்களாகவே உள்ளன.

2. பனையோலை, காகிதம் என்ற இரண்டு நிலைகளில் இச்சுவடிப்பதிப்பு மூலங்கள் அமைந்துள்ளன.

3. சில சுவடிப்பதிப்பு நூல்கள் வெளியாவதற்கு முன்னரே அந்நூல் பற்றிய சிறப்புச் செய்திகளை இந்நூல் நிலையத்தார் சென்னை வானொலியில் சிறப்புரையாற்றி வெளிப்படுத்தியுள்ளனர்.

4. இப்பருவ இதழில் பதிப்பிக்கப்பெற்ற 58 தமிழ்ச் சுவடிப்பதிப்பு நூல்களில் 'இலக்குமிவெண்பா', 'பூதரவிலாஸம்' தவிர்த்த 56 நூல்களும் முழுமைபெற்ற சுவடிப்பதிப்பு நூல்களாகத் திகழ்கின்றன.

5. இப்பருவ இதழில் பதிப்பிக்கப்பெற்ற சுவடிப்பதிப்பு நூல்களில் 'பிரபந்த மரபியல்' தவிர்த்த மற்ற சுவடிப்பதிப்பு நூல்கள் தனி நூலாகப் பதிப்பிக்கப் பெறவில்லை. இந்நூல்கள் இப்பருவ இதழ்களில் மட்டுமே காணக்கூடியன.

6. இப்பருவ இதழ்களில் வெளிவந்த தமிழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் எல்லாம் பிற நூலகச் சுவடிகளோடு ஒப்பிட்டுப் பார்க்காமல் இந்நூலகப் பிரதிகளையே (பனையோலை, கையெழுத்துப்பிரதி) ஒப்பீடு செய்து பதிப்பிக்கப்பெற்றன.

7. இப்பருவ இதழ்களில் பதிப்பான சுவடிப்பதிப்புகள் பெரும்பாலும் ஒரே பகுதியில் பதிப்பாகியுள்ளன.

கட்டிமகிபன்பள்ளு, இரிஷிவிந்தக் குறவஞ்சி, திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ், அருங்கலச்செப்பு, விராலிமலை சுப்பிரமணியசுவாமி குறவஞ்சி நாடகம் ஆகிய ஐந்து சுவடிப்பதிப்பு நூல்கள் மட்டும் இரண்டு பகுதிகளில் வெளியாகியுள்ளன.

8. பகுதி பகுதியாக வெளிவந்த பருவ இதழ்ச் சுவடிப் பதிப்புகளில் முன்னுரையோ பதிப்புரையோ நூலின் இறுதிப் பகுதியில் அமைய மேற்கூறிய ஐந்து நூல்களின் முன்னுரையானது முதல் பகுதியிலேயே அமைந்திருக்கிறது.

9. பிரபந்த மரபியல் மட்டுமே விரிவான முன்னுரையுடன் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

10. இந்நூலகத்தில் பணியாற்றுபவர்களும், இந்நூலகத்தைச் சார்ந்து பணியாற்றுபவர்களுமே இப்பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பாசிரியர்களாக இருந்துள்ளனர்.

11. முதற்றொகுதியில் பதிப்பான இரண்டு நூல்களுக்கும் 17, 18, 19, 20 ஆகிய தொகுதிகளில் பதிப்பான நூல்களுக்கும் ஆங்கில அறிமுகவுரை இல்லை.

12. நூலின் முகவுரையில் அகவற்பாவால் அமைந்துள்ள சுவடிப்பதிப்பு நூல்கள் இரண்டு. அவை, மீனாட்சியம்மன் கிளிப்பாடல், நெல்லைக்குமரன் துதி ஆகும். இவ்வமைப்பு வேறெந்த பருவஇதழ்ச் சுவடிப்பதிப்புகளுக்கும் இல்லாத ஒன்று.

13. சுவடிப்பதிப்பில் பாடலின் இறுதி அடியின் வலப்பக்கத்தில் கொடுப்பதும் பாடலின் முதலடியின் இடப்பக்கத்தில் கொடுப்பதும் வழக்கம். இப்பாடலெண்கள் சுவடியிலுள்ள எண்களாயின் அடைப்புக்குறி இல்லாமலும், சுவடியிலில்லாத எண்களாயின் அடைப்புக்குறிக்குள்ளும் இடப்படுதல் முறையாக உள்ளது. இம்முறையிலிருந்து இப்பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்களில் இடம்பெறும் பாடலெண் வைப்புமுறை சிலவற்றிற்கு மாறுபடுகின்றன. ஒரு தெளிவான நெறிமுறை இல்லாததே இதற்குக் காரணமாகலாம். பல சுவடிப்பதிப்புகள் பாடலெண் கொடுப்பதில் பதிப்பாசிரியர்களுக்குப் பதிப்பாசிரியர் மாறுபடுகின்றனர். இம்மாறுபாடுகளையெல்லாம் போக்கி

இனியாவது ஒரு தெளிவான நெறிமுறை வகுத்தால் சுவடிப்பதிப்பு நூல்களுக்கும் பதிப்பாசிரியர்களுக்கும் நன்மையாகலாம். இது இன்றைய முக்கியத் தேவைகளில் ஒன்றாகும்.

## முடிவுரை

தமிழ்ச் சுவடிப்பதிப்பு வரலாற்றில் பருவ இதழ்ச் சுவடிப்பதிப்புகளும் காட்சியளிக்கின்றமை வெள்ளிடைமலை. பருவ இதழ்ச் சுவடிப்பதிப்பு நூல்கள் அனைத்தும் திரட்டிக் காணின் தமிழ் இலக்கிய வரலாற்றின் பரப்பு மேலும் விரியும் என்பதில் ஐயமில்லை. பருவ இதழ்களில் ஒன்றாகத் திகழும் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ் தனக்கே உரிய பங்கைச் செவ்வனே செய்திருக்கிறது எனலாம். இருப்பினும் 1948 முதல் 1976 வரையிலான கால கட்டத்தில் மட்டும் 21 தொகுதிகளின் வாயிலாக 58 நூல்களைப் பதிப்பித்த இப் பருவ இதழ் தொடர்ந்து வெளிவராமை தமிழுலகிற்குப் பெரும் இழப்பையே தருகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. பழனியாண்டவர் கலித்துறை, த. பெரியாண்டவன் (பதி.), அ.கீ.தி.சு.நூ. பருவ இதழ், தொகுதி 16, பகுதி 1, 1963, ப.57.
2. ஞானவுலா, மு. பசுபதி (பதி.), அ.கீ.தி.சு.நூ. பருவ இதழ், தொகுதி 17, பகுதி 1, 1965, ப.76.
3. கதிர்காமச்சிந்து, பூ. சுப்பிரமணியம் (பதி.), அ.கீ.தி.சு.நூ. பருவ இதழ், தொகுதி 8, பகுதி 1, 1955, ப.76.

*****

## துணைநின்ற நூல்கள்

1. அச்சுக்கலை, மா.சு. சம்பந்தன், தமிழர் பதிப்பகம், சென்னை, 1976.
2. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழ்கள், தொகுதி 1 முதல் 21 வரை.

3. இலக்கண தீபம், நாராயணய்யங்கார் ( பதி. ), செந்தமிழ் - திங்களிதழ், மதுரைத் தமிழ்ச்சங்கம், தொகுதி 4, பகுதி 6, 1916.

4. விராலிமலை வேலவர் குறவஞ்சி, வே.இரா. மாதவன் ( பதி. ), மெய்யம்மை பதிப்பகம், காரைக்குடி, 1983.

பின்னிணைப்பு - 1

## சென்னை, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகப் பருவ இதழில் வெளிவந்த சுவடிப்பதிப்பு நூல்கள்

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) |
| 1. | & அருங்கலச்செப்பு | பூ. சுப்பிரமணியம் | 20 | 1 | 1972 | 1-32 | 1-61 | நிறை |
| | | | 20 | 2 | 1972 | 33-91 | 62-180 | |
| 2. | @ஆத்திசூடி வெண்பா / சட்டைமுனிநாதர் | வ.ரா. கல்யாணசுந்தரம் | 2 | 2 | 1950 | 53-60 | 1-30 | நிறை |
| 3. | *ஆத்திசூடித் திறவுகோல்/ குருமுனி | தி. சந்திரசேகரன் | 2 | 1 | 1949 | 36-40 | -- | நிறை |
| 4. | *இரிஷிவிந்தக்குறவஞ்சி/ திருவெண்ணெய்நல்லூர் இராசப்ப உபாத்தியாயர் | ஆர்.கே.பார்த்தசாரதி & | 17 | 2 | 1965 | 1-40 | | |
| | | பூ. சுப்பிரமணியம் | 18 | 1 | 1968 | 1-13 | -- | நிறை |
| 5. | *இலக்கண தீபம் | வி.எஸ். கிருஷ்ணன் | 8 | 1 | 1955 | 41-51 | 1-15 | நிறை |
| 6. | *இலக்குமி வெண்பா | இ.பா.வேணுகோபால் | 9 | 2 | 1956 | 39-57 | 1-135 | குறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 7. | *எக்காலக் கண்ணி | வி.எஸ். கிருஷ்ணன் | 6 | 1 | 1953 | 33-47 | 1-201 | நிறை |
| 8. | *எட்டெட்டந்தாதி | மு. பசுபதி | 7 | 2 | 1954 | 33-51 | 1-64 | நிறை |
| 9. | *எலிவிடுதூது/ நல்லபெருமாள் | இ.பா. வேணுகோபால் | 8 | 2 | 1955 | 27-41 | -- | நிறை |
| 10. | *கட்டிமகிபன் பள்ளு | வி.எஸ். கிருஷ்ணன் | 13 | 1 | 1960 | 37-68 | 1-115 | |
| | | | 13 | 2 | 1960 | 35-66 | 116-208 | நிறை |
| 11. | ^கதிர்காமச் சிந்து | பூ. சுப்பிரமணியம் | 17 | 1 | 1965 | 76-83 | 1-31 | நிறை |
| 12. | *கருணாகரமாலை/ முத்துப்புலவர் | மு. பசுபதி | 9 | 1 | 1956 | 41-48 | 1-30 | நிறை |
| 13. | *குமாரபுரி மும்மணிக்கோவை/ வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் | மு. பசுபதி | 10 | 2 | 1957 | - | 1-30 | நிறை |

| என் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 14. | *கோதை நாய்ச்சியார் தாலாட்டு | வ.ரா.கல்யாணசுந்தரம் | 6 | 2 | 1953 | 43-55 | அடி1-136 | நிறை |
| 15. | *சிதம்பர விலாசம் | மு. பசுபதி | 5 | 2 | 1952 | 27-34 | 1-145 | நிறை |
| 16. | *சிறுத்தொண்டன் சிந்து | த. பெரியாண்டவன் | 15 | 1 | 1962 | 23-50 | -- | நிறை |
| 17. | *ஞான உலா/ சங்கராச்சாரியார்? | மு. பசுபதி | 8 | 1 | 1955 | 31-39 | அடி1-160 | நிறை |
| 18. | *தசாவதாரப்பத்து | த. கிருட்டிணமூர்த்தி | 14 | 1 | 1961 | 41-50 | 1-10 | நிறை |
| 19. | *திருக்கழுக்குன்றமாலை | பி.எஸ். சுலோசனா | 4 | 1 | 1951 | 49-59 | 1-100 | நிறை |
| 20. | *திருத்தணிகை முருகன் தாலாட்டு | கிருஷ்ணா சஞ்சீவி | 14 | 2 | 1961 | 1-9 | 1-64 | நிறை |
| 21. | *திருத்தொண்டர் மாலை/ திருக்கயிலை குமார பாரதியார் | நடாதூர் வேங்கடசாரியன் | 2 | 2 | 1950 | 37-52 | 1-3 1-101 | நிறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 22. | *திருப்புல்லாணி எம்பெருமான் மீது பாடிய சிறுபிரபந்தங்கள்/ செந்தமிழ் வீரராகவன் | மு. பசுபதி | 14 | 1 | 1961 | 21-39 | | |
| | அ. கிள்ளைப்பாட்டு | | | | | | 1-79 | நிறை |
| | ஆ. தாலாட்டு | | | | | | 1-21 | நிறை |
| | இ. திருவனந்தல் | | | | | | 1-11 | நிறை |
| | ஈ. நலங்கு | | | | | | 1-77 | நிறை |
| 23. | *திருமூலர் தியானக்குறிப்பு/ திருமூலர் | வ.ரா. கல்யாணசுந்தரம் | 1 | 2 | 1949 | 41-46 | 1-28 | நிறை |
| 24. | *திருவள்ளுவர் பிள்ளைத்தமிழ்/ | ஆர்.கே.பார்த்தசாரதி & பூ. சுப்பிரமணியம் | 18 | 2 | 1968 | 33-36<br>1-31 | 1-55 | |
| | நா.கனகராசையர் | | 19 | 1 | 1969 | 33-51 | 66-106 | நிறை |
| 25. | *நம்மாழ்வார் ஊஞ்சற் கவிதை/திருமேனி திருவேங்கடக் கவிராயர் | வி.எஸ். கிருஷ்ணன் | 11 | 2 | 1959 | 65-73 | 1-20 | நிறை |
| 26. | *நம்மாழ்வார் பிரபந்தங்கள் | த. கிருட்டிணமூர்த்தி | 14 | 1 | 1961 | 51-61 | | |
| | அ. நம்மாழ்வார் திருக்கோலக்கவி | | | | | | 1-22 | நிறை |
| | ஆ. ஆழ்வார்திருவனந்தல் | | | | | | 1-5 | நிறை |
| | இ. நம்மாழ்வார் பதம் | | | | | | 1-5 | நிறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 27. | ^நல்லபிள்ளை சித்திர மடல்/ பொன்னம்பலராச பூபாலன் | ஆர்.கே. பார்த்தசாரதி | 18 | 1 | 1968 | 16-32 | -- | நிறை |
| 28. | *நல்வழிப்பாடல்கள்/ ஔவையார் | ந. வேங்கடாசார்யன் | 2 | 1 | 1949 | 41-45 | -- | நிறை |
| 29. | *நவக்கிரக தோத்திரமும் | | | | | | 1-10 | நிறை |
| | சனிபகவான் தோத்திரமும் | மு. பசுபதி | 7 | 1 | 1954 | 27-35 | 1-12 | நிறை |
| 30. | *நாலுமந்திரி கதை/ சின்னத்தம்பி | த. கிருட்டிணமூர்த்தி | 15 | 2 | 1962 | 1-32 | -- | நிறை |
| 31. | *நீதிசாரக்கரு | வி.எஸ். கிருஷ்ணன் | 5 | 1 | 1952 | 37-56 | 66 | நிறை |
| 32. | *நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா | வி.எஸ். கிருஷ்ணன் | 10 | 1 | 1957 | 35-54 | 109 | நிறை |
| 33. | *நெஞ்சறி விளக்கம் | தி. சந்திரசேகரன் | 2 | 2 | 1950 | 31-36 | 12 | நிறை |
| 34. | *நெஞ்சறி விளக்கம்/ கணபதிதாசர் | பி.எஸ். சுலோசனா | 4 | 2 | 1951 | 29-39 | 100 | நிறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 35. | *நெஞ்சுபதேசக் கீர்த்தனைகள் | வி.எஸ். கிருஷ்ணன் | 5 | 2 | 1952 | 35-46 | 34 | நிறை |
| 36. | @நெல்லைக்குமரன் துதி | பூ. சுப்பிரமணியம் | 17 | 1 | 1965 | 87-93 | 13 | நிறை |
| 37. | @பரிபூரணசித்தி/பரிபூரணர் | பூ. சுப்பிரமணியம் | 17 | 1 | 1965 | 94-124 | 156 | நிறை |
| 38. | *பர்த்ருஹரிசிருங்கார சதகம்/சுவாமிநாத தேசிகர் ( தமிழில் ) | வ.ரா. கல்யாணசுந்தரம் | 3 | 2 | 1950 | 31-54 | 104 | நிறை |
| 39. | *பர்த்ருஹரிசிருங்கார சதகம்/சுவாமிநாத தேசிகர் ( தமிழில் ) | வ.ரா. கல்யாணசுந்தரம் | 2 | 1 | 1949 | 46-47 | 110 | நிறை |
| 40. | *பழனிமலை வடிவேலர் பதிகம் | பத்மாவதி | 11 | 1 | 1958 | 61-69 | 11 | நிறை |
| 41. | *பழனியாண்டவர் கலித்துறை/அழகிய சிற்றம்பலக் கவிராயர் | த. பெரியாண்டவன் | 16 | 1 | 1963 | 57-71 | 100 | நிறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 42. | ^பாலையானந்தர் ஞானக்கும்மி/ பாலையானந்தர் | த. பெரியாண்டவன் | 15 | 2 | 1962 | 33-64 | 186 | நிறை |
| 43. | т பிரபந்த மரபியல் | மு. அருணாசலம் | 21 | | 1976 | 1-81 | | நிறை |
| 44. | *பூதர விலாஸம்/ தெய்வசுவாமி | வ.ரா. கல்யாணசுந்தரம் | 1 | 1 | 1948 | 65-88 | 100 | குறை |
| 45. | *மாணிக்கவாசகர் ஞானக்கலித்துறை | மு. பசுபதி | 11 | 1 | 1958 | 49-59 | 61 | நிறை |
| 46. | *மாணிக்கவாசகர் திருமணியகவல்/ மாணிக்கவாசகர் | ந. வேங்கடாசார்யன் | 1 | 2 | 1949 | 33-40 | -- | நிறை |
| 47. | *மீனாட்சியம்மன் கிளிப்பாடல்/ மீனாட்சியம்மை | முத்தம்மாள்கௌரிநாதன் | 17 | 1 | 1965 | 69-75 | 40 | நிறை |
| 48. | * முருகரனுபூதி/உமாபதி சிற்றம்பலக் கவிராயர் | கிருஷ்ணா சஞ்சீவி | 15 | 1 | 1962 | 1-21 | 102 | நிறை |
| | | த. பெரியாண்டவன் | 16 | 1 | 1963 | 57-71 | 100 | நிறை |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 49. | *முனிமொழி | வி.எஸ். கிருஷ்ணன் | 9 | 1 | 1956 | 33-40 | 30 | நிறை |
| 50. | *மூவர் அம்மானை | மு. பசுபதி | 6 | 2 | 1953 | 57-73 | 95 | நிறை |
| 51. | *யோகமாலை | த. கிருட்டிணமூர்த்தி | 14 | 2 | 1961 | 11-51 | 150 | நிறை |
| 52. | ¬வெருகைப்பத்து | பூ. சுப்பிரமணியம் | 17 | 1 | 1965 | 84-86 | 11 | நிறை |
| 53. | *வாதவூரார் ஆனந்தக் களிப்பும், திருக்கழுக் குன்றம் பேரம்பலப் பண்டாரத்தின் வரலாறும் | வி.எஸ். கிருஷ்ணன் | 7 | 1 | 1954 | 37-44 | -- | நிறை |
| 54. | ¬விராலிமலை சுப்பிரமணிய சுவாமி குறவஞ்சி நாடகம்/பிள்ளைப் பெருமாள் கவிராயர் | மு. பசுபதி | 12 | 1 | 1959 | 21-50 | 1-39 | |

| எண் | நூற்பெயர்/ ஆசிரியர் பெயர் | பதிப்பாசிரியர் பெயர் | தொகுதி | பகுதி | ஆண்டு | பக்கம் | பாடல் | நிறை/ குறை |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 12 | 2 | 1959 | 28-55 | 40-83 | நிறை |
| 55. | *விராலிமலை வேலவர் காதல் | முத்தம்மாள்கௌரிநாதன் | 16 | 2 | 1964 | 1-30 | அடி 885 | நிறை |
| 56. | *வில்லிபாரதம்-மௌனி சூட்டுச் சருக்கம் | தி. சந்திரசேகரன் | 1 | 2 | 1949 | 23-32 | 54 | நிறை |
| 57. | *வேங்கடேசப்பெருமாள் தமிழ்மாலை/ ஆவுடையநாதன் | த. கிருட்டிணமூர்த்தி | 16 | 1 | 1963 | 73-93 | -- | நிறை |
| 58. | *வேதபுரி ஈசுவரர் அந்தாதி | மு. பசுபதி | 6 | 1 | 1953 | 49-63 | 102 | நிறை |

குறிப்பு: * மூலம் மட்டும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
௵ மூலமும் அடிக்குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
¬ பாடலும் உரைநடையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
& மூலமும் உரையும் கருத்துக்குறிப்பும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்
т மூலமும் உரையும் கொண்ட சுவடிப்பதிப்பு நூல்கள்

# 6. பழமையான சித்தமருத்துவ நூல் பதிப்புகள்

*மருத்துவர் ச. ரங்கராசன்*

## அச்சுயந்திர வரலாறு

முதன்முதலாகத் தமிழகத்தில், தரங்கம்பாடியில் சீகன்பால் அவர்கள் காலத்தில் அச்சுக்கூடம் நிறுவப்பட்டது. ஆண்டிரிக் பாதிரியார் அவர்கள் (1520-1600) அச்சு எழுத்துக்களை வடிவமைத்திருந்தார்[1]. தஞ்சையில், சரபோசி II (கி.பி. 1798-1832) கல்லெழுத்துக்களைக் கொண்டு, அச்சிடும் முறையில் பதிப்பித்தார். இதற்கு நவ கலாநிதி வர்ண இயந்திரசாலை[2] என்று பெயரிட்டிருந்தது. அச்சு முறையில் ஆங்கிலேயர்கள், கிறித்துவ மத நூல்களையும், விவிலிய நூலையும் தமிழில் பதிப்பித்தார்கள். தமிழர்கள், தங்களுடைய நூல்களைப் பதிப்பு செய்யத் தடையாக உள்ள சட்டம் 1835இல் நீக்கப்பட்டது. எனவே, ஏராளமான தமிழ் நூல்கள் பதிப்பிக்கப்பட்டன. அவற்றில் பழைய சித்தமருத்துவ நூல்களைப் பற்றிய வரலாற்றை ஆய்வு செய்து சில கருத்துகள் இக்கட்டுரையில் பேசப்படுகின்றன.

## பதிப்பு வரலாறு

தமிழர்களின் மூலிகை அறிவு, மருத்துவ முறைகள், என்பன வெளிநாட்டவர்களைத் தன்பால் ஈர்த்தன. எனவே, அவர்கள் சித்த மருத்துவம் பற்றியும், மூலிகைகளைப் பற்றியும் நூல்களை எழுதிப் பதிப்பித்தார்கள். இவைகள் யாவும், பிறமொழிகளில் இருந்தன. சான்றாக ஹார்டஸ் இண்டிகஸ் மலபாரிகா[3] என்ற நூல், லினஸ் மேற்பார்வையில் 1678இல் பதிப்பிக்கப்பட்டது. இவர், தாவர இயல் தந்தை எனப்படுவார். இது நான்கு மொழிகளில் - லத்தீன், அரபி, தேவநாகரி, மலையாளம் - படங்களுடன் - ஒரு தொகுதிக்கு 500 பக்கங்கள் வீதம் 12 தொகுதிகளாகப் பதிப்பிக்கப்பட்டன. இதில் ரங்கபட்டன், விநாயக பண்டிதன், அப்புபட்டன், இட்டி

அச்சுதன் ஆகியோர் பணியாற்றி உள்ளனர். இதுபோன்றே, டி.ஓர்.பி. கார்சியா, 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர், தாவர இனங்களைப் பற்றிய செய்திகளைத் திரட்டினார். இதை டச்சு வான்ரீட் (1678-1693) 12 தொகுதிகளாக வெளியிட்டார்.[4] இந்திய மூலிகைகளின் தோட்டம் பிரஞ்சு மொழியில், புதுவை மருத்துவக் கல்லூரி, மரபுவழி மருத்துவ ஆய்வுப் பிரிவு, சித்த - ஆயுர்வேத மருத்துவ நூல்களை மொழிபெயர்த்து அளித்தது[5] குழியோன்போஸ் பிரஞ்சு-தமிழ் மருத்துவ உரையாடல்[6] என்ற நூலை வெளியிட்டார். 18ஆம் நூற்றாண்டின் சித்தமருத்துவ நூல்கள் ஏறத்தாழ 294 எனலாம். இவற்றைப் பல வகைகளாகப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். வணிக நோக்கமின்றி, இந்நூல்களைப் பதிப்பித்த, நூலாசிரியர்கள், பதிப்பாசிரியர்களின் தொண்டு போற்றுவதற்குரியதாகும். இவர்களின் தொண்டு இல்லையென்றால், பல சித்தமருத்துவ நூல்கள் அழிந்திருக்கும்.

## வகையும், தொகையும்

18ஆம் நூற்றாண்டில் பெரும்பாலும் மூலநூல்கள் மட்டும் அச்சிடப்பட்டுள்ளன. இவை, பெரும்பாலும் பாடல்களாகவே உள்ளன. பின்னர், 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் உரைநடை நூல்கள் செய்யும் முறை எழுந்தது. மூல நூல்களையும், தனித்தனி சித்தர்கள் பெயரில் உள்ளவை, தொகுப்பு நூல்கள், அகராதிகள், நிகண்டுகள், திரட்டு நூல்கள், நோய்களின் பெயரில் அமைந்தவை, மொழிபெயர்ப்பு நூல்கள், பிறநாட்டுச் சித்தமருத்துவ நூல்கள் என்று வகைப் படுத்தலாம். தமிழ் இலக்கியத் தாக்கத்தால், பல்வேறு சித்தமருத்துவ நூல் பெயர்கள் அமைந்துள்ளன. குறிப்பாகச் சிற்றிலக்கியங்களின் தாக்கம் - பெரிதும் சித்த மருத்துவ நூல்களில் உள்ளன. சான்றாக, அகத்தியர் வைத்திய காவியம், அகத்தியர் கும்மி, கொங்கணர் வாலைக்கும்மி, ஆயுர்வேதக் கும்மி, பரிபாசை திரட்டு, நாடிசாத்திரத்திரட்டு, யூகி உலா, அகத்தியர் பள்ளு, வைத்தியப் பள்ளு, ஊஞ்சல், ஓடப்பாட்டு, ஏற்றப்பாட்டு, யமகவெண்பா, திருமந்திரம், கரிசல், காப்பியம், சேகரப்பா, மகாகரிசல், அகத்தியர் சதகம், திருவள்ளுவர் அகவல், சித்தர் அந்தாதி, தட்ச அட்டகம், விஷ ஆரூடம், கூர்மானந்தர் 50, திருமூலர் தத்துவம், கட்டளை, ஞானம்

100, வைத்தியக் குறவஞ்சி, அட்டாங்கயோகக்குறள், ஞானக்குறள், சடாச்சரக்கோவை, எண்ணெய் சிந்து, மச்சமுனி வாக்கியம், திரூமுலர் குருமுறை, ஞானச்சித்தர் பள்ளு, ஞானப்பள்ளு, கருவூரார் நொண்டி, மாலை[7] என்பவற்றைக் கொள்ளலாம்.

## மூலநூல் பதிப்புகள்

18ஆம் நூற்றாண்டு சித்தமருத்துவ நூல் பதிப்புகளைப் பார்ப்பது, அரிய ஒன்றாக ஆய்வாளர்களுக்கு உள்ளது. சில நூல்களில் ஆசிரியர் பெயர், பதிப்பாண்டு, அச்சகம் என்பன இல்லை. சான்றாக, அகத்திய முனிவரின் ஆயுள்வேதம் 1200. இதன் பதிப்பாசிரியர், ஆண்டு என்பனவும், பதிப்பு பற்றிய விவரமும் இல்லை. ஆயின், அச்சக உரிமையாளர் த. துரைசாமி முதலியார், புவனேசுவரி அச்சுக்கூடம் என்று உள்ளது. இதுபோன்ற நூல்கள் 80 உள்ளன[8]. வீரமாமுனிவரின் வைத்திய முறை, வீரமெழுகு என்பன 1680இலும், 1742இலும், வெளியிடப்பட்டன. முதன்முதலாக அச்சில் வெளிவந்த சித்த மருத்துவ நூல்களாக இவற்றைக் கொள்ளலாம். இந்நூல்களை அடுத்து, 1800இல் அரங்கைய நாய்க்கரின் பற்பவகைகள், வைத்திய அட்டவணை[9]யும், வெங்கடாசலம் பிள்ளையின் வைத்திய அட்டவணையும்[10] வெளிவந்தன. மூத்திர ரோகம்[11] என்ற நூலைச் சுப்புராயக் கவிராயர் 1816ஆம் ஆண்டிலும், அனுபோக அட்டவணை என்ற நூலை 1818ஆம் ஆண்டிலும் பதிப்பித்துள்ளார். இந்த நூல்களைக் காணும் நற்பேற்றினை இக்கட்டுரையின் ஆசிரியர் பெறவில்லை.

மூலநூலைப் பதிப்பித்த ஆசிரியர்கள், தங்களைப் பதிப்பாசிரியர் என அழைத்துக்கொள்ளாத நிலை, அக்கால மரபாக இருந்துள்ளது. மூலநூலாசிரியர்களின் பெயர்களையே, பதிப்பித்தனர். மாறாகச் சுவடிகளையும் பரிசோதித்தும், வழுக்களைக் களைந்தும் பார்வையிட்டும் என்னும் குறிப்புகள் நூல்களில் உள்ளன. இவற்றைப் பரவலாக 18ஆம் நூற்றாண்டுப் பதிப்புகளில் காண இயலும். சான்றாக, யூகி முனிவரின் கரிசல் 151[12] என்ற நூலில் சீ. இராசரத்தின முதலியாரால் பரிசோதிக்கப்பட்டு என்று வருகின்றது.

இதுபோன்றே அகத்தியர் வைத்திய காவியம்[13] திருவாவடுதுறை சண்முகதேசிகர் பார்வையிட்டு என்றும்,

அகத்தியர் வைத்திய காண்டம். பாண்டு வைப்பு 600[14] என்ற நூலில் சரவணபுரம் சண்முக முதலியார் பார்வையிட்டு என்றும் வருகின்றது. சில நூல் பதிப்புகளில் பதிப்பாசிரியரது ஆசிரியர், பெற்றோர்கள், நிதியுதவி செய்தவர்கள் ஊர் என்பன விளக்கமாக உள்ளன. சான்றாக வைத்தியாநுகூல சீவரட்சணி[15] என்ற நூலின் முன்பக்கத்தைக் கொள்ளலாம். சென்னை, மதுரை, புதுவைத் தமிழ்ச் சங்கங்களின் தமிழ்த் தலைமை புலமை நடாத்திய களத்தூர் வேதகிரி முதலியார் பேரன், அங்கமுத்து முதலியாரால் இயற்றிய என்று கூறப்பட்டுள்ளது. தேரையர் மருத்து பாரதம் என்ற நூல் 1909இல் மரு. க.ச. முருகேச முதலியாரால் பதிப்பு செய்யப்பட்டது. இதில் சென்னை, சூளை வேல்முருகன் தரும வைத்திய சங்க நிதி, சகாயத்தின் பொருளுதவியால் அச்சிட்டுள்ளதாகக் கூறியுள்ளார்.

சித்தமருத்துவ நூல்களைப் பதிப்பு செய்தவர்கள், தங்களுடைய நூல்களுக்குச் சாற்றுக்கவிகளைத் தக்க அறிஞர் பெருமக்களிடமிருந்து பெற்றுள்ளனர். இதற்குச் சித்தமருத்துவர்களும் விலக்கில்லை. இது உரைநடை நூல்களுக்கும் பொருந்தும். வண்ண வைத்திய சாத்திரம் 16 என்ற நூலுக்கு வி.கோ. சூரிய நாராயண சாத்திரியார் தந்த சிறப்புப் பாயிரத்தைக் காணலாம்.

பூமகள் பொலியும், திருவையாறதன் கண்
புனிதமா, அனந்தை யனீன்ற
பாமரு, சாமிநாதவேள், சுகுணன்
பன்மொழி பயின்ற, நற்பனவன்
மா மகிழ்வெய்தி, மதிகொடுவண்ண
வைத்திய நூலினை வகுத்தான்
பாமரர், கலைஞர் யாவரும் படித்துப்
பயன்பெற்றுச் சுகமுறமாதோ

இந்நூல், தாம்சன் & கோ, மினர்வா அச்சுக்கூடம், சென்னையில் 897ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்டது. 102 பக்கங்கள், விலை ரூ.0.8.0 ஆகும். இதன் சிறப்புப் பாயிரத்திலிருந்து, நூலாசிரியரின் ஊர் திருவையாறு தந்தை அனந்தையர், ஆசிரியர் பல மொழிகள் அறிந்தவர் என அறியலாம். தாருட்ய விர்த்தி போதனி[17] என்ற உரைநடை நூலுக்குச் சிறப்புப் பாயிரம், புரசை அட்டாவதானம் சபாபதி

முதலியார் மாணவர் கிறிஸ்துவக் கல்லூரித் தமிழாசிரியர், பதிப்பாசிரியரின் ஆசிரியர் சின்னச்சாமி பிள்ளை இயற்றியது என வருகின்றது. சந்தான சிந்தாமணி[18] என்ற உரைநடை நூலுக்குச் சிறப்புப் பாயிரங்கள் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர், திருவானைக்காவல் - சோமசுந்தரம் பிள்ளை, திருச்சி, சோசப் கல்லூரி தமிழாசிரியர் முத்து சிதம்பரம் பிள்ளை ஆகியோர் தந்துள்ளனர். சிறப்புப் பாயிரம் மூலம், இவர் திருவரங்கத்தில் வாழ்ந்தவர் என்பதை அறியலாம். சுகாதார சீவ ரட்சாமிர்தம்[19] என்ற உரைநடை நூலுக்குச் சிறப்புப் பாயிரம் உ.வே. சாமிநாதய்யர் தந்துள்ளார்கள். அப்போது அவர் மாநிலக் கல்லூரி, தமிழ்த்துறை பேராசிரியராக இருந்துள்ளார். இவர் பாயிரம் தந்த காலம் 17.6.1916. இதுபோலவே, மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை விரிவுரையாளராக இருந்த, சி.ஆர். நமச்சிவாய முதலியார் அகவற்பாவை இயற்றித் தந்துள்ளார். மருத்துவ சாத்திரம்[20] என்ற நூலுக்கு மதுரைத் தமிழாசிரியர், கே.வி.ஜி. மன்னார்சாமி அய்யர் வாழ்த்துப்பா தந்துள்ளார். இவர், தேவிபாகவதத்தைத் தமிழில் மொழியாக்கம் செய்தவர் என்ற செய்தியும் தெரியவருகின்றது.

சில மருத்துவ நூல்களைப் பணம் முன்னதாகவே பெற்றுக்கொண்டு, அச்சிட்ட பின்பு நூலை அளிப்பது வழக்கம். நூல் அச்சிடப் பொருளுதவி செய்தவர்களின் பெயர்கள் நூலின் முன்பக்கத்தில் இடம்பெறும். அகத்தியர் லட்சண காவியத்தில்[21] இவ்விதம் பொருளுதவி அளித்தவர்களின் பெயர்கள் முன்பக்கத்தில் காணப்படுகின்றன.

## பதிப்பின் நோக்கம்

பல சித்தமருத்துவ நூல்களில் பதிப்பின் நோக்கம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. தாருட்ச விர்த்தி போதனியின் ஆசிரியர், சுதேசி வைத்தியர்களின் உபயோகத்திற்காக எழுதியதாகக் கூறுகின்றார். இதுபோன்றே மருத்துவ சாத்திரத்தின் ஆசிரியர் மருத்துவச்சிகளுக்காகவும், தமிழ் மக்கள் பயன்படுத்தவும் எழுதியதாகக் கூறுகின்றார்.

## பதிப்பின் காரணம்

சித்தமருத்துவ நூல் பதிப்புக்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. சீவன் முக்தீஸ்வர திருவடி

சபைத் தலைவர், திருமூல வர்க்கப் பரம்பரை யதீஸ்வர, சிவராச யோகாப்பியாசி, சுவாமிகள் அனுமதி பேரில்[22] என நவரத்தின வைத்திய சிந்தாமணியின் விளம்பரத்தில் காணப்படுகின்றது. ஒன்பது விஷ ஆரூடம்[23] நூலை மதுரை இராம. குருசாமிக் கோனார் பிராட்டி பத்து கிராமம், விஷரோக நிவர்த்தி, சீவகாருண்ய மாந்திரிகர் தி. கருப்பையா பிள்ளை, விருப்பப்படி 1930இல் பதிப்பு செய்ததாக முகப்புப் பக்கத்தில் உள்ளது. யூகி முனிவர் கரிசல் 151[24] என்ற நூலில் சுப்பிரமணிய அரிகர விலாச ஆயுள்வேத சாலையால் இலவசமாகத் தர அச்சிடப்பட்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## பதிப்பு பற்றிய பொதுக் கண்ணோட்டம்

ஏடுகளிலிருந்த மருத்துவமானது, அழியாமல் காக்கவேண்டி நூல்கள் பதிப்பிக்கப்பட்டன. பெரும்பாலும், மூலபாடம் மட்டுமே அச்சிடப்பட்டன. இக்கால கட்டத்தில், பதிப்பாசிரியர்களைப் பற்றிய செய்திகள் இல்லாமல், அச்சக உரிமையாளர்களின் பெயர்கள் பெரியதாகப் போடப்பட்டன.

சான்றாக உயிரெழுத்து மூலிகை மர்மம் என்ற நூலில் தலைப்பு கடைசி பக்கத்திலும் மூலிகை சாப நிவர்த்தி என்று முன்பக்கத்திலும் உள்ளது. இதில் பதிப்பாசிரியர், அச்சகம், பதிப்பு செய்த ஆண்டு என்பன இல்லை. இது உரைநடையில் அமைந்த சிறு நூலாகும். அகரவரிசையில் மூலிகைகளின் விவரம் கூறப்பட்டுள்ளது. பாடல்களாலான சித்தமருத்துவ நூல்கள் பெரும்பாலும் கடவுள்துதி, காப்புச் செய்யுள் என்பனவற்றுடன் துவங்குகின்றன. மிகச்சில நூல்களில் மட்டும் பதிப்பித்த ஆசிரியர் கருத்து, மூல நூலாசிரியரின் வரலாறு, குறிப்புரை, பொருளட்டவணை என்பன இடம்பெறுகின்றன. சான்றாக 1908இல் பதிப்பான போகர் சரக்கு வைப்பு 800[25] என்ற நூலில் பொருளகராதி இடம்பெறுகின்றது. புலிப்பாணி வைத்தியம் 500[26] சிதம்பரம் பொன்னுச்சாமி முதலியார் பதிப்பில், வைத்திய அகராதி சேர்க்கப்பட்டுள்ளது. போகர் வைத்தியம் 700[27] மயிலம் சுப்பிரமணிய சுவாமிகள் பார்வையிட்டு 1889இல் பதிப்பானது. இதில், பாடலில் உள்ள கடினமான சொற்களுக்குக் கீழே, குறிப்புத் தரப்பட்டுள்ளது.

அகத்தியர் ஞான காவியம் 1000 என்ற நூல் வே. கந்தசாமி முதலியார் இலக்கணக் களஞ்சிய அச்சுக்கூடம்,

சென்னை 1876இல் பதிப்பிக்கப்பட்டது. இதில் இவர் பதிப்பு செய்த நூல்களின் பட்டியல், பதிப்பு செய்யப்போகும் நூல்களின் பட்டியல் என்பன இடம்பெறுகின்றன. நந்திகருக்கடை 300, பி. மார்க்கலிங்க நாயனார் - பரபிரம்ம அச்சுக்கூடத்தில் 1914ம் ஆண்டு பதிப்பானது. பல சுவடிகளை ஒப்புநோக்கிய பின்னர் சுத்த பதிப்பாகக் கொண்டு வரப்பட்டது. சுத்த பதிப்பு என்று அறிவிக்கப்பட்டுள்ளது. தேரையர் வைத்தியம் 1001-121 பக்கங்களுடன், விவேக விளக்க அச்சுக்கூடத்தில் 1888இல் பதிப்பிக்கப்பட்டது. இதில் தேரையரின் வரலாறு, பொருளடக்க அகராதி இணைக்கப்பட்டுள்ளது. நவரத்தின சிந்தாமணி 800[28] நல்ல முறையில் பட்டியல்கள் ஆய்வாளர்களுக்குப் பயன்தரும் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன. பாடல்களின் கருத்துத் தலைப்பகராதி, பாடல் தலைப்பு அகராதி, வெண்பாக்களின் தலைப்பு அகராதி, பாக்களின் தலைப்பகராதி என்பன உள்ளன. இவை ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படும். தேரையரின் தைலவர்க்கச் சுருக்கம் II பதிப்பு[29] - 1923இல் பதிப்பிக்கப்பட்டது. இதன் பதிப்பாசிரியர் சிதம்பரம் தலைவரிசை சி.த. சுப்பிரமணிய பண்டிதர் ஆவர். இவர் மூல நூலுக்கு உரை எழுதியும், அரும்பதங்களுக்குப் பொருளகராதியைச் சேர்த்தும், பதிப்பித்துள்ளார். மேலும், இதில் அணிந்துரை, பாயிரம், கடவுள் வணக்கம், சித்தர் பெருமை என்பனவும் இடம்பெறுகின்றன.

சித்தமருத்துவ நூல்களில் பல தொகுப்பு நூல்களாகும். கிடைத்த சித்தர்களின் பாடல்கள் யாவையும் திரட்டி, ஒரே தலைப்பில் பதிப்பித்துள்ளார்கள். இவற்றுள் சில, 18 சித்தர்கள் நாடி சாத்திரம், பெரிய ஞானக்கோவை, அகத்தியர் சில்லரைக்கோவை என்பன. அகத்தியர் சில்லறைக் கோவை[30] என்று பெயரிடப்பட்டிருந்தாலும் இதில் போகர், சூதமுனி, சுந்தரானந்தர், சுப்பிரமணியர், மச்சமுனி, கொங்கணர், சட்டமுனி சூத்திரம், உரோமரிசி, நந்தி, பதஞ்சலி, திருமூலர் என்ற சித்தர்களின் பாடல்கள் உள்ளன. இவ்வாறு பதிப்பித்தலில் இருநோக்கங்கள் இருப்பதை அறியலாம். சித்தர்கள் அனைவரின் நூல்களையும் ஒருசேரப் பார்வைக்குத் தருதல், நூலின் பக்கங்களைக் கூட்டி பெரிய நூலாகக் காட்டல் இவை பதிப்பாளர்களின் நோக்கம். சித்தர்களின்

பாடல்களின் எண்ணிக்கையை வைத்து, அகத்தியர் 12000, போகர் 7000, தேரையர் 1000 என்று அழைத்துள்ளார்கள். உண்ணும் உணவுகளின் இயல்பு பற்றிப் பதார்த்த குண சிந்தாமணி, மூலிகைகள், உயிரினங்கள், தாதுக்கள் போன்றவற்றின் இயல்புகள் பற்றிக் குணபாடம் என்ற நூல்களும், நோயின் தன்மைகள் பற்றிய தலைப்பிட்ட நூடல்களும் குழந்தைகளுக்கு வரும் நோய்கள், அதன் தன்மைகள் பற்றிய நூல் பாலவாகடம், பிள்ளைப்பிணி வாகடம் எனவும் கண்களில் வரும் நோய்கள், அதற்கான மருத்துவம் நயன ரோக சாத்திரம் எனவும் அழைக்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டன. தமிழகத்தின் தென்மாவட்டமான குமரியில் வழங்குவது வர்மக்கலையாகும். இது பற்றிய ஏராளமான சுவடிகள் உள்ளன. இத்துறையில் வெளிவந்த நூல்கள் வெகுசிலவேயாகும். சித்தமருத்துவ செய்முறைகள் பெயராலும் நூல்கள் வந்துள்ளன. சான்றாக, அகத்தியர் குழம்பு, செந்தூரம் 300, திராவகம் 600 என்பனவற்றைக் கூற இயலும். உடல் அழியாமல் காக்கும் முறைகளைக் கூறுவது கற்ப நூல்கள் எனப்படும். இதில் திருவள்ளுவர் கற்பம், கொங்கணர் கற்பம், போகர் கற்பம் என்று தலைப்பிடப்பட்ட நூல்கள் உள்ளன.

இதையொத்தே, இரசவாதக் கலையைப் பற்றியும், முப்பு என்ற மருந்து செய்முறையைப் பற்றியும் ஏராளமான சித்தமருத்துவ நூல்கள் உள்ளன. 18ஆம் நூற்றாண்டில் மன்னர் சரபோசி II உதவியால் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் தலைமையில் ஏராளமான சித்தமருத்துவச் சுவடிகள் சேகரிக்கப்பட்டு, வகைப்படுத்தப்பட்டன. அவை யாவும் பின்னர் பதிப்பு செய்யப்பட்டுள்ளன. குன்மரோக சிகிச்சை, சுரரோக சிகிச்சை என்று நோய்களின் பெயரால் வெளிவந்துள்ளன. சித்தர்களின் பெயர்களிலும் தனித்தனியாக நூல்கள் வெளியாகி உள்ளன. அகத்தியர் இரணவாகடம், தேரையர் தனிப்பாடல்கள், போகர் வைத்தியம் முதலியன அவ்வகையின.

## சித்தர் இலக்கியத்தில் இசைக்குறிப்புகள்

சித்தமருத்துவ நூல்களில் இசை பற்றிய குறிப்புகள் உள்ளன. 1906இல் பதிப்பு செய்யப்பட்ட தேரையரின்

மருத்துவ பாரதத்தில்[31] பண், தாளம் பற்றியவை பல்லவி, அனுபல்லவி, சரணம், சந்தம் போன்றவை அடங்கியுள்ளன. துசரவந்தி, ஆரபி, நாட்டை, பியாக்கடை, சம்பை, நொண்டிச்சந்தம், வராளி, கல்யாணி, தோடி, சௌராட்டகம், கேதார கௌளம், தன்யாசி, கவுளிபந்து, மோக்னம், மத்திமாவதி, உசேனி, பைரவி, பந்துவராளி, சங்கராபரணம், முகாரி, ஆனந்தபைரவி, காபி, சோபனம் போன்ற இராகங்களும், அடதாளம், ஆதிதாளம், திரிபுடை தாளம், ரூபகம் என்ற தாள வகைகளும் இடம்பெற்றுள்ளன. இதுபோலவே வைத்திய சிரோ ரத்ன வைத்திய காண்டம் 1500[33], குறவஞ்சி, நொண்டிச்சந்தம், ஆனந்தக்களிப்பு, கும்மி, திருப்புகழ்ச்சந்தம், சந்தம் (பக்கம் 156இல் தந்தனத்தான - தந்தன என்ற ஆளத்தி உள்ளது). அகத்தியர் பள்ளு 200[34] என்ற நூலில் ஆளத்தி கையாளப்பட்டுள்ளது. இலக்க சௌமிய சாகரம் பள்ளுச்சந்தம், நொண்டிச்சிந்து என்பன கையாளப்பட்டன. இவர் பதிப்பித்த வைத்திய திருப்புகழில் ஆனந்தக்களிப்பு, சோபனம், குறவஞ்சி, நொண்டிச்சிந்து இடம்பெற்றுள்ளன. தாளமுடைய சிந்துப் பாடல்கள் முதன் முதலாகச் சித்தர் பாடல்களில் காணலாம். சிவவாக்கியர் பாடல்கள் யாவும் சந்தப் பாடல்கள் கொங்கணர் வாலைக் கும்மியில் அரையடிதோறும் சத்தி, தத்திமி, பத்தினி என எதுகை உள்ளது. அரையடி மோனை யமைவது எல்லாச் சிந்துகளிலும் காணப்படும் இயல்பு என்று சிந்துப்பாடல்களில் யாப்பிலக்கணம் என்ற நூலில் முனைவர் இரா. திருமுருகன் (பாவலர் பண்ணை, கம்யூடெக்ச்ட் தொழிலகம், புதுவை, 1993) விரிவாக விளக்குகின்றார்.

## நிகண்டுகள், அகராதிகள்

சித்தர் பாடல்களில் மறைபொருள்கள் பல இடங்களில் உள்ளன. அவற்றை அறிந்துகொண்டாலன்றி மருந்து செய்ய இயலாது. எனவே சித்தமருத்துவத்துறை நிகண்டுகள் தோன்றின. அகராதிகள் தோன்றியபின், நிகண்டுகளின் செல்வாக்கு சரியத் துவங்கியது. யூகி முனிவர் காலத்திலேயே சில நிகண்டுகள் மறைந்துபோயின. போகர்நிகண்டு, பஞ்சகாவிய நிகண்டு, சட்டமுனி நிகண்டு என்பன இன்றும் வழக்கில் உள்ளன. ஏனைய தமிழ் நிகண்டுகளில் இல்லாத அரிய சொற்களைக் கொண்டவைகளாக, இந்நிகண்டுகள்

விளங்குகின்றன. ஐந்து வகையான அகத்தியரின் நூல்களுக்குத் தேவையான பொருளைப் பஞ்ச காவிய நிகண்டின்[35] மூலம் அறியலாம். இது ஏனைய நிகண்டுகளிலிருந்து வேறுபட்டு, அந்தாதி முறையில் அமைந்துள்ளதால், அறிவியல் அடிப்படையில் பிரித்துப் பதிப்பிக்க இயலாத நிலையில் உள்ளது.

நிகண்டுகளின் பயன் குறைந்த பின்னர், அகராதிகள் எழுந்தன. இவற்றில் ஒன்றான வைத்திய அகராதியை[36] - சைதாபுரம் காசி விசுவநாத முதலியார் வெளியிட்டார். இவர் தன்னுடைய கருத்தை அழகுற வெளிப்படுத்தும் விதம் போற்றத் தக்கது. மூலபாடத்திலிருந்து மாறுபட்டு, இவர் தன் கருத்தை முகவுரையில் தருகின்றார். விச சன்னிக்கு எருக்கில், வேம்பில், கடுகில் பாதி எடுத்தரைத்து, கண்ணில் விடவேண்டும். இது மூலபாடம். இவர், தன் அடிக்குறிப்பில் இந்தப்பிரயோகம், அபாயகரமானதென்று நினைக்கிறேன். கூடலூரில் ஒருவனுக்கும், சிற்றூரில் ஒருவனுக்கும், எருக்கம் பாலில் அகத்தியர் குழம்பைக் கூட்டிக் கண்ணிலிட கண்கள் அவிந்து போயின. இது யான் நேரில் கண்டது என்று இவர் எச்சரிக்கை செய்கின்றார். இதிலிருந்து அகத்தியர் குழம்பை, எருக்கம் பாலில் கலந்து கண்களில் விடும் வழக்கம் இருந்து வந்ததும் அது கைவிடவேண்டிய ஒன்று என்பதையும், இவர் அகராதியின்வழி தெளிவாக்குகின்றார். இதுபோன்ற எச்சரிக்கைகளைத் தருவது, அக்காலத்தில் அரிய ஒன்றாகும்.

## மறு அச்சுப்பதிப்பு

பழைய பதிப்புக்களை, சில மாற்றங்களுடன் மறு அச்சு செய்துள்ளார்கள். வே. கந்தசாமி முதலியார் முன் பெயர்த்திருப்பதை என்ற சொல்லாட்சி மூலிகை அகராதி[37] யில் உள்ளது. பாலவாகடத் திரட்டு38 என்ற நூலில், வே. கந்தசாமி முதலியார் ஆராய்ச்சி செய்து முன்னச்சிட்ட பிரதிக்கிணங்க என்று வருகின்றது. இதில் பதிப்பாசிரியர் பெயர் இல்லை.

## உரையாசிரியர்கள்

பல சித்தமருத்துவ நூல்கள் பதவுரை பொழிப்புரையைப் பெற்றுள்ளன. இவற்றின் உதவியின்றி - யமகம் போன்ற நூல்களைப் படிக்க இயலாது. ஆயின் இவ்வுரையாசிரியர்கள் பற்றிய ஆய்வு இன்றளவும்

நடைபெறவில்லை. மூலநூலாசிரியர்களுக்கு இணையாக, உரையாசிரியர்களைப் போற்றுவது தமிழ் மரபு[39]. சித்தமருத்துவத்துறையில் தேரையர் தைல வர்க்கத்திற்கு உரை எழுதிய சுப்பிரமணியப் பண்டிதரின் உரையும், பல சித்தமருத்துவ நூல்களைப் பதிப்பித்தவரும், பன்மொழிகளை அறிந்தவருமாகிய பா. முகமது அப்துல்லா சாகிப்பின் உரையும் மிகவும் போற்றத் தக்கது. குறிப்பாக பா. முகமது அப்துல்லாவின் இலக்க சௌமிய சாகர நூலுக்கும் தேரையரின் யமக வெண்பா, தேரையர் மகாக்கரிசல் போன்றவைகளுக்கு அவரின் உரை *சிறப்பானதாகும். அண்மைக் காலத்தில் சட்டைமுனி வாதகாவியம் 1000[40] என்ற நூலுக்கு உரை திரு. வேலுச்சாமி பிள்ளை எழுதியுள்ளார். இவரது உரை, இரசவாதம் பற்றிய ஐயங்களைத் தீர்ப்பதாக அமைகின்றது. இதில் பல மருந்துகளைச் செய்யும் முறையை எடுத்துரைக்கின்றார். சான்றாக பக்கம் 17ஐ எடுத்துக் கொள்ளலாம். எச்சரிக்கை: வைப்புச்சவக்காரம், 86ஆவது பாட்டில் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் சுண்ணாம்பின் ஜல அளவு சொல்லவில்லை. எனவே போகர் 7000 I காண்டம் பாடல் 382இலும், போகர் நிகண்டு 1200இலும் வைப்புச் சவுக்காரம் செய்முறையில் அளவு, எடை பாகம் நன்றாய் சொல்லப்பட்டிருக்கிறது. இதுபோல, பக்கம் 134இல் அவருக்கு ஏற்பட்ட அனுபவங்கள் கூறப்பட்டுள்ளன. அமுரி, பூநீறு, சுண்ணாம்பு மூன்றையும் சேர்த்தபிறகு, கையால் கலக்கக் கூடாது. குச்சியால் கலக்கவும். கையால் கலக்கினால் பேதியாகும். மயக்கம் வரும். ஒருசமயம் கையால் கலக்க 10 தடவை பேதியாகி, மயக்கம் வந்துவிட்டது. 100 குடம் ஜலம் தலையில் விட்டும் எரிச்சலும், பேதியும் நிற்கவில்லை. பின் முட்டை வெள்ளைக் கருவைச், சாப்பிட, பூரா மயக்கமும் தீர்ந்துவிட்டது. இதிலிருந்து மருந்துகள் செய்யும்போது கடைப்பிடிக்க வேண்டிய முறைகளையும், நஞ்சு முறிவையும் அறியமுடிகின்றது.

## பழைய உரைநடை நூல்கள்

உரைநடையில், சிறிய அளவில் சித்தமருத்துவ நூல்கள் எழுதப்பட்டுள்ளன. சந்தான சிந்தாமணி திருவரங்கம் அப்பாசாமி பிள்ளை எழுதியது. 3 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு, விஷய சூசன அட்டவணையும் உள்ளது. கர்ப்ப

சாத்திரம். இது வி.ஐ. முனுசாமி முதலியார் இயற்றியது. டைமண்ட் அச்சுக்கூடத்தில் 1910இல் பதிப்பானது. முதல் பக்கத்தில் ஒப்பீனியன் என்று பலரின் கருத்துகள் இடம்பெற்றுள்ளன. முகவுரை, விஷய அட்டவணை தேவையான படங்கள் இருக்கின்றன. நோயில்லா வாழ்வு சிறுமணவூர் முனுசாமி முதலியார் எழுதியுள்ளது. 20ஆம் பதிப்பாக சுந்தர விலாச அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டு 1916இல் வெளியிடப்பட்டுள்ளது. இதில் நோயணுகாவிதி, மாதர் விதி, சிகிச்சா விதி, சிசு வளர்க்கும் விதி, தோட யந்திர விதி, கிரக யந்திர விதி, பத்திய விதி, முறிவு விதி, சர்ப்ப விதி, தூது விதி, சொப்பன விதி என்ற 11 பகுதிகள் உள்ளன. முன்பக்கத்தில் துதிப்பாடல், அதற்குள்ள பொருள் என்பனவும் விளம்பரங்களும் உள்ளன. இதன் விலை ரூ.1.00 என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இரசவாத சிந்தாமணி[41] இரசவாதம் பற்றிய கருத்துகளைத் தொகுத்துத் தரும் மேன்மையான நூல். இதில் அரபி, பார்சி போன்ற மொழிகளிலிருந்து மேற்கோள்கள், விளக்கங்களை அக்கீம் பா. முகமது அப்துல்லா சாகிப் தந்துள்ளார். இவரின் தாருட்ய விர்த்தி போதனியில் பக்கம் 661இல் குழித்தைலம் இறக்கும் இயந்திரம், குப்பிப்புடத் தைல இயந்திரம், சுடர்தைல இயந்திரம், தூபக்கலசம் என்பனவற்றின் படங்கள் இடம் பெறுகின்றன.

## மூலமும் உரைநடையும்

19ஆம் நூற்றாண்டில் பதிப்பிக்கப்பட்ட நூல்கள் பெரும்பாலும் உரையுடன் அல்லது சிறிய பொருள் குறிப்பைப் பாடல்களின் இறுதியில் பெற்றிருக்கும். இவ்வகை நூல்களில் ஒன்பது விஷ ஆருடம்[43] என்ற நூலை எடுத்துக்கொள்ளலாம். இதில் சித்தாரூடம் என்ற நூலும் அடங்கும். இதில் அட்டவணை, கடவுள்துதி, மருந்துசெய் முறைகள், மூலிகைகளின் பயன்கள், மந்திரங்கள், சக்கரங்கள் என்பன உள்ளன. நூல் முதல் பக்கத்தில் நஞ்சுள்ள உயிர்களின் படங்கள் காட்டப்படுகின்றன. அடுத்தபடியாக அகத்தியர் இரண வைத்தியம்[44] என்ற நூலைக் காணலாம். இதில் முகவுரை, விஷயசூசிகை, பாடல்கள், உரைக்குறிப்பு உள்ளன. அகத்தியர் புகை 16 என்பது தனியாக உள்ளது. அகத்தியர் புகை 16 என்பது அகத்தியர் சில்லறைக்கோவையில் உள்ள

ஒரு சிறு நூலாகும். இது இந்நூலில் இணைக்கப்பட்டுள்ளது. மேலும் பிளாஸ்திரிகள் செய்யும் முறைகள் பக்கம் 75இல் உள்ளன.

இரணம் அறுக்கக்கூடாத நேரம் (திதி) பற்றியும் செய்தியானது உள்ளது. இந்நூல் 100 பாடல்களைக் கொண்டது என்றும் ஆயின் 7 பாடல்களே ஆசிரியருக்கு கிடைத்துள்ளதாகவும், ஏனைய 3 பாடல்கள் கிடைக்கவில்லை எனவும், ஏனைய சுவடியை வைத்திருப்பவர்கள் மூன்று பாடல்களை வழங்குமாறு வேண்டுகோளும் காணப்படுகின்றது. இந்நூலாசிரியர் பதிப்புநெறியைச் செம்மையாகக் கையாண்ட விதம், பாராட்டுக்குரியது.

18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மூலமும் உரைநடையுமான சித்தமருத்துவ நூல்கள் தோன்றின. பாலவாகடத்திரட்டு[45] என்ற நூலைச் சான்றாகக் கொள்ளலாம். இதில் பதிப்பாசிரியரின் பெயரில்லை; வே. கந்தசாமி முதலியாரின் பதிப்பை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப்பட்டது. இவருக்குச் சுவடியானது கிடைக்க வாய்ப்பில்லாமல் இருந்திருக்கலாம். எனவே, கந்தசாமி முதலியாரின் நூலை அடிப்படையாக வைத்துப் பதிப்பித்துள்ளார் தன்வந்தரி, பிரமமுனி, அகத்தியர் போன்ற சித்தர்களின் பாடல்களைத் திரட்டி நூலாகச் செய்து உள்ளார். நூலச்சிட்டவர் கருத்து, கடவுள் வணக்கம், அகத்தியர் வணக்கம், கணம், மாந்தம், தோடம் என குழந்தைகளுக்குரிய நோய்களை வரிசைப்படுத்தியுள்ளார்.

## பதிப்புகளில் விளம்பரங்கள்

பழைய சித்தமருத்துவ நூல்களில் விளம்பரங்கள் இடம் பெற்றுள்ளன. அகத்தியர் இரண வைத்தியம்46 என்ற நூலில் கௌரி ஆயுர்வேத வைத்திய மந்திரத்தின் மருந்துகளின் விளம்பரம், ஆசிரியர் பதிப்பு செய்த தேரையர் கரிசல், அகத்தியர் கல்நண்டு சூத்திரம், யூகி கரிசல் 36, யூகி வாதாங்க தீட்சா விதி, யூகி வாத வைத்திய விளக்கம், மதி வெண்பா 100 என்பன இடம்பெறுகின்றன.

தேரையர் - தைல வர்க்கச் சுருக்கத்தைச் சென்னை தங்கசாலைத் தெரு, பாஸ்கரா அன் சன்ஸ், வைத்தியப் பேராசிரியர், பண்டிதர் சி.த. ஆறுமுகம்பிள்ளை அவர்களிடம்

பெற்றுக்கொள்ளலாம் என்ற விளம்பரம், தைல வர்க்க சுருக்கம்[47] என்ற நூலில் உள்ளது. விளம்பரங்கள் மூலம், பதிப்பு செய்யப்பட்ட நூல்கள் பற்றிய விவரங்களையும், ஏனைய செய்திகளையும் அறியலாம். இதன் மூலம் வரலாற்று ஆய்வாளர்களுக்கு நூல் வெளியான காலத்தில் புழக்கத்திலிருந்த சுவடிகள், நூல்கள் முதலான பல புதிய விவரங்கள் கிடைக்கும் வாய்ப்பு உண்டாகும்.

## ஏடு தந்தோர் பற்றிய குறிப்புகள்

மிகப் பெரும்பான்மையான சித்தமருத்துவ நூல்களில் சுவடியைப் பற்றிய குறிப்புகள் இருப்பதில்லை. எவ்வகையான முறையில் நூல் பதிப்பிக்கப்பட்டது என்ற வரலாறு, ஆய்வாளர்களுக்குக் கிடைப்பது அரியதாக உள்ளது. ஆயின் சில சித்தமருத்துவ நூல்களில் ஏடுகள் பற்றிய குறிப்புகள் உள்ளன. சித்தர்களின் வரலாறு கூறும் சதுரகிரி புராணம்[48] என்ற உரைநடை நூல் பதிப்பிக்க, மகாலிங்கசாமி கோவில் பூசகர் வாலசுந்தரசாமியாரிடத்திலும், தம்பிப்பட்டி சுந்தரப்பரதேசியாரிடத்திலும் கிடைத்துள்ள ஓலையை ஆதரவாகக் கொண்டது என்ற குறிப்பு காணப்படுகிறது. இதுபோன்றே இலக்கச் சௌமிய சாகரம்[49] என்ற நூலானது திருநெல்வேலி பேட்டை கா. காசிம் முகைதீன் இராவுத்தர் அவர்கள் பலவாறு ஏட்டுப் பிரதிகளில் சிதைந்து கிடந்தவைகளை ஒன்றாகத் திரட்டிய சுவடிகள் மூலமாக பதிப்பிக்கப்பட்டது என்று குறிப்பிடப்படுகின்றது.

## அண்மைக்காலச் சுவடிப்பதிப்புகள் - சில கருத்துகள்

சுவடிப்பதிப்புகளைச் சரசுவதி மகால் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சித்தமருத்துவ வாரியம், தமிழ்ப் பல்கலைக் கழகம், கீ.தி.சு. நூலகம், உ.வே.சா. நூலகம், சை.சி.நூ. கழகம் என்பன வெளியிடுகின்றன. பழைய சித்த மருத்துவ நூல்களைத் தாமரை நூலகம் வெளியிட்டு வருகின்றது.

சித்தமருத்துவம் தொடர்பான சுவடியைப் பற்றிய பயிற்சிப் பட்டறைகள், பயிலரங்குள், கருத்தரங்குகள் நடத்துதல், ஆண்டுதோறும் செய்யப்பெற வேண்டும். இவ்வாறு நடத்தினால் பதிப்புகள் மேலும் செம்மையுறும்.

தமிழ் அறிஞர்களும், சித்தமருத்துவத்தில் நல்ல அறிவு கொண்ட மருத்துவர்களும், தன்முனைப்பின்றி இணைந்து பணியாற்றினால் சித்தமருத்துவச் சுவடிகளைச் சிறந்த சுவடிப்பதிப்பு நூல்களாக - ஆய்வுப் பதிப்பு நூல்களாக வெளியிடும் பணி வெற்றியுடன் அமையும். வெளியிடும் சித்தமருத்துவ நூல்களில் சொல்லப்பட்ட மருந்து, மருத்துவ முறைகளைச் சித்த மருத்துவ வல்லுநர்களைக் கொண்டு ஆய்ந்து, அவற்றின் பயன்பாட்டினை உறுதிப்படுத்தி வெளியிடுதலும் சிறந்த ஒன்றாகும்.

*****

### அடிக்குறிப்புகள்

1. தமிழக வரலாறு, கே.கே. பிள்ளை, ப.402, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972.
2. அச்சும், பதிப்பும், சம்பந்தன், ப.168, தமிழர் பதிப்பகம், சென்னை, 1980.
3. மகாபலியின் மக்கள், வையவன், ப.308, தமிழரசி பதிப்பகம், பிரபு பிரிண்டிங் ஹவுஸ், 1982.
4. பண்டைத் தமிழரின் சாதனைகள், வே. தமையந்திரன், ப.22, மருதம் பதிப்பகம், மாருதி பிரஸ், 1992.
5. புதுவைப் புகழ்மணிகள், மன்னர் மன்னன், முத்து பதிப்பகம், மெய்யப்பன் பிரிண்டர்ஸ், சென்னை, 1979.
6. சித்தமருத்துவ நூலோதி, சே. பிரேமா, ப.56, த.ப.க. தஞ்சாவூர், 1988.
7. சிற்றிலக்கிய அகராதி, ந.வீ. செயராமன், நறுமலர் பதிப்பகம், நாதன் அன் கம்பெனி, 1983.
8. சித்தமருத்துவ நூலோதி, சே. பிரேமா, ப.127, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1988.
9. மேற்படி, ப.4.
10. மேற்படி, ப.75.
11. மேற்படி, ப.75.
12. யூகி கரிசல் 151, சி. இராசரத்தின முதலியார், அம்பா விலாச புத்தகசாலை, 1928.

13. அகத்தியர் வைத்திய காவியம், திருவாவடுதுறை சண்முக தேசிகர், சண்முக விலாச அச்சுக்கூடம், சென்னை, அடசய வரு. ஐப்பசி மாதம்.

14. அகத்தியர் வைத்திய காண்டம், பாண்டு வைப்பு 600, சண்முக முதலியார், விவேக விளக்க அச்சுக்கூடம், 1897.

15. வைத்தியாநுகூல சீவரட்சணி I பாகம், அங்கமுத்து முதலியார், சீ. லட்சுமிநாராயண அச்சுயந்திரசாலை, தக்கோலம், 1896.

16. வி.கோ. சூரியநாராயண சாத்திரியார், ந. சுப்பிரமணியன், ப.114, கபீர் அச்சகம், சென்னை, 1950.

17. தாருட்யவிர்த்தி போதனி, I பாகம், அக்கீம் பா. முகமது அப்துல்லா, யூனானி வைத்திய கலாநிதி அச்சுக்கூடம், சென்னை, 1900.

18. சந்தானசிந்தாமணி, அப்பாசாமிபிள்ளை, ப.336, ஞானரத்தினாகரன் அச்சுக்கூடம், திருச்சி, 1894, விலை ரூ.1.4.0.

19. சுகாதார சீவரட்சாமிர்தம், கே.எஸ். துரைசாமி பண்டிதர், அலெக்சாண்டரா அச்சுக்கூடம், குடந்தை, 1916.

20. மருத்துவ சாத்திரம், எம். இராதாகிருஷ்ணன், அம்பாசமுத்திரம், இராமகிருஷ்ணா அச்சுக்கூடம், 1923.

21. அகத்தியர் லட்சண காவியம், களத்தூர் வே. கந்தசாமி முதலியார், இலக்கணக் களஞ்சிய அச்சுக்கூடம், சென்னை, 1895.

22. நவரத்தின வைத்திய சிந்தாமணி 800, கருவூர் பண்டிதர் சி.எஸ். செங்கல்வராயன்.

23. ஒன்பது விஷ ஆரூடம், இராம. குருசாமிக்கோனார், ஸ்ரீ இராமச்சந்திர விலாசம், I பதிப்பு, மதுரை, 1922.

24. யூகி முனிவர் கரிசல் 151, சி. இராசரத்தின முதலியார் அம்பா விலாச புத்தகசாலை, 1928.

25. போகர் சரக்கு வைப்பு 800, மயிலம் சுப்பிரமணிய சுவாமிகள், ஸ்ரீ பத்மநாம விலாச அச்சுக்கூடம், 1908.

26. புலிப்பாணி வைத்தியம் 500, சிதம்பரம் பொன்னுச்சாமி முதலியார், வித்தியா வினோத அச்சுக்கூடம், 1897.

27. போகர் வைத்தியம் 700, மயிலம் சுப்பிரமணிய சுவாமிகள், மாதவ நிவாச அச்சுக்கூடம், சென்னை, 1889.

28. நவரத்தின சிந்தாமணி 800, கருவூர் பண்டிதர் சி.எஸ். செங்கல்வராயன்.

29. தேரையர் தைலவர்க்கச் சுருக்கம், சுப்பிரமணிய பண்டிதர், ஏசியாடிக் அச்சுக்கூடம், சென்னை, 1868.

30. அகத்தியர் சில்லறைக் கோவை, இரத்தினவேலு முதலியார், வாணி விலாச அச்சுக்கூடம், ஆதிபுரி, விலை 1.00 ரூ.1888.

31. தேரையர் மருத்துபாரதம், மரு.க.ச. முருகேச முதலியார், விசய விகடன் அச்சுக்கூடம், சென்னை, 1909.

32. வைத்திய சிரோரத்தின நடன காண்டம் 1500, அண்ணாவி புவனேஸ்வரி அச்சுக்கூடம், சென்னை, 1927.

33. அகத்தியர் பள்ளு 200, பழனி தண்டாயுதபாணி சுவாமி திருக்கோவில் வெளியீடு, ஆர். தியாகராசன், பாடல் 168, அன்பு செல்வி பதிப்பகம், 1975.

34. இலக்க சௌமிய சாகரம், அக்கீம் பா. முகமது அப்துல்லா சாகிப், யூனானி வைத்தியக் கலாநிதி அச்சகம், சென்னை, I பதிப்பு, 1907.

35. அகத்தியர், ஏமதத்துவம் என்ற பஞ்ச காவிய நிகண்டு 800, ஆறுமுக சுவாமிகள், பரப்பிரம்ம முத்திராக்ஷர சாலை, திருவெண்காடு, 1876.

36. வைத்திய அகராதி, சைதாபுரம் காசி விசுவநாத முதலியார், ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், 1871.

37. மூலிகை அகராதி, பெ. ஆறுமுக முதலியார், முரஹரி பிரஸ், சென்னை, 1924.

38. பாலவாகடத்திரட்டு, சுந்தர விலாச அச்சுக்கூடம், சென்னை, 1890.

39. உரை மரபுகள், இரா. மோகன், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1985.

40. சட்டைமுனி நாயனார் வாத காவியம் 1000, ஆர்.எம்.கே. வேலுச்சாமி பிள்ளை, ஆர்.எம்.கே. அச்சுக்கூடம், பழனி, 1935.

41. இரசவாத சிந்தாமணி, அக்கீம் பா. முகமது அப்துல்லா சாகிப், பழனி தண்டாயுதபாணி திருக்கோவில் வெளியீடு, II பதிப்பு, 1975.

42. தாருட்ய விர்த்தி போதனி II பாகம், அக்கீம் பா. முகமது அப்துல்லா சாகிப், யூனானி வைத்திய கலாநிதி அச்சுக்கூடம், சென்னை, 1901.

43. ஒன்பது விஷ ஆரூடம், இராம. குருசாமிக் கோனார், ஸ்ரீ இராமச்சந்திர விலாசம், மதுரை, 1922.

44. அகத்தியர் இரணவைத்தியம், வெ.ரா. சுந்தரம், கௌரி ஆயுர்வேத மந்திரம், இராயப்பேட்டை, சென்னை, 1921.

45. பாலவாகடத்திரட்டு, சுந்தர விலாச அச்சுக்கூடம், சென்னை, 1890.

46. அகத்தியர் இரண வைத்தியம், வெ.ரா. சுந்தரம், கௌரி ஆயுர்வேத மந்திரம், சென்னை, 1921.

47. தேரையர் தைலவர்க்கச் சுருக்கம், சுப்பிரமணியப் பண்டிதர், ஏசியாட்டிக் அச்சுக்கூடம், சென்னை, 1868.

48. சதுரகிரி தலபுராணம், முன்னுரை, II பதிப்பு, எஸ்.பி. இராமச்சந்திரன், எஸ்.ஆர். பிரிண்டர்ஸ், சென்னை, 1994.

49. இலக்க சௌமிய சாகரம் II பதிப்பு, எஸ்.பி. இராமச்சந்திரன், தாமரை நூலகம், எஸ்.ஆர். பிரிண்டர்ஸ், சென்னை, 1995.

*****

# 7. சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிப்பதிப்புகள்

திரு. ஆ.இரா. பாரதராஜா

## சுவடி நூலக வரலாறு

திரு. காலின் மெக்கன்ஸி ( கி.பி. 1754-1821 ), டாக்டர் லெய்டன் ( கி.பி. 1803-1811 ), திரு. சி.பி. பிரௌன் ( கி.பி. 1798-1837 ) ஆகிய மூவரும் தங்கள் சொந்த உழைப்பில் திரட்டிய சுவடிகளைக் கொண்டு கி.பி. 1869இல் சென்னையில் ஒரு நூலகம் தொடங்கப்பட்டது. அது 1870இல் மாநிலக் கல்லூரிக்கு மாற்றப்பட்டது. இச்சுவடிகளுக்கு, திரு. பிக்ஃபோர்டு என்பவர் முதன்முதலில் விளக்க அட்டவணை தயாரிக்கும் பொறுப்பேற்றார்; 1876இல் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டிடத்தில் தனி நூலகமாகவே தொடங்கப்பட்டது.

## மாற்றங்கள்

அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம் என்ற தனிப்பட்ட நூலகமாக அமைந்த பின்னர் மாநிலப் பொதுக் கல்வி இயக்குநர் ( Directorate of Public Instructions ) அவர்கள் மேற்பார்வையில் இயங்கிவந்தது. பொதுக்கல்வி இயக்ககம் ( D.P.I ) பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டபின்னர் கல்லூரிக் கல்வி இயக்குநர் மேற்பார்வையில் சிலகாலமும் பிறகு பள்ளிக்கல்வி இயக்குநர் மேற்பார்வையில் சிலகாலமும் இயங்கி வந்தது.

பின்பு பொது நூலக இயக்குநர் என்னும் பதவி தோற்றுவிக்கப்பட்ட பின்னர் இந்த நூலகம் பொது நூலக இயக்குநர் மேற்பார்வையில் சிறிது காலம் இயங்கி வந்தது. பிறகு மீண்டும் பள்ளிக்கல்வி இயக்குநர் மேற்பார்வையில் இயங்கும் வண்ணம் மாற்றப்பட்டது. இறுதியாக

தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் மேற்பார்வைக்கு மாற்றப்பட்டு தொல்பொருள் ஆய்வுத்துறையின்கீழ் தற்போது இயங்கி வருகிறது.

## பதிப்புத் தொடக்கம்

கி.பி. 1948ஆம் ஆண்டு மே திங்களில் தமிழ்நாடு அரசு (அப்போதைய சென்னை மாகாண அரசு) சுவடிப்பதிப்பு பற்றிய செயலில் ஈடுபட்டது. 1949-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் சுவடிப்பதிப்புக்கென அறிஞர்குழு ஒன்றினை நியமித்தது. திரு. இரா.பி. சேதுப்பிள்ளை, திரு. சி.எச். இராமச்சந்திர ரெட்டியார் ஆகியோர் உள்ளிட்ட இருபது பேரைக் கொண்ட குழு ஒன்றும் நியமிக்கப்பட்டது. அவர்களுள் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், மராத்தி, இசுலாம் ஆகிய மொழிகளில் தேர்ச்சி பெற்றவர்களைக் கொண்ட தனித்தனிக் குழுக்களும் நிறுவப்பட்டன. அக்குழுவின் துணையோடு சில சுவடிகள் தேர்வு செய்யப்பட்டு 1950 முதலே சுவடிப்பதிப்பு நூல்கள் வெளிவரத் தொடங்கின.

## நூலகத் தமிழ்ச் சுவடிகள்

சென்னை நகரில் எட்டு இடங்களிலும், பிற இடங்களில் மூன்று பல்கலைக் கழகங்கள், நான்கு கல்லூரிகள், பதிநான்கு மடங்கள், ஐந்து தனியார் நிறுவனங்கள் ஆகிய 34 நிறுவனங்களில் சுமார் 40,341 தமிழ்ச் சுவடிகள் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. இவற்றுள் சென்னை அரசினர் சுவடிகள் நூலகத்தில் மட்டுமே சுமார் 16,398 தமிழ்ச்சுவடிகள் உள்ளன. மேலே குறிப்பிடப்பட்ட 34 நிறுவனங்களில் இந்த நூலகம் மட்டுமே சுவடி நூலகம் என்ற சிறப்புப் பெயர் பெற்றுத் திகழ்கிறது.

மேலும் பல அரசு நிறுவனங்களில் சுவடிகள் பாதுகாக்கப்பட்டுப் பராமரிக்கப்பட்டு வருகின்றபோதிலும் இந்த நூலகம் மட்டுமே அரசினர் சுவடி நூலகம் என்ற அடைமொழியைப் பெற்றுத் திகழ்வது மற்றுமொரு சிறப்பாகும். இத்தகைய பல சிறப்புகளைப் பெற்ற இந்நூலகத்தின்கண் தமிழ்ச் சுவடிகள் மட்டுமன்றி சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், உருது, அராபி, பர்சியன்

போன்ற பிற பல மொழிகளிலுமாகச் சேர்ந்து, 71,180 சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இது தமிழ்நாட்டிலுள்ள - ஏன் இந்தியாவிலுள்ள சுவடி நூலகங்களில் உள்ள சுவடிகளைவிட மிக அதிகமான பெரிய சுவடி நூலகமாகும்.

## பதிப்பு விளக்கம்

இந்நூலகத்தின் முதற்பணியாகச் சுவடிகளுக்கான விளக்க அட்டவணைகள் தயாரிக்கப்பட்டுள்ளன. இப்பணி தமிழ்ச்சுவடிகளுக்கு மட்டுமின்றி அனைத்து மொழிச் சுவடிகளுக்கும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## விளக்க அட்டவணை (Discriptive-Catalogue)

(1) நூல் பெயர்
(2) நூலாசிரியர்
(3) ஆசிரியர் பெயர் நூலில் உள்ளதா? கருதப்பட்டதா?
(4) உரையாசிரியர் - காலம்
(5) எழுத்து
(6) இயற்றப்பட்ட காலம்
(7) எழுத்துத் தெளிவானதா?
(8) மொத்த ஏடுகள்
(9) பக்கத்துக்கு வரிகள் (சராசரி)
(10) ஒருவரியில் உள்ள எழுத்துகள் (சராசரி)
(11) நீள, அகல - அளவு
(12) முழுமை/குறை?
(13) சுவடித்தன்மை
(14) விடுபட்ட பகுதி
(15) சுவடி இருக்கும் இடம்
(16) சுவடி எண் (நூலக எண்)
(17) படியெடுத்ததாயின் - காலம்
(18) படியெடுத்தவர் பெயரும் ஊரும்
(19) இந்த நூலுக்கு வேறு சுவடி உண்டா?
(20) நடை (செய்யுள்/உரைநடை/செய்யுளும் உரைநடையும்)
(21) மொத்தப் பாடல்கள்/இயல்கள்/படங்கள்

என்னும் தலைப்புகளில் சுவடி பற்றிய அனைத்து

விவரங்களையும் தருகின்ற விளக்கங்கள் இவ்வட்டவணையில் இடம்பெறுதல் வேண்டும். இவற்றைத் தவிர,

## அச்சிடப்பட்ட விவரம்

(1) இச்சுவடி அச்சாகியுள்ளதா? (அச்சாகியிருந்தால் (அ) பதிப்பாசிரியர் (ஆ) வெளியீட்டாளர், இடம், காலம் (இ) முக்கியமான பதிப்புகள் (2) நூற்பொருள் (3) செய்திச்சுருக்கம் (4) சுவடியின் தொடக்க அடிகள் (5) முடிவு அடிகள் (6) இறுதி அமைப்பு (7) சுவடி பெற்ற இடம் (8) கொடுத்தவர் பெயர், முகவரி (9) சிறப்புச் செய்திகள் (இருப்பின்) என்பன போன்ற பிறபல செய்திகளும் - சுவடியைப் பற்றி முழுமையாக அறிவதற்கு இந்தச் சுவடி விளக்க அட்டவணைகள் பெருந்துணை புரிகின்றன.

அரசினர் சுவடி நூலகத் தமிழ்ச்சுவடிகளுக்கு உரிய விளக்க அட்டவணைகளாக 27 தொகுதிகள் இதுவரை வெளியிடப்பட்டுள்ளன. மேலே குறிப்பிடப்பட்டுள்ள விளக்க அட்டவணைகளுக்குரிய அனைத்துச் செய்திகளும் இந்நூலக அட்டவணைகளுள் முழுமையாக இடம்பெற்றிருக்குமேயானால் தமிழுலகிற்கும், தமிழ் ஆய்வாளர்களுக்கும் மேலும் பயன் உள்ளனவாக அமைந்திடும் என்பதில் ஐயம் இல்லை.

## பதிப்பின் மதிப்பு

அரசினர் சுவடி நூலகத்தில் மதிப்பிட முடியாத செல்வங்களாக விளங்கும் பல்லாயிரம் சுவடிகளைத் தக்க முறையில் பாதுகாத்துத் தினந்தோறும் பராமரித்து வருவது பாராட்டுதற்குரியனவாகும். இந்நூலகம் சுவடிப் பதிப்பைத் தொடக்கிய காலத்திலிருந்து பல ஆராய்ச்சியாளர்களையும், முனைவர்களையும் பதிப்பாசிரியர்களையும் உருவாக்கி உயர்த்தியுள்ளது மட்டுமின்றி, நூற்றுக்கணக்கான சுவடிகளைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளது இன்னும் பல பதிப்பாகி அச்சாகும் நிலையில் உள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பயின்ற, பயிலும் சுவடியியல் துறை பட்டய மாணவர்களுக்குப் பல சுவடிகளை ஈந்து பதிப்பிக்கச் செய்துள்ளது. அதன் காரணமாக சுவடியியல்

துறையில் சுமார் 55-க்கு மேற்பட்ட பட்டய ஆய்வேடுகளும், 20-க்கு மேற்பட்ட பதிப்பு நூல்களும் வெளிவந்துள்ளன.

### சுருங்கக் கூறல்

சுருங்கக் கூறல் என்ற அவைமரபின்படி சென்னை அரசினர் நூலகத்தின் பெருமைகளையும், பதிப்புகளின் முழு விளக்கங்களையும் இச்சிறு ஆய்வுக்கட்டுரையில் வழங்கிட இயலாமையால் அக்கடலுக்குள் மூழ்கி எடுத்த பதிப்பு முத்துக்களில் சிலவற்றைப் பற்றி இங்கு அறியத் தருகிறேன்.

### பதிப்பு நூல்களில் சில உபதேச காண்டம்: பகுதி 1, 2, 3 (1950)

இப்பதிப்பு நூல் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன், அஜமுகி போன்றோர்தம் முன்பின் வரலாறுகளையும், வள்ளியம்மையின் வரலாற்றையும் தெளிவுபடுத்துகிறது. இது கந்தபுராணத்தின் தொடர் நூலாய் உத்தரகந்தபுராணம் என்று கூறும் பெருமையைப் பெருகிறது.

திருநீறு, உருத்திராக்கம், சிவநாமம், சிவநோன்பு, சிவதருமம், சிவத்துரோகம், சிவபூசை, சிவபராக்கிரமம், சிவஞானம், சிவமூர்த்தம் ஆகியவற்றின் பண்புகளையும், பலாபலன்களையும் பல கதைகளின் மூலம் எளிமையாக விளக்கிக் கூறும் இந்நூல், மக்கள் நன்முறையில் வாழ வழிகாட்டி நல்ல கருத்துகளை உபதேசம் செய்வதால் இது உபதேச காண்டம் எனப் பெயர் பெற்றது.

இராமாயணம் என்னும் தமிழ்க்காப்பியம் கம்பரால் எழுதப்பெற்ற முதல் ஆறு காண்டங்களையும், ஒட்டக்கூத்தரால் இயற்றப்பெற்ற உத்தரகாண்டத்தையும் சேர்த்து ஏழு காண்டங்களாக விளங்கிவருவது போன்றது இந்த உபதேச காண்டம் எனக் கூறலாம். அதாவது கந்தபுராணம் ஆறு காண்டங்கள் உடையது. காஞ்சி கச்சியப்ப சிவாச்சாரியாரால் பாடப்பெற்றது. இந்த உபதேச காண்டம் கந்தபுராணத்தின் ஏழாங்காண்டமாகக் கச்சியப்பரின் மாணாக்கர் காஞ்சி கோனேரியப்ப நாவலர் அவர்களால் தமிழில் பாடப்பெற்றது. கோனேரியப்பரின் ஏழாங்காண்டச் செய்திகளடங்கிய வடமொழி நூலிலிருந்து ஞானவரோதய

பண்டாரம் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்ட நூலே உபதேச காண்டம் எனப் போற்றப்படுகிறது.

அரசினர் சுவடி நூலகச் சுவடி நூலாகிய உபதேச காண்டச் சுவடியை முழுமையாக ஆய்ந்து, அரிய நூலாசிரியர் வரலாற்றுடன் பதிப்பித்தளித்தவர் திரு. வ.சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள் ஆவார். ஆனால் நூலில் பதிப்பாசிரியர் என்ற இடத்தில், அப்போதைய அரசினர் சுவடி நூலகக் காப்பாட்சியராக பொறுப்பிலிருந்த திரு. T. சந்திரசேகரன் அவர்கள் பெயர் மட்டுமே குறிப்பிடப்பட்டுள்ளது. பாடல், குறிப்பு மற்றும் உரை என யாவும் அமைந்திருப்பதுடன், தமிழ் அறியாதாரும் நூலின் தன்மை பற்றி அறிந்துகொள்ள ஆங்கில முன்னுரையும் கொடுக்கப்பெற்றுள்ளமை இந்நூலகப் பதிப்புகளின் ஒரு தனிச் சிறப்பாகும்.

### ஆஸ்தான கோலாஹலம் (பதிப்பு: 1951)

இந்நூலின் பதிப்பாசிரியர் திருமலை ஸ்ரீசைலசர்மா. முன்னுரை, பதிப்புரை ஆகிய ஏதுமின்றி நூல் தொடங்கப் பெற்றுள்ளது.

எந்த வகைக் கணக்கிலும், குறுக்கமாக அளக்கப் பட்டது; எண்ணிக்கைப்பட்டது; உள்வட்டம், பிரவட்டம், முத்துகை, விகற்பக் கடைதலை, விலப்பூட்டு, சேவித்தான் கணக்கு, நிலத்தீர்வை, பணவரிசை, நெல் வரிசை கொள்ளுகிற வகை, விற்கிறவகை, நில அளவு, கால அளவு, குளவெட்டு... ஐவகை விகற்பம், எழுவகை விகற்பம், ஒன்பது தொகை விகற்பம்.... என்பன போன்ற வாழ்க்கையோடு இயைந்த கணக்கு வகைகளைச் சான்றுகளுடன் கூறும் நூல் இது.

*10 x 10 = குழி எத்தனை என்றால் 100 என்ப. அதற்கு ஸ்தானம் - அதாவது - 10க்கு ஸ்தானம் - 2. மற்றைய பத்துக்கு ஸ்தானம் - 2. ஆகமொத்த ஸ்தானம் = 4. இதில் ஒன்று தள்ளி (குறைந்து) நின்ற ஸ்தானம் - 3. ஆகையால் நூற்றுக்கு ஸ்தானம் - 3 என்க.*

*100 x 100 குழி எத்தனை எனில் - 1000. இதற்கு ஸ்தான விவரம் - 1,10,100. - ஆக ஸ்தானம்-3. ஆக, 3+3=6. ஆறுக்கு 1 - தள்ளி நின்றால் ஸ்தானம் - 5. ஒன்று முதல் 5 - மட்டும் நடத்த 10,000 - என்பது விடை.*

இதுபோன்ற பலவகை எண்களின் பெருக்கல், வகுத்தல் கணக்குகளுக்கு வழிமுறைகளைத் தொடக்கத்தில் தொகுத்துத் தருகிறது இந்நூல்.

ஒருநாளைக்குக் கூலி ஒரு விராகனாக, எத்தனை நாளைக்குக் கூலி கொடுக்க வேண்டுமோ அதற்கேற்ற கூலியைக் கணக்கிட்டுத் தரும் முறைகள் பலவும் எளிமையாக அறிதற்கான வழிகள் எடுத்துக்காட்டுகளுடன் தரப்படுகின்றன. இந்த முறையில் மேலே குறிப்பிட்டபடி நில அளவை, பணம், நெல் கொள்முதலான அளவை, தீர்வை முதலியவற்றை அறியும் வாழ்க்கைக் கணக்குகள் பல இந்நூலில் அடங்கியுள்ளன.

## வரலாற்று நூல்கள்

### சோழன்பூர்வ பட்டையம் (பதிப்பு: 1950)

பதிப்பித்தவர்: T. சந்திரசேகரன்
அரசினர் சுவடி நூலகக் காப்பாட்சியர்.

இந்நூல் ஆங்கிலக் குறிப்புகளுடனும் மற்றும் வரைபடம் (MAP) கொண்டதாயும் அமைந்துள்ளது. இதிலே நாட்டுப்புறக் கதைகள், பழக்கவழக்கங்கள் யாவும் அடங்கியுள்ளன. பார்ப்பதற்குக் கட்டுக்கதைகள் போல் இருப்பினும் படித்துப் பயன்பெறத்தக்க கருத்துகள் பல இதனுள் அடங்கியுள்ளன.

### வசு சரித்திரம் (பதிப்பு: 1952)

ஆசிரியர்: தொண்டை மாந்துறை அம்பலத்தாடும் ஐயன்.
பதிப்பாசிரியர்: T. சந்திரசேகரன்

இந்நூல். உபரிசரவசு என்ற சிறப்புப் பெயர்பெற்ற சேதிநாட்டு மன்னனது வரலாற்றைக் கூறுகிறது. சுவையான பாடல் வடிவம் பெற்று அமைந்துள்ளது. முன்னுரை ஆங்கிலம்-தமிழ் இரண்டிலும் தரப்பட்டுள்ளது.

### கர்நாடக ராஜாக்கள் சவிஸ்தார சரித்திரம்

பதிப்பாசிரியர்: T. சந்திரசேகரன்

இந்நூல் முன்னுரை ஆங்கிலத்திலும், தமிழிலும் அமைந்துள்ளது. இருபது பகுதிகளாக - அரசர்களின்

வரலாறுகளைத் தொகுத்துத் தருகிறது. இது கர்நாடகத்தின் பண்டைய வரலாற்றை நம் கண்முன் நிறுத்துகிறது. எப்படியெனில் (1) வைணவமும் ராமானுஜரும் (2) செஞ்சியின் வரலாறு (3) துப்பாக்கிக் கிருஷ்ணப்ப நாய்க்கன், எம்பிரான் சதகம் (4) முஸ்லீம்களின் வருகை (5) நவாப் மீரகமிருத்திகான் (6) மீட்(ண்)டும் முஸ்லீம் வெற்றி (7) தேசிங்கின் இறுதியும் ஆர்க்காட்டு நவாபின் திட்டங்களும் (8) கர்நாடகத்தில் அரசியல் நிகழ்ச்சிகள் (9) நவாப் அநவர்த்திகான் (10) நவாப் அநாசர்சங் (11) நவாப் இதாயத்து மொகதீன் (12) வட இந்தியாவில் மராட்டியர்கள் (13) சந்தாசாயபும் முகம்மதலியும் (14) முகம்மது அலியும் கர்நாடக நிகழ்ச்சிகளும் (15) நவாப் முகம்மதலிகான் (16) ஐதரலியின் சூழ்ச்சிகள் (17) திப்புசுல்தானும் கர்நாடகமும் (18) நவாப் வாலாஜாபாதர் (19) பூர்ணையரும் தொண்டியாவும் (20) நவாப் அஸமத்தெளலா எனப் பகுத்துப் பண்டைய வரலாற்றைத் தெளிவுபடுத்துகிறது இவ்வரலாற்று நூல்.

## கேரள தேச வரலாறு (பதிப்பு: 1960)

பதிப்பாசிரியர்: T. சந்திரசேகரன்

இந்நூல் மூலப்பிரதியில் உள்ளவாறே படியெடுக்கப் பெற்றுள்ளது. இது விளங்கும் முறையில் இல்லை. பலர் வாயிலாகக் கூறப்பெற்ற செய்திகளின் தொகுப்பாக இது அமைந்துள்ளது. அக்காலத்திய மலையாள நாட்டு நடைமுறை, அரசாட்சி போன்றவற்றை உணரலாம்.

கலியுகம் தொடங்கி 3,446-ஆம் ஆண்டு குலசேகரப் பெருமான் என்னும் அரசர் திவஞ்சைக்களம் எனும் தலத்தை அமைத்தார். இவர் வைணவ மதத்தைச் சார்ந்தவர். இவர் தாம் ஆண்டுவந்த தேசத்தைப் 18 பகுதிகளாகப் பிரித்து 18 சிற்றரசர்களிடம் ஆட்சிப்பொறுப்பைத் தமது இறுதிக் காலத்தில் ஒப்படைத்தார். காரணம் பிறநாட்டார் படையெடுத்தால் தமது நாட்டிற்குப் பாதிப்பு வராது என்ற நோக்கத்தோடு ஆட்சிப் பொறுப்பைப் பகிர்ந்தளித்ததாக இந்நூற் செய்தி கூறுகிறது.

## ஆனந்தரங்கன் கோவை: ( பதிப்பு: 1955 )

பதிப்பாசிரியர் ந. சுப்பிரமணியன்

இந்நூலின் முகவுரையுள் கோவை இலக்கியம் பற்றிய அரிய ஆய்வுரை இடம்பெற்றுள்ளது. புதுவை, ஆனந்தரங்கம் பிள்ளை என்னும் வள்ளலைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு 400 கட்டளைக் கலித்துறைப் பாடல்களால் இயற்றப்பெற்றுள்ளது.

ஆனந்தரங்கன் 30.3.1709இல் பெரம்பூரில் பிறந்தவர். 1716இல் பெற்றோரோடு புதுவைக்குச் சென்றார். 1747 முதல் பிரஞ்சு வணிகத்தில் ஈடுபட்டார். இவரது அறிவாலும், ஆற்றலாலும் பிரஞ்சுக்காரர்களின் நன்மதிப்பைப் பெற்று பிரஞ்சு வியாபாரத்தின் தலைவரானார். இதனால் சிற்றரசர்கள் பலர் அவருடைய நட்பை நாடினர்.

டியூப்ளேக்ஸ் என்பவர் கவர்னராயிருந்த காலம் முழுவதும் ஆனந்தரங்கம் பிள்ளையின் ஆட்சியென்றே போற்றினர். அந்த அளவிற்குக் கவர்னரிடம் நன்மதிப்புப் பெற்று மக்களுக்கு நன்மைகள் செய்து வந்தார். 1736 முதல் தாம் இறக்கும் வரை, முக்கியமான செய்திகளை நாட்குறிப்பேட்டில் குறித்துவந்தார். டைரி - தமிழில் எளிய நடையில் இவரால் எழுதப்பட்டது.

இவர்தம் கொடைத்திறம் நூலுள் இடம்பெறுகிறது. இந்நூல் கோவை இலக்கியமே ஆயினும், ஆனந்தரங்கன் நாள்தோறும் செய்துவந்த கொடைகளின் தொகுப்பான ஒரு வரலாற்று நூலேயாகும். இவருக்குக் கிடைத்த பட்டங்கள், பரிசுப்பொருட்கள், பாராட்டுகள் அனைத்தும் இந்நூலுள் இடம்பெறுகிறது. இவருடைய அரசியல் வாழ்வு முழுமையும் இந்நூலுள் இடம்பெற்றுள்ளது.

## கப்பற்கோவை: ( பதிப்பு: 1958 )

பதிப்பாசிரியர் திரு. T. சந்திரசேகரன்

இந்நூல் பாண்டி மண்டலத்தில் உள்ள புதுக்கோட்டையில் கப்பலூர், துவரங்குறிச்சி ஆகிய பகுதிகளை ஆண்டுவந்த குறுநில மன்னன் கருமாணிக்கன்

என்பவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அவரது பெருமை பேசப்படுகிறது.

300 ஆண்டுகளுக்கு முன்னர் திருவாரூர் ஸ்ரீவைத்தியநாத தேசிகரின், குட்டித் தொல்காப்பியம் என்றழைக்கப்படும் இலக்கண விளக்கம் அகத்திணையியலில், கப்பற்கோவை நூலிலிருந்து 91, 106, 131, 134, 137, 142, 146, 172 ஆகிய எண் கொண்ட எட்டுப்பாடல்கள் எடுத்தாளப் பெற்றுள்ளன. இதிலிருந்தே கப்பற்கோவை நூலின் பெருமை புலனாகும்.

### கப்பல் சாத்திரம்: (பதிப்பு: 1950)

பதிப்பாசிரியர் திரு. T. சந்திரசேகரன்

இந்நூலின் முகவுரை ஆங்கிலம், தமிழ் ஆகிய இரண்டு மொழிகளிலும் எழுதப்பட்டுள்ளது.

சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட சிதைந்த சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பட்டது. வீடு கட்டுவதற்கு, மனையடி சாஸ்திர நூல்களில் கூறப்படுவது போன்று இந்நூலில் கப்பல் கட்டும்போது எந்த அளவிற்கு நீளம், அகலம், உயரம் இருக்க வேண்டும் என்பது கூறப் பட்டுள்ளது. நீள, அகல, உயரம் குறிப்பிட்ட அளவைவிடக் குறைந்தாலோ, கூடினாலோ அதனால் ஏற்படும் தீமைகள் கூறப்பட்டுள்ளது. மேலும் எந்த மரத்தால் கட்டப்பட வேண்டும், கயிறு எப்படி இருக்க வேண்டும். அதன் முழம் எவ்வளவு இருக்க வேண்டும் என்பன போன்ற பல சாஸ்திரங்கள் கூறப்பட்டுள்ளன. நீளத்தில் சிறந்த மரக்கலம் ‘தீர்கா’ எனவும் அகல, நீள, உயரத்தில் சிறந்த மரக்கலம் ‘உன்னதா’ எனவும், பெயரிட்டு அழைக்கப்படுகிறது. இதிலிருந்து பழந்தமிழறின் தொழில் நுணுக்கமும், சாஸ்திர அறிவும் தெளிவாகப் புலனாகும்.

### மகாபுராண அம்மானை: (பதிப்பு: 1956)

பதிப்பாசிரியர்: திரு. தெ.பொ. மீனாட்சிசுந்தரம்.

இந்நூல் 1412 விருத்தப்பாக்களால் அதிவீர ராமபாண்டியரால் இயற்றப்பெற்றது (வரதுங்க பாண்டியன்

இயற்றியது எனவுங் கூறுவர்). மகாபுராணம் என்னும் பழைய நூலை அடிப்படையாகக் கொண்டு புராணப் பிரசங்கம் செய்யும் முறையில் மக்களுக்கு எடுத்துக் கூறுவதற்காக அம்மானை நடையில் எழுதப்பட்டது. எனவே இந்நூல் மகாபுராண அம்மான்னை எனப்பட்டது. இந்நூலின் ஆசிரியர் வீரபத்திரனார் என்பவராவார்.

மாகஸ்நானம் என்பதை அடிப்படையாகக் கொண்டது இப்புராணம். தை அமாவாசையிலிருந்து மாசி அமாவாசை வரையில் மாகஸ்நானம் கொண்டாடப்படும். தைந்நீராடல், மார்கழிப்பாவை நோன்பு போன்ற சில குறிக்கோள்களோடு நீராடிவரும் ஒருவகை நோன்பாக மாகஸ்நானம் கருதப்படுகிறது. அம்மை வடிவினை அமைத்து மகளிர் நீராடுவதே இப்புராணத்தின் அடிப்படை வழக்காறு ஆகிறது.

இந்நூலின்படி மாகஸ்நானம் என்பது கார்த்திகை, வளர்பிறை ஏகாதசியிலிருந்து மார்கழி வளர்பிறை ஏகாதசி வரை நீராடுவது தேவ மாகஸ்நானம்; மார்கழி ஏகாதசி முதல் தை ஏகாதசி வரை நீராடுவது ரிஷி மாகஸ்நானம்; தை-மாசி பிதுர், மாகஸ்நானம். இம்மூன்றின் பெருமைகள், அவற்றின் பலன்களைக் கூறுவதோடு ஏகாதசி, கார்த்திகை, திருவாதிரை, தைப்பொங்கல் நாள், தைப்பூசம், சிவராத்திரி, மாசிமகம் ஆகியவற்றின் பெருமைகளுக்கும் பலாபலன்களுக்கும் பலதிறக் கதைகளைச் சான்றுகளாகக் கூறுகிறது.

திவ்பதிராசன் வேட்டை, விஞ்சையன்கதை, மிருகசிங்கன் கதை, பெண்கள் கதை, சுவாதத்தை உயிர்பெற்ற கதை; சம்பு கதை போன்ற முப்பது கதைகளின் மூலம் ஸ்நானப் பலன்கள் விளக்கப்படுகின்றன.

பதிப்பாசிரியர் தெ.பொ.மீ. அவர்களின் நூலாய் மகாபுராண அம்மானை தமிழிலும் ஆங்கிலத்திலுமாக இடம்பெறுகிறது. அம்மானை நடைமுறையில் காணப்பெறும் நடை, முழுமையாக மொழியியல் நோக்கில் ஆய்வு செய்யப்பட்டு விளக்கம் பெறுகிறது. இது ஆய்வாளர்களுக்கும் பயன்படும் முன் மாதிரியான ஆய்வுரை நூலாகும்.

### பிள்ளைத்தமிழ்

கடவுளரையோ, மக்களிற் சிறந்தோரையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, அவரைக் குழந்தையாக உருவகித்து, குழந்தைக்குரிய பருவச் செயல்களை அவர்மேல் ஏற்றிப் பாடுவது பிள்ளைத்தமிழாகும். பிள்ளைத்தமிழ் பத்துப் பருவங்களையும், பருவத்திற்குப் பத்துப் பாக்களாக நூறு பாக்களையும் பெற்று விளங்கும். இப்பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இருவகைப்படும்.

### பருவ வகைகள்

(1) காப்பு (2) செங்கீரை (3) தால் (4) சப்பாணி (5) முத்தம் (6) வருகை (அ) வாரல் (7) அம்புலி என்னும் ஏழு பருவங்களும் இருபால் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவானதாகும். (8) சிற்றில் (9) சிறுதேர் (10) சிறுபறை என்ற இறுதி மூன்றும் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் (8) அம்மானை (9) நீராடல் (10) ஊசல் என்ற இறுதி மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் உரியனவாம். இது இனிமையும், மென்மையும் கொண்ட இலக்கியமாகும்.

### பிள்ளைத்தமிழ்க் கொத்து: (பதிப்பு: 1956)

பதிப்பாசிரியர்: T. சந்திரசேகரன் மற்றும் நூலக அலுவலர்கள். முதல் பகுதி: இந்நூல், ஆங்கிலம் மற்றும் தமிழ் முன்னுரையுடன் தொடங்கப்பட்டுள்ளது.

பிள்ளைச் செல்வத்தின் பெருமையைத் தொல்காப்பியம்,

> குழவி மருங்கினும் கிளவதாகும் - என்றும், திருக்குறள்,
> குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள்
> மழலைச்சொல் கேளா தவர்

என்றும், புறநானூறு,

> படைப்புபல படைத்துப் பலரோடு உண்ணும்
> உடைப்பெருஞ் செல்வர் ஆயினும்
> இடைப்படக் குறுகுறுநடந்து சிறுகைநீட்டி

இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம்வாழும் நாளே

என்றும் பிள்ளைச் செல்வத்தின் பெருமைகளைப் பறைசாற்றுகின்றன. அப்படிப்பட்ட பிள்ளையாகப் பாவித்துப் பாடப்பெற்றவற்றுள், பத்துப் பருவமும் ஆசிரியப் பாவால் பாடப்பெற்றுள்ள, பெரியாழ்வார் இயற்றிய பிள்ளைக் கவியாகும். இது மிகப் பழைமை வாய்ந்ததாகும். பெரியாழ்வார் கி.பி. 769-770க்கு முன்பிருந்தவர் என வரலாற்றாசிரியர் கூறுகின்றனர். மேலும்,

பகழிக்கூத்தர் - திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்

அந்தகக்கவிராயர் - சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

வேப்பந்தூரார் - அழகர் பிள்ளைத்தமிழ்

என இவர்கள் இயற்றியுள்ள நூல்கள் மிகப் பழைமை வாய்ந்தவை.

இவ்வாறு பிள்ளைத்தமிழ்க் கொத்து முதல் பகுதியில் பல ஆய்வுக்குரிய செய்திகள் தரப்பட்டுள்ளன. மேலும் அதனுள் அடங்கியுள்ள பிள்ளைத்தமிழ் நூல்கள்,

| | | பக்கம் |
|---|---|---|
| (1) | அரும்பாத்தை வினாயகர் பிள்ளைத்தமிழ் | 1-88 |
| (2) | வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழ் | 89-162 |
| (3) | இராகவர் பிள்ளைத்தமிழ் | 163-246 |
| (4) | தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ் | 247-348 |
| (5) | புதுவை-திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ் | 349-440 |
| (6) | தூத்துக்குடி-பாகப்பிராயாவம்மை பிள்ளைத் தமிழ் | 441-533 |
| (7) | சிவானந்தன் பிள்ளைத்தமிழ் | 534-630 |
| (அ) | செய்யுள் குறிப்பகராதி | 631-640 |
| (ஆ) | பிழை திருத்தங்கள் | 641-642 |
| (இ) | பாடரூபபேதங்கள் | 643-647 |
| (ஈ) | கருதும் சில பாடங்கள் (சிலசொற்கள்) | 648- |

## பிள்ளைத்தமிழ்க் கொத்து: ( பதிப்பு: 1959 )

இது இரண்டாம் பகுதி. இதுவும் முதற்பகுதியைப் போன்றே குறிப்புரையுடன் தொடங்கப்பட்டுள்ளது. இந்நூலில் ஒன்பது பிள்ளைத்தமிழ் நூல்கள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. அந்நூல்கள்,

(1) மகர நெடுங்குழைக்காதர் பிள்ளைத்தமிழ்
(2) திருவெண்ணெய்நல்லூர் வைகுந்தநாதர் பிள்ளைத்தமிழ்
(3) மணவை திருவேங்கடமுடையான் பிள்ளைத் தமிழ்
(4) இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ்
(5) யோகி சாத்தையா பிள்ளைத்தமிழ்
(6) முத்து வீரப்பசுவாமி பிள்ளைத்தமிழ்
(7) வேங்கடேசுவரன் பிள்ளைத்தமிழ்
(8) புதுவை அருணாசலம் பிள்ளைத்தமிழ்
(9) முருகப்பத் தேவர் பிள்ளைத்தமிழ்

மேற்கண்ட நூல்களுள் 1, 2, 4 ஆகிய நூல்களே முற்றுப்பெற்றவையாக உள்ளன. மற்ற 3, 5, 6, 7, 8, 9 ஆகிய ஆறு நூல்களும் முற்றுப்பெறாதவையாக மூலச்சுவடிகள் வழியே பதிப்பிக்கப்பெற்றுள்ளன.

### மருத்துவம்

பண்டைத்தமிழரின் அறிவுக்கூர்மையும், மருத்துவ நுணுக்கமும் வியத்தற்குரியது. எண்ணிலடங்கா மருத்துவச் சுவடிகள் அழிந்துவிட்ட போதிலும், பல்வேறு மையங்களில் பாதுகாக்கப்பட்டு வருகின்ற மருத்துவச் சுவடிகள் பதிப்பிக்கப்படாமலேயே சிறைப்பட்டுக் கிடக்கின்றன. அவற்றிற்கெல்லாம் சுதந்திரம் கொடுத்தால் பல கொடிய நோய்களுக்கும் தீர்வு காண வழி ஏற்படலாம். இம்மாதிரியான சுவடிகளைப் பதிப்பிக்கச் செய்விப்பதில் அரசு தீவிரக் கவனம் செலுத்துவது அவசியமாகும்.

அரசினர் சுவடி நூலகத்தின் சார்பில் பல அரிய மருத்துவச் சுவடிகள் பதிப்பிக்கப்பெற்றுள்ளன. அவற்றுள் சிலவற்றைப் பற்றி இங்கே காண்பதோடு, அதனுள்

கூறப்பட்டுள்ள மருத்துவத்தின் மகத்துவத்தைப் பற்றிச் சிலவற்றை அறிவோம்.

**வைத்தியக்களஞ்சியம் : (பதிப்பு: 1951)**

பதிப்பாசிரியர் திரு. T. சந்திரசேகரன்

இந்நூலின் முதற்பாகம் - விஷய அட்டவணை.

சரக்குவைப்பு - (அதாவது வைத்தியம் செய்முறை கூறப்பட்டுள்ளது. இரண்டாவது பாகம் - மருந்து செய்முறை கூறப்பட்டுள்ளது சான்றாக)

**மருந்தும், மருத்துவமும்:**

செத்தவர்களை எழுப்ப: (பக்கம் - 31)

நேர்வாளம், மிளகு, இரதம், மகிழம் வித்து, பேய்ப்பீர்க்கு வித்து, தேவதாரு - இவற்றை ஓர் அளவாகக் கொண்டு - எலுமிச்சம்பழச் சாற்றில் ஏழுநாள் ஊறப்போட்டு, அரைத்து உண்டையாக (உருண்டையாக) உலர்த்திக் கொள்ள. இது எல்லா நஞ்சுகளுக்கும், உயிர் போகும்படி செய்யும் சன்னி முதலியவற்றிற்கும் ஒரு உண்டை எருக்கிலைச் சாற்றிலரைத்துக் கையான்தகரைச் சாற்றில் கலக்கிக் காதிலிடவும். செத்தவனும் பிழைப்பான்.

இல்லையேல் ஒரு உண்டையைச் சிறு நீரிலுரைத்து, இரண்டு கண்களிலுமிட்டுத் துணியை நீரில் நனைத்து மூன்று நாழிகை மூடி வைக்கவும். எழுந்திருப்பான். இது கைகண்டது.

**வேறு:** (வேறு வைத்தியம்)

கீரியின் நாக்கு, மயில் நாக்கு, கெருடன் நாக்கு இவை மூன்றையும் ஒன்றாக உலற்றி (உலர்த்தி) எலுமிச்சைச் சாற்றில் அரைத்து, அதனைக் கடைவாயில் தடவ, பாம்பு முதலியவற்றின் நஞ்சு போம். இது கை கண்டது.

சில மருத்துவச் செய்திகள் சில இடங்களில் பாடல் வடிவில் இடம்பெற்றுள்ளன. சான்றாக ஒரு பாடல்,

**இருமலுக்கு:**

நெல்லி திப்பிலி நெல்பொரி சர்க்கரை
நல்ல தேனில் நறுநெய்யிலீந்திடில்

இல்லையில்லை இருமலு மீளையும்
தில்லையம்பல நாதர் தனாணையே

நீடுமா தளை நெல்பொரி சர்க்கரை
தேடுந் திப்பிலி தேனில் குழைத்திடில்
பீடையீளையும் பெருவிக்கல் சத்தியும்
ஓடி ஓடி ஒளிந்திடு முண்மையே

இவ்வாறாக வைத்தியக்களஞ்சியம் எனும் நூலில் பல அரிய மருத்துவக் குறிப்புகளும், மருந்துசெய் முறைகளும், நோய்தீர்க்கும் வழிவகைகளும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

மேலே கண்ட நூற் செய்தி பொதுவான மருத்துவக் குறிப்பு நூல் ஆகும். குழந்தைகளுக்கென ஒரு தனி மருத்துவ நூலே இயற்றப்பட்டுள்ளது. பல குழந்தைப் பிணி தீர்க்கும் நூல்கள் இருப்பினும் இது ஒரு நல்ல வைத்திய வழிகாட்டி நூலாகும். அது பற்றிய செய்தி,

## பிள்ளைப் பிணி வாகடம்: (பதிப்பு: 1952)

பதிப்பாசிரியர் திரு. T. சந்திரசேகரன்

வாகடம் என்ற சொல் வாக்படன் என்ற சொல்லின் திரிபாகும். கி.பி. 50-ஆம் நூற்றாண்டில் ஆசாரிய வாக்படன் என்ற பிரபல நூல் ஆசிரியர் இருந்தார். அவர் வைத்திய முறைகளில் பல புதிய முறைகளைப் புகுத்திப் பல சீர்திருத்தங்களைச் செய்தார். பண்டைய வைத்தியாசாரியார்கள் முழுமையான வைத்திய சாஸ்திரத்தை வாக்படமுறை அல்லது பாவிறடமுறை என வழங்கினர். அதுவே பிற்காலத்தில் பாவிறடம் அல்லது வாகடம் என வழங்கலாயிற்று. பின்னர் அச்சொல்லே வைத்தியம் எனக் குறிக்கப்பட்டது. பின்னர் ஔஷதவாகடம், குணவாகடம், பாலவாகடம் எனப்பல்வேறு வைத்தியப் பிரிவு நூல்களுக்குப் பெயரிடலாயினர்.

பிள்ளைப்பிணி வாகடம் எனும் இந்நூலுக்கு எம். துரைசாமி ஐயங்கார் முன்னுரை எழுதியுள்ளார். பிள்ளைகளுக்குரிய அனைத்துப் பிணிகளுக்கும் வைத்தியக் குறிப்புகளும், மருந்துகளும் கூறப்பட்டுள்ளன. மூலிகை மருந்து வைத்தியம்,

மந்திர வைத்தியம், பரிகாரம் செய்தல், உணவு முறைகள் யாவும் கூறப்பட்டுள்ளன. சில இடங்களில் மந்திரக் குறியீடுகளும் போட்டுக் காட்டப்பட்டுள்ளன. ஆண் பிள்ளைகளுக்கு 12 மாத மருத்துவமும், பெண்பிள்ளைகளுக்கு 10 மாத மருத்துவமும் கூறப்பட்டுள்ளது. இச்செய்திகள் பாடல் வடிவிலும் உரைவடிவிலும் உள்ளன.

## அரசினர் சுவடி நூலகத்தின் இன்றைய நிலை:

இந்நூலகத்தின் காப்பாட்சியராக டாக்டர் எஸ். சௌந்திரபாண்டியன் பணியாற்றி வருகிறார். இவர் பணிப் பொறுப்பேற்ற பிறகு சுமார் 15 ஆண்டுகளாக வெளிவராமல் இருந்த பருவ இதழ் ( BULLETIN ) வெளிவரத் தொடங்கியுள்ளது. தற்போது பன்மொழிப் பருவ இதழாக ஆண்டுக்கொருமுறை சுவடிப்பதிப்புகளடங்கிய செய்திகளைத் தாங்கி வெளிவருகிறது.

தமிழ்மொழி வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறைச் செயலர்களாகப் பணியாற்றிய திரு. எஸ்.பி. இளங்கோவன், ஐ.ஏ.எஸ்., திரு. கிறிஸ்துதாஸ் காந்தி, ஐ.ஏ.எஸ்., இருவரும் அரசினர் சுவடி நூலக வளர்ச்சியில் பெரிதும் அக்கறை காட்டி, முடங்கியிருந்த சில பணிகளை முடுக்கி விட்டுள்ளனர்.

## இந்நூலகத்தில் உள்ள சுவடிகள்:

| | | |
|---|---|---|
| 1) | தமிழ்ச் சுவடிகள் - | 16,398 |
| 2) | சமஸ்கிருதச் சுவடிகள் - | 48,884 |
| 3) | தெலுங்குச் சுவடிகள் - | 2,150 |
| 4) | கன்னடச் சுவடிகள் - | 250 |
| 5) | மராத்திமொழிச் சுவடிகள் - | 956 |
| 6) | உருதுமொழிச் சுவடிகள் - | 184 |
| 7) | அராபிமொழிச் சுவடிகள் - | 407 |
| 8) | பெர்சியன்மொழிச் சுவடிகள் - | 1,390 |
| 9) | இதர கீழ்த்திசைமொழிச் சுவடிகள் | 127 |
| 10) | தனிப்பதிவுகள் ( Local Records ) | 434 |
| | | ------- |
| | மொத்தச் சுவடிகள் | 71,180 |
| | | ------- |

மேற்கண்ட 71,180 பன்மொழிச் சுவடிகள் தகுந்த பாதுகாப்போடும், பராமரிப்போடும் வைக்கப்பட்டுள்ளன. இதுவரை நூற்றுக்கும் மேற்பட்ட பதிப்பு நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இந்நூலகச் சுவடிகளின் வாயிலாகப் பல்வேறு ஆய்வேடுகளும், ஆராய்ச்சிக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

தற்போது தொல்பொருள் ஆய்வுத்துறையின்கீழ் செயல்பட்டுவரும் அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம் அரசின் நேரடிப் பொறுப்பில் எடுத்துக்கொள்ளப்பட்டால் இன்னும் பல சாதனைகளைக் குறுகிய காலத்திற்குள் நிகழ்த்த முடியும்.

பழம்பெருமை வாய்ந்த இந்நூலகம் பலருக்கும் தெரியாமல் சென்னைப் பல்கலைக் கழகக் கட்டிட வளாகத்துக்குள் மூச்சு விட்டுக்கொண்டிருப்பது வேதனையாயுள்ளது. மேலும் ஒரு தீவுக்குள் அமைந்திருப்பது போல் மட்டுமின்றி 20-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தும் இந்நூலகத்திற்கு ஒரு தொலைபேசி ( Phone ) வசதிகூட இல்லாமலிருப்பது மிகுந்த வேதனைக்குரிய செய்தியாகும். மேற்கண்ட குறைகள் நீங்கிடில் நிறைகள் ஓங்கிடும். புகழ் பெருகிடும்.

## அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகப் பதிப்புகள்

| வ.எண். | நூலின் தலைப்பு | பொருள் |
|---|---|---|
| 1) | உபதேச காண்டம் பகுதி-1 | புராணம் |
| 2) | உபதேச காண்டம் பகுதி-2 | புராணம் |
| 3) | உபதேச காண்டம் பகுதி-3 | புராணம் |
| 4) | பேரூர்க் கோவை | இலக்கியம் |
| 5) | ஆனந்தரங்கன் கோவை | இலக்கியம் |
| 6) | மாகபுராண அம்மானை | சமயம் |
| 7) | கோலாஸ்தலபுராணம் | புராணம் |
| 8) | தினக்கவிதை - பகுதி-1 | சமயம் |
| 9) | தினக்கவிதை - பகுதி-2 | சமயம் |

| | | |
|---|---|---|
| 10) | குன்றக்குடி குமரன் பேரில் கீர்த்தனைகள் | கீர்த்தனைகள் |
| 11) | சிவபுராண திதோத்திர மஞ்சரி | சைவம் |
| 12) | ஹோமர் இலியகம் | இலக்கியம் |
| 13) | மாணிக்கவாசகர் அம்மானை | இலக்கியம் |
| 14) | ஆதிபருவந்தாதிப் பருவம் | இலக்கியம் |
| 15) | வசு சரித்திரம் | இலக்கியம் |
| 16) | ஞானமதியுள்ளான் | சமயம் |
| 17) | திருமயிலை பிரபந்தங்கள் | சமயம் |
| 18) | அண்டகோள விலாசம் | நிலநூல் |
| 19) | சுந்தரபாண்டியன் | சமயம் |
| 20) | ஜெயங்கொண்டார் வழக்கம் | கதை |
| 21) | பிள்ளைத்தமிழ்க்கொத்து பகுதி-1 | இலக்கியம் |
| 22) | பிள்ளைத்தமிழ்க்கொத்து பகுதி-2 | இலக்கியம் |
| 23) | அந்தாதிக் கொத்து பகுதி-2 | இலக்கியம் |
| 24) | அந்தாதிக் கொத்து பகுதி-3 | இலக்கியம் |
| 25) | தனிப்பாடல் திரட்டு | இலக்கியம் |
| 26) | கேரள தேச வரலாறு | வரலாறு |
| 27) | தூதுத் திரட்டு | இலக்கியம் |
| 28) | கட்டபொம்மன் வரலாறு | வரலாறு |
| 29) | கலம்பகக் கொத்து | இலக்கியம் |
| 30) | உத்தர ராமாயண நாடகம் | நாடகம் |
| 31) | தொல்காப்பியம்-சொல்லதிகாரம் | இலக்கணம் |
| 32) | திருவாய்மொழி | வைணவம் |
| 33) | கப்பற் கோவை | சாஸ்திர நூல் |
| 34) | பிரபந்த மரபியல் | இலக்கணம் |
| 35) | உ.வே.சா. நூலகச் சுவடி விவர அட்டவணை தொகுதி-1 | |

| | | |
|---|---|---|
| 36) | நீதிக்கதைகள் | கதை |
| 37) | மடல்திரட்டு | மடல் இலக்கியம் |
| 38) | கருப்பர் குளுவ நாடகம் | நாடகம் |
| 39) | நலங்குமெட்டு இராமாயணம் | காப்பியம் |
| 40) | தமிழக ஊர் வரலாறுகள் | வரலாறு |
| 41) | தமிழ் அகராதி | அகராதி |
| 42) | வைத்திய அகராதி | அகராதி |
| 43) | பழனியாண்டவர் சிந்துப்பாமாலை | இலக்கியம் |
| 44) | சுந்தரமூர்த்தி நாயனார் யட்சகானம் | யட்சகானம் |
| 45) | யயாதி விலாசம் | நாடகம் |
| 46) | நாவாய் சாத்திரம் | கப்பல் கட்டுதல் |
| 47) | இராகதாளப் பிரத்தாரம் | இசை |
| 48) | பிரித்யும் சைரிதம் | சமணம் |

## பருவ இதழ்த் தொகுதிப்பதிப்புகள்

49) முனிமொழி

50) கருணாகர மாலை

51) இலக்குமி வெண்பா

52) நூற்றெட்டுத் திருப்பதி வெண்பா

53) குமரபுரி முருகன் மும்மணிக்கோவை

54) மாணிக்கவாசகர் ஞானக் கலித்துறை

55) பார்க்குஹரி நீதி சதகம்

56) பழனிவேலர் பதிகம்

57) நம்மாழ்வார் ஊஞ்சற் கவிதை

58) மாணிக்கப் பவழக் கோவை

59) விராலிமலை வேலவர் குறவஞ்சி நாடகம்

60) விராலிமலை வேலவர் குறவஞ்சி நாடகம்
(தொடர்ச்சி)

61 ) கட்டி மகிபன் பள்ளு

62 ) கட்டி மகிபன் பள்ளு ( தொடர்ச்சி )

63 ) திருப்புல்லானி எம்பெருமான்மீதும் பதுமாவதித் தாயார் மீதும் பாடிய பிள்ளைப்பாட்டு

64 ) தசாவதாரப் பத்து

65 ) நம்மாழ்வார் பிரபந்தங்கள்

66 ) திருத்தணிகை முருகன் தாலாட்டு

67 ) யோக மாலை

68 ) முருகரனுபூதி

69 ) சிறுத்தொண்டன் சிந்து

70 ) நாலு மந்திரி கதை

71 ) பாலையானந்த சுவாமியார் ஞானக்கும்மி

72 ) பழனியாண்டவர் கலித்துறை

73 ) வெங்கடேசப் பெருமாள் தமிழ்மாலை

74 ) விராலிமலை வேலவர் காதல்

75 ) ரிஷி விந்தக் குறவஞ்சி

76 ) ரிஷி விந்தக் குறவஞ்சி ( தொடர்ச்சி )

77 ) நல்லபிள்ளை சந்திர மடல்

78 ) திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ்

79 ) திருவள்ளுவர் பிள்ளைத் தமிழ் ( தொடர்ச்சி )

80 ) மதுரைப் பாண்டிய மன்னர் சரித்திரம்

81 ) கும்மிடிப்பூண்டி சிலாசாசனம்

82 ) பொன்னேரி குறும்பர் கோட்டை கைபீது

83 ) செயங்கொண்ட மண்டலத்து அளவு

84 ) சேதுபதிவரலாறு

85 ) அருங்கலச் செப்பு

86 ) அருங்கலச் செப்பு ( தொடர்ச்சி )

87 ) சூரியன் தோத்திரம்

88 ) பிரபந்த மரபியல்

89 ) பழந்தமிழர் கணக்கறிவு

90 ) நாடோடிப் பாடல்

இப்பதிப்பு நூல்கள் மட்டுமின்றி இன்னும் பல நூல்கள் வெளிவரும் நிலையில் உள்ளன.

*****

## 8. படைப்புக் கலையும் பதிப்புக் கலையும்

முனைவர் சூ. இன்னாசி

படைப்பு அசல் என்றால் பதிப்பு அதன் நகல் எனலாம். படைப்பு அச்சு என்றால் பதிப்பு அதனின்று எடுக்கப்பெற்ற வார்ப்பு எனலாம். படைப்பு மூலம் என்றால் பதிப்பு அதன் வடிவம் எனலாம். படைப்பு தலைமை என்றால் பதிப்பு துணைமை எனலாம். இத்தகைய எண்ண மதிப்பீடுகள் ஒருவகையில் ஏற்கத்தக்கனவே. எனினும் முழுமையாக ஏற்கத்தக்கன அல்ல.

ஆழ்ந்து நோக்கினால் படைப்பைப் போன்றே பதிப்பும் ஒரே நிலையில் வைத்து எண்ணத்தக்கதே. படைப்பு உணர்வால் உருவாவது என்றால், பதிப்பு உழைப்பால் உருவாவதாகும். படைப்பு கலைஞனின் உருவாக்கம் என்றால் பதிப்பு உழைப்பாளியின் உருவாக்கம் ஆகும். எனவே படைப்பாளனைப் போலவே பதிப்பாளனும் பாராட்டுக் குரியவன். படைப்பாளனின் ஆற்றல் பாராட்டப்படுவது போன்றே பதிப்பாளனின் உழைப்பும் போற்றத் தக்கது. சில வகைகளில் படைப்பாளனைவிடப் பதிப்பாளன் எதிர்ப்படும் சிக்கல்களே மிகுதியாகும். அவற்றுள் சில பின்வருவனவாகும்.

1. தான் நினைத்ததை எழுதும் உரிமை படைப்பாளனுக்குண்டு. பதிப்பாளனுக்கு அத்தகைய உரிமையில்லை. தன் கொள்கைக்கு முரண்பட்டதாயினும் படைப்பாளன் கருத்தினைப் பதிப்பித்தே தீர வேண்டும்.

2. காலப்போக்கிற்கேற்ப, தன் கருத்தை மாற்றி எழுதும் உரிமை படைப்பாளனுக்குண்டு. பதிப்பாளனுக்கு அவ்வகை உரிமை இல்லை.

3. பல பொருள் ஒரு சொல், எப்பொருளில் கையாளப்பட்டுள்ளது என்பது படைப்பாளனுக்குத் தெரியும். பதிப்பாளன் அதனைப் புரிந்துகொள்வது எளிதன்று.

4. படைப்பாளன் தன் காலச்சூழலுக்கேற்பப் படைத்துவிடலாம். பன்னூற்றாண்டுகட்குப்பின் ஈடுபடும் பதிப்பாளனுக்கு அக்காலச்சூழலை அனுபவத்தால் பெற இயலாது.

5. படைப்பாளன் தன் கால வரிவடிவ எழுத்துக்களால் தன் கருத்துக்களை எழுதி விளக்குகிறான். பதிப்பாளனுக்கு அவ்வரிவடிவ எழுத்துக்களைப் புரிந்துகொள்வதற்கு மிகுந்த பயிற்சி தேவைப்படுகிறது.

6. படைப்பாளன் தான் சார்ந்த சமயக் குறிப்புகளைப் புலப்படுத்தியிருத்தல் கூடும். பதிப்பாளரிடம் அச்சமயம் பற்றிய அறிவு படைப்பாளியின் அளவிற்கு எதிர்பார்க்க இயலாது.

7. படைப்பாளன் தன் படைப்பில் பல்துறையறிவைப் புலப்படுத்த முற்பட்டிருக்கலாம். பதிப்பாளனுக்குப் படைப்பாளனின் பிற துறை அறிவைப் புரிந்து கொள்ளும் வாய்ப்பின்றிப் போகலாம்.

பதிப்பு முயற்சியில் அச்சு வடிவில் வெளிவந்துள்ளவற்றை மீண்டும் பதிப்பிப்பது எளிதாகக் கருதப்படும். அதனைக் காட்டிலும் கடினமானது கையெழுத்துச் சுவடிகளைப் பதிப்பிப்பது ஆகும். அதனினும் கடினமானது ஓலைச்சுவடிகளைப் பதிப்பித்தலாகும். அதனினும் கடினமானது கல்வெட்டுச் செய்திகளை கண்டுணர்ந்து பதிப்பித்தலாகும். இவையனைத்தும் வழக்கில் இருந்துவரும் வரிவடிவங்களைக் கொண்டவை. இவற்றினும் மிகமிகக்

கடினமானது முன்னைய வரிவடிவங்களைக் கொண்டிருக்கும் பழங்காலக் கல்வெட்டுக்கள், செப்புக்காசுகள் போன்றவற்றில் உள்ள செய்திகளைக் கண்டு பதிப்பித்தலாகும்.

இந்நிலைக்கு மாறாக, தற்பொழுது வழங்கிவரும் வரி வடிவங்களில் உள்ளவற்றில் இலக்கண நூல்களைப் பதிப்பிப்பதைக் காட்டிலும், இலக்கிய நூல்களைப் பதிப்பிப்பது எளிது. இலக்கியங்களிலும்கூடச் செய்யுள் இலக்கியங்களைக் காட்டிலும் உரைநடை இலக்கியங்களைப் பதிப்பிப்பது எளிது. உரைநடை நூல்களைக் காட்டிலும் அகராதிகளைப் பதிப்பிப்பது எளிது. ஏனெனில் அகராதிகளில் தனித்தனிச் சொற்களும், அவற்றுக்கான பொருள்தரும் சொற்களும் நிரல் நிரலாகத் தரப்பட்டிருக்குமேயன்றித் தொடர்களாக அமையா. அதனால் பெருஞ்சிக்கல்கள் தோன்ற வாய்ப்பில்லை. தொடர்களாக அமையும் நிலையில் புணர்ச்சிக் குழப்பங்கள், அவற்றின் காரணமாகப் பொருட்குழப்பங்கள், இலக்கண மயக்கங்கள் போன்றவை தோன்ற வாய்ப்புண்டு. இத்தகைய சிக்கல்கள் குறைவாக உள்ள அகராதிப் பதிப்பில் பெற்ற அனுபவத்தை அறிந்தால், பதிப்புப் பணியில் ஈடுபடுவோருக்குத் தேவையான உழைப்பும் பயிற்சியும் எத்தகையவை என உணரலாம்.

தமிழில் முதன்முதல் தொகுக்கப்பெற்ற அகராதி வீரமாமுனிவர் அருளிய சதுரகராதி. அவ்வகராதியை கி.பி. 1732இல் அவர் வெளியிட்டார். ஆனால் அதன் முழுமையான முதற்பதிப்பு கி.பி. 1824ஆம் ஆண்டு அச்சு வடிவில் வெளிவந்தது. அதற்குப்பின்னர் 1835, 1845, 1848, 1860, 1875 (பாண்டிச்சேரி), 1875 (சென்னை), 1876, 1928 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்துள்ளது. 1979ஆம் ஆண்டில் கட்டுரையாளரால் செம்மைப்பதிப்பொன்று வெளிவந்தது. அதுவே மீண்டும் 1989ஆம் ஆண்டிலும் வெளிவந்தது. இவற்றுக்கு மூலமாக முதற்பதிப்பைக் கொண்டாலும் வேறு பதிப்புகளும் அகராதிகளும் ஒப்புநோக்கிக் கொள்ளப் பெற்றன. அப்பதிப்பு முயற்சியில் எதிர்ப்பட்ட சிக்கல்களும்

அவை தீர்க்கப்பெற்ற முறைகளும் பலப்பல. எனினும் சுருக்கம் கருதி அவற்றுள் சிலவே இங்குக் காட்டப்பெறுகின்றன. அவை பதிப்புப்பணியில் ஈடுபடுவோருக்குத் துணையாக அமையலாம். என்பதே நோக்கமாகும்.

1. தொடக்ககால அச்சுப்பதிப்புகளில் புள்ளியிட்ட மெய்வடிவங்கள் பல இடங்களில் காணப்பெறவில்லை. சிலவிடங்களில் புள்ளியிடப்பெற்றும், சிலவிடங்களில் புள்ளியிடப்பெறாமலும் தோன்றுகின்றன. அவற்றின் காரணமாகப் பொருட்குழப்பம் ஏற்படலாம். அதனைத் தவிர்க்க எவ்வெவ்விடங்களில் புள்ளியிட்ட மெய்களாக உயிர்மெய்யெழுத்துக்களைக் கொள்ள வேண்டும் என்பதில் கவனமாக இருக்க வேண்டும். சான்றாக, சென்றதமம என்று ஒரு மேற்கோள் சுட்டப்படுகிறது. இறுதியில் உள்ள மகரங்கள் உயிர்மெய்கள் போன்று புள்ளியிடப்பெறாமல் இருக்கின்றன. ஆனால் அவற்றுள் ஒன்று மெய்யாகவும் மற்றொன்று உயிர்மெய்யாகவும் கருதப்பெற வேண்டும். இலக்கியப் பயிற்சியைக் கொண்டு, முதன் மகரத்தில் புள்ளியிட்டுச் சென்றதம்ம எனக் கொள்ள வேண்டும்.

2. உயிர்மெய்களைக் குறிக்கச் சிலவிடங்களில் மெய்யின்மேல் நீண்ட கோடிட்ட அச்சு வடிவ எழுத்துக்கள் அமைந்துள்ளன; சிலவற்றில் நீண்ட கோடில்லை. சான்றாக னகரம் வாழ்ந்தன என்ற சொல்லில் நீண்ட மேற்கோடிட்டும் மனம் என்ற சொல்லில் அக்கோடு இடப்பெறாமலும் உள்ளன.

3. அக்கால அச்சுவடிவத்தில் ஊகார வடிவம் தற்காலத்தில் உள்ளது போன்று இல்லை. உகரத்தை அடுத்து ளகரத்தையிட்டால் அதுவே ஊகாரமாகக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே எவ்விடத்தில் ஊகாரமாகக் கொள்ள வேண்டும், எவ்விடத்தில் உகர, ளகரங்களாகக் கொள்ள வேண்டும் என்பதில் மயக்கம் ஏற்படுகிறது. சான்றாக உளர் என்னும் சொல்லை இடமறிந்து தெளிந்து ஊர் என்று கொள்ள வேண்டியதாயிற்று.

4. அக்கால அச்சு வடிவங்களில் ரகரம் கீழ்க்கோடின்றி ஆகாரத்தைக் குறிக்கும் வடிவம் போலவே அமைந்துள்ளது. அந்நிலையில் எது ரகரம், எது ஆகாரக் குறியீடு எனத் தெளிவது கடினமாயிற்று. சான்றாக, தே என்னும் எழுத்தை யடுத்து மூன்று ஆகாரக் குறியீடுகள் தோாாா என்றாற் போன்று அமைந்துள்ளன. இச்சொல்லைத் தோரர் என்றோ தேரரர் என்றோ கொள்ளலாம். ஆனால் அதன் உண்மைப் பொருள் தேரார் என்பதேயாகும்.

5. னகரமும் ஐகாரக் குறியீடும் ஒன்றுபோல் பலவிடங்களில் காணப்பெற்றன. சான்றாக தகரத்தையடுத்து இரு னகர உயிர்மெய் வடிவங்களும் ஒரு மகர உயிர்மெய் வடிவமும் கொண்டு தனனம என்றாற் போன்று காணப் பெற்ற சொல்லைத் தனனம் என்று கொள்வதா? என ஐயம் எழக்கூடும். அச்சொல்லில் உள்ள இரு னகரங்களில் முதல் னகரத்தை மெய்யாகவும் அடுத்துள்ள னகர வடிவை ஐகார வடிவாகவும் கொண்டு அச்சொல் தன்மை என்று முடிவிடப் பெற்றது.

6. புணரியல் நெறிகளோடு பொருந்தி வந்தாலும் அவற்றைப் பிரித்துப் பொருள் காணும் முறையில் குழப்பங்கள் ஏற்படுவதுண்டு. சான்றாக அனறியும கனமணி என்னும், எவ்விடத்திலும் புள்ளியிடப் பெறாத் தொடரைத் தக்கவாறு புள்ளியிட்ட எழுத்துக்களாகக் கொண்டு அன்றியும்+கனமணி என்றோ, அன்றியும்+மகன்மணி என்றோ கொள்வதற்கு இடம் உண்டு. எனினும், அன்றியும்+அகன்மணி என்பதே பொருத்தமான பொருளாகும்.

7. படைப்பாளரின் சமய அறிவு பதிப்பிப்போனுக்கு இருந்தால் பதிப்பு செம்மையாக அமையும் என்பதற்கு எவ்விடத்திலும் புள்ளியிடப் பெறாத காயமகாாம என்ற சொல்லைக் கொள்ளலாம். முன்னைய பதிப்பாளர்கள் எல்லோரும் காயம்+காரம் எனப்பொருள் கொள்ளக் கட்டுரையாளரால் காய்மகாரம் எனக் கொள்ளப் பெற்றது.

இச்சான்றுகள் பதிப்புப்பணியின் அருமையை அறிந்துணரத் துணையாவனவற்றுள் மிகச் சிலவேயாகும். எனவே பதிப்புப் பணியும் படைப்புப் பணிக்கு நிகரானதே என எண்ணிச் செயல்படவேண்டும்.

*****

# 9. இஸ்லாமியத் தமிழ்ச் சுவடிகளின் பதிப்பு

திரு. கலீலுல்லா

## நுழைவாயில்

இஸ்லாம் என்பது ஓர் மார்க்கம். உலகை நன்நிலைப் படுத்தி உய்விக்க வந்த உன்னத மார்க்கம் இஸ்லாமாகும். அரபு நாட்டில் தோன்றிய முஹம்மது நபி (ஸல்) அவர்களால் முழுமையாக்கப்பட்ட மார்க்கம் இக்தாகும்.

பண்டைத் தமிழகமும் அரபு நாடுகளும் மிக நெருங்கியத் தொடர்பு கொண்டு இருந்தன. இதனை இலக்கியச் சான்றுகளுடன் பல இஸ்லாமிய இலக்கிய ஆய்வாளர்களும், வரலாற்று நிபுணர்களும் நிறுவியுள்ளனர்.

யவனர், யவனதேசம், யவனப்பிரியம் - போன்ற சொற்கள் அரபு மக்கள், ரோமர், கிரேக்கர் போன்றவர்கள் தமிழகத்தின் மேற்கெல்லை வழியாக செய்துவந்த வணிகத்தின் விளைவுகள் என்றால் மிகையாகாது.

## வணிகத் தொடர்பு

இஸ்லாம் இவ்வுலகில் வேரூன்றி விரிவடைந்திட்ட நிலையில் இந்தியாவின் மேற்கு மற்றும் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளில் அதிக அளவில் இஸ்லாமியர்களின் (அரபு நாட்டவரின்) வணிக குடியிருப்புகள் இருந்திருக்க வேண்டும். இவர்களுடையத் தனித்திறனையும், வியாபாரத் திறனையும் நன்குணர்ந்த தமிழர்கள் இவர்களுக்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்து வாழ்வித்தனர். அவர்களை வளப்படுத்தினர்.

## இஸ்லாமியர்களும், தமிழர்களும்

இக்காலகட்டத்தில் வாழ்ந்த தமிழக இஸ்லாமியர்கள் தாய்மொழியை - தமிழை நன்கு பொருளுணர்ந்து பேசக் கூடியவர்களாய் இருந்தனர். மேலும், அரபு மொழியில் இருந்த புனிதத் திருமறையாம் அல்குர்ஆனை முழுவதும் பிழையின்றி ஓதக்கூடியவர்களாய் இருந்தனர். இந்நிலையில் தோன்றியது தான் அரபுத்தமிழ் எனும் மொழி. இஃதோர் புது மொழியல்ல; அரபு பாண்டித்தம் பெற்ற வங்காள முஸ்லீம்கள், வங்காள மொழியை அரபு லிபி (எழுத்து) யிலும் ரோம, ஆங்கில எழுத்துகளில் தமிழ் ஒலியுடன் நூல் உருவாக்கிய கார்ட்டியாலா எனும் இந்நிலையைச் சார்ந்து உருவானதே அரபுத்தமிழ். இதனைத் தமிழின் வளர்ச்சியின் படிநிலைகள் என்றே கருதவேண்டும்.

இத்தகைய அரபு-தமிழ் நடை வளரக் காரணம் இரண்டு கோணங்களைக் கொண்டது. ஒன்று அரபு மொழிப்புலமை பெற்றவர்கள் தமிழில் மிகுந்த ஆர்வம் கொண்டு தமிழிலக்கிய மரபுகளில் தனது படைப்புகளைப் படைத்திட முனைந்தது. மற்றொன்று வெகு ஜன விருப்பம் எனும் நிலையில் அரபு லிபிகளில் செழுமையான ஞானம் கொண்ட தமிழக முஸ்லீம்களுக்கு, தமிழ்மொழியில் நன்கு பொருளுணரும் தன்மை இருந்தமையால், இஸ்லாத்தின் அடிப்படை மார்க்க கருத்துக்களை அவர்களுக்கு எளிதில் விளக்க இலக்கிய வடிவில் படைக்கப்பட்டவை எனும் நிலையாகும்.

## பதிப்பின் தொடக்கம்

அரபு தமிழ் இலக்கியங்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே படைக்கப்பட்டன. அவை கல் அச்சு எனும் முறையில் பதிப்பிக்கப்பட்டு 16ஆம் நூற்றாண்டுகளிலேயே வெளிவந்து தமிழக இஸ்லாமியர்களால் வெகுவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இந்நிலை வளர்ந்து தமிழக இஸ்லாமியர்கள் தமிழ்மொழியில் சிறந்த புலமைப் பெற்ற பின்பு அரபுத் தமிழ் இலக்கியங்கள் தமிழில் ( தமிழ் லிபியில் ) படைக்கப்பட்டன. அவை அச்சு இயந்திரம் வந்த பின்பு அச்சில் ஏற்றப்பட்டன.

சீறா மகாகாவியமாயினும் அதில் சொல்லப்பட்ட விசயங்கள் விரிவாகவோ சுருக்கமாகவோ அதற்கு முன்பாகவோ தமிழ்நாட்டில் பிரபலமானவை. சாதாரண முஸ்லீம்களின் வீடுகளில் ஓதிவரப்பட்ட மௌலுதுக் கிதாவுகளில் இவை போன்ற குறிப்புகள் உண்டு (1) எனும் ஆர்.பி.எம். கனி அவர்களின் கருத்தும் இதனையே வலியுறுத்தி நிற்கின்றது.

## தமிழிலக்கியப் பதிப்பு வரலாறு

தமிழிலக்கியப் பதிப்பு வரலாறு பலபடி நிலைகளைக் கண்டது. அதன் தொடர்பாக கி.பி. 1812ஆம் ஆண்டின் திருக்குறள், நாலடியார் பதிப்பில் நிகழ்ந்தது. அன்று தொடங்கி, வளர்ந்து விரிவடைந்து ஆலாக தமிழிலக்கியங்கள் சீர்கொண்டு விளங்குகின்றன.

1844ஆம் ஆண்டில் ரங்கநாயக செட்டியாரால்
கம்பராமாயண பால, ஆரணிய காண்டங்கள்,

1846ஆம் ஆண்டில் இராமசாமி பிள்ளையால்
திருமந்திரம்.

1851ஆம் ஆண்டு ஆறுமுக நாவலரால்
திருமுருகாற்றுப்படை

போன்றவை பதிப்பிக்கப்பட்டன. ஐம்பெரும் காப்பியங்கள் முழுமையாக முறையே,

| | | |
|---|---|---|
| சீவக சிந்தாமணி | - | 1887 |
| சிலப்பதிகாரம் | - | 1892 |
| மணிமேகலை | - | 1898 |

ஆகிய ஆண்டுகளில் பதிப்பாகியிருக்கின்றன.

## இஸ்லாமியத் தமிழிலக்கியப் பதிப்புகள்

ஏராளமான இலக்கிய அணிகளைப் படைத்து அன்னைத் தமிழுக்கு அணிவித்து மகிழ்ந்தவர் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள். அவர்களுடைய படைப்புகள் தமிழக இஸ்லாமியர்களிடையே பெரும் ஆதரவு பெற்று விளங்கின.

அவ்வகையில் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்கள் 25-க்கும் மேற்பட்ட காப்பியங்களையும், ஆயிரக் கணக்கான சிற்றிலக்கியங்களையும் படைத்து தமிழுக்குத் தொண்டாற்றி அவர்கள் படைத்த படைப்புகள் தமிழுக்கு அணி செய்தன. அதிலும், காப்பியப் படைப்புகள் தமிழிலக்கியங்கள் கூறும் காப்பிய மரபுகளைத் தன்னகத்தே கொண்டு சிறப்புற்றிருந்தன. அவற்றுள் சிறப்புக் குரியவைக ளாகக் கருதப்படுபவை பலவாகும்.

| | | |
|---|---|---|
| 1842 | 17ஆம் நூற்றாண்டு - சீறாப்புராணம் ( 3 காண்டம் முழுவதும் ) | புலவர் நாயகம் செய்கு அல்துல் காதிர் நயினார் புலவர் |
| 1853 | சின்ன சீறா ( 39 படலங்கள் - 1829 விருத்தம் ) | யாழ்ப்பாணம் உதுமான் லெப்பை அவர்களின் மகன் பக்கீர் முகைதீன் |
| 1860 | இராஜ நாயகம் எனும் சுலையுமானபி காப்பியம் | கள்ளகுமது மகுதும் முகமது புலவர் எனும் கண்ணகமது மகுதும் முகம்மது புலவர் |
| 1860 | மிகுறாசு மாலை | |

| | | |
|---|---|---|
| 1860 | புதூகுச்சாம் | |
| 1862 | கனகாபிசேக மாலை ( 35 படலங்கள் 2792 விருத்தங்கள் ) | கண்ணகமது மகுதூம் முகம்மது புலவர் |
| 1863 | திருக்காரணப் புராணம் ( 3 காண்டம் - 56 படலங்கள் 2565 விருத்தங்கள் ) | |
| 1864 | குத்பு நாயகம் ( 2 காண்டம், 28 படலங்கள் 1343 விருத்தங்கள் ) | கண்ணகமது மகுதூம் முகம்மது புலவர் |
| 1869 | இரசுல் கூல் படைப்போர் எனும் சல்கா படைப்போர் 45 படலங்கள் 2383 விருத்தங்கள் | மூன்றாம் பதிப்பு முத்திராட்சரம் பதிப்பகம் |
| 1873 | திருமணிமாலை 31 படலம், 2077 பாடல்கள் | |
| 1876 | குத்புநாயகம் 38 படலங்கள் - 1707 விருத்தங்கள் | கிதுருமுகம்மது |
| 1889 | திருமணக்காட்சி | கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவர் |
| 1891 | தீன் விளக்கம் | கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவர் ( இரண்டாம் பதிப்பு ) |
| 1893 | நாகூர் புராணம் 1550 விருத்தங்கள் | நாகூர் ம. முகமது நயினார் மரைக்காயர் |

| | | |
|---|---|---|
| 1901 | முகைதீன் புராணம் முதல் பாகம் - 40 படலம் | கோட்டாறு செய்குதம்பி பாவலர் |
| 1903 | முகைதீன் புராணம் இரண்டாம் பாகம் - 34 படலம் | - " - |
| 1908 | மூசாநபி புராணம் | குலாம்கதிறு நாவலர் |

மேலும்,

*ஆயிரம் மசலா
*சாலிது நாயகம்
*சீறா இரண்டாம் தொகுதி
*நவமணிமாலை
*மூசாபிக் காவியம்
*யூசுப் நபி காவியம்

போன்ற காப்பியங்களுக்குப் பதிப்புச் செய்திகள் தெளிவாகக் கிடைக்கவில்லை.

இந்த அட்டவணை மூலம் 50 ஆண்டு காலத்திற்குள் எத்தனை இஸ்லாமியத் தமிழிலக்கிய காப்பியங்கள் அச்சேறியுள்ளது என்பதை அறிய முடிகின்றது.

இந்நிலையில் இஸ்லாமிய தமிழிலக்கியப் பதிப்பு வரலாறு நீண்டுகொண்டே போகின்றது.

**ஆய்வுக்களங்கள்**

இஸ்லாமிய தமிழிலக்கியப் பதிப்பு வரலாறு ஒரு மிகப்பெரிய ஆய்வுக்களமாக அமைந்துள்ளது.

1. இஸ்லாமியத் தமிழ் காப்பியப் பதிப்புகள்
2. இஸ்லாமியத் தமிழ் சிற்றிலக்கியப் பதிப்புகள்
3. புதுவகையான சிற்றிலக்கியப் பதிப்புகள்
4. மொழிபெயர்ப்பு பதிப்புகள்

எனும் உட்பிரிவுகளிலும்,

1. குறிப்பிட்ட படைப்பாளரின் பதிப்புகள்
2. குறிப்பிட்ட பதிப்பாளரின் பதிப்புகள்
3. பதிப்புகளிடையே ஒப்பாய்வு

எனும் ஒப்பாய்வு நோக்கிலும் இப்பதிப்பு வரலாற்றின் ஆய்வுக்களங்கள் நீண்டு வளர்ந்து அமைகின்றது.

எனினும், தமிழில் பதிப்பாகிய முதல் காப்பியம்; இஸ்லாமியத் தமிழிலக்கியத்தின் தலைமைக் காப்பியம் எனப்படும் சீறாப்புராணம் பதிப்புகளை மையமாகக் கொண்டு இக்கட்டுரை அமைகின்றது.

இதில் சீறாவின் பதிப்புகளைப் பற்றியும், முதல் பதிப்பின் தனித்தன்மை பற்றியும் விரிவாக விளக்கமாகக் காண்போம்.

அரபுத்தமிழ் வடிவில் இருந்த இலக்கியங்கள் பல கல்அச்சு முறையில் பதிப்பைக் கண்டன. இந்தியர்களுக்கான பதிப்பகத் தடைச் சட்டம் நீங்கிய பிறகு பதிப்பிக்கப்பட்ட முதல் இஸ்லாமியத்தமிழ் இலக்கியம் சீறாவென்கின்ற புராணம் எனும் காப்பியமாகும். இது முகம்மது நபி ( ஸல் ) அவர்களின் வாழ்க்கை வரலாற்றை மூன்று காண்டங்களாய் 92 படலங்களுடன் 5028 விருத்தங்களைக் கொண்டுள்ளது.

## முதற்பதிப்பின் சிறப்புகள்

சீறாவின் இப்பதிப்பு அதன் பதிப்பாசிரியரின் பெயராலேயே புலவர் நாயகம் பதிப்பு எனச் சுட்டப்படுகின்றது. இதனைப் பதிப்பித்தவர் காயற்பட்டினம் மானாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்களின் மகன் ஹபீபு முகம்மது லெப்பையின் குமாரராகிய செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர் ஆவார்.

இவருக்குக் காயற்பட்டிணம் செய்கு சமுசுத்தீன் லெப்பை யாலிம் அவர்களின் குமாரர் உவைசு நயினார் லெப்பை, காரியம் யாழ்பாணம் - பரிகாரி மரைக்காயர் பகீர் முகியித்தீன் - ஆகியோர் உதவியுள்ளனர்.

இதன்பிறகு, இக்காப்பியம் 15-க்கும் மேற்பட்ட பதிப்புகளைக் கண்டுள்ளது. இவை யாவற்றிற்கும் இப்பதிப்பே முன்னோடியாக இருந்து வருகின்றது.

இதில் ஹிஜிரத்தாகி 1258ஆம் ஆண்டு, இதற்குச் சரியான சக வருடம் 1764 சுபகிருது வருடம் ஆனி மாதம், ஆங்கில வருடம் 1842 திசம்பர் - 23ஆம் நாள் வெள்ளிக்கிழமை அன்று பதிப்பு நிறைவேறியுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது.

சென்னப்பட்டணத்தைச் சார்ந்த மூதறிவன் கோனேரி முதலியாருள் கந்தப்ப முதலியாரின் புரசபாக்கத்தில் (புரசைவாக்கம்) உள்ள வித்தியா விலாச அச்சுக்கூடத்தில் அச்சில் பதிக்கப்பட்டுள்ளது எனும் குறிப்பும் உள்ளது.

## புலவர் நாயகப்பதிப்பின் தனித்தன்மைகள்

### அச்சிற்பதிப்பித்த வரலாறு

ஒரு பதிப்பாசிரியர் எனும் நிலையில் சோகனாப்புலவர் எனப்படும் புலவர் நாயகம் தனது பதிப்பில் அந்நூலைப் பதிப்பித்த வரலாற்றை நேரிசை ஆசிரியப்பாவில் முழுவதும் விளக்குகின்றார். அதில் இறைவனை வாழ்த்தியும் - அவ்விறைவனின் அருட்கொடையாய் இப்புவியில் வந்துதித்த நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களை வாழ்த்தி, அவரின் சரித்திரத்தைப் பதிப்பிக்கப் போவதாகவும், படைப்பாசிரியர் பற்றிய விரிவான செய்தியையும் கூறியுள்ளார்.

மேலும்,

அறம்பொருளின்பம் வீடனைத்துமடங்கிய
திறம்பெறுங்காப்பியஞ் செய்தனரஃதே
பலபலதேஎத்தும் பல்லோரிடத்தும்
பலபடவெழுதிப் பயின்றுவருவதின்
எழுத்தினுஞ்சொல்லினும் பொருளினுமியாப்பினும்
வழுத்தியவணியினும் வழுசிலகலத்தலால்
நலனுறவெவரு நனிபயனேர்ந்து
பலனுறத்தாங்கள் பரிசோதித்துத்

துளக்கறவச்சிற் றுலங்கப்பதிப்பித்து
விளக்கவேண்டுமென விளைபலன்மிகுத்த

என தான் பதிப்பு செய்யத் துணிந்ததின் காரணத்தைக் கூறுகின்றார். பதிப்பிற்கு உதவியவர்கள்:

பெரும்பதிகாயலிற் பிரபலமுடைய
அருந்தவத்தோர்களுக் கருமணியாகிய
சால்புறுசெய்கு சமுசுத்தீன்லப்பை
யாலிமீன்ற வழகியசெல்வன்
சேர்ந்தவர்க்காதரஞ் செலுத்துமனத்தன்
தேர்ந்தவர்க்குதவி செய்தயவுடையன்
இயலிற்சிறந்தோன் எனக்குறுந்துணைவன்
புயலிற்சிறந்தோன் புண்ணிய மதியினன்
நன்புறைஉவைசு நயினார்லப்பை
யன்புடன்கேட்ட வருமையுன்னி
அள்ளியவமிர்தம் அருங்கரவிற்கிடை
துள்ளியதிவலையைத் துணைக்கையாலேந்தியுண்
டெள்ளலி லின்பநீ யெய்துகவென்றென
துள்ளமுறுத்திய வோகையினேவலால்

எனும் பகுதியில் தனக்குப் பதிப்பில் உதவியவரைப் பற்றியும் தனது இப்பணியைச் செய்திட அன்புடன் கேட்டுக் கொண்டுள்ளதைப் பற்றியும் கூறியுள்ளனர்.

## பதிப்பாசிரியரின் பணிகள்

பதிப்பாசிரியர் தனது பதிப்பில்,

ஒழுங்குமுதனூல் உண்மையுந்தகுதியும்
அழுந்துமுள்ளத் தறிவாலாய்ந்து
வேதம்பிறந்த மேன்மையம்பாடையிற்
பேதம்பிறவாது நன்குறப்பேணியும்
புகழணிவள்ளல் புனைந்ததிருநாமந்
துகரமிருவகை யுயரமாகக்கொண்டும்
பொதுவுஞ்சிறப்பும் பிறழ்ந்துபுகுந்ததை
அதனதனெழுத்தே யமைத்தும்விகாரம்

படாதனவற்றைப் பருத்தியும்மியல்பிற
கெடாதனவற்றை அமைத்துங்கிளந்துந்
தபந்தவமாதல்போற் றவழ்ந்தநபிநவி
நிபமொழியனைத்தையும் வருக்கதினிறுவியுஞ்
சிறப்பெழுத்துறழ்ந்து செலுமுறையாக
அறபெழுத்தொலித்தல் ஆமெழுத்தியற்றியும்
பதங்களிற்பிறழ்ந்ததைப் பகுத்தும் பகாதும்
அதனதனமைதியே அமைத்துஞ்சிலசில
பாலுந்திணையும் இடறும்பயில்வினாக்
காலமும்வழீஇயவை மயங்காதுகாத்துந்
தொகாநிலைத்தொகைநிலைத்
தொடர்களுட்சிதைந்தவை
பகாநிலையாக்கி விளங்கவுரைப்படுத்தியும்
வேற்றுமைப்பொருள்கள் வேறுபாடவைகளைத்
தோற்றியமுறைபோற் றொகுத்தும்விரித்தும்
முற்றுமெச்சமு முடியாதனவற்றை
முற்றமுடித்தும் மொழிபெயர்த்தடுக்கியும்
பொருட்டொடர்நோக்கி
மொழித்தொடர்பொருத்தியும்
மருட்டுந்துறைகளின் மயக்கமொதுக்கியும்
புறமுமகமும் புணராத்துறையொரு
புறமுமகமும் புகுதப்புகுத்தியும்
எதுகைமோனை யியைபாற்றிரிந்தவை
எதுகைமோனையைத் திரித்தியல்பாக்கியும்
இசைகெடாதெழுத்தின் இயல்புநிரைத்தும்
அசைகெடாதமைத்தும் அணிபெறப்பொருத்தியும்
உவமைமுதலா வுள்ளவணிகளில்
நவநிலைபிறழா தவணிலைப்படுத்தியும்
இன்னமுஞ்சிதைந்தன வெவற்றையுமாய்ந்தாய்ந்
துன்னியவிதிபோல் ஒழுங்குறத்திருத்திப்
பலபல பாடத்தாற் பரிசோதித்தும்
பலனுற வச்சிற் பதிப்பிக்கச்செய்தனன்

என விரிவாகத் தான் அச்சிற்பதிப்பித்த வரலாற்றையும், அதில் ஏற்பட்ட சிரமங்களையும் எடுத்துக் கூறுகின்றார்.

## பதிப்பாளரின் படைப்புகள்

புலவர்நாயகம் பதிப்பாளர் மட்டுமல்ல, சிறந்த படைப்பாற்றலும் கொண்டவர். தமிழ், அரபு, வடமொழிகளில் சிறந்த புலமைக் கொண்டிருந்தனர். அவருடைய படைப்புகள்,

(1) காரணப்புராணம்
(2) குத்பு நாயகம்
(3) இருமணிமாலை
(4) புதுகுஷ்சாம்
(5) நாகையந்தாதி
(6) மக்கா கலம்பகம்
(7) கனசொர்க்க நீதி
(8) தோத்திர மாலை
(9) வருக்கமாலை

போன்றவையாகும். தனது இலக்கியப் படைப்புகள் பற்றியும் அதன் இயம்பு பொருள் பற்றியும் சிறப்புற, சுருங்கத் தனது முதல்பதிப்பில் கூறும் முறையைப் புலவர் நாயகம் அறிமுகப்படுத்திய ஒன்றாக உள்ளது.

## பரிசோதித்த காரணம்

பூவகத்தினறையுண்டு திகைப்புண்ட
வென்பிழைகள் பொருத்து வல்லோன்
பூவகத்தி னறையடரா தோம்புமெனத்
துணிந்துயிர்கள் பொதித்த யாக்கைப்
பூவகத்தி னறைகுலவு நபிநயினார்
முகம்தருள் பூத்த தூய
பூவகத்தி னறையனையே பாவகத்தைக்
காவகமாப் பொந்தி னேனே.

அண்ணல் முஹம்மதின் வாழ்க்கை தொடர்பான காவியமாதலில் பொய்யும், புரட்டும் கலக்காமலிருக்கவே -

அந்நிலையில் நுகர்வோருக்குத் தவறான செய்தியைத் தராமலிருக்கவே பரிசோதனை நிகழ்த்தப்பட்டது எனக் கூறுகின்றார்.

## பரிசோதித்த புத்தகம்

தனது பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகளைப்பற்றிய தெளிவான கருத்தையும், அச்சுவடிகள் எங்கெங்கு யார், யாரிடம் உள்ளது எனத் தெளிவாகத் தனது பதிப்பில் முதல் நிலையிலேயே கூறி அதனை யார் வேண்டுமென்றாலும் பார்வையிடலாம் என்றும் விருத்தமைத்துப் பதிப்பித்துள்ளார்.

## மறுபதிப்பு

புலவர் நாயகம் 1842இல் சீறாவின் முதல்பதிப்பைக் கொண்டுவந்துள்ளார். அதனைத் தொடர்ந்து ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுகளில் மறுபதிப்பும் கண்டுள்ளது. ஏறத்தாழ ஒன்று அல்லது ஒன்றரை ஆண்டுகளுக்குள் இரண்டாவது பதிப்பு வெளிவந்துள்ளது (1) எனும் கூற்று இதனை மெய்ப்பிக்கின்றது.

சீறாவில் விடுபட்ட பகுதி எனப்படும் வரலாற்றுச் செய்திகளைக் கூறும் பனிஅகமதுமரைக்கார் படைத்த சின்ன சீறா 1855 ஜனவரியிலும், அதன் மறுபதிப்பு 1856 ஆகஸ்டிலும் நிகழ்ந்துள்ளது. இந்நிலையைப் பார்க்கும்போது இஸ்லாமியத் தமிழிலக்கியங்களுக்கு இருந்த தேவையைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

சீறாவை முதன்முதலில் பதிப்பித்த சோகனாப்புலவர் எனும் புலவர்நாயகம் 1853-இல் சென்னை இராயபுரத்தில் இயற்கை எய்தினார்.

## பதிப்பின் அகநிலை

பிசுமில்லாகி எனும் இறைவனின் திருப்பெயருடன் தொடங்குகின்றது. அதனைத் தொடர்ந்து அச்சிற்பதிப்பித்த வரலாறு, சுவடிநிலையில் தொடர்நிலைச் செய்யுளமைப்பில் அமைந்துள்ளது.

பதிப்பித்த வரலாறு முடிந்தபின் பரிசோதித்த காரணமும் பரிசோதித்த புத்தகம் பற்றிய குறிப்பும் உள்ளது. அதனைத் தொடர்ந்து பொருளடக்கம் அமைந்து உள்ளது. இது முதலில் பக்க எண்ணையும், தொடர்ந்து படலத்தின் பெயரையும் அதன்கண் அமைந்த பாடற்றொகையையும் சுட்டி நிற்கின்றது. இறுதியில் ஆக காண்டம் 3 - படலம் 62 எனும் தொகுப்பும் உள்ளது. 513 பக்கங்களின் பொருளடக்கம் தரப்பட்டுள்ளது.

பாடுபொருளும் பிசுமில்லாகி எனும் தொடக்கத் துடனும் இஃது திருமக்காமாநகரிலெழுந்தருளித் திருமதீனா மாநகரில் அரசியல் புரிந்த - நபிமுகமது சல்லல்லாகு அலைகியோசல்லமவர்கள் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சீறாவென்கின்ற புராணம் - உமறுப்புலவரவர்களால் பாடியது. முதலாவது விலதத்து காண்டம் எனும் நிலையில் தொடங்குகின்றது.

இவையாவும் ஏட்டிலிருந்த செய்தியா? பதிப்பாசிரியரின் பதிப்புப்பணியா? என்பது தெரியவில்லை. இதேநிலைதான் இதன்பின் வரும் காப்புப் பாடலிலும் நிலவுகின்றது.

'திருவுருவாயுணருருவாயறிவினோடு' எனும் காப்புப் பாடல் உமறு பாடியதா? பதிப்பாசிரியர் புலவர்நாயகம் பாடியதா? எனும் ஐயத்திற்குச் சரியான விடை கிடைக்கவில்லை.

அடுத்தப்பக்கத்தில் கடவுள் வாழ்த்து 'திருவினுந் திருவாய்ப்' எனும் பாடலுடன் தொடங்குகின்றது. இறுதியில் எண் 1 பிறை அடைப்புக்குறியில் ( க ) இடப்பட்டுள்ளது.

சுவடி நிலையிலேயே தொடர் நிலையாக சீர், அடி போன்றவை பிரிக்கப்படாமல் பதிக்கப்பட்டுள்ளது. யாப்புநிலை மாறுபடும் இடங்களில் **வேறு** என்ற குறிப்பு காணப்படுகின்றது.

ஒவ்வொரு படலத்தின் இறுதியிலும் படலத்தின் பெயருடன் முடிவுற்றது எனும் குறிப்பும் காணப்படுகின்றது. அதனுடன் குறிப்பிட்ட காண்டத்தில் அமைந்த படலங்களின் கூட்டு எண்ணிக்கை குறிப்பிட்டு, அக்காண்டத்திலுள்ள விருத்தங்களின் கூட்டு எண்ணிக்கையும் தரப்பட்டுள்ளது.

காண்டங்களின் முடிவில் ஏற்படும் வெற்றிடத்தில் இஃது - புத்தகம் என்பன கட்டமிட்டு அச்சிடப்பட்டுள்ளது. இது புத்தகத்தை வாங்குபவர் தனது பெயரையும் விலாசத்தையும் எழுதிவைக்கப் பயன்பட்டது. தொடக்கத்திலும் முடிவிலும் மட்டுமின்றி, புத்தகத்தின் இடையிலும் வருவதால் புத்தகம் நன்கு காப்பாற்றப்பட்டது.

காப்பியத்தின் முடிவில் காண்டம் மூன்று, இதற்குப் படலம் 62, இதற்குக் கூடிய திருவிருத்தம் 5028 என முழுமையான செய்தியும் கூறப்பட்டுள்ளது.

இதனை அடுத்து உமறுப்புலவராற் செய்யப்பட்ட சீறாவென்கின்ற புராணம், கிசுறத்து வருடம் 1258 இதற்குச் சரியான சக வருடம் 1864இல் நிகழுஞ் சுபக்கிருது வருடம் துல்கயிதா மாதம் 20 வெள்ளிக்கிழமை சுபதினத்தில் குத்பாவின் பின்னர் நபிநாயகத்தின் பறக்கத்துக் கொண்டு வல்லபமுடையவன்றன் வல்லபத்தியல்பான காயற்பட்டணம் செய்கப்துல் காதிர் நயினாலெப்பை யாலிம் புலவராலும் அதே ஊர் உவைசு நயினாலெப்பையாலும் காரியம் யாழ்ப்பாணம்-பரிகாரி மரைக்காயர் பகீர்முகியித்தீன் முயற்சியாலும் அச்சிற்பதிப்பித்தவை நிறைவேறச் செய்வித்தான் என்ற விரிவான குறிப்பு தலைப்பு பக்கம் போலவே அச்சிடப் பட்டுள்ளது.

### அச்சிட்டவரும் அச்சடுக்கியவரும்

அச்சகத்தைப் பற்றி, சென்னபட்டணத்திற் புரசபாக்கம் கந்தப்ப முதலியாரது வித்தியாவிலாச அச்சுக் கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது எனும் குறிப்பும் அதனைத் தொடர்ந்து,

சீதமதி தொழுதேத்து முகம்மதரும்
புகழ்ச்சரிதை சீறாத் தன்னை
மேதகைய மென்மலர்கள் பூத்ததென
வித்தியா விலாச கூடப்
போதனையவச் செழுச்சதாற் பதிப்பித்தான்
றிருவளரும், புரச பாக்க
மூதுறிவன் கோனேடு முதலியருள்
கந்தப்ப முதலித் தானே

என்ற வாழ்த்துக் கவியும், பா கோவிந்து நாய்க்கரால் அச்சடிக்கப்பட்டது என்று அச்சடித்தவரின் பெயரைச் சுட்டி குறிப்புகள் காணப்படுகின்றன.

## பாட வேறுபாடுகள்

கடைசிப்பக்க குறிப்புகள் முடிந்தவுடன் பதிப்பாசிரியர் பிழை எனக்கருதும் பகுதிகளை, அதாவது பாடபேதங்களைத் தனியாகப் பட்டியலிட்டு காட்டுகின்றார். ஒரு பதிப்பாசிரியர் படைப்பாளியின் தனியுரிமையில் தலையிடாமல் பதிப்பிக்க வேண்டும். அப்பொழுதுதான் இலக்கியத்தரம் உயரும். எனவே, புலவர்நாயகமும் தனது முதற்பதிப்பான சீறாவில் பாடபேதமாகக் கருதும் சொற்களைத் ( சீர்களை ) தனியாக, பக்கம் ( எண் ) - வரி ( எண் ) - பிழை ( உள்ளது ) திருத்தம் ( இருக்கவேண்டியது ) எனும் பட்டியலை அமைத்துப் பதிப்பித்துள்ளார். ஏறக்குறைய 70-க்கும் மேற்பட்ட பாடபேதங்களைச் சுட்டித் திருத்தங்களைத் தருகின்றார். இதன்கீழ்,

இத்திருத்தலில் சிலசிலவிடத்தில் சிலவினைகளின் ஆக்கமாகத் தோன்றிய எழுத்துக்களையும் சில பொருட்பெயர், உரிப்பெயர்கள் திரிவுபட்டும், அங்ஙனம் தோன்றிய எழுத்துக்களையும் முன்னோர்களால் செய்யப் பட்ட செய்யுட்களிடத்தில், எதுகை தொடையாகக் கிடந்தமையானும், பகுதி வேறாதல் விதியானும், தென் நாட்டார் வழக்கத்தாலும் எடுத்துக்காட்டிடலாம்.

இப்புத்தகங்களைக் கனம்பெறவுவந்து காணிக்கை கையாட்சிக் கொள்பவர்கள் இங்ஙனம் திருத்திய முறை போலவேண்டாது கிடந்த ஒற்றுக்களையும், கோட்டினும், உயிர்மெய்யினும் போந்தம் சுழிகளையும், மேல்கீழ் விலங்குகளையும், உயிர்மெய்யெழுத்துக்களையும், கூரிய கருவியின் உனியானீக்கோடலும் அன்றியுமிவைகள் வேண்டுமிடங்களில் மைதோய்ந்த துகிலிகை நுனியால் அமைத்துக் கோடலும் யாம் விரும்புகின்றனம் இவற்றை நன்குணர்ந்து கொள்க. முற்று பெற்றது - எனப் பதிப்பாசிரியரின் கருத்தையும் அதனை நிலைநிறுத்த தக்க சான்றுகளையும் பாடபேதங்களை நீக்கிப் பிழையின்றிப் பயில வழியையும் கூறிய பாங்கு பாராட்டுதற்குரியது.

### சீறா - பதிப்பின் சிறப்புகள்

சீறாவென்கின்ற புராணம் புலவர்நாயகம் பதிப்பு முதல் இதிரிஸ்மரைக்கார் பதிப்பு வரை பதினைந்திற்கும் அதிகமான பதிப்புகளைக் கண்டுள்ளது. இவை யாவும் முதல் பதிப்பாகிய புலவர்நாயகப் பதிப்பைத் தழுவியே பதிப்பிக்கப் பட்டுள்ளன.

புதிய ஏட்டுச் சுவடிகளைக் கண்டுபிடித்து ஒப்பிட்டு பதிப்பித்த செய்திகள் குறைவாகவே கிடைக்கின்றன.

சீறாப்புராணம் தமிழில் ஏட்டுச் சுவடியிலிருந்து பதிப்பாகிய முதல் காப்பியமாகும்.

******

# 10. THE TAMIL PALM-LEAF MANUSCRIPTS IN THE LIBRARIES OF EUROPE - 1960

**Prof. A. Krishnamurthy**

In the year 1959, when I returned from my Foreign Cultural Service in the former Soviet Union, I travelled through most of the continental countries and the United Kingdom, making a lovely survey of Ancient Tamil Manuscripts (both Palm-leaf as well as paper MSS) in the libraries of Europe.

Now, I believe, it is a turning point in the history of Tamil manuscripts that a national seminar on retrieval of such MSS is in progress here. The learned Director of this International Institute and the learned Curator of Thanjavur Raja Sarfoji Saraswathi Mahal library, fondly wished it that I should address on this occasion on my MSS exploration in Europe, and I owe very much grateful thanks to these scholars.

It is no wonder, I should say, that this "தமிழ்கூறு நல்லுலகம்" has all along been in slumber; and has, now by this seminar, been nudged to wake up for a glimpse over these ancient records on which I laboured, ploughing a lonely furrow for away in Europe and long ago in 1959-60.

For the benefit of scholars and for information and record, I wish to preface this talk, of course, briefly, with the history and motivation behind this, my search for MSS in Europe. In 1956, when the great Soviet leaders Messers Khrushev and Bulgnin made a historic visit to India, a cultural programme was clinched with India. In pursuance thereto, I was in May 1957, alongwith other scholars, deputed by the Government to the Soviet Union for

translation of Literature; translation from Russian into Tamil and from Tamil into Russian. After two years and three months since conditions there emerged non-congenial and contrary to elegance of Tamil writings, I penned down, resigned and returned; returned with a vision through Europe. Rest is history.

While in India before 1957, I had come across with scholars having wide spread belief that huge loads of Tamil MSS had been shifted to Europe and the United Kingdom, by the western emissaries interested in oriental culture and trading.

My chief objective in my European travel was to investigate, to survey and identify such MSS as could be found in the libraries, Universities, Museums and the Cultural Centres of Europe.

Another dynamic factor that motivated me to delve deep into this MSS exploration was that when I occupied the professional chair in the Kumbakonam Government College, which was adorned once by the great veteran Tamilologist Dr. U.V. Swaminatha Iyer, who did a giant's work in searching missing MSS in the foreign lands if and when such an opportunity would smile on me. Dr. U.Ve. Saa did it in India, and I followed it up in Europe, in my own humble way.

Added to this I had two other cherished wishes also,

(i) As on ex-defence services Training Officer in India, I wanted to see the just-ended war-ravaged countries of Europe, just emerging from the ruins of war and to learn their experiences; and

(ii) As an academician, having lived under the Soviet system of democracy studded with secrecy and regimentation, naturally I desired to observe how the open and free sys tems of democracies function in the countries of Europe; that is in order to enrich my comparative knowledge of International affairs and of the shape of things to come in the Indian policy.

Now coming to the point : Survey of manuscripts. After visiting Leningrad, Finland, Sweden, Norway and Denmark, I could now estimate the nature and extent of my lonely venture in other countries in Europe and I addressed a letter, dated 4th November 1959, to the Chief Secretary, Government of Madras, through the Consul-General of India at Hamburg, (West Germany) about my MSS survey in Europe. I thereby sought for the Government order to catalogue the MSS data and treat the work as on deputation to Europe to survey the Tamil MSS and report to Government.

Quoted are the relevant passages of the letter:

"On my return journey from Moscow to India via Europe, I proposed to utilise my travel period for the collection of data of Tamil manuscripts in the possession of the various European libraries. Originally I thought that they might be of a small size and could be covered in 6-8 weeks time. Now from the data which I have collected, I understand, that there about 1500 manuscripts in these libraries. While I bring this fact to the knowledge of the Government, I estimate and submit that a cataloguing survey of the manuscripts of all categories will be possible within a period of six months. I beg to state that, if permitted, I am willing to prepare a comprehensive and scientific catalogue of all these Tamil manuscripts in Europe. I have annexed hereto a specimen description of Two Tamil Manuscripts."

"I commenced my return journey to India on 5th September, 1959, and on the following day I undertook the collection of data concerning Tamil manuscripts in the libraries of Leningrad. In this I was prompted by the sense that my journey in the European countries may be made somehow useful for this literary task in Tamil which immensely deserves a scholar's labour but has not so far been organised or undertaken by anyone else, and that it may not be carried out in the near future as it may involve heavy expenditure if attempted afresh. The period of 6 months required for the work, if permitted, may be calculated from 7th September, 1959."

"I request that necessary instructions and other Government Communications to me may please be sent to the following address before 20th December, 1959"

"SRI. A. KRISHNAMURTI,
C/o. THE SECRETARY,
EMBASSY OF INDIA,
BRUSSELS,
BELGIUM.

Yours faithfully,

(Sd) A. KRISHNAMURTI"

SPECIMEN DESCRIPTION OF A MS ANNEXED TO MY LETTER TO GOVERNMENT - PAPER MS

1) 924 (Serial No.)

2) ROYAL LIBRARY OF BELGIUM (Archives Section) No. "MS.21881".

3)

4) Tamil and French Dictionary.

5) Not traceable.

6) Tamil Dictionary with French equivalents.

7) Tamil and French.

8) Paper. Well--Bound--531 pages.

9) 10" x 8"

10) ____________

11) MS date not traceable. Condition is good. Neatly written. Legible. It was obtained in the Library before 1872 for 8-50 Bolgian Francs.

Contains 531 pages. A page contains 2 columns. No. of entries in each page is approximately 20. Total entries may approximate 10,620.

No introduction or appendix is added. Spelling is often based on collequialism. Idioms, noun declensions and verbal conjugations are occasionally entered.

The Dictionary covers words with initials ranging from to . words with initials from to : Cover only two pages and such words number about 45.

The sixty-year cycle from to is illustrated by quoting the corresponding Christian years from 1747-1807.

It is worth mentioning here that European Libraries possess more than one copy of this dictionary and it also appears that this, being held as a standard dictionary, has been translated into more than one European Language.

DESCRIPTION OF A PALM-LEAF MS

1) 926 (Serial No.)

2) D--a337 (NATIONAL MUSEUM, COPENHAGEN)

3)

4) Ramayana Viruttam

5) Arunachalendira Kavi.

6) Story of the Indian Legendary hero RAMA

7) Tamil.

8) 146-Palm-leaves.

9) 14" x 1"

10) 291 Verses. Poems, mostly of Viruttam metre with a few of Kochakakkali.

| | | |
|---|---|---|
| Balakandam | 36 | Verses |
| Ayodhyakandam | 38 | " |
| Araniyakandam | 27 | " |

| | | |
|---|---|---|
| Kishkindakandam | 28 | " |
| Sundarakandam | 36 | " |
| Yuthakandam | 126 | " |
| | 291 | Verses |

11) Condition is very good; neat and legible. Museum Collections. Every page contains one Stanza, each 4 lines. Pages are numbered. Comparatively a new MS. Should be studied whether this is a work of Arunachala Kavirayar of Rama Natakam. Complete. To read Ramayana in 291 verses is a new advantage of this work, Ms.No.Cod.Tam.2-b (UB) of the Royal Library of Copenhagen is also a short version of Ramayana. Probably these two MSS. might be identical.

Few Photo copies of stanzas from each of these works, if obtained, would be helpful for identification.

The Survey thereupon was proceeded with; and on the whole the cruising of the work, before and after, actually covered a period of full nine months - all through an Europe an Winter. The entire range and contours of the task in the libraries, universities, museums etc., and the countries that were visited will be described in due course:

All the available materials, notes, etc., that were collected during the nine months of survey were mailed by fortnightly despatches to India; and the same were on my return to India, sifted, sorted out, edited and catalogued in five parts and submitted to the Government of Madras early in Sixties.

Now the Scheme and the Picture of the catalogue as prepared, will be presented:

GENERAL SCHEME OF THE CATALOGUE

| | | |
|---|---|---|
| PART I | -- | INTRODUCTION |
| PART II | -- | MSS IN THE UNITED KINGDOM |
| PART III | -- | MSS IN FRANCE |
| PART IV | -- | MSS IN THE COUNTRIES OF EUROPE OTHER THAN THOSE OF THE UNITED KINGDOM AND FRANCE |
| PART V | -- | (a) SUPPLEMENT |
| | | (b) APPENDICES |
| | | (c) INDICES |
| | | (d) ERRATA |

THIS SCHEME IS PREPARED TAKING INTO ACCOUNT THE GENERAL PICTURE OF THE CATALOGUE WHEN PRINTED.

Part-I Introduction - Lost

(To be reproduced early)

PART TWO

CONTENTS

8) NATIONAL LIBRARY OF SCOTLAND, EDINBURGH, SCOTLAND.

9) THE HUNTARIAN LIBRARY OF THE GLASGOW UNIVERSITY, GLASGOW, SCOTLAND.

10) JOHN RYLANDS LIBRARY, MANCHESTER, ENGLAND.

11) THE LIBRARY OF THE CAMBRIDGE UNIVERSITY, CAMBRIDGE.

12) BODLEIAN LIBRARY, OXFORD UNIVERSITY, OXFORD.

## PART THREE

## MANUSCRIPTS IN FRANCE

BIBLIOTHEQUE NATIONALE, PARIS

(NATIONAL LIBRARY OF FRANCE)

## PART FOUR

## CONTENTS

1) GENERAL SCHEME OF THE CATALOGUE.

2) KEY TO THE DESCRIPTION OF MANUSCRIPTS.

3) ROYAL LIBRARY OF BELGIUM, BURSSELS.

4) NATIONALE MUSEUM, COPENHAGEN, DENMARK.

5) THE ROYAL LIBRARY, COPENHAGEN, DENMARK.

6) DANISH STATE ARCHIVES, COPENHAGEN, DENMARK.

7) BIBLIOTHECA APOSTOLICA VATICANA, VATICAN CITY, ITALY.

8) BIBLIOTHECA VALLICELLIANA, ROME.

9) THE LIBRARY OF THE GERMAN ORIENTAL SOCIETY, HALLE, EAST GERMANY.

10) FRANCKE STATE ARCHIVES, HALLE, EAST GERMANY.

11) THE LIBRARY OF THE MARTIN LUTHER UNIVERSITY OF HALLE-WITTENBURG, HALLE, EAST GERMANY.

12) LUTHERM MISSION CHURCH MUSEUM, LEIPZIG, EAST GERMANY

13) LUTHERM MISSION CHURCH LIBRARY, LEIPZIG, EAST GERMANY.

14) STATE AND UNIVERSITY LIBRARY, HAMBURG, WEST GERMANY.

15) THE LIBRARY OF THE LEIDEN UNIVERSITY, LEIDEN, NTEHERLANDS.

16) THE LIBRARY OF THE AMSTERDAM UNIVERSITY, AMSTERDAM. (DITTO.)

17) ARCHIVES OF THE FOREIGN OFFICES, MINISTRY OF FOREIGN AFFAIRS, THE HAGUE, NETHERLANDS.

18) UPPSALA UNIVERSITY LIBRARY, SWEDEN.

19) THE ROYAL LIBRARY, STOCKHOLM, SWEDEN.

20) ETHNOGRAPHICAL MUSEUM, STOCKHOLM, SWEDEN.

21) THE LENIN STATE LIBRARY, MOSCOW, U.S.S.R.

22) THE LIBRARY OF THE LENINGRAD UNIVERSITY, LENINGRAD.

23) THE LIBRARY OF THE ORIENTAL INSTITUTE OF THE U.S.S.R. ACADEMY OF SCIENCES, LENINGRAD, U.S.S.R.

24) ACADEMY OF SCIENCES OF ARMENIA, EREVAN, U.S.S.R.

# PART FIVE

## CONTENTS

(B) The G.O. of the Government of Madras in approval of the above proposal with necessary sanctions.

(C) The Tour Programme of the Officer in the Countries of Europe in connection with the manuscripts work

(including his private tours).

(D) My letter to the Government of Madras regarding a Broadcast-Talk over BBC. London, on "Tamil in Britain".

(E) The Text of the Broadcast-Talk over BBC, London.

(F) The G.O. of the Government of Madras approving the act of the Broadcast-Talk.

(G) A note on certain Pieces of Photographs to be added to the Catalogue, when printed.

(H) A note on the Manuscripts in the Other South Indian Languages in the European Institutions.

7. INDEX TO THE INSTITUTIONS IN EUROPE POSSESSING TAMIL MANUSCRIPTS.

8. INDEX TO THE TITLES OF THE MANUSCRIPTS DE SCRIBED IN THE CATALOGUE
(Transferred to Part One : Introduction)

Travel of these MSS to Europe

spread over a period of the past three centuries, Tamil MSS have travelled to Europe under various situations, most of them being carried by the Christian Missionaries during and after their Missionary services in the Tamil Country. Some of the MSS have been carried by the British and French Civil Servants, some by Western merchants, some by those who learnt Tamil for their own various avocations and some as mementoes by the visitors to this country.

**Location and identification of Tamil MSS in the European Libraries**

Generally MSS in Tamil and other Indian and Tibetan languages are kept seperated in these libraries but under the section "MSS Indian" - In some places the library staff could not identify the bundles language-wise, and I had to sort out the matter for myself. But the bundls were kept, maintained by them smartly. The library personnel in most centres were cordial, co-operative, and helpful, particularly in the context of myself being all too busy and hectic in leafing through the bundles everywhere.

Thematic categories of the Palm-leaf MSS retrievable in Europe

Broadly speaking, major portion of the Palm leaf MSS belong to the branch of Literature; next in order are of Siddha Medicine and Astrology. Others are fragments.

I was also interested in searching whether any literary work that is lost for ever in Tamil Nadu could be discovered in any one of the libraries in the whole of Europe. But that venture proved to be in vain.

There have been instances in India where certain MSS in Sanskrit and Pali were not traceable and were believed as permanently lost in India, were later discovered in other countries like China and countries having had ancient cultural/religious contacts with India. Such MSS in those cases I learn, have been found in original or in translations or in the form of transcriptions. I have still a strong hope that atleast quite a few ancient Tamil works, believed, to be not extant in this country and lost for ever could be possibly traced atleast in parts, in some other countries in the Far East or in the S.E. Asian Countries.

**Palm-leaf and paper MSS in the Survey**

My survey was to encompass both Palm-leaf and paper manucripts as well; and my catalogue comprises both. A large sec-

tion of collection in the British libraries are of paper MSS; where as the French collections are all mostly Palm-leaf MSS, very rich collections indeed.

**MSS in Britain and those in France**

About 500-600 MSS in Britain remain distributed among various libraries in England, Scotland and Ireland. These libraries prefer to possess them individually though at different centres in the country. They take pride at that. But on the contrary, 500 to 600 MSS are all collected centrally in France and housed in the Bibliotheque Nationale, Paris, that is the National Library of France.

Next, the Tamil MSS of the Bodleian Library at Oxford deserve a special mention, since these MSS had been described by Rev. Dr. G.U. Pope himself who once tought Tamil Language and Literature to British Students, particularly the Civil Servants who were designated to hold optional positions in India.

The Catalogue is titled as "CATALOGUE OF TAMIL MSS IN THE BODLEIAM LIBRARY".

Now I have taken up the description this Dr. Pope's catalogue itself for information and record:

1) 363

2)

3)

4) Catalogue of Tamil Manuscripts in the Bodleian Library.

5) Dr. G.U. Pope, D.D.

6) A descriptive catalogue of Tamil Manuscripts.

7) English.

8) Paper : 140 Pages : (At the end about 20 pages are blank).

9) 16" x 12"

10) Prose

11) The title shown against Col(4) above is written as it is on the First Page of the catalogue. pp.220-221 of the "History of the Bodleian Library 1845-1945" by Craster contain the following passage regarding his catalogue: "Mention has already been made of the Hundred Tamil Manuscripts bought for the Bodleian in 1860. A Catalogue of these as well as of the Library's manuscripts in those other Dravidian Languages which have survived in South India from Pre-Aryan times, was made by the Rev. Dr. G.U. Pope and accepted for publication by the University Press, but never reached a stage to justify printing".

Page 112 of the above work says: "The Bodleian made the beginning of a collection in this Dravidian tongue by buying a hundred Tamil Manuscripts at an auction sale at Hodgson's in 1860 for the small sum of £30".

This catalogue of Dr. G.U.Pope deals with about 400 Palm-leaf MSS; only a small section of them pertain to major works of literature whereas others are minor prabandhams or fragments.

Here in this connection I should make mention of one crowning item in my programme, that is, my visit to the Tomb of Rev. Dr. G.U. Pope at Oxford on the New Year Day the 1st January 1960. One Mr. K. Marshall, who received me earlier on 22nd February in the London airport as was scheduled by the British Council, London, helped on my request to guide me to the Sacred Tomb of Dr. Pope, where it was a revelation and a surprise to me, and I was overwhelmed to see the 'Popes Tomb' indeed. The tomb was marble-built but muffled with shrubs and creepers in the St. Sepulchre Cemetery in the Walton Street of Oxford city.

I regretted the Sacred Tomb remained so much covered with shrubs and creepers. Further the Cemetary itself had been closed since it had outreached its capacity to receive anymore de-

parted Souls; but it was being watched by a couple of guards for vigil and sanctity.

Departing, I saluted, bowed and returned.

During my second visit to London in February 1960, as suggested by friends, I recorded a talk with BBC on "Tamil and Tamil MSS in Britain" which was broadcast on 15th May that year when I happened to be in Belgrade, Yugoslovia. This talk was published later in in the same year at Thanjavur.

MSS USEFUL FOR TEXTUAL COMPARISON
WHEN EDITING

Most of these Palm-leaf MSS have all been printed and published already in Tamil Nadu. Despite these publications, these European MSS are, and will be certainly useful when editing and re-editing the texts for more accurate versions of the texts. This pertains to the study of textual variorum - essential for precision and accuracy in editing the texts.

To Quote one instance:

"Kurunthogai" - the Tamil anthology was recently published by the Thanjai Tamil University. Names of Five Poets who authored some five Poems in the Text were not traceable in the first edition of Kurunthogai by the great Scholar Dr. U.V. Swaminatha Iyer. But the names of those 5 poets were traced in the Kurunthogai Text, obtained by the University from the British Museum, London. (But surprisingly, the same 5 names were found in the second edition of the same work done by Dr. U.Ve. Saa Avergal in the later years). Anyway, if the second edition of Dr. Ayer also had been published without the names of these Poets, for reasons of Permanent loss or missing, this London MSS would have been the only source for retrieving the names of these great poets. The serial Nos. of those poems are: 24, 25, 32 and 355.

It is relevant here to reproduce my description of the said Kurunthogai text of British Museum, London:

1) 50 (Serial No.)

2) O.R.2726 (BRITISH MUSEUM, LONDON)

3) குறுந்தொகை மூலம்.

4) 'Kurunthogai' - text only.

5) An Anthology of poems composed by numerous poets.

6) Early Tamil Poetry on the theme of love.

7) Tamil.

8) Paper : 118 pages.

9) 10" x 7½"

10) 402 verses--complete with all relevant partionlars of such texts of this kind.

11) MSS is well bound. Neatly written. Text is complete. It is written at the end:xxxx

The learned editor of this volume of the Tamil University has furnished in his critical introduction to this edition all the description of the said MSS as found in my catalogue (Section of the United Kingdom MSS).

Further this London MSS has been referred to and quoted profusely, running into hundreds of vareorum quotes in the appendix part of the New Edition, Thanjavur. Such instances are telling examples to the utility of the foreign MSS, even if they had already been published in India or elsewhere.

A NOTE ON TAMIL MSS IN GERMANY

There are quite a good number of MSS in the Francke State Archives, Halle, Martin Luther University of Halle - Wittenburg, and the Lutheran Mission Church Museum, Liepzig - all centres of East Germany.

Rev. Dr. R. Lehmann, Professor of Theology in the Martin Ruther University - Halle, Wittenburgh, was very must inter-

( *Ancient Divisions of Tondamandalam* ) என்னும் காகிதச் சுவடிகள் மிகவும் குறிப்பிடத்தக்கன. தமிழ்நாட்டின் முந்தைய தொண்டைமண்டலம், கோட்டம், நாடு, நத்தம் போன்ற பெயர்களில் பிரிக்கப்பட்டதும்; அதன் எல்லை, அளவு போன்றவையும் விளக்கமாக இவற்றில் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக அம்மூர்க்கோட்டம் முதல் வேலூர்க் கோட்டம் வரை 107 பக்கங்களில் விளக்கப்பட்டுள்ளன. சுமார் 400 பக்கங்களில் இவ்வாறு 24 கோட்டங்களும் விளக்கப் பட்டுள்ளன. ஒவ்வொரு இடங்களிலுமுள்ள பழங்குடிகள், கிளை சாதிகள், இருப்பிடம் ( *tribes, Sub-castes, locality* ) போன்றவை அனைத்தும் விளக்கப்பட்டுள்ளதால் இவை தமிழக வரலாற்றை ஆராயும் மாணவர்களுக்கு மிகவும் பயனுடையதாகும்.

இதே போன்று வரி பற்றிய தென்னிந்திய சொற்களின் பட்டியல் ( *A list of Revenue Terms of South India* ) என்னும் தலைப்பிலான ஒரு காகிதச் சுவடி 113 பக்கங்களில் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக எழுதப்பட்டுள்ளது. இதில், பழைய குண்டூர் மாவட்டம்; மதுரை, ராமநாதபுரம், திண்டுக்கல், சிவகங்கை போன்ற மாவட்டங்களின் சொற்கள் பல பட்டியலிடப் பட்டுள்ளன.

கர்நாடக ராசாக்கள் சரித்திரம் என்னும் தலைப்பிலான ஒரு ஓலைச்சுவடி 159 ஏடுகளைக் கொண்டுள்ளது. இதில், கர்நாடக மாநில வரலாறு பற்றியும் பல செய்திகள் உள்ளன. தமிழ் உரைநடையிலமைந்த இச்சுவடியில் ஆலிங்கீர் பாதுஷா காண்டம், உமாயூன் பாதுஷா காண்டம் எனப் பல காண்டங்கள் உள்ளன. இவற்றை ஆராய்ந்து வெளியிட்டால் தென்னிந்திய வரலாற்றுச் செய்திகள் பல தெளிவாகலாம்.

சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன்பு எழுதப்பெற்ற சோதிடச் சுவடிகளும் இங்குள்ளன. ஜதாகபாரணம் என்பன போன்றவை அவை. குமாரசுவாமி சோதிடம் என்னும் சோதிடச் சுவடியின் இறுதியில் குமார சுவாமி சோதிடம் முற்றும். காண்டம் 14, படலம் 53, விருத்தம் 431, திருவாரூர் மாசிலாமணி தேசிக பாரசேகர புத்திர சிகுருநாத பண்டாரம் எழுதினது எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து இச்சுவடி

தமிழகத்திலிருந்து எடுத்துக் செல்லப்பட்டது என்பது புலனாகும்.

இலண்டனிலுள்ள வெல்கம் மருத்துவ ஆய்வு நிறுவனத்தில் ( *The Welcome Medical Research Institute, London* ) சுமார் 40 தமிழ் மருத்துவச் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அத்துடன், தொடக்க கால மாணவர்கள் எழுதிப் பழகிய பல ஓலைச்சுவடிகளும் இங்குப் பாதுகாக்கப் பட்டுள்ளன.

இலண்டனிலுள்ள பிரிட்டன் அருங்காட்சியகத்தில் ( *British Museum, London* ) பல தமிழ்ச் சுவடிகள் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. இவற்றுள் பல்வகைப் பொருளில் சுவடிகள் உள்ளன.

உரிச்சொல் நிகண்டு, பிங்கல நிகண்டு போன்ற நிகண்டுச் சுவடிகள் இங்குள்ளன. 1879-ஆம் ஆண்டு தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திலிருந்து பிரதி செய்யப்பெற்ற பிங்கல நிகண்டில் 2,639 பாடல்களும் உள்ளன. இப்பிங்கல நிகண்டு மகாகனம் பொருந்திய டாக்டர் பர்னல் துரையவர்கள் கட்டளைப்படி எழுதப்பட்டு மேற்படி துரையவர்கள் முன் மதுரைப் பிள்ளையால் பார்வையிடப் பட்டது என்ற குறிப்பும் இதில் எழுதப்பட்டுள்ளது. இதே போன்று குறுந்தொகை - மூலம் மட்டுமுள்ள சுவடியிலும் எழுதப்பட்டுள்ளது.

தொல்காப்பியம், நன்னூல் போன்றவை உரையுடன் எழுதப்பெற்ற சுவடிகள் இங்குள்ளன. சிவப்பிரகாசப் பெருந்திரட்டு என்னும் நூலில், "சகாத்தம் 597-இல் செல்லா நின்ற யுவ வருட மாசியும் திரட்டி முடிந்தது பெருந்திரட்டு என்றறிக" என்ற குறிப்பு உள்ளது.

நேமிநாதம் உரையுடன் எழுதப் பெற்றுள்ளமையும் குறிக்கத் தக்கது. இச்சுவடியில் "*Neminadam, A Tamil grammar of a Jain; Eluthu and Solladikaram only; Venba text and commentry. This is quoted in the Virasozhiyam. The author ( Neminatham lived at Magilapuri.....*" ) என டாக்டர் பர்னல் அவர்களே தம் கைப்பட குறிப்புகளை எழுதியுள்ளார்.

1844-இல் எழுதப்பெற்ற யதீந்திரப்பிரவண பிரபாவை என்னும் வைணவ நூலில் உடையவர் இராமானுஜாச்-சாரியார் பற்றிய குறிப்புக்கள் உள்ளன.

இதே போன்று, பவழக்கொடி மாலை, திருவாதவூரார் புராணம் உரையுடன், நைடதம், பெரியபுராணம், பேரகத்தியம், கம்பராமாயணம், காசி காண்டம், நாலடியார், திருக்குறள், திருப்புகழ், தருமர் அசுவமேத யாகம், சேந்தன் திவாகரம், சிவவாக்கியர் பாடல், சிவஞானபோதம், வில்லிபாரதம், திருவாசகம், சம்பந்தர் தேவாரம் போன்ற பல தமிழ்ச் சுவடிகள் இங்குள்ளன.

ஆத்திசூடி புராணம் உரையுடன் கூடிய சுவடி ஒன்று இங்குள்ளது. இச்சுவடியின் இறுதியில், செவ்வாய்ப் பேட்டையிலிருக்கும் சோழ பாண்டிய செட்டியார் குமாரன் அய்யாசாமிச் செட்டி தனக்குப் படிக்க வேணுமென்று எழுதின ஆத்திசூடி புராணம் எழுதி நிறைவேறியது என்னும் குறிப்பும் காணப்படுகின்றது.

மாணிக்கவாசரின் திருச்சிற்றம்பலக் கோவையார் நானூறு பாடலுக்குமான உரைகள் அடங்கிய சுவடி ஒன்றும் இங்குள்ளது. சுமார் முன்னூறு ஆண்டுகட்கு முன்பு எழுதப்பட்ட இச்சுவடியில் பல புதிய உரைகளைக் காணலாம். காட்டாக, "சிறைவான் புனற்றிலைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளும் உறைவான்" என வரும் பாடலடிகளுக்கு, "அணைகோலப்பட்ட நீராலே சூழப்பட்ட பெரும்பற்றப் புலியூரில் திருச்சிற்றம்பலமாகிய துய்ய விடத்திலும் என் சிந்தையாகிய தூயதல்லாத இடத்திலும் ஒக்க வாழுகிறான்" என அமையும் உரைப்பகுதிகள் அறியத்தக்கன.

சுவாமிநாதம் மூலபாடம் என்னும் சுவடி இங்குள்ளது. "பொதிகை நிகண்டு எழுதிய சிவசுப்பிரமணியரின் மாணாக்கரும் கல்லிடைக்குறிச்சி (திருநெல்வேலி) யில் இருந்தவருமாகிய ஒருவர் எழுதியது" என்ற குறிப்பை டாக்டர் பர்னல் அவர்கள் இதில் குறித்துள்ளார்.

இவ்வாறு இங்குள்ள பல சுவடிகளும் டாக்டர் பர்னல் அவர்களால் சேகரிக்கப்பட்டவை என்பது குறிக்கத்தக்கதாகும்.

கிருத்துவ சமய நூலான ஆத்ம நிர்ணயம் என்னும் பெயரிலும் ஒரு உரைநடை நூல் இங்குள்ளது. பரிசுத்த மத்யேயு 5வது அதிகாரம் எழுதிய சுவடியும் இங்குள்ளது.

1829-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 29ஆம் தேதி தஞ்சாவூரில் எழுதப்பட்ட ஒரு சுவடியில் இந்து சமயத்திலுள்ள குறைபாடுகள் பற்றியும், கிருத்தவர்களின் பிரசாரம் பற்றியும் எழுதப்பட்டுள்ளன. "சாதித் திருத்தலின் பைத்தியம்" என்னும் இச்சுவடியின் முதற்பாதி ஆங்கிலத்திலும் பிற்பாதி தமிழிலும் எழுதப்பட்டுள்ளது. இதே போன்று புதிய ஏற்பாடு பற்றிய ஏடுகள் பல இங்குள்ளன.

17ஆம் நூற்றாண்டிலிருந்த சீகன்பால்கு என்பவர் திரட்டிய தமிழ்நூல் அட்டவணை ( A Bibliography of Tamil books ) ஜெர்மன் மொழியில் எழுதப்பட்டுள்ளது மிகவும் பயனுடையதாகும். இதே போன்ற ஏடுகள் கிழக்கு ஜெர்மனியிலும் கோபன்ஹேகனிலும் உள்ளன.

இலண்டனிலுள்ள மற்றொரு நூலகத்திலும் ( The Library of the Royal Asiatic Society, London ) பல தமிழ்ச் சுவடிகள் உள்ளன. தென்னிந்தியா மற்றும் இலங்கையிலிருந்து பல சுவடிகள் இங்கு வந்துள்ளன.

ஈழத்தைப் பற்றிய ஒரு வரலாற்றுக் குறிப்பு அடங்கிய சுவடியில், இந்தத் தமிழைப் பாடினது செந்தியப்பன் குமாரன் முத்துராயரென்னும் கவிராயன். இதல்லாமல் தமிழ் வருஷம் 770ஆம் ஆண்டு புவனேக வாகு எனப்பட்டவன் யாழ்ப்பாணத்திலே ஒரு பட்டண நகரினை உண்டுபண்ணிக் கந்தசாமிக்கு ஒரு கோயிலும் கட்டி வைத்தான் என எழுதப்பட்டுள்ளது.

இதே போன்று கண்டி, திரிகோணமலை, யாழ்ப்பாணம் போன்ற இலங்கை நகரங்களின் வரலாறு பற்றிய பாடல்கள் மற்றும் உரைநடைகள் கல்வெட்டுப்பாட்டு என்னும் பெயரில் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டுள்ளன. இலங்கைச் சுவடியொன்றினிறுதியில், இலகிய சகாத்தம் எண்ணூற்றெழுபதாமாண்டு எல்லையிலா பொலிமாலை மார்பனாம் புவனேகவாகு நவமிகு யாழ்ப்பாணத்தில் நகல் கட்டுவித்து நல்ல குலவிய கந்தனார்க்குக் கோயிலும்

புரிவித்தானே என்று குறிக்கப்பட்டுள்ளது. இதுபோன்ற சுவடிகள் மேலும் ஆராயத்தக்கன.

சுமார் 325 பக்கங்களில் எழுதப்பட்ட 2,200 பாடல்கள் அடங்கிய அகத்தியர் வைத்தியம் என்னும் சுவடி, காரைக்குடி சங்கர நாராயண வாத்தியார் என்பவரால் எழுதப்பட்ட தாகும். சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன்பு இது எழுதப் பட்டுள்ளது. இதேபோன்று, சீரங்க கோயிலொழுகு போன்ற தலைப்பிலான இங்குள்ள சுவடிகள் சிலவும் குறிப்பிடத்தக்கன.

கிளேனியஸ் ( Rev. G. Glenies ) என்பாரின் சமய போதனை மற்றும் கிறித்துவ வேதத்தின் புதிய ஏற்பாடு ( New-Testament ) போன்ற சுவடிகளும் தமிழில் எழுதப் பெற்று 1828இல் இந்நூலகத்திற்கு அளிக்கப்பட்டுள்ளன.

**ஸ்காட்லாந்து**

ஸ்காட்லாந்திலுள்ள எடின்பரோ பல்கலைக்கழக நூலகத்திலும் ( The Library of the Edinburgh University, Edinburgh, Scotland ), தேசிய நூலகத்திலும் ( National Library ) கிளஸ்கோ பல்கலைக்கழக நூலகத்திலும் ( The Huntarian Library of the Glasgow University ) பல தமிழ்ச் சுவடிகள் உள்ளன.

திவாகரம், சூடாமணி நிகண்டு, மூதுரை, நீதி வெண்பா போன்ற நூல்களுடன், மத்தேயு ( St. Mathew ), மார்க் ( St. Mark ), யோவான் ( St. John ), லூக்காஸ் ( St. Lucas ) ஆகியோர் எழுதிய சுவிசேஷங்கள் அடங்கிய சுவடிகள் தமிழில் இங்குள்ளன.

தமிழில் இறை வணக்கம் என்ற பெயரில் சில சுவடிகள் இங்குள்ளன. Fort St. George, 1728 என்ற குறிப்பும் இதில் உள்ளது. அக்காலத்தில் இங்கிருந்த தமிழ் மற்றும் தெலுங்கு போன்ற மொழியறிந்த மக்களுக்கு அளிப்பதற்காக எழுதப்பட்ட சுவடிகளாக இவை விளங்குகின்றன.

**கேம்பிரிட்ஜ்**

கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக நூலகத்தில் ( The Library of the Cambridge University ) கிருத்துவ சமயம்

தொடர்பான சுவடிகளுடன் பல தமிழ் இலக்கியச் சுவடிகளும் உள்ளன. தருமர் அசுவமேத யாகம், வில்லிபாரதம், பழமொழி விளக்கம், மயில் ராவணன் வதம், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, இராமாயண வசனம், மூதுரை, நீதிவெண்பா, பெரியவாச்சான் பிள்ளை உரை, ஆத்திசூடி, சிவஞானசித்தி, சோதிடம், மந்திரம் போன்ற பல நூல்கள் இங்குள்ளன.

தரங்கம்பாடித் திருச்சபையில் வழங்கும் தேவாலய முறைமைகளுடைய விளக்கம் தமிழிலும் இலத்தீன் மொழியிலுமாக 1733இல் எழுதப்பட்ட சுவடியும் இங்குள்ளது. "சருவேசனை அறிவதற்கான அறிக்கையினுடைய சல்லாபடி" என்னும் கிருத்துவ சமயப் பிரசார நூல் சுமார் 343 ஏடுகளில் 27 அத்தியாயங்களாக எழுதப்பட்டுள்ளது. ஆசிரியர் பெயர் அறியப் பெறாத இத்தகைய சுவடிகள் மூலம் அக்காலத்தில் பரவிய சமயப் பிரசாரம் பற்றி ஆராயலாம்.

### ஆக்ஸ்போர்டு

ஆக்ஸ்போர்டிலுள்ள பாட்லியன் நூலகத்தில் (Bodleian Library Oxford) மிக அதிகமான தமிழ்ச்சுவடிகள் இருக்கக் காணலாம். பலவகைப்பட்ட தமிழ் நூல்கள் இங்குச் சுவடிகளாக உள்ளன. எடுத்துக்காட்டாக, கஞ்சன் அம்மானை, கூர்ம புராணம், கந்தபுராணம், நல்லாபிள்ளை பாரதம் போன்றவை முழுமையாக இங்குள்ளன. சிவப்பிரகாசம் மூலமும் உரையும், சிவஞானபோதம் உரையுடன், சிவஞான சித்தியார், தத்துவக்கட்டளை, உடலறி விளக்கம், நாலுமந்திரி கதை, தத்துவ வகை, பாம்புச்சித்தர் பாடல், குதம்பை, அகப்பேய்ச் சித்தர் பாடல்கள், ஞானத்தாலாட்டு, ஞான இரங்கல், பத்திரகிரியார் புலம்பல், பட்டினத்துப்பிள்ளை பாடல், புலம்பல், சம்பிரதாய விளக்கம், ஞானானந்தம், திருக்குறள் உரை, மூதுரை, சுந்தர பாண்டியன் செந்தமிழ், திருச்சிற்றம்பலக் கோவை, திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், நீதி வெண்பா உரையுடன், காசிக்காண்டம் எனப் பல சுவடிகள் இங்குள்ளன.

திருவிளையாடல் புராணம், கூர்ம புராணம், சிவராத்திரி புராணம், திருவண்ணாமலை ஈசன் பேரில் வண்ணங்கள், வேலாயுத சதகம், உபதேச காண்டம், நைடதம்,

தால விலாசம், கபோத வாக்கியம், விறலிவிடு தூது, குருசேத்திரக் கதை, சித்தரபுத்திரனார் கதை, இராமாயண வசனம், வேதாளக் கதை, அளகேசராசன் கதை, பணவிடுதூது, சரஸ்வதி மாலை, திருமந்திரம், சூடாமணி நிகண்டு, அண்டகோசப்படலம், புவனகோசம், அருணாசல புராணம், சேந்தன் திவாகரம், கயிலாயபுராணம், திருவெம்பாவை, அபிராமி அந்தாதி, கிருஷ்ணன் பேரில் வண்ணம், பிள்ளையார் கதை, பிள்ளையார் மாலை, இரகுவம்சம், சௌந்தரியலகரி, சிவவாக்கியம், சத்திபுராணம், கந்தர் அலங்காரம், கந்தரனுபூதி, தண்டலையார் சதகம், திருப்புகலூர் அந்தாதி, சிறுத்தொண்டர் கதை, பசுவின் கதை, அருணகிரி வெண்பா, மணவாளநாராயண சதகம் என இவ்வாறு பல தலைப்புகளிலான சுவடிகள் இங்கிருப்பது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.

சந்தான தீபிகை, தாண்டவமாலை, விதான சாத்திரம், மரண காண்டிகை போன்ற சோதிட நூல்களும், தன்வந்திரி சிந்தாமணி, அகத்தியர் குருநாடி, சட்டைமுனி நிகண்டு போன்ற தமிழ் மருத்துவச் சுவடிகளும் இந்த நூலகத்திலுள்ளன.

இந்நூலகத்திலுள்ள இந்துஸ்தானி-தமிழ் சொற்-றொகுதி மிகவும் பயனுடையதாகும். இதேபோன்று, எல்லீஸ் துரையின் கையெழுத்துச் சுவடிகளும், டாக்டர் ஸ்மித்தின் கையெழுத்துச் சுவடிகளும் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும்.

1753-இல் எழுதப்பட்ட 'திறக்கப்பட்ட தரகம்' என்னும் காகிதச் சுவடியில் கிருத்துவப் பாதிரிமார்கள் சிலரின் வாழ்க்கை வரலாறுகள் குறிக்கப்பட்டுள்ளன. 1668-இல் எழுதப்பட்ட சூதபுராணம் மிகப் பழமையான காகிதச் சுவடியாகும்.

1731-இல் எழுதப்பட்ட சுவிசேஷ விரித்துரை என்னும் காகிதச்சுவடியில், சங்கோபாங்கதிகன் என்னும் இலங்கை குருமார் பற்றிய செய்திகளைக் காணலாம்.

வீரமாமுனிவரின் தேம்பாவணி உரையுடன் கூடிய சுவடியாக, மிகவும் அழகான முறையில் எழுதப்பெற்று இங்குப்

பாதுகாக்கப்பட்டு வருகிறது. இதே போன்று, வேதியர் ஒழுக்கம், ஆறுலட்சண விளக்கம் ஆகிய நூல்களும் குறிப்பிடத் தக்கன.

உரோமன் கத்தோலிக்கராக மாறியவர்களுக்கு ஒரு கைநூல் ( *A Manual of devotion form Roman Catholic converts* ) 1750-இல் எழுதப்பட்டதாகும். பைபிள் பற்றிய ஆதம் சார்லஸ் எழுதிய நூலின் சுருக்கம், கத்தோலிக்க கிறித்தவர்க்கான உபதேசங்கள் போன்றவை எளிய தமிழ் நடையில் எழுதப்பட்ட சுவடிகளாக இங்கு உள்ளன.

பாட்லியல் நூலகத்திலுள்ள தமிழ்ச் சுவடிகள் அனைத்திற்கும் டாக்டர் ஜி.யு. போப் அவர்கள் விளக்க அட்டவணைகளைத் தயாரித்துள்ளார். இந்த அட்டவணையின் முகப்பில் இந்நூலகத்திற்கு வாங்கப்பட்ட சுவடிகள் பற்றிய குறிப்புகள் தரப்பட்டுள்ளன. 1860-இல் நடைபெற்ற ஏலத்தில் சுமார் 100 தமிழ்ச் சுவடிகள் விலைக்கு வாங்கப் பெற்றதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

**ரோம்**

ரோம் நகரிலுள்ள ( *Bibliotheca Postolica Vaticana, Vatican city, Rome* ) நூலகங்களிலும் தமிழ்ச் சுவடிகள் உள்ளன. சம்பெதுறு காதை (சுத்தமான சடம் பெதுறு புராணம்) அதாவது, செயின்ட் பீட்டர்ஸ் காதை ( *Canto on St. Peter* ) என்பது முழுவதும் ஓலைச்சுவடியில் எழுதப் பட்டுள்ளது. இதே போன்று அருணாசல புராணம் போன்ற சுவடிகளும் உள்ளன.

போர்த்துக்கீசிய மொழியில் அமைந்த தமிழ் இலக்கணச் சுவடிகள் குறிப்பிடத்தக்கன. 1738-ஆம் ஆண்டுவாக்கில் பெஸ்கி அவர்களாலேயே எழுதப்பெற்ற தமிழ்-போர்த்துகீசிய அகராதி போன்றவையும் குறிப்பிடத்தக்கன.

இங்குள்ள இலத்தீன்-மலையாள இலக்கணம் உள்ள சுவடிகளும் ஆய்வுக்குரியன.

ரோம் நகரிலுள்ள மேலும் சில தமிழ்ச் சுவடிகள் இன்னும் இனம் காணப்படாத நிலையிலுள்ளன.

## டென்மார்க்

டென்மார்க்கிலுள்ள கோபன்ஹாகன் நூலகத்திலும், அருங்காட்சியகத்திலும் ( *The Royal Library and Nationale Museum, Copenhagen, Denmark* ) குறிப்பிடத்தக்க அளவு தமிழ்ச் சுவடிகள் உள்ளன. இராமாயண விருத்தம், சச்சிதானந்த விளக்கம், குறி சாஸ்திரம், திருக்குறள்-திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர் உரை, கணக்கதிகாரம் போன்றவை அருங்காட்சியகத்திலுள்ளன.

கந்தபுராணக்கதை, மார்க்கண்ட புராணம், பஞ்சதந்திரக் கதை, விக்கிரமாதித்தன் கதை, வேதாளக்கதை, நளச்சக்கரவர்த்தி கதை, நாலுமந்திரி கதை, வீரமாறன் கதை, தேரூர்ந்த சோழன் கதை, பெருமாள் அம்மானை, பரபாசுரன் கதை, குசலவன் கதை, நைடதம், மணவாள நராராயண சதகம், திருப்புகழ், அரிச்சந்திர புராணம், அம்பிகை மாலை, திருச்சதகம், திருப்பள்ளியெழுச்சி, திருக்குறள், உலகநீதி, ஆத்திசூடி, மூதுரை, சித்தர் பாடல், சூடாமணி நிகண்டு, சேந்தன் திவாகரம், வைத்தியத் திரட்டுச் சிந்தாமணி, திருமூலர் திருமந்திரம் போன்றவை ராயல் நூலகத்திலுள்ளன.

மிஷினரிகளின் வேலையைப் பற்றி ஐரோப்பாவின் பல்வேறு இடங்களுக்கு எழுதிய 18 கடிதங்கள் ( *Father Paul and other missionaries* ) முழுவதும் தமிழில் எழுதப்பட்ட ஓலைச்சுவடிகளாக இங்குள்ளன. மிக நுண்ணிய எழுத்துக்களாலான இவை அருமையாக எழுதப்பட்டுள்ளன. இத்தகைய கடிதங்களை மேலும் ஆராய்ந்தால் அக்காலத்தில் தமிழகத்தில் இருந்த மிஷினரிகளின் நிலை பற்றியும் தமிழகப் பண்பாடு மற்றும் சமய நிலைகள் பற்றியும் தெளிவான கருத்துகள் வெளியாகலாம். சுவடிகளில் எவ்வளவு நுண்மையாக எழுதவியலும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இச்சுவடிகளைக் காட்சிப்படுத்தலாம்.

இந்திய-உரோம எழுத்திலக்கணம் ( *Indo-Roman orthography* ) இலத்தீன்-இரஷ்ய, தமிழ்-தெலுங்கு-கன்னட, சிங்கள மொழிகளில் ஒப்பியல் அட்டவணை ( *Comparative vocabulary of Latin-Russian-Tamil-Telugu-Kannada and Sinhalese Languages* ), தமிழ்-ஐரோப்பிய சொற்றொகுதி ( *Tamil-Eu-*

ropean Vocabulary); தமிழ் மொழி, சமயம் பற்றிய ஆய்வு (A Study of Tamil language, religion, etc.,) போன்ற சுவடிகள் டேனிஷ் மொழியிலேயே எழுதி வைக்கப்பட்டுள்ளன. இவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டால் பல செய்திகள் தெளிவாகலாம்.

இதே ராயல் நூலகத்திலுள்ள ஒரு கிருத்துவத் தொண்டரின் நாட்குறிப்பு என்னும் சுவடி சின்னப்பன் என்பவரால் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்டுள்ளது. மதம் பரப்ப அந்நாளில் நிகழ்ந்த உரையாடல்களை அப்படியே ஓலைச்சுவடிகளில் அவர் எழுதி வைத்துள்ளார். மேலும், இங்குள்ள பிரஞ்சு-தமிழ் அகராதி 1734-இல் எழுதப்பட்டதாகும். இதுவும் இன்னும் அச்சிடப்பட்டதாகத் தெரியவில்லை.

இந்நூலகத்திலுள்ள தமிழ்-அராபிய வாசகங்கள் (Treats of the Islamic faith) என்னும் காகிதச் சுவடி 1727-இல் கிறிஸ்டோபர் தியோடர் வால்டர் (Christopher Theodore Waltaeri) என்பவரால் எழுதப்பட்டதாகும். இதில் பல அராபிய வாசகங்களுக்கு நேரான தமிழ் வாசகங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இதுவும் மேலும் ஆய்வுக்குரியதாகும்.

பேராசிரியர் இரஸ்க் (Prof. Rasmus Rask) அவர்கள் டேனிஷிலும் இலத்தீனிலுமாக எழுதி வைத்துள்ள சில தமிழ் நூல்களைப் பற்றிய குறிப்புகள் அனைத்தும் அக்காலத் தமிழ் நூல்களின் நிலை பற்றி விளக்கமாக அறியத் துணையாகும்.

## கிழக்கு ஜெர்மனி

கிழக்கு ஜெர்மனியில் ஆலே, லிப்சிக், ஹம்பர்க் போன்ற இடங்களில் பல தமிழ்ச் சுவடிகள் உள்ளன. ஆலேயிலுள்ள ஃபிரான்க்ஸ் ஆவணக் காப்பகத்தில் (Franks State Archies, Nalle) உள்ள தமிழ்நூல் அட்டவணை (Bibliothoca Damulica) சீகன்பால்குவால் தயாரிக்கப்பட்டதாகும். ஜெர்மன் மொழியில் 1708-இல் எழுதப்பட்ட இச்சுவடி மொழிபெயர்ப்பின் தமிழ் இலக்கிய வரலாற்று ஆய்வுக்குப் பயனுடையதாகும். நூற்றுக்கணக்கான தமிழ் மற்றும் இஸ்லாமிய நூல்களுக்கான விளக்கங்கள் இதில் உள்ளன.

மார்டின் லூதர் பல்கலைக்கழக நூலகத்தில் உள்ள (The Library of the Martin Luther University of Halle) பல ஓலைச்சுவடிகள் கிருத்துவ சமயம் சார்ந்த நூல்களைக் கொண்டுள்ளன. பல இன்னும் பெயரிடப்படவில்லை.

லிப்சிக்கிலுள்ள அருங்காட்சியகத்தில் (Luthern Mission Church Museum, Leipzig) பல தமிழ்ச் சுவடிகள் உள்ளன. அருணகிரியந்தாதி, ஆத்திசூடி, கம்பராமாயணம், பிரகலாத நாடகம், சேந்தன் திவாகரம் போன்ற நூல்களுடன் மை, மாந்திரிகம் பற்றிய ஏடுகளும் உள்ளன. பணம் கொடுக்கல், வாங்கல் பற்றி கோயமுத்தூரில் எழுதப்பட்ட ஏடு ஒன்றும் அங்குள்ளது. கிருத்துவ சமயப் போதனைகளுடன் பல சுவடிகள் உள்ளன. அத்துடன் குருபரம்பரைப் பிரபாவம், பிரயோக விவேகம், நன்னூல், இலக்கணக் கொத்து, திருமுறைப் பகுதிகள், சிவஞானசித்தியார் சுபக்க உரை போன்ற சுவடிகளும் இங்குள்ளன.

சுவடிகளில் எழுதப்பட்ட கடிதங்கள் பலவும் இங்குள்ளன. செங்கற்பட்டு மாவட்டத்திலிருந்த பச்சையப்ப கிராமணியார் என்பவரின் உறவினரான பார்த்தசாரதி என்பவர் தமிழ் இலக்கியம் கற்க வேண்டி எழுதிய கடிதம் ஒன்று இங்குள்ளது. இதே போன்று வேறு சில கடித ஏடுகளும் உள்ளன.

ஹம்பர்க்கிலுள்ள பல்கலைக்கழக நூலகத்தில் (State and University Library, Hamburg) பல தமிழ் வைணவ நூல்-சுவடிகள் உள்ளன. ஸ்ரீமத் மகாபாகவத புராணம், திருப்பாவை உரை, குருபரம்பரைச்சார வியாக்யானம், அமலாதிபிரான் வியாக்யானம், திரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி வியாக்யானம், திருவாய்மொழி, தென்கலையார் இரகசியங்கள், அமிர்தசார ரகஸ்யம், கண்ணிநுண் சிறுதாம்பு வியாக்யானம், முதலாயிரம், திருவாய்மொழி, திருவந்தாதி போன்ற பல வைணவ நூல்கள் இங்குள்ளமை குறிக்கத்தக்கன.

மேற்கு ஜெர்மனியிலுள்ள அறுநூறுக்கும் மேற்பட்ட சுவடிகளில் பல தமிழ்ச் சுவடிகள் இன்னும் பிரித்தறியப் படவில்லை.

### ஸ்வீடன்

ஸ்வீடனிலுள்ள அப்சாலா பல்கலைக்கழக நூலகத்தில் ( Uppsala University Library, Uppsala, Sweden ) சில தமிழ்ச் சுவடிகள் காணக்கிடைக்கின்றன. அகத்தியர் நாடி சூத்திரம், சிவவாக்கியம், சரசுவதி அந்தாதி, அருணாசல புராணம், மருத்துவக் குறிப்புகள் எனப் பல பொருளில் இவை உள்ளன. 1788-இல் இந்நூலகத்திற்கு வழங்கப்பட்ட ஒரு சுவடியில் பைபிள் வாசகங்கள் தமிழில் எழுதப்பட்டுள்ளன. இதே போன்று முஸ்லீம் மதப் பாடல்கள் கொண்ட சுவடியும் இங்குள்ளது.

ஸ்டாக்ஹோமிலுள்ள ஒரு அருங்காட்சியகத்தில் ( Ethnogrphical Museum, Stockholm, Sweden ) அருணகிரி அந்தாதி, இராமாயணம், சூடாமணி நிகண்டு, திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ், தருமர் அசுவமேதயாகம், அருணாசல புராணம் போன்ற சுவடிகள் உள்ளன.

### சோவியத் யூனியன்

மாஸ்கோ, லெனின்கிராட்,, எர்வான் போன்ற சோவியத் நகரங்களிலுள்ள தமிழ்ச் சுவடிகள் குறிப்பிடத் தக்கன. மாஸ்கோவிலுள்ள லெனின் நூலகத்தில் ( The Lenin State Library, Moscow ) ஞானவெட்டியான் கதை, திருமூலர் எட்டு, போகர் எட்டு, மச்சமுனி எட்டு போன்ற சுவடிகள் உள்ளன.

லெனின்கிராட் பல்கலைக்கழக நூலகத்தில் ( The Library of Leningrad University, Leningrad ) பாரதம் எழுதப்பட்ட சுவடியொன்று உள்ளது. இதே இடத்திலுள்ளவேறு ஒரு நூலகத்தில் ( The Library of the Oriental Institute of the U.S.S.R. Academy of Sciences, Leningrad ) அகத்தியர் மாந்திரிக சாலத்திரட்டு 1200, மருந்தும் இரசவாதமும்பற்றிய ஏடுகள், நாடிநிதானம், நட்சத்திரமாலை, இராசிபலன், அருணகிரிப் புராணம் போன்ற சுவடிகள் உள்ளன. இங்குள்ள திருவாசகம் சுவடியில் நடராஜன், கணபதி போன்ற இறை உருவங்கள் மிக அழகிய முறையில் வரையப்பட்டுள்ளன.

ஆர்மேனிய அறிவியல் கழகத்திலுள்ள ( Academy of Sciences of Armenia, Eravan ) ஒரு சுவடியில், 12-ஆம் நூற்றாண்டில் இந்தியாவில் பணம் செய்த ஓர் ஆர்மீனிய வணிகரின் குறிப்புகள் எழுதப்பட்டுள்ளன. இச்சுவடியில், நாகப்பட்டினம், மைலாப்பூர், தஞ்சாவூர் போன்ற தமிழக ஊர்கள் பற்றியும், இலங்கை பற்றியும், செயின்ட் தாமஸ் மைலாப்பூருக்கு விஜயம் செய்தது பற்றியும் சுவையான செய்திகள் உள்ளன. இதிலுள்ள காலக்குறிப்பு ஆய்வாளர்க்கு மிகவும் பயனுடையதாகும்.

## அனைவரின் சிந்தனைக்கு

பழந்தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை ஆராய்வோர் அனைவரும் இன்று கிடைக்கக்கூடிய பழந்தமிழ்ச் சுவடிகளைப் பார்வையிடுவதில்லை. அதற்கான காரணங்களில் ஒன்று, இன்று அயல்நாடுகள் பலவற்றிலுமுள்ள தமிழ்ச் சுவடிகளுக்கு என முறையான அட்டவணைகள் இல்லாத தாகும். மேற்கூறப்பட்ட ஒருசில நூலகங்களில் மட்டுமே முறையான அட்டவணைகளைத் தயாரித்து வைத்துள்ளனர். அவையும் சுவடிகளை நேரடியாக நோக்கும் பொழுது மாறுபடலாம்.

பல வெளிநாட்டு நூலகங்களிலுள்ள தமிழ்ச்சுவடிகள் அனைத்தும் கீழ்த்திசைச் சுவடிகள் ( Oriental Manuscripts ) என்னும் தலைப்பிலேயே உள்ளன. தமிழ் என்றால் ஒரு மொழி என்பதே தெரியாத நிலையிலும் பல நூலகங்கள்உள்ளன. முன்பு மலையாளத்தைத் தமிழ் என்றே அழைத்து வந்ததால் பல இடங்களில் Malay அல்லது Malaya என்னும் தலைப்பின் கீழேயே தமிழ்ச் சுவடிகள் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ளன. சில இடங்களில் ஹிப்ரு ( Hebrew Manuscripts ) மொழியின் கீழே தொகுக்கப்பட்டுள்ளன.

பல நூலகங்களில் சரியாகச் சுவடி படிப்போர் இல்லாத காரணத்தால் இவற்றை இனங்காண முடியாமலும் அட்டவணை செய்ய இயலாமலும் இருப்பதாகக் கூறப்படுகிறது.

சுவடிகளிலிருந்து அச்சாகிய பல பழைய நூல்கள் இத்தகைய நூலகங்களில் உள்ளன. அவற்றிற்கான மூலச்

சுவடிகளோ, படி ஏடுகளோ இன்று கிடைப்பதில்லை. எனவே, இப் பழைய பதிப்புகளையும் ஏடாகக் கொண்டு புதிய பதிப்புகள் செய்ய இவற்றை ஆராயலாம்.

அயல்நாடுகளிலுள்ள தமிழ்ச் சுவடிகளைப் பற்றிய தகவல்களை அறிவதில் பல சிக்கல்கள் உள்ளன. எல்லா நூலகங்களிலிருந்தும் சுவடிகளைப் படம் எடுக்கவோ, பிரதி செய்யவோ இயலாது. ஒவ்வொரு நூலகமும் தனக்கென தனித்தனியான கொள்கைகளையும் சட்டதிட்டங்களையும் கொண்டுள்ளன. பல நூலகங்களில் நுண்நிழற்படம் ( Microfilm ) அல்லது படப்பிரதி ( Xerox ) எடுக்கும் வசதிகள் இல்லை. பெல்ஜியம் போன்ற நாடுகளில் அவர்களுக்குச் சேரவேண்டிய ( copy right ) பணத்தைக் கட்டிய பின்னரே படியெடுக்க அனுமதிக்கப்படுவர். ஜெர்மனி போன்ற நாடுகளில் தனியாருக்கு மட்டுமே படியெடுத்துக் கொடுப்பர். நிறுவனங்களுக்குக் கொடுப்பதில்லை. சோவியத் யூனியன் போன்ற நாடுகளிலிருந்து எவ்விதத்திலும் படிகளைப் பெற இயலாத நிலைகள் உள்ளன.

அயல்நாடுகளிலுள்ள பல மத நிறுவனங்களில் பல தமிழ்ச் சுவடிகள் உள்ளன. அவை இன்னும் வெளி உலகிற்குத் தெரியாமலேயே உள்ளன. அவற்றைப் பற்றிய தகவல்களும் திரட்டப்பட வேண்டும்.

பழந்தமிழ்ச் சுவடிகள் எல்லாம் அச்சாகிவிட்டன என்றும், மீதமுள்ள பழைய சுவடிகள் எல்லாம் வீணானவை என்றும் ஒரு தவறான கருத்தை இன்று நம்மிடையே பலர் கொண்டுள்ளனர். இது மிகவும் வருந்தத்தக்கதாகும். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்து வரும் தமிழ்மொழியில் உள்ள அனைத்து நூல்களும் இன்று ஆய்வுக்குக்கூட கிடைக்காத நிலையில், அவற்றைப் பற்றிச் சிந்திக்காதிருப்பது நமக்கு நாமே ஏற்படுத்திக்கொள்ளும் தடைகள் என்றே கூறவேண்டும்.

இன்றைய சூழ்நிலையில் தனிநபர்களோ நிறுவனங்களோ இத்தகைய பணிகளை மேற்கொள்வது இயலாததாகும். உலக நாடுகள் அனைத்திலுமுள்ள 21,973 தமிழ்ச் சுவடிகள் பற்றிய விரிவான அட்டவணையைத் தமிழ்ப்

பல்கலைக்கழகம் தயாரித்தளித்துள்ளது. இப்பணி மேலும் விரிவுபடுத்தப்பட வேண்டியுள்ளது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

சமஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம், கன்னடம் போன்ற இந்திய மொழிகள் பலவற்றிலுமான சுவடிகள் இன்று உலகெங்கும் பரவியுள்ளன. இவற்றைப் பற்றிய தகவல்களைப் பெறுவதில் மத்திய, மாநில அரசுகள் பெருமுயற்சி செய்தால் நம் இந்திய மொழிகளின் ஆய்வில் பெருமுன்னேற்றம் ஏற்படும். இதற்கு அனைத்துத் தரப்பினரின் முயற்சி மிகவும் தேவையாகும்.

*****

## துணை நூல்கள்


1. அனைத்துலகத் தமிழ் ஓலைச்சுவடிகள் அட்டவணை (1-5 தொகுதிகள்), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1991.

2. A Report on a Scientific Catelogue of the Tamil Manuscripts in the Library of Europe, I to IV Vols., By Prof. A. Krishnamoorthy, 1960.

3. European Sources for Tamil Manuscripts - Gregory James, Journal of Tamil Studies-18. I.I.T.S., Madras-113, 1980.

4. Some Tamil Manuscripts in the National Library of Paris, by V.M. Gnanapragasam, S.I., Archivum Historicum Soci etatis Iesu. Extractum e Vol.XL-1971. ROMA, VIA DEI PENITENZIERI ZO 1971.


*****

# 13. பெரியபுராணம் சுவடிவழி ஆய்வுப் பதிப்பிற்கான வாய்ப்பு

முனைவர் பா. மதிவாணன்

திருத்தொண்டர் புராணத்தில் காணும் பாட வேறுபாடுகள் ( சுப்பையா ) எனும் எம்.ஃபில். ஆய்வேட்டைக் கண்டபோது, இத்துறையில் மேலும் ஆராயும் வாய்ப்புளதா? எனும் அவாவினால் அண்மையில் வெளிவந்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துப் பதிப்பொன்றைப் ( 1991 ) பார்த்தேன். அதில் மூலபாடம் மட்டுமே இருந்தது. பாடவேறுபாடுகள் எதுவும் இல்லை. ஆனால், மேற்குறித்த ஆய்வேட்டிலிருந்து காசிமடத்தின் முந்தைய பதிப்பில் பாடவேறுபாடுகள் தரப்பட்டிருந்ததை அறிய முடிந்தது. பிறர் பதிப்புக்கள் சிலவற்றைப் பார்த்தபின் பாடவேறுபாடுகளை மட்டுமன்றிப் பதிப்பு வேறுபாடுகளையும் ஆராய்தல் வேண்டும் எனும் எண்ணம் எழுந்தது.

இவ்வடிப்படையில் பெரியபுராணப் பதிப்புகளுள் பெரும்பாலானவற்றைப் பார்வையிட்டதால் விளைந்த இக்கட்டுரை, பெரியபுராணப் பதிப்புகளைக் காலவரிசைப்படி- சுவடி ஆதார நோக்கில், தேவையான சில எடுத்துக் காட்டுகளுடன் - அறிமுகப்படுத்திப் புதியதோர் ஆய்வுப் பதிப்பிற்கான வாய்ப்பைச் சுட்டிக்காட்டுவதாக அமைகிறது.

தமிழில் மறு அச்சுக்களும் பதிப்புக்கள் என்றே பெரும்பாலும் குறிப்பிடப்படுவதால், இக்கட்டுரையிலும் அவ்வாறே கொள்ளப்பட்டுள்ளது.

### மழவை மகாலிங்கையர் ( 1845-1846 ) [1]

மகாலிங்கையர் முதலில் ஆனாய நாயனார் புராணம் வரை பதிப்பித்துத் தம்உரையுடன் 1846இல்

வெளியிட்டுள்ளார்.[2] இப்பதிப்பில், முகப்புப் பக்கத்தை ( Title Page ) அடுத்து - பதிப்புரை முதலிய எதுவுமின்றி - நூல் தொடங்கிவிடுகிறது.

என்று பாடங் கூறி, என்று பாடஞ் சொல்வது முண்டு ( ப.18, பிழை திருத்தல், ப.6 ) என இரண்டிடங்களிலும், என்றும் பாடம் ( ப.122, ப.224 ) என இரு இடங்களிலும் ஐயர் பாடவேறுபாடுகள் தந்துள்ளார். பாடங் கேட்டதன் வழியும் சுவடி வழியும் பாடவேறுபாடுகள் தந்துள்ளார் என ஊகிக்கலாம். உறுதியில்லை.

## காஞ்சிபுரம் - சபாபதி முதலியார் ( 1859; 1862 )

சபாபதி முதலியார் பெரியபுராணத்தை இருகாண்டங்களாகத் தனித்தனியே பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இருநூல் முகப்பிலும் சபாபதி முதலியாரால் ஆராய்ச்சி செய்வித்து... பதிப்பிக்கப்பட்டது எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. இப்பதிப்பிற்கு ( 1859 ) அளிக்கப்பெற்றுள்ள சாத்துக்கவிகள் சிலவற்றில் பொதுப்பட வரிக்குற்றத்தைப் போக்கி ( ப.1 ), நேருறவே திருத்துவித்து ( ப.1 ), ஆய்வித்து அல்லகல ( ப.3 ), புரை தீர்த்து ( ப.3 ) எனும் தொடர்கள் காணப்படுகின்றது.

பதிப்பாசிரியரின் மாணவர் புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரின் சிறப்புப் பாயிரத்தில்

> கிளந்த கோப்புடை நூற் கெழுமிய சொற்பொரு
> ளளந்துமுன் வீற்றுவீற் - றாயுள பிரதியிற்
> பாடபேதத்திற் - பணித்த மெய்ப்பொரு
> ளாடியோதலு - நனியவையுணர்த்தலும்

எனும் பகுதியை நோக்க இப்பதிப்புச் சுவடியை அடிப்படையாகக் கொண்டதென்பது புலனாகிறது.[3]

முதற் காண்டப் பதிப்பில் ஓரிடத்தில் மட்டும் பாடவேறுபாடு ( திருமலைச் சிறப்பு, பா.33 ) தரப்பெற்றுள்ளது. இது மகாலிங்கையர் தராததாகும்.

இப்பதிப்பிலிருந்து முன்னிணைப்பாகத் திருத்தொண்டர் புராண வரலாறு ( சேக்கிழார் புராணம் ), திருமுறை கண்ட புராணம், திருத்தொண்டர் புராண சாரம் முதலியன சேர்க்கும் மரபு தொடங்குகிறது.

## திருமயிலை சுப்பராய ஞானியார் பதிப்பு (1870)

திருமயிலை சுப்பராய ஞானியார் பதிப்பின் முகப்புப் பக்கத்தில் வித்துவான் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரவர்களால் ஆராய்ச்சி செய்வித்து... திருமயிலை சுப்பராய ஞானியாரால்... பதிப்பிக்கப்பட்டது எனும் தகவல் தரப்பட்டுள்ளது. எனவே, இப்பதிப்பு காஞ்சிபுரம் சபாபதி முதலியார் பதிப்பு வரிசையில் வைத்து நோக்கத் தக்கதென்பது புலனாகிறது.

## சிதம்பரம் - இராமலிங்க பிள்ளை (1880)

இராமலிங்க பிள்ளை பதிப்பில் விளம்பரம் எனும் தலைப்பில்,

> முன்னச்சிட்ட பிரதிகளோடு ஏட்டுப் பிரதிகளைக் கொண்டு சோதிக்கையில் கண்ணப்ப நாயனார் புராணத்தில் (கருஅ) வது செய்யுள் முதல் விடுபட்டிருந்த (ரு) செய்யுள்களையும் காரைக்காலம்மையார் புராணத்தில் விடுபட்டிருந்த (உ) வது செய்யுளையும் இந்தப் பிரதியில் அச்சிட்டிருக்கின்றன. திருமயிலை சுப்பராய ஞானியார் அச்சிட்டிருக்கிற பிரதியில் ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்தில் ஆண்டநம்பியுடன் வந்த என்கிற (ஙச) வது செய்யுள் விடுபட்டிருக்கிறது (ப.4)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பதிப்புப் பற்றிய சிறு குறிப்பாயினும் முந்தைய பதிப்புகளை நோக்க இஃதொரு வளர்ச்சி நிலையாகும். சில பாடவேறுபாடுகள் ஆங்காங்குத் தரப்பெற்றுள்ளன.

## யாழ்ப்பாணம் - ஆறுமுக நாவலர் (1884)

நாவலர் மறைந்து (1879) நான்காண்டுகள் கழிந்த பின்பு, அவர்தம் முதலணித் தலைமாணாக்கர்[4] சதாசிவப் பிள்ளை - நாவலர் ஒழுங்குசெய்து வைத்த முதற் காண்டத்தை மட்டும் பதிப்பித்தார். இப்பதிப்பு முகப்பின் பின்பக்கம்,

> குசனங்களில் சிலபாகம் மாற்றி எழுதவேண்டும் என்னுங் கருத்துக் கொண்டிருந்த ஐயாவவர்கள்

> அக்கருத்து முற்றுமுன் சிவபதம் அடைந்து விட்டமையால் அவை முன்னெழுதியிருந்த படியே பதிப்பிக்கப்பட்டன.

எனக் குறிப்பிடப்பெற்றுள்ளது. இதிலிருந்து சதாசிவப் பிள்ளையின் குருபக்தியையும் பதிப்பு நெறியையும் ஒருங்கே உணரமுடிகிறது. நாவலர் காரைக்காலம்மையார் புராணம் வரை எழுதிய சூசனம் இப்பதிப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. பாடபேதங்களொன்றும் அச்சிடாமையே நாவலரின் பதிப்பு முறையெனக் குறிப்பிடும் த. கைலாசபிள்ளை சிறந்த பொருள் இதுவென்று துணிந்தவருக்கு அந்தப் பாடத்தைக் கொள்வதேயல்லாமல் வேறு சிறப்பில்லாத பாடத்தைக் கொள்ள வேண்டிய அவசியமில்லை (ப.64) எனவும் விளக்கம் தருகிறார்.

## யாழ்ப்பாணம் - சதாசிவப்பிள்ளை (1888)

தம் ஆசிரியர் கொண்ட முதற்காண்டத்தின் மூலபாடத்தைப் பதிப்பித்த சதாசிவப்பிள்ளை இரண்டாம் காண்டத்தைப் பல பிரதி ரூபங்களைக்கொண்டு பரிசோதித்து (முகப்புப்பக்கம்) 1888இல் வெளியிட்டுள்ளார்.

முதற் காண்டத்தைத் தனியே வெளியிட்ட சதாசிவப்பிள்ளை, தாம் பதிப்பித்த இரண்டாம் காண்டத்தை முதற்காண்டத்தின் தொடர்ச்சியாகவே கொண்டு பக்க எண்கள் தந்துள்ளார். எனினும் இரண்டாம் காண்டத்திற்குத் தெளிவான தனியொரு முகப்புப் பக்கம் அமைந்துள்ளது.

சதாசிவப்பிள்ளையும் பாடவேறுபாடுகள் தந்தில ராயினும் சுவடி வேறுபாடு - அஃதாவது சிற்சில பாடல்கள் சில பிரதிகளில் இல்லை எனக்குறித்துள்ளார்.

முதலிரு பதிப்புகளில் (1888; 1898), திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்தில் இருசெய்யுள்கள் (844 & 933) சில பிரதிகளிலில்லை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மூன்றாம் பதிப்பில் (1905) சாக்கிய நாயனார் புராணத்தின் இரு செய்யுள்கள் (பா. 13 & 14) சில பிரதிகளில்லை எனக் குறிக்கப்பட்டுள்ளது. இதனை நோக்கப் புதிதாகச் சில சுவடிகள் பதிப்பாசிரியர் பார்வைக்குக் கிடைத்திருக்கும் என ஊகிக்க முடிகிறது.

ஒரே நூலெனக் கருதத்தக்க நாவலர்-பிள்ளையின் நான்காம் பதிப்பு வரை (1910) இருகாண்டங்களுக்கும் தனித்தனி முகப்புக் காணப்படுகிறது. ஐந்தாம் பதிப்பில் (1916) இரண்டாங்காண்ட முகப்பு நீக்கப்பட்டுவிடுகிறது. இது முதல் பிந்தைய பதிப்புகள் யாவும் இவ்வாறே வெளியிடப்பெற்றுள்ளன. இப்பிந்தைய பதிப்புகளைக் கண்ணுறுவோர் நூல் முழுமையும் நாவலரே பதிப்பித்ததாகப் பிறழ உணர்தல் இயல்பேயாம்.[5]

ஆறுமுக நாவலர் சூசனம் எழுதாத பகுதிகட்கு, ஏழாலை பண்டிதர் மு. கந்தையா எழுதிய சூசனத்தைச் சேர்த்து ஒன்பதாம் பதிப்பு (1993) வெளிவந்தது. நூலினுள் மாறுதல் எதுவும் இல்லை.

இதுவரை (1993) ஒன்பது பதிப்புகள் கண்ட செல்வாக்குமிக்க பதிப்பு இதுவேயாகும்.

### ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் (1888)

சதாசிவப்பிள்ளையின் இரண்டாங் காண்டப் பதிப்பு வெளிவருதற்கு ஆறு திங்கள் முன்னதாகத் திருவண்ணாமலை ஆதீனம் ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள், பதவுரையோடு பெரியபுராணத்தை முழுமையாகப் பதிப்பித்தார். இவரும் ஆறுமுக நாவலரின் முதலணி மாணாக்கருள் ஒருவராவார்.[6] இவர் எட்டு இடங்களில் பாடவேறுபாடுகள் தந்துள்ளார்.[7] கண்ணப்பநாயனார் புராணத்தில் 157ஆம் பாடலில் உடுக்குறியிட்டு, அடிக்குறிப்பில் இது முதல் ஐந்து பாட்டு சில பிரதிகளில்லாமையால் வெள்ளிப்பாடல் என உறுதிபடக் கூறியுள்ளார்.

### சூ. சுப்பராய நாயகர் (1893; 1896)

சூ. சுப்பராயநாயகரின் பொழிப்புரையுடன் கூடிய முதற் காண்டப்பதிப்பு 1893இலும் இரண்டாங் காண்டப்பதிப்பு 1896இலும் வெளிவந்தன. முந்தைய பதிப்புகளைவிட இவர் பதிப்பில் பாடவேறுபாடுகள் தந்த சிலவற்றை இவர் தராமையால் அவர்களும் இவரும் கண்ட சுவடிகள் வெவ்வேறெனவும் ஊகிக்கலாம்.

## திருமயிலை செந்தில்வேலு முதலியார் (1903)

இப்பதிப்பு முகப்பின் பின்பக்கம் இஃது ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாலர் பெருமான் பிரதிக்கிணங்கப் பரிசோதித்துத் தந்ததாகத் திரு.வி.க. குறிப்பிட்டுளார் (ப.8). எனினும் இப்பதிப்பிலும் சில பாடவேறுபாடுகள் தரப்பட்டுள்ளன.

ஒருசெய்யுள்ட (திருஞானசம்பந்தர் புராணம், பா.845) சில ஏட்டுச் சுவடிகளில் இடம் மாறியிருத்தலையும், கலியநாயனார் புராணப் பாடலொன்றை (பா.2) வெள்ளிப் பாடல் என்பார் சிலர் என்பதையும் குறித்துள்ள திரு.வி.க. முந்தைய சதாசிவப்பிள்ளை குறித்த சுவடி வேறுபாடு பற்றிக் குறிப்பிடவில்லை.

## ஆலால சுந்தரம்பிள்ளை (1918; 1923; 1924; 1935...?)

ஆலால சுந்தரம்பிள்ளையின் பொழிப்புரை விசேடவுரையுடன் கூடிய திருமலைச் சருக்கம் (1924), தில்லை வாழந்தணர் சருக்கம் (1918), இலை மலிந்த சருக்கம் (1923) - ஆகிய மூன்று சருக்கங்களும் தனித்தனி முகப்புப் பக்கங்களுடன் தனித்தனிப் பக்க எண்கள் கொண்ட - ஆனால் ஒன்றாகக் கட்டடம் செய்யப்பட்ட - நூலொன்றும், காரைக்காலம்மையார் புராணம் மட்டும் கொண்ட பதிப்பொன்றும் (1935) பார்வைக்குக் கிடைத்தன. இவற்றுள், தில்லைவாழந்தணர் சருக்கம் மட்டும் ஆலால சுந்தரம்பிள்ளை காலத்திலலேயே வெளிவந்துள்ளது. பிறயாவும் அவர்தம் மைந்தர் கா. ஏகாம்பரம் பிள்ளையால் வெளியிடப்பெற்றுள்ளன. இவற்றுள் பாடவேறுபாடு முதலிய குறிக்கப்படவில்லை.

ஆலால சுந்தரம்பிள்ளை, திருமலைச் சருக்கத்ததை விடுத்து, தில்லைவாழந்தணர் சருக்கத்தையே முதலாவது எனக் கொண்டு, அவ்வாறே அச்சிட்டுள்ளார். திருமலைச் ;சருக்கப் பதிப்பில் முதலாவது என அச்சிடாவிடினும், மூன்றாவது இலை மலிந்த சருக்கம் என அச்சிட்டிருப்பது கொண்டு அதனை உணரமுடிகிறது. இத்தடுமாற்றத்திற்குக் காரணம் சருக்க எண்ணிக்கை கொள்வதிலுள்ள இருவேறு போக்குகளேயாகும்.

மழவை மகாலிங்கையர் திருமலைச் சருக்கம் என ஒன்றைக் கொள்ளவேயில்லை. முதலாவதாகத் தில்லை வாழந்தணர் சருக்கத்தைக்கொண்டு, இரண்டாவது இலைமலிந்த சருக்கம் என அச்சிட்டுள்ளார்.

சபாபதி முதலியார், சுப்பராய நாயகர் ஆகியோரும் திருமலைச் சருக்கத்தை முதலாவதாகக் கொள்ளவில்லை.

**திரு.வி. கலியாணசுந்தர முதலியார் ( 1934 )**

1910இல் வெளிவந்த பதிப்பின் வேறான, தனிப் பதிப்பாக இதனைக் கொள்ளுதல் வேண்டும். இதுவும் 1930இல் தொடங்கிப் பகுதி பகுதியாக வந்து, 1934இல் நிறைவடைந்தது. இது ஒரே நேரத்தில் முழுமையாகவும் இரு காண்டங்களும் தனித்தனியாகவும் வெளியிடப்பட்டுள்ளது.

முந்தைய பதிப்புகள், சுவடிகள் பற்றிய செய்திகளை முன்னுரையில் தந்து, கிடைத்துள்ள பாடவேறுபாடனைத்தையும் தரும் முதலாவது பெரியபுராணப் பாடவேறுபாடுகள் இப்பதிப்பில் இல்லை. சான்றாகத் திருமலைச் சிறப்பு 23ஆம் செய்யுளில், 'முன்னெமையாளுடை' எனும் பாடத்தை ஆறுமுகத் தம்பிரானும் கொண்டு 'முன்னரை யாளுடை' என்று வேறுபாடு தந்துள்ளனர். 'முன்னெமை' எனும் பாடத்தைக் கொண்டு 'முன்னரை' என வேறுபாடு தந்த திரு.வி.க., முன்னுரை என்பதைக் குறிப்பிடவில்லை.

திருமலைச் சிறப்பு பா.8 முதல் 12 முடியவுள்ள ஐந்து பாடல்கள் சிற்சில பிரதிகளில் இல்லை எனவும் இவற்றுள் எட்டாம் பாடல் மட்டும் வெள்ளிப் பாடல் என்று காஞ்சி சபாபதி முதலியார் பதிப்பில் குறிக்கப்பட்டிருக்கிறது எனவும் குறிப்பு தரும் திரு.வி.க., முந்தையோர் பலரும் குறிப்பிட்ட கண்ணப்பர் புராணச் செய்யுள்கள் ( 158-162 ) பற்றியோ, சதாசிவப்பிள்ளை குறிப்பிட்ட செய்யுள்கள் பற்றியோ குறிப்பெதுவும் தரவில்லை.

தடுத்தாட்கொண்ட புராணத்தின் 190ஆம் பாடலையடுத்துத் திருநெல்வேலிச் செங்கோல் மடத்துச் சுவடியில் காணப்பெறும் 16 பாட்டுகளையும் முழுமையாக

அடிக்குறிப்பில் தந்து, திருவாரூர் சோமசுந்தர தேசிகர் செந்தமிழ் இதழில் வெளியிட்டுள்ள 16 பாடல்கள் மிகச்சில வேறுபாடுகள் கொண்டிருப்பதாகவும் தகவல் தந்துள்ளார். மேலும் தேசிக விநாயகம்பிள்ளை இல்லச் சுவடியில் மேற்படி பதினாறனுள் ஒன்று மட்டும் காணப்படுவதையும், இவற்றுளடங்காத பாடலொன்று 202ஆம் பாட்டையடுத்துக் காணப்படுவதையும் சுட்டி அப்பாடலையும் தந்துள்ளார். சுவடி வழிப்பதிப்பு நோக்கில் இக்குறிப்புகள் மிகப் பயனுடையவை.

## சைவசித்தாந்த மகாசமாஜம் (1934)

திரு.வி.க. கொண்ட மூலபாடத்தை மட்டும் அப்படியே ஏற்று 1934இலேயே அடக்கவிலைப் பதிப்பாகச் சமாஜப் பதிப்பு வெளிவந்தது. வேறுபல சிறப்புகள் கொண்டதாயினும், பாடவேறுபாடுகள் முதலியன இல்லாமையால் சுவடி வழிப்பதிப்பு நோக்கில் இப்பதிப்புக் குறையுடையதாகும்.

இப்பதிப்பு உட்பட அதுவரை வெளிவந்த பெரியபுராண அச்சுப் பிரதிகளைக் கால வரிசையில் பட்டியலிட்டுத் தந்திருப்பது இப்பதிப்பின் பயனுள்ள பகுதியாகும்.

## சி.கே. சுப்பிரமணிய முதலியார் (1937-1954)

பெரியபுராண உரைப்பதிப்பில், சுப்பிரமணிய முதலியார் பதிப்பு ஒரு சாதனையாகும். 1935இலிருந்து சஞ்சிகைகளாக வெளியிடப்பெற்று முதற்பகுதி 1937இல் வெளியிடப்பெற்றது. 1954இல் நிறைவுபெற்றது.

இதற்கு முந்தைய திருமயிலை சுப்பராய ஞானியார் பதிப்பு, திரு.வி.க. பதிப்பு (1910), சமகாலப் பதிப்புகள் எனக்கருதத்தக்க திரு.வி.க., சமாஜப் பதிப்புகள் (1934) தவிரப் பிறயாவும் இப்பதிப்புக்குத் துணையாகக் கொள்ளப்பட்டுள்ளன. மேலும் துணைசெய்த உரைக் கையெழுத்துப்படிகள், ஓலைச் சுவடிகள் பற்றியும் தகவல் தந்துள்ளார் சி.கே.சு.

இப்பதிப்பில் பாடவேறுபாடுகள் மிகுதியாகத் தரப்பெற்றுள்ளன. (1) வேறுபட்ட பாடத்தை மட்டும்

தருதல் (2) பாடவேறுபாடொன்றின் பொருந்தாமையை விளக்குதல் (3) வேறுபாடாயினும் உரையிடைப் பொருள் தருதல் - என மூன்று முறைகளில் இப்பதிப்பில் பாடவேறுபாடு தரப்படுவது வளர்ச்சியைக் காட்டுகிறது.

ஆயின் முந்தையோர் பதிப்புகளிற் பாடவேறுபாடாகக் கொடுத்துள்ளவற்றை இவர் குறிப்பிடாமைக்குக் காரணம் விளங்கவில்லை.

தடுத்தாட்கொண்ட புராணச் செய்யுள் 101இன் முதலடியில் 'புடை நாசிகடோறும்' எனும் பாடத்தைக் கொண்ட மழவை மகாலிங்கையரும், சுப்பராயநாயகரும் 'புடை நாஞ்சில் கடோறும்' என வேறுபாடு குறித்துள்ளனர். இதே பாடத்தைக் கொண்டபோதும் மேற்குறித்த வேறுபாட்டைச் சி.கே.சு. குறிப்பிடவில்லை. இப்பாட்டின் மூன்றாம் அடியில் இரு தனித் தனிச் சீரில் பாடவேறுபாடுகள் இருப்பதைக் கொடுத்துள்ளார்.

திருவாரூர்த் திருநகரச் சிறப்பு - இது திருமலைச் சருக்கத்தின் மூன்றாவது பகுதியின் பெயர் எனக் கூறும் சி.கே.சு.

> இப்பகுதியின் பெயர் பல பதிப்புகளிலும் ஏட்டுப்பிரதிகளிலும் பற்பலவாறு காணப்பெறுகின்றன. அவை மநுநீதிச் சோழர் புராணம் - மநுநீதி கண்ட புராணம் - திருநகரச் சிறப்பு - திருவாரூர்ச் சிறப்பு - தேரூர்ந்த புராணம் என்பன. ...அடியேனுக்குக் கிடைத்த பற்பல ஏட்டுப்பிரதிகளிலும் மிக்க ஆதரவாகக் கொள்ளத் தக்கனவாயிருந்தவை இரண்டு

எனத் தாம் ஆதாரமாக (ஆதரவாக)க் கொண்ட இரு சுவடிகளைச் சுட்டுகிறார். இவர் பதிப்பு முழுமைக்கும் ஆதாரச் சுவடிகள் இவைதாமா என்பது புலனாகவில்லை.

தடுத்தாட்கொண்ட புராணத்தின் 190ஆம் செய்யுளை யடுத்து இடைச்செருகலாயமைந்த 16 செய்யுள்களையும் பாடவேறுபாடுகளுடன் இவர் தந்திருப்பது திரு.வி.க. பதிப்பினின்றும் சற்று வளர்ந்த நிலை. ஆனால் சுவடிகள்

பற்றித் திரு.வி.க. தந்த தகவல்களையோ, தேசிகவிநாயகம்பிள்ளை இல்லச் சுவடியின் மிகைப் பாடலையோ இப்பதிப்புத் தரவில்லை.

எனினும் இடைச் செருகல்கள் பற்றி முதன் முதலில் விரிந்த ஆய்வை மேற்கொண்டவர் சி.கே.சு. ஆவார் (சேக்கிழார், பக்.206-224).

சேக்கிழார் புராணத்தின் திருவிருத்த நாலாயிரத் திருநூற்றைம்பத்து மூன்றாகவமைத்து (பா.53) எனும் தொடரைத் தமக்குக் கிடைத்த பழைய சுவடியின் இறுதியிலுள்ள வெண்பாவின், 'நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்று திருவிருத்த மும்' எனும் தொடரும் உறுதிப்படுவதால், பெரியபுராணச் செய்யுட்கள் 4253 என உறுதிசெய்கிறார். ஆனால் மு. அருணாசலம் மேற்படி வெண்பாவின் வேறொரு பாடம் கொண்ட - பெருந்தொகை 1882 ஆக அமைந்த - பாடலைக் காட்டியுள்ளார் (ப.165). அதில் நாலா யிருத்திருநூற் றெண்பத்து மூன்று திருவிருத்த மும் எனவுள்ளது. இஃது இடைச்செருகல்களையும் சேர்த்து எண்ணிக்கையைப் பெருக்கிக் காட்டும் பாட்டு என்பது மு. அருணாசலம் கருத்து. சி.கே.சு. நூலைப் படித்திருந்தும் அவர் தந்துள்ள வெண்பாவை மு. அருணாசலம் கவனிக்கவில்லை போலும்.

இனி, சேக்கிழார் புராணம், திருமுறைகண்ட புராணம் ஆகிய நூல்கள் தாமும் நம்பகமானவையல்ல எனும் ஆய்வைக் (அ.ச. ஞானசம்பந்தன், பெரிய புராணம் ஓர் ஆய்வு, பக்.418-419) கருத்தில் கொண்டால் பெரியபுராணப் பாடல் எண்ணிக்கை பற்றிய முடிவையும் மறு ஆய்வு செய்ய நேரும்.

டாக்டர் இரா. நாகசாமி 'உபமன்னியு பக்த விலாசம்' எனும் வடமொழி நூல் சொல்லுக்குச் சொல் தமிழ்ப் பெரியபுராணத்தின் மொழிபெயர்ப்பென்பதை நிறுவிப் பெரியபுராணச் செய்யுள்கள் சிலவற்றின் பொருளையும், இடைச் செருகல்களையும் தெளிவுபடுத்த அவ்வடமொழி நூல் உதவுமாற்றையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

சில சுவடிகளில்லாமை கொண்டு வெள்ளிப்பாடல் எனக் கருதப்படும் பாடலொன்று உபமன்னியுபக்த விலாச

மொழிபெயர்ப்பிலும் இடம்பெற்றிருப்பது கண்டு அஃது இடைச்செருகலன்று என முடிவு கூறுகிறார் நாகசாமி ( பக்.42-46 ). பெரியபுராணம் பற்றிய ஆய்வுக்குப் புதியதும் பயனுள்ளதுமாகிய வழியொன்றை நாகசாமி திறந்து விட்டிருக்கிறார் என்பதில் ஐயமில்லை. ஆனால் பிற்கால இடைச்செருகல்களும் மொழிபெயர்க்கப்பட்டு வடமொழி நூலில் சேர்க்கப்பட்டிருக்கலாமென்பதையும் கருதுதல் வேண்டும்.

## திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ( 1950 )

வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு மூலத்தை மட்டும் திருப்பனந்தாள் மடம் வெளியிட்டுள்ளது.

> இப்பதிப்பு, யாழ்ப்பாணத்து நல்லூல் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பதிப்பை அடிப்படையாகக் கொண்டு, பிற பதிப்புக்களில் கண்ட சிறந்த பாடபேதங்களை மேற்கொண்டும், நல்லனவாகக் கண்ட பிற பாடபேதங்களை ஆங்காங்குக் காட்டியும் பதிக்கப்பெற்றுள்ளது.

எனுங் குறிப்பு ( தி. பட்டுச்சாமி ஓதுவார், பதிப்புரை, ப.iv ), முந்தைய பதிப்புகளின் துணைகொண்டே இப்பதிப்பு வெளியிடப்பெற்றதென்பதை நேர்மையோடு தெளிவுறுத்துகிறது. இப்பதிப்புரையில் அரிய பாடபேதங்களைக் கொடுத்துதவிய இருவர்க்கு நன்றி கூறப்பட்டுள்ளது. இவர்கள் தந்த பாடவேறுபாடுகள் எவற்றினின்றும் கொள்ளப்பட்டன எனத்தெரியவில்லை.

திரு.வி.க. ( 1934 ), சி.கே.சு. பதிப்புகளையடுத்துப் பாடவேறுபாடுகளை மிகுதியாகத் தந்துள்ள பதிப்பு இது. பார்வைக்குக் கிடைத்த 1970 பதிப்பில் பல பாடவேறுபாடுகள் சேர்க்கப்பட்டிருப்பது வளர்ச்சியாகும். 1950 பதிப்பின் பாடவேறுபாடுகள் சில விடுபட்டதன் காரணம் விளங்கவில்லை.

பார்வைக்குக் கிடைத்த பிந்தைய பதிப்புகளில் பாடவேறுபாடுகள் மட்டுமன்றிப் பிற அடிக்குறிப்புகளும் முற்றாக நீக்கப்பட்டிருப்பது பின்னடைவே.

### தி.தெ. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (1970)

கழகப் பொன்விழா ஆண்டில் (1970) முதற் பதிப்பும், 1977இல் மறுபதிப்பும் வெளிவந்துள்ளன. பதிப்புரையில் சைவமெய்ப்பொருள், கழகம் பொன்விழா, இவ்விழாவில் பெரியபுராணப் பதிப்பின் பொருத்தம், பெரியபுராணச் சிறப்புகள் ஆகியன ஒன்பது பக்கங்களில் விவரிக்கப்பட்டுள்ளன.

> கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ.சு. அவர்கள் பெரியபுராணப் பாயிரத்தின் மூன்றாவது செய்யுளின் முதலடியிலுள்ள மாக்கதை என்ற தொடரை எடுத்துப் பத்தாவது செய்யுள் ஈற்றடியிலுள்ள திருத்தொண்டர் என்னும் தொடரின் பின்னிணைத்துத்
> திருத்தொண்டர் மாக்கதை என்று
> பெரியபுராணத்திற்கு மற்றொரு பெயர் அமைத்தது சாலப் பொருத்தமாகும். என்னை எனில்? புராணம் என்னும் சொல் பழமை என்னும் பொருளுடைய தாயினும், காணப்படும் புராணங்கள் பலவற்றுள்ளும் பெரும்பான்மையான வடமொழிப்பெயர்ப்பும், கற்பனைப் புனைவு மிக்கனவும், உண்மை கண்டுய்ய அரியனவும், மயங்க வைப்பனவுமாகக் காணப்படுதலானும், பெரும்பாலோர் புராணம் என்னும் சொல்லைக் கேட்டவுடன் அந்நூல் பொய்யும் புனை சுருட்டும் மலிந்து தமிழகத்துக்குப் பொருந்தா ஒழுக்கமுடைய நூல் எனப் புறக்கணிக்கப் படுதலானும் என்க (1977, பக்.4-5)

எனும் பகுதி நூற் பெயரில் செய்யப்பட்ட மாற்றத்தைக் காரணங்களோடு விளக்குகிறது. இந்நூல் எவற்றைக் கொண்டு பதிப்பிக்கப்பட்டதெனும் தகவல் இல்லை. அரிதாகச் சில பாடவேறுபாடுகள் காட்டப்பட்டுள்ளன. யாழ்ப்பாணம் சதாசிவப்பிள்ளையின் குறிப்புக்கள் அப்படியே எடுத்தாளப் பட்டுள்ளன.

### திருவாவடுதுறையாதீனம் (1988)

இது மூலபாடம் மட்டும் கொண்டதாகும். பாடவேறுபாடு முதலிய எதுவும் இடம் பெறவில்லை. புலவர்

பா. மகாலிங்கத்தின் பதிப்புரையில் இவ்வெளியீடு எவற்றைத் துணையாகக் கொண்டதெனும் குறிப்பும் இல்லை. இப்பதிப்பில் க. வெள்ளைவாரணாரின் ஆராய்ச்சி முன்னுரை இடம் பெற்றுள்ளது. அதில், சில பாடல்கள் வெள்ளிப்பாடல்கள் எனப்பெற்றன என்கிறார். இப்பதிப்புக்கும் ஆராய்ச்சி முன்னுரைக்கும் நேர்த் தொடர்பில்லை.

## வர்த்தமானன் பதிப்பகம் (1990)

இருபதாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழிலக்கியங்கள் பலவற்றை எளிய உரையுடன் மக்கள் பதிப்பாக வெளியிடும் வர்த்தமானன் பதிப்பகம் பெரிய புராணத்தையும் ஆறு பகுதிகளாக வெளியிட்டுள்ளது.

## சேக்கிழார் ஆராய்ச்சி மையம் (1993)

திரு.வி.க. (1934) கொண்ட பாடத்தைச் சந்தி பிரித்து, அவரது அரும்பதவுரையுடன் சேக்கிழார் ஆராய்ச்சி மையம் வெளியிட்டுள்ளது. பாடவேறுபாடுகள் தரப்படவில்லை.

இப்பதிப்பில் பாயிரத்தையடுத்து முதற்காண்டம் (1) திருமலைச் சிறப்பு எனத் தலைப்புத் தரப்பட்டுள்ளது (ப.143) ஆனால் 'இரண்டாம் காண்டம்' என்பது இடம் பெறவில்லை. 'வெள்ளானைச் சருக்கம்' தவிரப் பிற சருக்கப் பெயர்கள் இல்லை. ஆனால் 'தில்லை வாழந்தணர் சருக்கம் முற்றும்' எனுங் குறிப்பு மட்டும் (ப.289) உள்ளது. பிற சருக்கம் எதற்கும் இத்தகைய முற்றுதற் குறிப்பும் இல்லை. காண்ட, சருக்கப் பகுப்புப் பற்றிய குழப்ப நிலையின் விளைவே இது.

இதன் பதிப்பாசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் எழுதிய பெரிய புராணம் ஓர் ஆய்வு எனும் நூலைச் சேக்கிழார் ஆராய்ச்சி மையம் அடுத்த ஆண்டில் (1994) வெளியிட்டுள்ளது. அதில் காண்டப்பகுப்பைச் சேக்கிழார் செய்யவில்லையென்றும், சருக்கப் பகுப்புகள் அவர் செய்தனவே என்றும் கூறுவதோடு முதலாம், பதின்மூன்றாம் சருக்கப் பெயர்களைச் சேக்கிழார் தாமே படைத்துக்கொண்டு,

இடையிலுள்ள 11 சருக்கங்களையும் திருத்தொண்டத் தொகைச் செய்யுள்களின் முதலடிகளால் குறித்தாரெனவும் கூறியுள்ளார் (பக். 476-478).

## புதிய பதிப்பின் தேவை

இதுகாறும் வெளிவந்துள்ள பெரியபுராணப் பதிப்புகளை நோக்க, (1) நூற்பெயர், (2) காண்டப் பகுப்பு, (3) சருக்கப் பகுப்பு/பெயர்கள், (4) உட்பிரிவுகள் பெயர்கள், (5) செய்யுள் வைப்பு முறை, (6) செய்யுள் எண்ணிக்கை, (7) இடைச் செருகல்கள், (8) மீட்டுருவாக்கிய மூலபாடம், (9) பாடவேறுபாடுகள்- ஆகியன தெளிவுபடுத்தப்பெற வேண்டும் என்பது உணரப்படுகிறது.

## சுவடி வழிப் பதிப்பிற்கான வாய்ப்பு

அனைத்துலகத் தமிழ்ச் சுவடி அட்டவணையில் காணப்படும் பெரியபுராணச் சுவடிகளின் எண்ணிக்கை 148 ஆகும். இவற்றுள் பெரியபுராணத் திரட்டுச் சுவடிகள் நான்கும் அடங்கும். முழுநூலும் கொண்ட சுவடிகள் 44 ஆகும். குறைந்தும் சிதைந்தும் உள்ள சுவடிகளும் பதிப்பிற்கும் பயன்படும்.

தமிழ்ப் பல்கலைக் கழகத் தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணைத் தொகுதிகளில் சற்றுக் கூடுதல் விவரங்கள் தரப்பெற்றுள்ளன. தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் (1992 வரை) பெரியபுராணச் சுவடிகள் 13 உள்ளன. இவற்றில் 7 முழுமையானவை. முழுச் சுவடிகளுள் நான்கின் செய்யுள் எண்ணிக்கை 4277 எனவும் பிற மூன்றில் 4280; 4283; 4286 எனவும் விவரங்கள் தரப்பட்டுள்ளன.

சுவடிகளைக் காலம், வட்டாரம் முதலியவற்றி னடிப்படையில் பகுத்துக் குடிவழி கண்டு புதியதோர் ஆய்வுப் பதிப்பைக் கொணரவியலும்.

முந்தைய பதிப்புகளுடன் மொழியியலறிஞர், பன்மொழி வல்லுநர், தமிழக வரலாற்றறிஞர், சமய, மெய்யியலறிஞர், முதலியோர் துணையும் இன்றியமையாத தாகும்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்

பெரியபுராணப் பதிப்புகள் காலவரிசைப்படி கட்டுரையினுள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளதாதலின், தனிப்பட்டியலாக ஈண்டுத் தரப்படவில்லை.

## துணை நூல்கள்

அருணாசலம், மு., 1973. தமிழ் இலக்கிய வரலாறு பன்னிரண்டாம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம் (மாயூரம்).

இலட்சுமணன், சி., 1989. ஆறுமுக நாவலரின் பதிப்பு முறைகள், சுவடிப் பதிப்பு நெறிமுறைகள் (பதிப்பாசிரியர்: த.கோ. பரமசிவம்), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

கனகசபைப்பிள்ளை, 1901. வருண சிந்தாமணி, அல்பினியன் அச்சுயந்திரசாலை, சென்னை.

கைலாசபிள்ளை, த., 1919. ஆறுமுக நாவலர் சரித்திரம், வித்தியாநுபாலன யந்திர சாலை, சென்னை பட்டணம்.

சுப்பிரமணிய முதலியார், சி.கே., 1933. சேக்கிழார், சாது அச்சுக்கூடம், சென்னை.

சுப்பையா, ஆர்., 1989. திருத்தொண்டர் புராணத்தில் காணும் பாடவேறுபாடுகள், பாரதிதாசன் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பெற்ற (அச்சேறா) எம்.ஃபில். ஆய்வேடு, காசிவாசி சுவாமிநாதசுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

செல்லமுத்து, கா.செ., முதலியோர் (தொகுப்பாளர்கள்) 1991. அனைத்துலகத் தமிழ் ஓலைச் சுவடிகள் அட்டவணை, தொகுதி-3, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

ஞானசம்பந்தன், அ.ச., 1994. பெரியபுராணம் ஓர் ஆய்வு, சேக்கிழார் ஆராய்ச்சி மையம், சென்னை.

நாகசாமி, இரா., 1996. பொய்யிலிமாலை, பிருகதீஷ் பதிப்பகம், சென்னை.

பரமசிவம், த.கோ., 1987. தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை - முதல் தொகுதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பரமசிவம், த.கோ., 1987. தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை - மூன்றாம் தொகுதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பரமசிவம், த.கோ., 1987. தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை - நான்காம் தொகுதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பரமசிவம், த.கோ., 1987. தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை - ஆறாம் தொகுதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

*****

# 14. அகத்துறை வண்ணப் பதிப்பு

புலவர் ப.வெ. நாகராசன்

ஒரு குறிப்பிட்ட வாய்ப்பாட்டிலமைந்த ஓசையே திரும்பத் திரும்பச் செய்யுளில் வருவது வண்ணம் ஆகும். வண்ணம் பற்றிய தொல்காப்பியக் கொள்கைகளும், அவிநயனார் உள்ளிட்ட பண்டைய யாப்பியலார் கொள்கைகளும் வேறு; இடைக்காலத்தில் தெளிவான வரையறையுடனும் மாறாத கட்டுக்கோப்புடனும் வளர்ந்து, ஓசை வகைகள் சிறப்பாக இனங்காணப்பெற்ற பிறகு தோன்றிய யாப்புவகை ஆகிய வண்ணம் பற்றியது. எனவே இப் பிற்கால வண்ணம் பற்றிய ஆய்வில் தொல்காப்பியக் கருத்துக்களை இணைத்துக் குழம்பவேண்டிய இன்றியமையாமை இல்லை.

இன்று இலக்கியத்தில் சிறப்பான இடம்பெற்று விளங்கும் - குறிப்பிட்ட வாய்பாட்டிலமைந்த ஓசையே திரும்பத் திரும்ப வரும் - வண்ணத்தின் இந்த இயல்பை இலக்கணச் சூடாமணி என்றும் யாப்பிலக்கணம்,

> "வல்லினத்தின் மெல்லினத்தின் வாய்ந்த
> இடையினத்தின்
> சொல்லனத்திற் கேய்ந்ததொரு சொற்றொடுத்து -
> நல்லினத்தின் எந்தப்பா வேனும் எழுத்தளவின்
> எய்துவது
> சந்தப்பா என்னத் தகும்[1]"

என விளக்குகிறது. இதன் மூலத்தின் எழுத்து அளவின் எய்துவது என்னும் தொடர் பழைய உரையாசிரியரால் முழுமையாக விளக்கப்படவில்லை. வண்ணப்பாடலின் ஒவ்வொரு பகுதியிலும் - துள்ளல், குழிப்பு, கலை எதுவாயினும் - மெய்யெழுத்துக்களை நீக்கி எழுத்துக்களின் எண்ணிக்கை நான்கு அடிகளிலும் சமமாகவே இருக்க

வேண்டும் என்பதே எழுத்தளவின் எய்துவது (கட்டளையடிகளால் நடைபெறுவது) என்பதன் சரியான பொருளாகும்.

வண்ணப்பா தத்த, தாத்த, தந்த, தாந்த, தன, தான, தன்ன, தய்ய என்னும் எட்டு அடிப்படை அலகுகளாலும் இதன் நீட்சியாலும் அமைந்த சந்தக் குழிப்புக்கள் ஒரே மாதிரி திரும்பத்திரும்ப வந்து நான்கு அடிகளாக - அல்லது எட்டுக் கலைகளாக - நிறைவேறுகிறது. அதனால் இது இயற்கையாகவே கட்டளையடிகளையுடைய பா ஆகிவிடுகிறது. சரியான குழிப்புடனமைந்த எந்த வண்ணப்பாவிலும் நான்கு அடிகளிலும் எழுத்துக்களின் எண்ணிக்கை சமமாகவே இருக்கும். இந்தச் சிறப்பியல்பைத்தான் எழுத்தளவின் எய்துவது என்னும் பகுதி விளக்குகிறது.

வண்ணப் பாக்களைக் கலைவண்ணம், வகுப்பு, வண்ணவிருத்தம் (திருப்புகழ், வண்ணத்தாழிசை போன்றனவும் இதில் அடங்கும்) என்னும் மூன்று பெரும் பிரவுகளுள் அடக்கலாம். எனினும் இவை அனைத்தும் பொது யாப்பியல் முறையில் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களே ஆகும்.

இவற்றுள் கலைவண்ணத்தின் வடிவம்,
எட்டுக் கலையாய் இடையிட் டெதுகையாய்க்
கட்டுக் கலைக்குமுக் கண்ணியாய்த் - திட்டத்தில்
தொங்கலும் எட்டாய்த் தொடைமூன்று
நான்காறாய்ப்
பங்குபெறும் வண்ணப் பரப்பு[2]

என்றும்,

"சில்வகைச் சந்தப் புணர்ப்போர் துள்ளலே"
"பல்வகைத் துள்ளற் புணர்ப்போர் குழிப்பே"
"குழப்பொரு மூன்று கூடிய பின்னர்
தொங்கல் தாழிசைத் தொங்கல்நன் றிசைக்கில்
கலைஒன்று ஆம்எனக் கழறுவர் புலவர்"
"எண்கலைப் புணர்ப்போர் வண்ணப் பாவே[3]"

என்றும் விளக்கப்படுகிறது.

இக் கலைவண்ணமும் இரண்டு கலைகள் ஓர் அடியாக அமைந்த கழிநெடிலடி ஆசிரிய விருத்தமே என்பதை வண்ணத்தியல்பு;

"இருகலை அடிஒன்று என்பதும், அவற்றின்
மோனை ஒன்றா மொழிவதும், ஒருநால்
எதுகைத் தாவதும் இருபகுப் பாதலும்
வண்ணப் பாவின் வழக்கெனத் தகுமே[4]"

எனத் தெளிவாக்குகிறது.

இந்தக் கலைவண்ணம் தன் பாடுபொருளால் அகப்பொருள் வண்ணம், தோத்திர வண்ணம், இதிகாச வண்ணம், புராண வண்ணம், வாழ்க்கை வரலாற்று வண்ணம், உடற்கூற்று வண்ணம், கள் அருந்தியவன் கூற்றாக அமையும் களியன் வண்ணம் எனப் பலவகைப்படும்.

அகப்பொருளில் அமைந்த கலைவண்ணம் வண்ணத்துறை, அகத்துறை வண்ணம், வண்ணப் பிரபந்தம் எனவும் வழங்கப்பெற்றுச் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றாக எண்ணப்படும். இதனை,

"தலைவனுக்கு நாற்கலையும் பொருட்டுரைநாள்
கலையும்
சந்தம்இட்டு, மும்மூன்று துள்ளலும் தொங்கலும் ஆம்
கலைகள்எட்டு ஆம்வண்ணம்[5]"

என்னும் பாட்டியல் இலக்கணப் பகுதியால் அறியலாம்.

இலக்கணச் சூடாமணியும் வண்ணத்தைப் பிரபந்தவியலிலேதான் அமைத்துள்ளது. உரையாசிரியரும் இப்படிப் பாடுவது வண்ணம் என்றும் பிரபந்தம் என்றவாறு[6] எனத் தெளிவாகக் கூறுகிறார். இலக்கணச் சூடாமணி மூலத்தில் இவ்வகைச் சிற்றிலக்கியம் அகப்பொருள் பற்றித் தான் வரும் எனக் கூறப்படவில்லை. எனினும் பெரும்பான்மை இலக்கிய வழக்கு நோக்கிப் பழைய உரையாசிரியர் உரையிற் கோடலாக, வண்ணத்தின் பாடுபொருள் அகப்பொருள் துறையாகும் எனக் கூறியிருக்க வேண்டும். அவர் கூறவில்லை.

இந்த அகப்பொருள் வண்ணம் மட்டுமே இனி இக்கட்டுரையில் சுருக்கமாக வண்ணம் என ஆளப்படும்.

வண்ணத்தின் முதல் நான்கு கலைகள் ஆண்கலை என்றும், பின் நான்கு பெண்கலை என்றும் பெயர்பெறும்.

"துறைபகர் வண்ணப் பாவின்முற் பகுதியை
ஆண்கலை என்றும்மற்று ஏனையைப் பெண்கலை
என்றும் உலகோர் இயம்பிடல் மிகையே[7]"

ஆண்கலையின் முதல் மூன்று கலைகளில் பாட்டுடைத் தலைவனின் புகழும், நான்காம் கலையில் அவனுடைய ஊர்ச்சிறப்பும் இடம்பெறும். இவை புறப்பொருள் பற்றியன என்பது வெள்ளிடைமலை. சற்றேறக்குறைய எல்லா வண்ணங்களிலும் - ஏதோ ஓரிரண்டைத் தவிர - முதல் கலையில் தெயவப்புகழே பேசப்பட்டு இவ்வகைச் சிற்றிலக்கியத்தின் கடவுள் வாழ்த்தாக அமைந்து விடுகிறது.

பெண்கலையில் நற்றாயிரங்கல், தலைவன் வேண்டடல், தலைவி இரங்கல், மடல் விலக்கு, கலவி மகிழ்தல் என்பன போன்ற ஏதாவது ஒரு துறை விரிவாக இடம்பெறும். எனினும் இக்கட்டுரையாளன் அறிந்தவரையில் கலவி மகிழ்தல் துறையே மிக அதிகமாகப் பாடப்பெற்றுள்ளது. (இதுவரை என்னால் தொகுக்கப்பெற்றுள்ள 133 வண்ணங்களுள் 76 கலவி மகிழ்தல் துறையில் அமைந்தனவாகும்). இப் பெண்கலை தமிழ் அகப்பொருள் மரபு பற்றியே நடக்கும். இதில் இடம்பெறுபவர் கிளவித்தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் போன்ற நாடக மாந்தரேயன்றிப் பாட்டுடைத் தலைவன் போன்ற உலகமாந்தர் அல்லர். ஐந்திணைக் கோவை, அகத்துறைத் தனிப்பாடல்கள் ஆகியவற்றில் முறையே கட்டளைக் கலித்துறையும் அகவல் முதலிய ஏனைய பா வகைகளும் கையாளப்பெற இங்கு எண்கலை வண்ண யாப்பு பயன்படுத்தப்படுகிறது. யாப்பினால் அன்றி அகப்பொருள் மரபில் சற்றும் வேறுபாடு இல்லை. மிகச் சில வண்ணங்கள் மட்டுமே புறப்பொருளில் மானிடப்பெண்டிர் கடவுளை நயந்த பக்கமாக இருக்கும். வண்ணத்தின் பெண்கலையில் பாட்டுடைத் தலைவன் பற்றிய செய்தியே இடம்பெறலாகாது.

வண்ணத்தின் பாடுபொருள் அமைப்பை,
"முதற்கலைக் கிடுவது தெய்வச் செயலே"
"இரண்டாற் கிடுவது கிளைகொடை விருது"

"மூன்றற் கிடுவது புகழும் வாகையும்"
"நான்கிற் கிடுவது நாடும் நகரமும்
மற்றைப் பாதி நற்றாய் இரங்கல்
கலவியின் மகிழ்தலும் கழறுவர் வண்ணமே"
"வேறு துறைகளும் விளம்புவர் புலவர்[8]"

எனவும்,

"முந்தைய பகுப்பின் கலைஓர் நான்கில்
தலைவன் றன்புகழ் மூன்றிற் கூறிமற் ( று )
ஒன்றில் அன்னவன் வரைநாட்டு அணிசொற் ( று )
ஏனைய கலைநான் கிடத்தும் பல்வகைத்
துறையில் ஒன்றைத் துகளறக் கூறல்
வண்ணப் பாவின் வழக்கெனத் தகுமே[9]"

எனவும் இலக்கணங்கள் வரையறை செய்கின்றன.

ஒரு வண்ணத்தின் எட்டுத் தொங்கல்களையும் எடுத்து வரிசையாக இணைத்தால் அவை எதுகை மோனையுடனும் பொருள் தொடர்புடனும் கூடிய ஒரு பாவாக அமைய வேண்டும். அப் பா தொங்கல்களின் தொகுப்பாதலின் தொங்கற் றாழிசை எனக் பெயர் பெறும். சில வண்ணங்களில் இத்தகைய தொங்கற்றாழிசைகள் அமையாமலும் இருக்கக் கூடும். என்றாலும் அவற்றையும் தள்ளிவிடாமல் வண்ணச் சிற்றிலக்கியமாகவே ஏற்றுக்கொள்ள வேண்டும்.

"தொங்கல் தாழிசைத் துள்ளல்ஓர் எட்டும்
துறையொடு பாவாத் துலங்கா தாயினும்
தண்டமிழ்ப் புலவர் தள்ளார் அன்றே[10]"

என்பது இதற்கான வழி.

இத்தகைய சிற்றிலக்கியம் 300க்கு மேல் இருக்கலாம் எனக் கருதுகிறேன். இக் கட்டுரையாளனால் இன்றுவரை 201 வண்ணங்களைப் பற்றிய செய்திகளும், அவற்றுள் 133 வண்ணங்களும் ( சில முழுமையாகக் கிடைக்காத குறை வண்ணங்கள் ) தேடித் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் இன்றுவரை அச்சுவடிவம் பெற்றவை ஏறத்தாழ நான்கில் ஒரு பங்கே என்பதும், பெரும்பாலானவை ஏட்டுச் சுவடிகளிலேயே முடங்கிக் கிடக்கின்றன என்பதுவும்

குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய ஓர் உண்மையாகும். தஞ்சாவூர் சரசுவதி மகால் நூல் நிலையம் 92 வண்ணங்கள் அடங்கிய வண்ணப் பெருந்திரட்டு ஒன்றை விரைவில் வெளியிட உள்ளது என்னும் செய்தி சிற்றிலக்கிய ஆர்வலர்களுக்கும், தமிழ் ஆய்வாளர்கட்கும் உவகை தரும் ஒன்றாகும்.

இனி இவ்வகைச் சிற்றிலக்கியப் பழம்பதிப்புகள் பற்றிச் சற்று நோக்குவோம்.

இக்கட்டுரையாளன் அறிந்தவரையில் வண்ணங்களின் தொகுப்பாக வந்த முதல் நூல் 1869ஆம் ஆண்டில் பதிப்பாகியுள்ளது. தனிப்பாடல் திரட்டுகளிலும், பிற நூல்களிலும் தனி வண்ணங்கள் இடம்பெற்றிருக்கலாம். ஆனால் ஒன்றுக்கு மேற்பட்ட வண்ணங்களின் தொகுப்பாக முதல் நூல் இந்த ஆண்டில்தான் வெளிவந்துள்ளது. திருப்போரூர் வண்ணங்கள் எனப் பெயரிய இது ஊ, புஷ்பரத செட்டியாரது கலா ரத்னாகர அச்சுக்கூடத்தில் சுக்ல வருஷம் (1869) கன்னிமதி (புரட்டாசி மாதம்) பூர்வ பட்சத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இப்புத்தகத்தில் புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார் அவர்களால் இயற்றப்பெற்ற மூன்று வண்ணங்கள் உள. அவை வேம்படி விநாயகர் வண்ணம், தியாக கயிலாசநாதர் வண்ணம், ஆண்டவர் வண்ணம் என்பன ஆகும். சட்டைப் பையில் அடங்கும் நாட்குறிப்பேட்டு அளவில் அமைந்துள்ள இப் புத்தகத்தில் பதிப்புரை முதலியனவோ, துறைக்குறிப்பு ஆகியனவோ இடம்பெறவில்லை.

அடுத்து 1879ஆம் ஆண்டு (பிரமாதி, கார்த்திகை) தஞ்சைச் சண்முகம் பிள்ளையவர்களால் பதிப்பிக்கப்பெற்றதாகிய வண்ணத்தியல்பும் உதாரண வண்ணங்களும் திருப்புகழ்களும் என்னும் நூலில், அந் நூலாசிரியராகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் மூன்று வண்ணங்கள் உள்ளன. அதன் தலைப்புப் பக்கத்தால் இது இரண்டாம் பதிப்பு என்றும் முன்னச்சிட்டவர்களின் சம்மதப்படி பதிப்பிக்கப்பட்டது என்றும் அறிகிறோம். எவ்வளவு முயன்று தேடியும் அந்த முதல் பதிப்பு பார்வைக்கு அகப்படவில்லை. இதில் திருவுருமாமலை கருணைக்கடல்

வண்ணம், குன்றுதோறாடல் சக்திவேல் வண்ணம், திருச்செந்தூர் வென்றி மருப்படையார் வண்ணம் ஆகிய மூன்று இடம்பெற்றுள்ளன. இந்நூல் பதிப்பு முறையில் முன்கூறப்பெற்ற திருப்போரூர் வண்ணங்களைப் போலவே உள்ளது.

இவ்விரு பதிப்புக்களுமே ஓராசிரியரால் இயற்றப் பெற்ற வண்ணங்களின் தொகுப்பு என்பது உளங்கொளத் தக்கது. அவற்றுள் முன்னையது ஒரு தலத்தைப் பற்றி எழுந்ததுமாகும்.

1893ஆம் ஆண்டில் (விஜய. புரட்டாசி), புதுக்கோட்டை சமஸ்தானம் திருமயம் தாலுகா செட்டிராயபுரத்திலிருக்கும் த.இ. பஞ்சுவையரவர்களிடமிருந்த ஏட்டுப் பிரதிக்கிணங்கியதென முன்பதிப்பித்திருந்த சந்த வருக்களாதிய முற்றும் பேறை - தசாவதானம் செகநாதப் பிள்ளையவர்களால் திருத்துவித்து, ஆ. சுப்பராய முதலியார் குமாரர் எதிராஜ முதலியாரவர்களால் தமது சென்னை சூளை பிரின்ஸ் ஆப் வேல்ஸ் அச்சுயந்திர சாலையில் பதிப்பிக்கப் பெற்ற வண்ணத்திரட்டு அடுத்துக் குறிப்பிடத்தக்கதாகும். இங்கு குறிப்பிடப்பெற்றுள்ள முதற்பதிப்பும் ஆய்விற்கு அகப்படாததால் அது எப்போது யாரால், எங்கு, எப்படிப் பதிப்பிக்கப்பெற்றது என அறியக்கூடவில்லை. இந்தப் பதிப்பில் முறையான முன்னுரை முதலிய ஒன்றுமே இல்லை என்பதோடு வண்ண ஆசிரியர்களின் பெயர்கள்கூடக் கொடுக்கப் பெறவில்லை. இது இப்பதிப்பின் குறையன்று.

மிகப் பெரும்பாலான வண்ணச் சுவடிகளில் அவற்றை இயற்றிய ஆசிரியர்களின் பெயர் குறிக்கப்படவில்லை. இதனால் பல வண்ண ஆசிரியர்களை இன்னார் என இன்றும் இனம் காண இயலவில்லை. எனவே ஆசிரியர் பெயரைக் கொடுக்காதது பதிப்பாசிரியர் குறையன்று; ஆனால் பெயர் அறியப்படவில்லை எனத் தெரிவித்துவிடுவதே பதிப்பறமாகும். அதைச் சுட்டாதது குறையே. இவ்வாறு பதிப்பு நெறிமுறைகளில் சிலபல குறைகள் இருப்பினும் பல வண்ணச் சிற்றிலக்கியங்களைத் தொகுத்து வெளியிட்ட முதல் முயற்சி என்ற அளவில் பாராட்டிற்குரியதாகும். இந்நூலில் 13 முழு வண்ணங்களும் 3 குறை வண்ணங்களும் வேறுசில வண்ணப்பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

எதிராஜ முதலியாரின் இப்பதிப்பை அப்படியே முன்மாதிரியாகக் கொண்டு, பல வித்துவான்கள் பாடிய வண்ணத் திரட்டு என்ற பெயரில் 1926ஆம் ஆண்டு சென்னை, புரசை மாறன் அச்சுக்கூடத்தில் ஒரு பதிப்பு வெளிவந்துள்ளது. இதனைக் கா.ர. கோவிந்தராஜ முதலியார் அவர்கள் மாணவர் பு.அ. கோவிந்தராஜ நாயகர் அவர்கள் பார்வையிட்டுள்ளார்கள். இதில் ஒரு சிறிய முகவுரை, கா.ர. கோவிந்தராஜ முதலியார்எழுதிய வண்ண இலக்கண உரைநடை, அறுவகை இலக்கணத்தில் யாப்பிலக்கணப் பகுதி ஆகிய வண்ணவியலின் 23 நூற்பாக்கள், வண்ணச்சரபம் சுவாமிகளின் நெல்லைக் குருதேசிகனார் வண்ணம் ஆகியன புதியனவாகச் சேர்க்கப்பெற்றுள்ளன. மற்றபடி இது எதிராசனாரின் பதிப்பு உள்ளீட்டையே - அதிலுள்ள தவறுகளுடன் - பெற்று விளங்குகிறது. எனினும் பதிப்பு முறையில் மாறன் பதிப்பு எதிராசரின் பதிப்பைவிடச் சிறந்து விளங்குகிறது எனலாம்.

இதனையடுத்து 1969இல் தஞ்சைச் சரசுவதி மகால் நூலகம் ஒரு வண்ணத்திரட்டை வெளியிட்டது. அதில் 16 வண்ணப் பிரபந்தங்களும் 7 பிறவகை வண்ணப்பாக்களும் பல தனிப்பாடல்களும் தொகுக்கப் பெற்றுள்ளன. இப் பதிப்பு இலக்கியச் சுவைஞர்களுக்கோ, தமிழ் ஆய்வாளர்கட்கோ முழு நிறைவு தருமாறு அமையவில்லை.

1980இல் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் வண்ணங்கள் அனைத்தையும் தொகுத்து வண்ணமஞ்சரி என்ற பெயரில் திருவாமாத்தூர்க் கௌமார மடாலயம் வெளியிட்டது. இதில் 11 வண்ணப் பிரபந்தங்களும், ஒரு தோத்திர வண்ணமும், ஆசிரியராலேயே முற்றுவிக்கப்பெறாத ஒரு வண்ணத்தின் முதற்கலையும் அடங்கியுள்ளன. இந்த வண்ண மஞ்சரி வெளியீட்டிற்கான நிதியுதவியைப் பெற்றுத் தந்த சிரவையாதீனம் தவத்திரு சுந்தர சுவாமிகள் அவர்கள் இப்பதிப்பை வண்ண இலக்கியங்கள் பற்றிய விரிவான ஆய்வு முன்னுரை, வண்ணத்தியல்பு நூல் மூலம், அரும்பொருள் அகரநிரல் முதலியவற்றோடு சிறந்த ஆய்வுப்பதிப்பாகக் கொண்டுவர ஆவன எல்லாம் செய்திருந்தார். எனினும் தவிர்க்க இயலாத சூழ்நிலைகளால் சுவாமிகளுக்கே

தெரியாமல் அவசர அவசரமாகச் சென்னையில் நூல் முற்றுவிக்கப்பட்டுவிட்டது. இச்செயலால் ஆண்டுதோறும் வண்ணச்சரபம் சுவாமிகளின் நூல் ஒன்றை நல்ல முறையில் பதிப்பிக்கப் பொருளுதவி செய்ய முன்வந்த ஒருவர் தம் எண்ணத்தை மாற்றிக்கொண்டுவிட்டார். ஆய்வுக் குறிப்புக்கள் முதலியன இல்லாவிடினும் இப்பதிப்பில் மூலபாடம் நன்றாக உள்ளது.

இதுவரை கூறப்பெற்ற தொகுப்புக்களையன்றி வேறு அகப்பொருள் வண்ணத்திரட்டுப் பதிப்புக்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

இச் சிற்றிலக்கியத்தில் பொருள் இலக்கணச் செய்திகள், சமயக் கருத்துக்கள், புராண வரலாறுகள், தல வரலாறுகள், இசை பற்றிய செய்திகள், சில அரசியல் தலைவர்கள் மற்றும் வள்ளல்கள் பற்றிய குறிப்புக்கள், சமுதாயப் பழக்க வழக்கங்கள், இன்பநூற் கருத்துக்கள், இயற்கை வருணனை ஆகியன ஆங்காங்கே காணப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் தனித்தனியே ஓர் ஆய்வுக்களமாகுமளவு விரிவும் தகுதியும் பெற்றதாகும். இது சுவைஞர்களுக்கு இலக்கிய விருந்தாகவும், ஆய்வாளர்களுக்குச் செய்திக்களஞ்சியமாகவும் விளங்குகிறது.

அடுத்து வண்ணங்களின் பதிப்பு எவ்வாறு அமைதல் வேண்டும் எனச் சிந்திக்கும் முன் வண்ணங்கள் வரையப் பெற்றுள்ள ஏட்டுச் சுவடிகளைப் பற்றியும் சுருக்கமாக அறிந்து கொள்ளுதல் நலம்.

பல வண்ணங்கள் எழுதப்பெற்றுள்ள வண்ணத் திரட்டுச் சுவடிகளும், தனி வண்ணச் சுவடிகளும் ஏறக்குறைய எல்லாச் சுவடி நூலகங்களிலும் உள்ளன. இவை சுவடி அட்டவணைகளிலும் இடம்பெற்றுள்ளன. இவற்றில் குறிப்பிடப்படாமல் தனிப்பாடல், சிற்றிலக்கியங்களுக்கு நடுவே வெளிச்சத்திற்கு வராமல் சில வண்ணங்கள் மறைந்து கொண்டு - ஒளிந்துகொண்டு மட்டும் அல்ல அழிந்து கொண்டும் - இருக்கலாம்.

ஓலைச்சுவடிகளிலிருந்து நூலைப் பெயர்த்தெழுதிச் செவ்வையான நூலாகப் பதிப்பிப்பதில் உள்ள தொல்லைகளை அறிஞர் அனைவரும் அறிவர். எனவே அவற்றை விரித்தல்

வீண். வண்ணச்சுவடிகளுக்கே சிறப்பாக உரிய சில இடர்ப்பாடுகளைச் சுட்டிக்காட்ட விழைகிறேன்.

மிகப் பெரும்பாலான சுவடிகளில் நூற்பெயர், ஆசிரியர் பெயர், சந்தக் குழிப்பு, துறைக்குறிப்பு ஆகியன இருக்காது. மூலமும் - நாம் அனைவரும் அறிந்துள்ளவாறே - தொடர்ந்து உரைநடைபோல் எழுதப்பட்டிருக்கும். ஆனால் ஒவ்வொரு கலையின் ஈற்றிலும் 1/8, 1/4, 3/8, 1/2 என்றோ 1, 2, 3, 4 என்றோ குறிக்கப்பெற்றிருக்கும். பல சுவடிகளில் உரிய இடத்தில் பெண்கலை என்னும் தலைப்பு காணப்படுகிறது. இது ஒரு நீண்ட பாடலாக இருப்பதால் யாப்பமைதியோ, பொருள் தொடர்போ எளிதில் புலனாகாது. எழுதியவர்களுக்கே இத்தகைய இடர்ப்பாடு இருந்திருக்க வேண்டும். அதனால்தான் போலும் வண்ணச் சுவடிகளில் மற்றவற்றைவிட எழுத்துப்பிழைகள், விடுபாடுகள், வரிப் பிளப்புக்ககள், இடைப்பிறவரல் ஆகியன அதிகமாகக் காணப்படுகின்றன.

வண்ணப் பதிப்பாசிரியருக்குச் சந்தக் குழிப்புகளில் ஐயமற்ற தெளிவும், யாப்பிலக்கணத்தில் நல்ல தேர்ச்சியும், இலக்கிய மரபில் நிறைந்த பயிற்சியும், ஏராளமான சொற்பொருளறிவும் இன்றியமையாது வேண்டப்படுகிறது. சந்தக் குழிப்போடமைந்த பாடல்களைப் பதிப்பித்த அநுபவம் உள்ளோர் இப் பணியின் கடுமையை நன்கு உணர்வர்.

வண்ணங்களுக்குக் குறிப்பான பெயர் தரப் பெற்றிருக்காது எனக் கூறுப்பட்டது. அதில் பழனி வண்ணம், சுப்பிரமணியர் வண்ணம், ஆழ்வார் வண்ணம், முதலியார் வண்ணம் என்பன போன்றே தலைப்பு இருக்கும். ஒரே தெய்வத்திற்கும் ஒரே தலத்திற்கும் பற்பல வண்ணங்கள் இருப்பதால் இத்தகைய பொதுப்பெயர்கள் எடுத்தாளப் போதுமானவையல்ல. சில வள்ளல்கள் மீதும் ஒன்றற்கு மேற்பட்ட வண்ணங்கள் உள. எனவே ஒவ்வொன்றையும் தெளிவாகக் குறிப்பிட்டு உணர்த்தப் பதிப்பாசிரியர்கள் தாம் அவற்றிற்குத் தனித்தனியாகத் தக்க பெயர் சூட்ட வேண்டும்.

அவ்வாறு குறியிடும்போது இரண்டு முறைகளைக் கையாளலாம். முதலாவது தலத்தின் பெயரோடு

வண்ணத்தின் தொடக்கத்தை இணைத்துப் பெயராக்கலாம். திருவுருமாமலைக் கருணைக் கடல் வண்ணம், திருவுருமாமலைக் குருதேசிகன் வண்ணம் என்பன இவ்வகை வள்ளல்கள் பற்றிய வண்ணமாயின் அவற்றைத் தஞ்சை வெள்ளைச் செட்டியார் எனக் கூறிவிடலாம். அங்கும் ஒருவருக்கே பல வண்ணங்கள் இருப்பின் செண்டலங்காரப் பிரபு வண்ணம், செண்டலங்கார வேள் மட்டார் பத்மபத வண்ணம் எனக் குறிப்பிடலாம். பிரபு, வேள் போன்ற பின்னொட்டுக்கள் இல்லாவிட்டால் இறைவனா, மனிதனா என இனங்காண முடியாமற் போய்விடும்.

மற்றொரு வகை வருமாறு:- பல வண்ணங்கள் சந்தவாய்பாட்டுடன் தொடங்குகின்றன. இக் குழிப்புகளைப் பெயரில் அமைத்தால் சிறப்பாக அமையாது. அவை திருக்கோளநாதர் தகதிதி தித்திதோதி வண்ணம், நம்மாழ்வார் தாந்தி திந்திமிதா வண்ணம், பாபவிநாசர் திந்திமி திந்திமி வண்ணம் என்பன போல அமையும். இத்தகைய இடர்ப்பாடு வரும்போதுஅந்த வண்ணத்திலேயே பாட்டுடைத் தலைவரைக் குறிக்க ஆளப்பட்டுள்ள ஒரு பெயரை இணைத்துக்கொண்டுவிடலாம். அப்போது குன்றக்குடிக் குமரவேள் வண்ணம், குன்றக்குடி வேலவர் வண்ணம் எனப் பொருத்தமாக அமையும். இவ்வாறு தனித்தனிக் குறியிட்டுப் பதிப்பித்தல் சிறப்புடையதாம்.

அடுத்து வண்ண ஆசிரியர்களைப் பற்றி அறிய முயல வேண்டும். புலவர் வரலாறுகள், சிறப்புப் பாயிரங்கள் ஆகியவற்றின் வழிவண்ண ஆசிரியர்கள் பலரைப்பற்றி அறிய முடிகிறது. அவர்களுள் யாராவது ஒருவருடையதாக இந்தக் குறிப்பிட்ட வண்ணம் இருக்க வாய்ப்புள்ளதா என ஆராய வேண்டும். காலம், இடம், சமயம் போன்ற புறச் சான்றுகளும் சொல்லாட்சி, வட்டார வரலாறுகள், வாக்கேய முத்திரை ஆகிய அகச்சான்றுகளையும் கொண்டு பல இடங்களில் நோக்க இயலும். அவ்வாறு ஆசிரியர் இன்னாராக இருக்கலாம் என ஊகித்தால் அதனை ஐய வாய்பாட்டிலேயே கூறவேண்டும். முந்தைய பதிப்புக்களில் வண்ண ஆசிரியர் பெயர் கொடுக்கப்பெற்றிருந்தால் அதை அப்படியே எடுத்தாளலாம். ¶Ã É¹õ´ÄŠ ½ÙÃ¿ Î±Ì »ÂÅÔÆâ ÍÆ¤½¥¹Ô§

அதனையும் தக்க காரணத்துடன் எடுத்து விளக்குதல் பதிப்பாசிரியர் கடமை ஆகும். தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு இக்குறிப்புக்கள் மிக இன்றியமையாதனவாதலின் இதில் சோர்விற்கே இடம் இல்லை.

மூன்றாவதாகச் சந்தக் குழிப்பைத் தரும்போது கவனமாக இருக்க வேண்டும். இதற்குத் தெளிவான மரபு இருக்கிறது. அதிலிருந்து பிசகாமல் குழிப்புக்களைச் சுட்ட வேண்டும். இதற்கு அருணகிரிநாதரின் திருப்புகழ் ஒன்றே போதுமானது.

சில வண்ணங்கள் இருவகையில் நன்றாகப் பிரியுமாறு அமைந்திருக்கும். எடுத்துக்காட்டாக வளசை வில்வவனநாதர் வண்ணம், "பதும மலர்த்திரு வாணி நாரணி" எனத் தொடங்குகிறது. இதனை தனன தனத்தன தான தானன எனலாம். பிறகு இது பயிலும் இடங்களில் கலைகள் பயிற்றி என், பகழி தொடுத்தெதிர், கதிர்கள் பரப்பிய என்பன தனன தனந்தன என்பதற்குப் பொருத்தமாக உள்ளன. ஆனால் பல இடங்களில் பருவத பத்தினி, படவர வக்கறு ( கு ), தசரத னூற்றிடு, கய முகனைக்குறு எனச் சொற்கள் உள்ளன. இவை தனதன தத்தன என்னும் குறிப்பிற்குரியவையாகும். இத்தகைய இடங்களில் அதிகமானவற்றை ஏற்றுக் குழிப்பு குறிப்பிடப்பட வேண்டும். மேற்கண்ட வண்ணம் தனதன தத்தன எனக் கொள்ளப்பட்டு, "பதுமம லர்த்திரு வாணி நாரணி" என்றே பதிப்பிக்கப்பெறல் வேண்டும். ஒரே மாதிரி அமையும் வகையுளி செய்யுளில் ஓர் ஓசை இனிமையைக் கொடுக்கும். எனவே ஓசையின்பத்திற்கு முதன்மை தரும் பாவகைகளுள் இத்தகைய வகையுளிகள் ஏற்கத்தக்கனவே.

வண்ணங்களை அச்சேற்றும்போது வரி அமைப்புக்கள் மிகச் சிக்கலானவை. எனவே பதிப்பாசிரியரோடு அச்சகத்தாரும் நன்கு ஒத்துழைத்தால்தான் நூல் சிறப்புற அமையும். பதிப்பாசிரியர் அச்சகத்திற்குக் கொடுக்கும் கையெழுத்துப்படியே அச்சில் வரவேண்டிய முறைப்படி செப்பாக அமைந்துவிட்டால் பாதி இடர்ப்பாடுகளைத் தவிர்த்துவிடலாம்.

ஒரே மாதிரி ஒலி அமைப்புடைய சொற்றொடர்கள் மீண்டும் மீண்டும் பயின்று வருவதால் மெய்ப்புத் திருத்தும் பொழுது தவறிவிட வாய்ப்புண்டு. எனவே ஒலியின்பத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்துவிடாமல் கவனமாக மெய்ப்புத் திருத்த வேண்டும்.

வண்ணத் தொகுப்புகளுக்குப் பொருளடக்கம் (உள்ளுறை) தரும்போது வண்ணப்பெயர் அகர நிரல் ஒன்றும், செய்யுள் முதற்குறிப்பகராதி ஒன்றும் தனித்தனியே இருந்தால் பயன்பாடு மிகுதியாகும்.

நல்ல சுவடிச் செம்பதிப்புகளில் இன்றியமையாது இடம்பெற வேண்டிய பாடியோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு, தல வரலாறு, சுவடி விவரம், தெளிவான முன்னுரை ஆகிய அடிப்படைச் செய்திகள் வண்ணப் பதிப்பிற்கும் கட்டாயம் வேண்டும் எனத் தனியாகச் சொல்ல வேண்டியதில்லை.

வண்ணப் பதிப்பாசிரியர்கள் ஒன்றைக் கவனமாகக் கருத்திலிருத்திக் கொள்ள வேண்டும். அதாவது வண்ண யாப்பு மற்றும் இலக்கிய வகைகளைப் பற்றிய சரியான செய்திகள் தமிழ் ஆய்வுலகில் போதுமான அளவு பரவவில்லை. தரமான விளக்கங்களோடு கூடிய பதிப்புக்களும் இருப்பதாகத் தெரியவில்லை. அதனால்தான் வண்ண இலக்கியம் தமிழ்ப் பேரறிஞர்கள் பலரையும் மிகக் குழம்ப வைத்துள்ளது. வண்ணம், சந்தப்பாடல்கள் பற்றியே பெரிய அளவில் அரிய ஆய்வு நூல்களை இயற்றியுள்ள உழைப்புமிக்க நல்லாய்வாளர்கட்கே நம்பத்தகுந்த அடிப்படைச் செய்திகள் கிடைக்கவில்லை என்பது வருத்தத்திற்குரியது. தெளிவான ஆதாரங்கள் கிடைக்காமையால்தான் அத்தகைய நல்ல ஆய்வுகளும் சிற்சில இடங்களில் தடுமாறி உள்ளன.

இந்த நிலை விரைவில் மாறி, வண்ணத் தமிழின் வளப்பம் இலக்கிய உலகெங்கும் சிறப்பாகப் பரவ நல்ல பதிப்புக்கள் மட்டுமே துணைசெய்ய இயலும். அத்தகைய நல்ல பதிப்புக்களைக் கொணர எளிய உதவியாக இக்கட்டுரையாளனால் கடந்த 30 ஆண்டுகளில் பல்வேறு துறைகளிலிருந்து தொகுத்த 201 வண்ணங்களைப் பற்றிய அகரநிரல் பிற்சேர்க்கையாக இணைக்கப்பட்டுள்ளது. இது

முழுமையானதோ அல்லது தவறே இல்லாத ஒரு பட்டியலோ அன்று. வண்ணம் பற்றிய உண்மையான செய்திகள் தெரியத் தெரிய இது திருத்தமும் விரிவும் பெறவேண்டும்.

ஆற்றல் மிக்க இளைஞர்கள் இத்துறையில் ஈடுபட்டு வளர்ந்து சிறப்படைவார்களாக.

## அடிக்குறிப்புகள்

1. இலக்கணச் சூடாமணி, நூற்பா 45.
2. மேலது நூற்பா 44. இவ்வெண்பா செந்தமிழ் இதழ் பகுதி 45 பகுதி 7,8இன் (மே கலை 1948) 103ஆம் பக்கத்தில் கீழ்க்கண்ட வடிவில் காணப்படுகிறது.

   எட்டுக் கலையாய் இடையிட் டெதுகையாய்க்
   கட்டுக் கலைக்குமுக் கண்ணியாய் - முட்டமுட்டத்
   தொங்கலு மாகித் தொடையும் பலவாகிப்
   பங்குபெறும் வண்ணத்தின் பண்பு
3. வண்ணத்தியல்பு நூற்பாக்கள் 85-88.
4. மேலது நூற்பா 90.
5. சுவாமிநாதம் நூற்பா 172.
6. இலக்கணச் சூடாமணி நூற்பா 45 உரை.
7. அறுவகை இலக்கணம் நூற்பா 474.
8. செந்தமிழ் தொகுதி 45 பகுதி 7,8 - சருவதாரி வைகாசி ஆனி (1948 மே - சூலை) - பக்.103.
9. வண்ணத்தியல்பு நூற்பா 91.
10. மேலது நூற்பா 92.

**பிற்சேர்க்கை**

## தமிழ் அகப்பொருள் வண்ணங்களின் அகரநிரல்

இதுவரை அறியப்பட்டுள்ள வண்ணப்பிரபந்தங்களைப் பற்றிய செய்திகள் இங்குப் பெயர் அகர வரிசையில் தரப்பெறுகின்றன.

இங்குப் பட்டியலிடப்பட்டுள்ளவற்றில் பல வண்ணங்கள் இக்கட்டுரையாளனின் பார்வைக்குக்

கிடைக்கவில்லை. சுவடி விளக்க அட்டவணைகள், புலவர் வரலாறுகள், சிறப்புப் பாயிரங்கள், தனிப்பாடல்கள், செவிவழிச் செய்திகள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே இப்பட்டியல் உருவாக்கப்பெற்றுள்ளது. எனவே இதில் கூறியது கூறல், அகப்பொருள் வண்ணமல்லாதது அவ்வாறு கூறப்பெறல் போன்ற தவறுகள் நேர்ந்திருக்கலாம். வண்ணப்பிரபந்தங்கள் வெளிச்சத்திற்கு வரவர இப்பட்டியல் திருத்தம் பெறும். தமிழின் சரியான அகப்பொருள் வண்ணப்பட்டியல் உருவாக இது அடிப்படையான முதல் பட்டியல் ஆகும்.

வண்ணத்தின் பெயர் (பல இக்கட்டுரையாளனால் எளிதில் எடுத்தாளும் பொருட்டுக் கொடுக்கப்பட்டவை), ஆசிரியர் (தெரியாத இடத்தில் பெருக்கல் குறி), தொடக்கம் (தெரியாத இடத்தில் புள்ளிகள்), துறை (தெரியாத இடத்தில் பெருக்கல் குறி) என்னும் வரிசையில் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன.

தொடர் எண்ணிற்கு முன் உடுக்குறியிடப்பெற்றவை விரைவில் தஞ்சாவூர்ச் சரசுவதி மகால் நூலகம் வெளியிட உள்ள வண்ணப் பெருந்திரட்டு என்னும் நூலில் உரையுடன் இடம்பெற்றவையாகும் (மொத்தம் 92).

பெயரில் ஒவ்வொன்றுடனும் வண்ணம் எனச் சேர்த்துக்கொள்க. முதலில் இடம்பெற்ற ஒன்றில் மட்டும் மாதிரிக்காகக் காட்டப்பெற்றுள்ளது.

1. அகத்தீச்சுரம் அகத்தியலிங்கர் வண்ணம் - நமச்சிவாயக் கவிராயர்? - பார்வளம் பெறவே - கலவி மகிழ்தல்.

*2. அண்ணாமலையார் - சேறைக்கவிராச பிள்ளை - சிலைக்காமன் உடல் எரிய - எழுதல் அரிது எனல்

3. அண்ணாமலையார் - தியாகராச பிள்ளை - ............... x

4. அம்பலவாண சுவாமிகள் - x - ................. - x

5. அருணாசலேசர் - x - கற்பகத்தை - கலவி மகிழ்தல்.

*6. அருணையம்பதிச் சங்கரர் - x - புனல் திரும்பிய - கனல் - செவிலி இரங்கல்.

*7. அவிநாசி நாதர் - x - அருள்பொழி சத்த - கலவி மகிழ்தல்.

8. அழகப்ப முதலியார் - x - பூமலிந்த குழல் - x

9. அழகர் பெருமாள் - குலசை அழகப்பெருமாள் இதுவா?

10. ஆண்டவராயத் தொண்டைமான் - மிதிலைப். சிற்றம்பலக் கவிராயர் ............. - x

11. ஆண்டுகொண்டான் - x - வைத்தபுனைநாக - கலவி

12. ஆவினன்குடி - x - .............. - x

13. ஆழ்வார் - x - ................ - x

14. இந்திராத் தேவர் - x - ............ - x

*15. இரகுநாதத் தொண்டைமான் - 2ஆம் சர்க்கரைப் புலவர் - ஆதியிமாசல குமாரி - நற்றாயிரங்கல்.

*16. இரசை ஆவுடையராயன் - x - தானதந்தன - கலவி

*17. இரசை வடமலையப்பப் பிள்ளை - x - வடிவொரு பக்கமான - கலவி மகிழ்தல்.

18. இரத்தினகிரியார் - x - தங்கமாமலை - ஆண்கலை மட்டும்.

19. இரமணபூபால சமுத்திரம் சோமநாயகர் - நமச்சிவாயக்கவிராயர்? - திருமலர் மண்டபமீதிலே - கலவி.

20. இராம உடையார் - x - ............ - x

*21. இராமேச்சுரம் இராமநாதர் - இராமநாதபுரம் சுப்பராயர் - பகவதி நித்யகல்யாணி - கலவி மகிழ்தல்.

*22. இளையபெருமாள் கவுண்டர் - பாலபாரதி. பவானி முத்துசாமி அய்யர் - மதிபுனலுந்தண் - கலவி மகிழ்தல்.

*23. ஈழத்து ராசா - அந்தகக்கவி வீரராகவ முதலியார் - ததிமித் தரிகிடதோ - நற்றாயிரங்கல்.

*24. ஒப்பிலாத மழவராயன் - x - ஆடுகிண்கிணியோசை - கலவி.

25. கங்காதரச் செழியன் - x - ஏருற்றிடு மகராலய - தலைவி இரங்கல்.

26. கடலூர் அம்பலவாண முதலியார் - x - நாட்பிறைக் - கலவி.

*27. கடவூர் கருணைகிரி முத்தையன் - x - ஆரணச்சிரத்தில் - கலவி

28. கடவூர்ப்பிரபு - x - ......... - x

29. கடையம், வில்வவனேசர் - நமச்சிவாயக் கவிராயர்? உலகப் பயிர் வளர்த்த - கலவி மகிழ்தல்.

30. கதிர்காம வேலவர் - பாம்பன் சுவாமிகள் - சீருயர் அந்தர வேள் - நற்றாயிரங்கல்

*31. கயிலாசநாத அய்யர் - x - வீரவேந்தாம் - நற்றாயிரங்கல்

32. கயிலாசநாதர் - x - கயிலையில் மேவுகின்ற - முக்கோற்பகவரை வினாதல்

33. கருத்த மீரா ராவுத்தர் - x - அக முத்து வெளியந்த - x

34. கருத்தாக் கவுண்டர் - x - திருநீற்றை - கலவி மகிழ்தல்

*35. கனலசைச் சிதம்பரேசுரர் - தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் - இன்னிசையறாச் சுரும்பர் - பாங்கி மதியுடன்பாடு.

36. கற்குளம் திருநீலகண்டர் - நமச்சிவாயக் கவிராயர்? - தித்தி திந்தி தோதிதெய் - கலவி மகிழ்தல்.

37. கறுப்பண்ண சுவாமி - x - ............. - x

*38. காஞ்சி ஏகாம்பரர் - இரட்டையர் - மறுத்தோன்றி வெளுத்த - முக்கோற் பகவரை வினாதல்.

39. காலசம்ஹார மூர்த்தி வெண்பா வண்ணம் - 2ஆம் சர்க்கரைப் புலவர் - .......... - x

40. கிருஷ்ண செட்டியார் - x - மதியும் அறுகு ஆறுபூளை - கலவி

41. கிருஷ்ணன் - x - ......... x

*42. குடந்தை ஆராவமுதர் - x - சீதர செல்வ - நற்றாயிரங்கல்

*43. குமாரசாம்புவன் - x - திருதக்கதோதி - தலைவன் வேண்டல்

44. குலசை அழகப்பெருமாள் - x - சததள பத்ம - பாகனொடு
கூறல் இது வியாஜம்; கலவி மகிழ்தலே

45. குலசை குலசேகர நாதர் - x - பூவை நீங்காத பதியாக - கலவி

46. குளத்தூர் அய்யனார் - x - சீதள சரோருக மாது - கலவி

*47. குன்றக்குடி குமரவேள் - வண்ணச்சரபம் சுவாமிகள்
ஆரணம் மெச்சும் பரன் - கலவி மகிழ்தல்

48. குன்றக்குடிக் குமரன் - சிதம்பர பாரதி - ........ - x

*49. குன்றக்குடி வேலவர் - x - தேவகுஞ்சரியார் - மடல்

*50. குன்றுதோறாடல் - வண்ணச்சரபர் - சக்திவேல்புனை - பாலனைப்பழித்தல்

51. கூழங்கையர் - கூழங்கைத் தம்பிரான் - ............ - x

52. கொட்டாரக்கரை வீரகேரளராசா - நமச்சிவாயக்
கவிராயர்? - உத்தமி சத்தி - கலவி மகிழ்தல்

*53. கொடுங்குன்றம் மங்கைபாகர் - மிதிலைப்பட்டிச்
சிற்றம்பலக் கவிராயர்? - கதிர்வீசு சுதாகரன் - கலவி

54. சங்கரநயினார் கோயில் - நமச்சிவாயக் கவிராயர்?
பூவிற்குடியிருக்கும் - சுனைநயந்துரைத்தல்

*55. சடையப்ப முதலியார் - x - நீடுவிற்கரும்பு - கலவி

56. சந்திரசேகரம்பிள்ளை - சவ்வாதுப்புலவர் - .... - x

*57. சிகரகிரிக் குடுமீசர் - x - தரிதாகிண - கலவி மகிழ்தல்

58. சிங்கவனம் ஜமீன்தார் - சிறுகம்பையூர்ச் சர்க்கரைப்புலவர் - ...... - x

59. சிங்கவனம் ஜமீன்தார் - சின்னு பாரதி - ......... - x

*60. சிவகிரிக் குராவடி வேலர் - வேலச் சின்னோவையன் -
அனமேறிய நான்முகனை - நற்றாயிரங்கல்

*61. சிவகிரித் துரைச் சரவணர் - x - சீரைப்பரவு -
முக்கோற்பகவரை...

*62. சிவகிரியாண்டவர் - x - ஆதிபரமேஸ்வரி - கலவி மகிழ்தல்

63. சிவசயிலம் நிரோட்ட - x - அநதரியைக் கலியாணியை தலைவன் வறுங்கள நோக்கி மறுகல்

64. சின்னணைஞ்சாத் தேவர் - x - திருவிற்பொங்கு கூளை - கலவி பெண்கலையைத் தவிர்த்துச் செந்தமிழில் அச்சு

65. சீரங்கநாதர் - x - தாதவிழ் சுரும்பில் - x

66. சீனப்பிள்ளை - x - பாண்டி மண்டலராசன் (இது மூன்றாம் கலைத் தொடக்கம்) - x (3, 4 கலைகளே கிடைக்கின்றன)

67. சுப்பிரமணியர் - x - மலைநம்பர் நுதலங்கி - x

68. சூளாமணி - x - ஆட்சியால் நாலுபடை - x

69. செங்கோட்டு வேலவர் - x - அத்திவெற்புங் கொளும் - கலவி

*70. செண்டலங்காரப் பிரபு - x - செகரட்சகரியன்ற - கலவி

*71. செண்டலங்காரப் பெருமாள் - x - வேலைநெடுந்திரை - நற்றாயிரங்கல்

*72. செண்டலங்காரவேள் - x - மட்டார்பத்ம பதத்தார் - பாகனொடு கூறல்

*73. செந்தில் ஆறுமுகேசர் - x - திருப்பொங்கும் - கலவி மகிழ்தல்

*74. செந்தில் சிவசுப்பிரமணியர் - x - ஊழிமுப்பொறி - கலவி மகிழ்தல்

75. செந்தில் வேலர் - x - சிகமெய்க்க பதித்த - கலவி மகிழ்தல்

76. செந்திற்பதிக்கந்தன் - x - அருட்செம்பொற் - ஆண்கலை மட்டும்

*77. செந்தினாயகம்பிள்ளை - x - சீருலாமுகிற் - மூன்று கலைகளே உள

*78. செப்பறை அக்கினீசுரர் - அழகிய கூத்தர் - செம்பொன்றுயர் - கலவி

79. செம்பை இளையான் - x - வச்சிர மாமணி - தலைவன் வேண்டல்

*80. செவ்வந்திநாதர் - x - நாவலன்பணியால் - மடல்

81. சென்னிமலைக் குமரர் - x - பத்திவைத்த மெய்த்தவர் - ஐந்து கலை மட்டும்

82. சென்னிமலைவேலர் - x - பூங்குமிழ் தேக்கினி - கலவி மகிழ்தல்

*83. சென்னைச் சண்முகவேள் - வண்ணச்சரபம் சுவாமிகள் - மத்தம் எருக்கலர் - பாங்கியை வேண்டல்

84. சேதுபதி வண்ணம் என்னும் பொன்னம்பலம் பிள்ளை - தென்காசி பொன்னம்பலம் பிள்ளை - .......... - x

85. சேதுபதி - மாம்பழக் கவிச்சிங்க நாவலர் - ...... - x

*86. சேறை ஆளுடைய நாதர் - சிந்தாமணிப் பிள்ளை - திருமேவிய - கலவி

*87. சேறை நச்சாடை தவிர்த்த சுவாமி - சிந்தாமணிப்பிள்ளை - பூருவச் சிவத்தலத்திலே - கலவி மகிழ்தல்

88. சௌம்யநாராயணப் பெருமாள் - x - .......... - x

*89. ஞானகிரியீசர் - x - நதியக்கறுகு - கலவி மகிழ்தல்

90. ஞானசித்தர் - பூவை கல்யாண சுந்தர முதலியார் - ..... - x

*91. தஞ்சைச் சாமைய நாயக்கர் - x -

*92. தஞ்சை நாயகம் பிள்ளை - x - அளகர் மேல்விழி - கலவி

*93. தஞ்சை வெள்ளைச் செட்டியார் - x - வித்தைசேர் பதும - கலவி தண்டபாணி குமாரர் - x - திருவைக்கொண்ட நெடுமால் - 5 கலைகளே உள

*94. தண்டபாணி சுவாமிகள் - நெல்லை அருணாசலத் தொண்டைமான் - சோதிமிகுஞ்சடையார் - பிரிவுழி இரங்கல்

*95. தளவாய் இரகுநாத சேதுபதி - x - வங்காரக்கிரி - கலவி

96. தாயுமானவர் - - x - கார்த்திகை பிள்ளார் - தலைவன் வேண்டல்

97. தியாகராசர் - x - மேலாரும் இந்திரத் - x

98. தியாகேசர் - அருணாசலக் கவிராயர் - ........ - x

99. திருக்கருவைப் பால்வண்ணநாதர் - திருமலை வேற் கவிராயர் - .......... - x

*100. திருக்கழுக்குன்றம் வேதகிரிநாதர் - x - மண்டலமெலாம் - தலைவன் வேண்டல்

*101. திருக்கழுக்குன்றம் வேதகிரீசர் - x - மகாவித்வான் மயிலைச் சண்முகம் பிள்ளை - ஞானானந்தனுக்கிடம் - தலைவனை வியத்தல்

102. திருக்காமீசுரர் - x - வேதர் உம்பர் துதித்த - தலைவன் வேண்டல்

103. திருக்குற்றால - x - சுந்தரானனமும் - கலவி மகிழ்தல்

*104. திருக்கோட்டியூர்ப் பெருமாள் - x - ஆக்கள் பசித்து - கலவி

105. திருக்கோளநாதர் - x - தகதிதி தித்திதோதி - கலவி மகிழ்தல்

*106. திருச்செங்கோடு அர்த்த நாரீசர் - x - சோலொத்திடு திருக்கண் - கலவி

107. திருச்செந்தூர்ச் சாமி - x - பொட்டழகுறு சிறுநுதல் - தாய் தன் அறிவின்மைத் தன்மை நொந்து இரங்கல்

*108. திருச்செந்தூர்க் கந்தவேள் - வண்ணச்சரபம் சுவாமிகள் - வென்றி மழுப்படையார் - நற்றாயிரங்கல்

109. திருநாவுக்கரசு சுவாமிகள் - மணிசுப்பிரமணிய அய்யர் - ........ - x

110. திருநெல்வேலி நெல்லையப்பர் - வண்ணச்சரபம் சுவாமிகள் - பொன்னனைய செய்யமேனி - பெண்பாற் கைக்கிளை

111. திருநெல்வேலி வேணுவனநாதர் - நமச்சிவாயக் கவிராயர் வனசமலர்மேல் வளர்ந்து - நற்றாயிரங்கல்

112. திருப்பதி - x - .......... - x

113. திருப்பரங்கிரிக் குமரன் தகார - சௌந்திர பாரதி ...... - x

114. திருப்பரங்கிரிக் கொம்பிலி - x - சீராருந்தாதுரு - கலவி

115. திருப்புடை மருதூர் நாகநாதர் - கொட்டாம்பட்டிக் கருப்பையப்.... பாவலர்? - பாங்கெழுந்த பருவச் - கலவி

*116. திருப்புல்லாணிச் செகநாதர் - x - பதுமாதள மாதவிசில் - நற்றாயிரங்கல்

117. திருப்பூவணநாதர் - முதுகந்திடல் சண்டமாருதக் கவிராயர் - ........ - x

118. திருப்பூவணம் அனந்த பிள்ளை - x - பாங்கி மின்கொடி - கலவி

*119. திருப்பூவணம் புஷ்பவனநாதர் - திருப்பூவணம் கந்தசாமிப் புலவர் - காரணப்ரசித்த வத்து - கலவி மகிழ்தல்

*120. திருப்போரூர்க் கந்தவேள் - புரசை சபாபதி முதலியார் - பூமிசை தங்குயிர் - கலவி மகிழ்தல்

*121. திருப்போரூர்க் குமாரகுரு - கொட்டாம்பட்டிக் கருப்பையப் பாவலர் - ஆரணப்ரசித்த மோன - கலவி மகிழ்தல்

122. திருப்போரூர்ச் சுப்பிரமணியர் - x - கதியுற்ற ஓம் - கலவி

*123. திருப்போரூர்த் தியாக கயிலாச நாதர் - புரசை. சபாபதி முதலியா - மதிவளர் செஞ்சடையார் - தலைவி இரங்கல் கருப்பையப் பாவலர் - பூதரவம் புயனார் - கழிக்கரைப் புலம்பல்

*124. திருப்போரூர்த் திரிபு - கொட்டாம்பட்டிக் கருப்பையப் பாவலர் - பூதரவம்புயனார் - கழிக்கரைப் புலம்பல்

*125. திருப்போரூர் முருகர் - புரசை சபாபதி முதலியார் ஓங்கும் பொன்செறி - கலவி மகிழ்தல்

*126. திருப்போரூர் வேம்படி விநாயகர் - புரசை சபாபதி முதலியார் - வாழ்வாரும் சர அசரம் - கலவி மகிழ்தல்

*127. திருப்போரூராண்டவர் - புரசை சபாபதி முதலியார் - பூமிக்கின்புதவும் - இரவுக்குறி மறுத்தல்

*128. திருமயிலைக்கபாலீசர் - காஞ்சிபுரம் மகாவித்வான் சபாபதி முதலியார் - திங்களரவங்களணி - கலவி மகிழ்தல்

*129. திருமாகறல் வீற்றிருந்த பெருமாள் - x - புலவருக்கு அமுதின் - கலவி

*130. திருவரங்கப்பெருமாள் - வண்ணச்சரபம் சுவாமிகள் - அருள்வளக்கடல் - கலவி மகிழ்தல்

131. திருவனந்தபுரம் இராமவர்மா - சுந்தரதாச பாண்டியர் - .......... - x

132. திருவனந்தபுரம் மக ராஜா - தென்காசி நெ. பாபநாச தேசிகர் - .......... - x

*133. திருவான்மியூர் மருந்தீசர் - x - திங்கட் சேய் - கலவி மகிழ்தல்

134. திருவிளையாடல் - x - மகவான்மிசையே வரும்பழி - கலவி

*135. திருவுருமாமலைக் கருணைக்கடல் - வண்ணச்சரபம் சுவாமிகள் - கருணைக்கடலாகிய - கலவி மகிழ்தல்

*136. திருவுருமாமலைக் குருதேசிகன் - வண்ணச்சரபம் சுவாமிகள் - குருதேசிகனார் - அவயவம் எழுதல் அரிது

*137. திருவுருமாமலைக் குருதேசிகன் - வண்ணச்சரபம் சுவாமிகள் - மலைதொறும் திரு நாடகம் - கலவி மகிழ்தல்

*138. திருவுருமாமலை விசாகன் - வண்ணச்சரபம் சுவாமிகள் - பூரணத்தை உட்கருத்தினூடு - நற்றாயிரங்கல்

*139. திருவையாற்றுச் செம்பொற் சோதியர் - x - கடகரியின் - கலவி

*140. திருவொற்றியூர்த் தியாகராசர் - x - சீருலவும் - தலைவன் வேண்டல்

*141. தில்லைச் சிற்றம்பலவாணர் - கன்றாப்புடையார் - வள்ளைக்குள் விழிவைத்த - கலவி மகிழ்தல்

142. துரை இராமநாதர் - x - ........ - x

143. துறைசை அம்பலவாண தேசிகர் - தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் - .......... - x

144. துறைசை அம்பலவாண தேசிகர் - நெல்லை அம்பலவாணர் கவிராயர் - ......... - x

145. தென்காசி விசுவலிங்கர் - புலியூர்ப் பண்டாரம்? - செஞ்சேலும் காவியும் - பாகனொடு கூறல்

146. தென் சகதை நல்லகுட்டி - x - விருதுகொம்பு குழல் - கலவி

147. தேவை இராமலிங்கர் - x - இருக்கான வேதமுதல் - கலவி

*148. தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் - தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் - திருமடந்தையை - தலைவன் வேண்டல்

*149. நம்மாழ்வார் - நல்ல குற்றாலக் கவிராயர் - தாந்தி திந்திமிதா - கலவி மகிழ்தல்

*150. நயினாமலை வரதராசர் - x - ஆனையதுதான் - கலவி

151. நல்லண்ண உடையார் - x - ........ - x

*152. நெல்லைநாதர் - x - ஒளியுமாகி இருளுமாய் - மடல்

153. பட்டீசர் வண்ணம் என்னும் சிகையறுத்தான் - சிதம்பர தாண்டவராய முதலியார் எனச்சிலரும், இராமசாமிக் கவிராயர் என வேறு சிலரும் கூறுவர், ஐயம் - காந்தஞ்செறி கதிர் பனிக்குஞ்சும் - x -

154. பத்மநாபர் மகார - சங்கர சுப்பிரமணியக் கவிராயர் - ...... - x

*155. பழனிக் குமாரச் சின்னோவையன் - வேலச்சின்னோவையன்? சுருதிப்பொருட்கெலாம் - கலவி மகிழ்தல்

*156. பழனிச் சிவகிரி வடிவேலர் - x - ஆத்தி முடிமேல் - கலவி

*157. பழனிமலை - புரசை சபாபதி முதலியார் - நித்தியத்தின் - கலவி

*158. பழனிமலை முருகக் கடவுள் - வண்ணச்சரபம் சுவாமிகள் - அருள்வலிமிக்கொன்றிடும் - கலவி மகிழ்தல்

159. பழனியாண்டவர் - சேலம் குமாரசாமி முதலியார் - ....... x

160. பாஞ்சை மாவேறு நாயகர் - x - திருமகள் ம்ருகமத - கலவி

161. பாண்டியன் - x - பாரடங்கார் நீழல் - தலைவன் வேண்டல்

162. பாபநாசம் பாபவிநாசர் - நமச்சிவாயக் கவிராயர் - திந்திமி திந்திமி - கலவி மகிழ்தல்

163. புதுவை அழகப்ப சேர்வை - திருமலைவேற் கவிராயர் - ........... - x

*164. புதுவை வேதபுரீசர் - புதுவை முத்துக்குமார முதலியார்? - பனிமாமதி கூவிளை - சுரம்போக்கு

*165. புஷ்பவனேசர் - முதுகந்திடல் சண்டமாருதக்கவிராயர்? - சீதள சந்திரன் இருக்கவே - கலவி மகிழ்தல்

*166. பூந்துறை அவிநாசிக் கவுண்டர் - காளியண்ணப் புலவர்? - வடிவுள தேவி மங்கை - முக்கோற் பகவரை வினாதல்

167. பெரியதம்பிப் பிள்ளை - x - ........ - x

168. பெரிய மின்னா ராவுத்தர் - x - அகமுத்து வெளியத்த - x

169. மகரநெடுங்குழைக்காதர் - x - ........... - x

170. மகிழவனம் பிள்ளை - x - புயலொத்த வடிவுக்குள் - x

*171. மண்டகுளம் அனந்தையர் - x - தந்தி முகன்றனையே - கலவி

172. மதுரைச் சொக்கநாதர் - x - கயிலைக்கிரி தனக்கு - குறை

173. மதுரைச் சொக்கலிங்கர் - நமச்சிவாயக் கவிராயர் - அரவிந்த மலர்மங்கை - ஆண்கலை மட்டும். குறை -

*174. மதுரைத் தாயுமான பிள்ளை - x - தகுவேணி மீதினிலே - கலவி

*175. மயிலைச் சிங்காரவேலன் - x - செகண தீதோ - தலைவன் வேண்டல்

176. மயிலை முருகர் - x - மதிநதிஆர் அரவார் - குறை

177. மயூரகிரிநாதர் - சிதம்பரபாரதி - ........ - x

178. மலையாளத்து இராசா - இது கொட்டாரக்கரை வீரகேரள இராசாவா?

179. மாணிக்க அம்பலவர் - x - .............. - x

180. மாதைய துரைசாமி - x - மதி நதி கூவிளம் - x

*181. மாதை வேங்கடேசுரன் - x - செகணகு தாங்கின - கலவி

182. முத்துக்குமாரசாமி - வேலச்சின்னோவையன் - ..... x

*183. முதல் இரகுநாத சேதுபதி - x - நாடிய சண்டனையே - நற்றாயிரங்கல்

184. முதலியார் - x - ......... - x

185. முருகக் கடவுள் - மணிவாசக சரணாலய அடிகள் - ........ - x

*186. முருகதாச குருநாதர் - சிரவைக் கந்தசாமி சுவாமிகள் - மாமணித் திரட்கரைக்கண் - நற்றாயிரங்கல்

187. முருகையன் - வேலச்கின்னோவையன் - ....... - x

*188. மூவரையன் - மிதிலைப் பட்டி சிற்றம்பலக் கவிராயர் - வெளிவரு பச்சை மாலை - தலைவன் வேண்டல்

*189. மெய்கண்ட வேலர் - அழகுமுத்துப் புலவர்? - அமரர்படுந்துன்பம் - கலவி மகிழ்தல்

190. வடகரை பெரியசாமித்துரை - நமச்சிவாயக் கவிராயர்? - தெனதெனத் தன்னனந் - கலவி மகிழ்தல்

191. வணங்காமுடியார் - இரண்டாம் சர்க்கரைப் புலவர் - ..... - x

*192. வராககிரி வீரச்சின்னையன் - x - அகளத்தி சகளத்தி - கலவி

193. வள்ளியூர் வடிவேலன் - x - செல்வவானே - தலைவன் வறுங்களம் கண்டு மறுகல்

194. வளசை வில்வவனநாதர் - x - பதுமமலர்த்திரு - அவயவம் எழுதல் அரிது எனல்

*195. விசையகிரி வேலச் சின்னோவையன் - x - கீறுபிறைச் சடிலத்தனார் - அவயவம் எழுதல் அரிதெனல்

196. விஞ்சை நகர் அருணாசலன் - x - புயல்வணனந்தன் - குறை

*197. விட்டலராயச் சோழகன் - x - தெரிதமிழ் ஆசுகவிவல - மடல்

*198. வில்லைக் காமீசர் - x - மதிநிறை வெண்புனல் - தலைவன் வேண்டல்

*199. வீரப்ப நாயக்கன் - x - தோதி தித்திமி - தலைவன் வேண்டல்

*200. வீரராகவ முதலியார் - x - ஆதியுருத்திரனார் - நற்றாயிரங்கல்

201. வேங்கடாசல மகிபன் - x - சீர்தரும் பொன்மாது - x

## குறிப்புகள்

1. மேற்கண்ட பட்டியலில் அகப்பொருள் வண்ணப் பிரபந்தங்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன.

2. குறை எனவும், ஆண்கலை மட்டும் எனவும் குறிப்பிடப்பெற்றவை யாவும் இக்கட்டுரையாசிரியனின் தொகுப்பில் உள்ள நிலையை மட்டுமே குறிக்கிறது. வேறு எங்காவது முழுமையாகக் கிடைக்கக்கூடும்.

3. மேற்கண்ட வண்ணங்களைத் தவிர எட்டையபுரம் கடிகைமுத்துப்புலவர், கம்மாள இராமசாமிக் கவிராயர், பிறையாறு வண்ணக்களஞ்சியப் புலவர், கோவளம் முத்துராமக் கவிராயர், வண்டானம் முத்துசாமி அய்யர், வேளூர் இராமச்சந்திரக் கவிராயர் ஆகியவர்கள் ஒவ்வொருவரும் சிலவண்ணங்கள் இயற்றியிருப்பதாகத் தெரிகிறது.

மேலும் சிங்கவனம் சுப்பிரமணிய பாரதியார், தில்லை விடங்கன் மாரிமுத்தா பிள்ளை, பனையம் நாகலப்பட்டி செங்கமலக் கவிராயர் ஆகியவர்கள் ஒவ்வொருவரும் பலவண்ணங்கள் இயற்றியிருப்பதாக அறிகிறோம்.

திருவனந்தபுரத்தில் உள்ள கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்தின் 11603ஆம் சுவடி வண்ணத்திரட்டு ஆகும். அதில் 50-61 ஏடுகள் காணப்படவில்லை. இதில் 3 அல்லது 4 வண்ணஙங்கள் இருந்திருக்கும்.

இக்கட்டுரையாசிரியன் ஈரோடு அரசு அரும்பொருட்காட்சியகத்தின் ஏட்டுச்சுவடிகளைப் பட்டியலிட்டபோது வண்ணப்பகுதிகள் அடங்கிய சிதைந்த தனி ஒற்றைகள் பலவற்றைக் காண நேர்ந்தது.

அழிந்தவை போக இப்போது முயன்று தேடினால் கிடைக்கக் கூடியவற்றையாவது தொகுத்து, சிறப்பாகப் பதிப்பித்து வெளிக்கொணர வேண்டியது சுவடியியல் ஆய்வாளர்களின் கடமை ஆகும்.

*****

# 15. முத்திரை ஓலைகள்

முனைவர் செ. இராசு

## ஓலை ஆவணங்கள்

ஆவணங்கள் எழுதப்பட்ட பல பொருள்களைவிட ஓலை விரைவில் அழியக்கூடியவை. இருப்பினும் அவை பக்குவம் செய்யப்பெற்ற முறைகளினாலும், பத்திரப்படுத்தி வைக்கும் பாங்கினாலும், சுவடி பெயர்த்து எழுதிவைக்கும் பழக்கத்தாலும் காலவெள்ளத்தை நீந்தி நாம் காணக்கூடிய வகையில் இன்றும் அவை கிடைக்கின்றன. ஓலை மிக எளிதில் கிடைக்கக்கூடிய பொருள் ஆகையால் அவற்றில் எழுதப்பெற்ற ஆவணங்களே அதிகம் உள்ளன. ஆனால் பெரும்பாலான ஓலை ஆவணங்கள் தனியார் உடைமையாக இருப்பதால் இன்று நமக்குக் கிடைத்திருக்கும் ஓலை ஆவணங்களை விடக் கிடைக்கப்பெறாதவைகளே அதிகமாக இருக்கக்கூடும். செப்பேடுகளுக்கும், கல்வெட்டுக்களுக்கும் மூல ஆவணங்கள் ஓலைகளிலேயே முதலில் எழுதப்பட்டன.

வரலாறு தழுவிய ஓலை ஆவணங்கள் பெரும்பாலும் சிறு சிறு சுவடிகளாகவும், தனி ஓலைகளாகவுமே கிடைக்கின்றன. தனி ஓலை ஆவணங்களை எழுதும்போது ஒரே ஓலையில் எழுதி முடிக்கவேண்டும் என்பது கருதி ஓலைகளின் ஓரங்களை அதிகம் நறுக்காமல் நீண்ட அளவில் பயன்படுத்தினர். மாவட்ட நில அளவை ஓலைகளும் ஓரங்கள் நறுக்கப்பெறாமல் முழு ஓலைகளாகவே உள்ளன. தனி ஓலைகளைப் பயன்படுத்தும்போது அவற்றின் முதுகு நரம்புகளைக் கிழித்தெடுக்காமல் இரட்டை ஓலையாகவே நன்கு பாடம் செய்து உறுதியாக்கி அவற்றைப் பயன் படுத்தினர்.

இவற்றின் மொழிநடை பிற்காலக் கல்வெட்டுக் களையும், செப்பேடுகளையும் ஒத்த ஆவண மொழி

நடையிலேயே காணப்படுகின்றன. எழுதுவோரால் ஏற்படும் பிழைகளுடனும், கொச்சைச் சொற்களும், பேச்சு நடையும், வட்டார வழக்குச் சொற்களும், குழூஉக் குறிகளும் பல கலந்து காணப்படும். எழுத்துக்கள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து வீச்செழுத்தாகவும், சுருக்கெழுத்தாகவும், குறியீடுகள் கலந்தும் எழுதப்பெற்றிருக்கும்.

குறில் நெடில் வேறுபாடு இன்றியும், மெய்ப்புள்ளி இல்லாமலும், ா, ர, ர் ஆகியவை ஒரே மாதிரியாக எழுதப் பட்டும், ந-ண-ன; ல-ள-ழ; ர-ற வேறுபாடு இன்றியும், க-சு-த தம்முள் மயங்கிய தோற்றத்திலும் காணப்படும். சில ஆவணங்களில் இடையிடையே கிரந்த எழுத்துக்களும் கலந்துவரும்.

இவ்விதக் காரணங்களால் இவைகளைத் தொகுப் போரும், பாதுகாப்போரும், படித்துப் பெயர்த்தெழுதிப் பதிப்பிப்பாரும் மிகவும் இடர்ப்படுகின்றனர். எனவேதான் இவை பெரும்பாலும் இன்னும் ஆய்வு செய்யப்பெறாமலேயே உள்ளன.

வரலாற்று ஆசிரியர்கள் ஓலை ஆவணங்களில் காணப்படும் அரிய செய்திகள் செப்பேடுகள், கல்வெட்டுக்களுக்கு இணையாக இருப்பினும் அவற்றை வரலாற்றுச் சான்றுகளில் ஒன்றாக இன்னும் பயன்படுத்தத் தொடங்கவில்லை என்பது மிகப்பெரும் குறையே. பல்வேறு ஓலை ஆவணங்களில் முத்திரை ஓலையும் ஒன்று.

## முத்திரை ஓலைகள்

கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆட்சிக்காலத்தில் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காகிதம் புழக்கத்துக்கு வந்துவிட்டது. இருப்பினும் காகிதம் கிடைப்பது அரிதாக இருந்தது. காகிதம் இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப் பட்டதால் விலையும் கூடுதலாக இருந்திருக்க வேண்டும். அதனால் மக்கள் தம் பழைய வழக்கப்படியே தொடர்ந்து ஓலைகளையே பயன்படுத்தினர்.

இந்த வழக்கத்தைக் கம்பெனி ஆட்சியாரும் கண்டு ஆவணங்கள் எழுதப்பெற ஓலைகளில் முத்திரைகளைப் பொறித்து காகிதங்களுக்குப் பதிலாக விலைக்கு விற்றனர்.

அவை முத்திரை ஓலை, முத்திரை ஏடு, சீட்டு ஏடு, அச்சு ஓலை, அச்சுப் பத்திரம், அச்சடி பத்திரம், அச்சடித்த பத்திரம், அச்சுக் கடுதாசி பத்திரம், ஸ்டாம்பு என்று பலவாறு குறிக்கப்பட்டன. அவற்றில் எழுதப்பட்ட ஆவணங்கள் முறி, சாசனம், பத்திரம், சீட்டு எனப்பட்டது.

## வெற்று ஓலை ஆவணங்கள்

முத்திரை ஓலைகள் வழக்கத்திலிருந்த காலத்திலேயே மக்கள் தங்களுக்குள் முத்திரையில்லாத வெற்று ஓலைகளில் ஆவணங்களை எழுதிக்கொள்ளும் வழக்கமும் பெரும்பாலும் இருந்தது. பதிவு செய்யப் பெறாத இவ் வெற்று ஓலை ஆவணங்களே மிக அதிகமாக அக்காலத்தில் புழக்கத்தில் இருந்துள்ளன.

இன்று பல சமயம் முத்திரைத்தாள்கள் கிடைப்பது அரிதாகவே உள்ளது. அதுபோல அன்றும் முத்திரைத்தாள் சில சமயம் கிடைப்பது அரிதாக இருந்திருக்க வேண்டும். அல்லது அவற்றைப் பெறுவதில் சிரமம் இருந்திருக்க வேண்டும். அதனால் சிலர் முத்திரை ஓலைகள் முயன்று கிடைக்காதபோது தம் ஆவணங்களை வெற்று ஓலையில் எழுதலாயினர்.

முத்திரை ஓலை கிடைக்காமையால் வெத்தோலையில்
எழுதலாச்சுது

யிப்போது அச்சுப்பத்திரம் ஆசர் யில்லாதபடியினாலே
வந்தவுடனே யெழுதிக் குடுப்பேனாகவும்

என்று ஆவணங்களில் காணப்படும் தொடர்கள் இதனை விளக்கும்.

## முத்திரைகள்

கிழக்கிந்தியக் கம்பெனி முத்திரை ஓலைகளில் பக்கத்துக்கு ஒன்றாக இரண்டு முத்திரைகள் பொறிக்கப் பட்டிருக்கும். வட்டவடிவமான அவ்விரண்டு முத்திரைகளில் ஒன்றில் தமிழில் பொக்கிஷம் என்றும் ஆங்கிலத்தில் TREASURY என்றும், தெலுங்கில் பொக்கஷமு என்றும், பாரசீக மொழியில் கஜானா என்றும் பொறிக்கப்பட்டிருக்கும்.

மறுபக்கம் அம்முத்திரை ஓலையின் விலைமதிப்புக் குறிக்கப்பெற்றிருக்கும். இரண்டணா, நான்கணா, எட்டணா, ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் எனக் குறிக்கப்பெற்றிருக்கும். கிரைய அல்லது அடைமானத் தொகைக்கு ஏற்ப ஓலை விற்கப் பட்டுள்ளது.

கிழக்கிந்தியக் கம்பெனியாரின் முத்திரை ஓலைகள் வழக்கிலிருந்த அதே காலத்தில் தஞ்சை நகரில் ஆட்சி புரிந்த இரண்டாம் சரபோசி ( 1798-1832 ) . சிவாஜி ( 1832-1855 ) காலத்தில் மராட்டியர் முத்திரை ஓலைகள் வழக்கிலிருந்தன. அம்முத்திரை ஓலைகளில் ஓலையின் இருபுறமும் ஒரே வகையான முத்திரை பொறிக்கப்பட்டிருந்தது. ஓலையின் விலைமதிப்புக் குறிக்கப்படவில்லை.

ஹே தேவ கேவ விஷயக் பத்ர என்ற மராட்டி மொழித்தொடர் வட்டவடிவில் இரு ஓரங்களிலும் பொறிக்கப்பட்டிருக்கும். அம்மராட்டி மொழித் தொடருக்கு இது கொடுக்கல் வாங்கல் பற்றிய பத்திரம் என்பது பொருள்: அத்தொடர் பொறிக்கப்பட்ட வட்டத்தினுள் ஸ்ரீராம்பிரதாப் என்ற தொடர் மராட்டி எழுத்துக்களில் பொறிக்கப் பட்டிருக்கும்.

சிவாஜியின் குலகுரு இராமதாசர் ஆசீர்வாதத்தால் தஞ்சையில் மராட்டியர் அரசு நிலைபெற்றது என்பர். மராட்டிய மாநிலம் சாதாரா மாவட்டத்தில் மகாபலேசுவரம் அருகேயுள்ள கோட்டை சூழ்ந்த ஓர் ஊருக்கும் பெயர் பிரதாபகடா என்பதாகும். அங்குள்ள பவானி கோயில் மராட்டியரின் வழிபடு தெய்வக் கோயிலாகும். இரண்டையும் இணைத்து ஸ்ரீராம்பிரதாப் என்ற சொல்லை தன் குலப் பெருமையுடையதாக மராட்டியர் உருவாக்கினர். தஞ்சை மராட்டிய அரசர்கள் தம் கையெழுத்துக்குப் பதிலாக ஸ்ரீராம்பிரதாப் என்ற தொடரையே எழுதினர்.

## இரு ஓலைகளில்:

ஒரு முத்திரை ஓலையில் ஒரு ஆவணமே எழுதப்பட்டிருக்கும். சில நீண்ட ஆவணங்கள் இரண்டு ஓலைகளில் எழுதப்படுவதும் உண்டு. ஒரு ரூபாய் முத்திரை ஓலை கிடைக்காமையால் இரண்டு எட்டணா ஓலைகள் பயன் படுத்தப்பட்டுள்ளன.

ஒரு பத்தரமாயி ஆப்படாததுனாலே நாளது
தேதியில் ரெண்டு பத்தரமாயி எழுதிக்குடுத்தேன்

என்ற தொடர் ஓர் ஆவணத்தில் காணப்படுகிறது.

**எண்கள்:**

முத்திரை ஓலைகட்குத் தொடர் எண்கள் வரிசையாக இடப்பட்டிருந்தன. ஒவ்வொரு ஆண்டுக்கும் தனித்தனியாகத் தொடர் எண்கள் அளிக்கப்பட்டிருந்தன.

*1841*ஆம் வருஷத்திய நம்பர் *688*

*1847*ஆம் வருஷத்திய நம்பர் *136*

என அவை எழுதப்பட்டிருந்தன. ஆண்டும் எண்களும் தமிழ் எண்களிலேயே எழுதப்பட்டிருந்தன. பெரும்பாலான ஓலைகளில் சாலிவாகன, கலியுக ஆண்டுடன் கி.பி. ஆண்டும் குறிக்கப்பட்டிருக்கும். தமிழ் மாதம், தேதியுடன் ஆங்கில மாதம் தேதியும் குறிக்கப்படும் வழக்கம் இருந்தது.

**விற்பனை:**

ஒரு வருடத்திற்குரிய எண் இடப்பெற்ற ஓலைகள் அதே ஆண்டு விற்பனையாகி அவ்வாண்டே ஒப்பந்தம் எழுதப்படவேண்டும் என்ற நியதி இல்லை. ஓர் ஓலையில் *1850*ஆம் வருஷத்திய நம்பர் *271* என எழுதப்பட்டுள்ளது. ஆனால் அந்த ஓலை விற்கப்பட்ட நாள் 22.6.1852. அவ்வோலையில் பலர் முன்னிலையில் *11.7.1852*இல் தான் ஒப்பந்தத்தை எழுதினர். சில ஓலைகளில் வாங்கப்பட்ட அடுத்த நாளே ஒப்பந்தத்தை எழுதியுள்ளனர். சில ஓலைகளில் சில மாதங்கள் கழித்தும் எழுதப்பட்டுள்ளன. ஓலைகளை இவ்வளவு நாட்களுக்குள் பயன்படுத்த வேண்டும் என்ற வரையறை இல்லை.

முத்திரை ஓலைகள் முதலில் மாவட்ட ஆட்சியர் அலுவலகங்கள், தாலுக்காக் கச்சேரி ஆகிய இடங்களில் விற்கப்பட்டன. பின்னர் அவைகளை விற்கத் தனி விற்பனையாளர்கள் அனுமதிக்கப்பட்டனர்.

J BIRD - COLLR

தாசில் சுப்பராய முதலி

இந்தச் சீட்டு மார்கழி மாதம் 11 தேதியில்
நீலப்பாடி சுப்பா பிள்ளைக்கு யென் அனுமதியில்
விற்கப்பட்டது

கீழ்வளூர் தாலூாக்காக் கச்சேரியில் விற்கப்பட்டது.
நிலம் **ஒத்தி** சங்கதி
கோணாட்டுத் தாலுகா ஒறையூரிலிருக்கும்
முத்திய பிள்ளை குமாரன் ஆறுமுகம் பிள்ளைக்கு
கெட்டிமச்சு ஓட்டுவில்லைக்கடைமனை ரூ.366க்கு
சுத்தக் கிறைய சாசனத்துக்கு ஒரு ரூபாய்
விலையுள்ள ஓலை விற்கலாச்சுது
1843 வருஷம் அக்டோபர் மாதம் 4 தேதி
வீராசாமி முதலி ஸ்டாம்பு தாறொகர்

என்ற தொடர்கள் ஓலை விற்ற செய்தியைக் குறிக்கும். இப்போது இம்முறை கையாளப்படுவதில்லை.

சச்சுதானந்தம் அரூர் ஸ்டாம்பு வெண்டர்
ஸ்டாம்பு தாறொகர் நரசய்யன்

என்ற குறிப்புக்களையும் காண்கிறோம். மராட்டியர் முத்திரை ஓலையில் கருவூலக்குறிப்பும், விற்பனை விபரமும் மோடி எழுத்துக்களில் எழுதப்பெற்றிருக்கும்.

ஒரு முத்திரை ஓலை 850½ ரூபாய்க்குக் கிரையம் செய்ய ( இரண்டு ரூபாய் மதிப்புள்ள ஓலை ) விற்கப்பட்டது. ஆனால் கிரையம் 830 ரூபாய்க்கே நடந்துள்ளது. எனவே முத்திரை ஓலையில் குறித்த விற்பனை விலைக்குக் குறைவாக விற்பனையும் நடைபெற்றுள்ளதைக் காணுகிறோம்.

இன்று ஒரு பொருளை விலைக்கு வாங்குபவரே முத்திரைத்தாள் வாங்குகிறார். ஆனால் முத்திரை ஓலைகள் மூலம் பொருளை விற்பவரே அவற்றை விலைக்கு வாங்கியுள்ளதை அறிகிறோம். விற்பவரோ அல்லது அவர் சார்பில் உறவினர்களோ பணியாளர்களோ முத்திரை ஓலைகளை வாங்கியுள்ளனர்.

விற்பவர் வாங்குவோருக்கு முத்திரை ஓலை எழுதி அதனை ஒப்படைக்கும்போது தான் வாங்கியபோது எழுதிய ஓலையையும், ஏற்கனவே, ஓலை மட்டும் எழுதப்பட்டு

விற்பனை நடைபெறாமல் இருந்தால் அப்பழைய ஓலையையும் அளிப்பது வழக்கம்.

1848ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 9ஆம் தேதி எழுதப்பட்ட உறையூர் முத்திரை ஓலை ஒன்றில்,

> 1842 வருஷம் சப்டம்பர் மாதம் 6 தேதி
> கோயம்புத்தூர் ஜில்லா விசையபுரத்திலிருக்கும்
> சிதம்பரஞ்செட்டி வகையறா பேர்களுக்கு ரூபாய் 200
> நில சுத்தக் கிரையஞ் செய்துகொடுத்து அவாள்
> வேண்டாமென்று கொடுத்த மூலாதரவையும்
> தங்களுக்குக் குடுத்துவிட்டேன்.

என எழுதப்பட்டுள்ளது.

ஓலையில் கருவூல அலுவலர் கையொப்பம், முத்திரை ஓலை எண், விற்கப்பட்ட விபரம், தரகர் கையெழுத்து ஆகியவை ஒரு பக்கத்தில் இருக்கும். அடுத்த பக்கம் ஒப்பந்தச் செய்தி இருக்கும். அங்கு இடம் போதவில்லை எனில் முன்பக்கம் எழுதுவதும் உண்டு. போதிய இடம் இல்லாவிடில் சாட்சிகள் கையொப்பங்கள் இடம் இருக்கும் இடத்தில் இடம்பெற்றிருக்கும்.

## எழுத்தும் கையெழுத்தும்

முத்திரை ஓலைகள் எழுதியவர்கள் தாம் அவற்றை எழுதிய விபரங்களை ஆவணத்தின் இறுதியில் குறித்தனர்.

> இந்தச் சாசனம் எழுதியது சபாபதி பிள்ளை

> இந்தப் பத்திரம் யெளுதினது ஆங்கரை கணக்கு
> காசி அய்யன் ஓலை எழுத்து

> இந்தச் சீட்டு எழுதினது துறையூர் தேவாங்கப்
> பெருமாள் பிள்ளை நெட்டெழுத்து

> நெட்டெழுத்து குப்பமுத்து உபாத்தியாயன்

செப்பேடுகளுக்கு மூல ஓலைகள் எழுதப்பட்டதையும் நெட்டெழுத்து எழுதுதல் என்று குறித்துள்ளனர். சில ஆவணங்களில் கையெழுத்தும் நெட்டெழுத்து என்று கூறப்பெற்றிருக்கிறது.

> இதுக்கு அறியும் சாட்சி இதுக்கடியில் கையெழுத்து வைத்த பேர்கள் நெட்டெழுத்து

பல முத்திரை ஓலைகளில் விற்போருடன் வாங்குவோரும் கையொப்பமிட்டுள்ளனர். அவர்கள் இருவரும் சம்மதி என்று எழுதிக் கையொப்பமிட்டுள்ளனர். சாட்சிகள் அறிவேன் என்று எழுதிக் கையொப்பமிட்டனர். கையெழுத்துத் தெரியாதவர்கள் எழுத்தாணியால் கீறியுள்ளனர். இந்தக் கீறல் ராக்கக் கோனான் கைநாட்டு. தமிழ் முத்திரை ஓலைகளில் ஆங்கிலம், மராட்டி, தெலுங்குக் கையெழுத்துக்களும் உள்ளன.

## நாணய வழக்கு

ஓலை ஆவணங்கள் பெரும்பாலும் 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை ஆதலின் கம்பெனியார் கால நாணய வழக்கே குறிக்கப்பட்டுள்ளன. ரூபாய், கும்பினிரூபாய், கும்பினி செலாவணி, கும்பினி அரும்பு, கும்பினியார் வழங்கும் வெள்ளிப்பணம் என்பன அவற்றுள் சில.

## வரவு வைத்தலும் திரும்பப் பெறலும்

வாங்கிய தொகைக்கு வட்டியோ அல்லது அசலில் ஒரு பகுதியோ திருப்பிச் செலுத்தும்போது முத்திரை ஓலையிலேயே அது குறிக்கப்பட்டது.

> ராட்சச வருஷம் ஆனி 8 பத்திரத்தின் அசலுக்குச் செல்லு ரூ.45

> கீலக வருஷம் மேற்படி வட்டிக்குச் செல்லு 36 ரூபாய் இந்தப் பத்திரத்துக்கு அசலுக்குச் செலுத்துவிச்சால் இந்தப் பத்திரத்தில் செல்லு வைக்கிறதே தவிர வேறு ரசீது வந்தால் ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை

முழுத் தொகையையும் மூன்றாண்டு அல்லது நான்காண்டுகளுக்குள் திருப்பிச் செலுத்துவதாக எழுதிக் கொடுப்பதும் உண்டு. சில ஆவணங்களில் உடையான் வேண்டும்போது திருப்பி அளிப்பதாக எழுதப்படுவதும் உண்டு. ஆண்டுதோறும் சித்திரையில் வட்டி கொடுப்பேன் என்றும்,

மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வட்டி தருவதாகவும் எழுதப்படுவது உண்டு. ஒரு ஆவணத்தில் 50 ரூபாய் கடனாகப் பெற்றவர் வட்டியாக 5 கல நெல் அளிப்பதாக் கூறியுள்ளார்.

முழு அசல் வட்டியுடன் செலுத்தியபின் ஓலையைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.

'யிந்த பத்திரத்து அசல் வட்டியுள்படத் துகையை
ராட்சஷ வருஷம் கார்த்திகை 1ஆம் தேதி
அனுமந்தய்யன் இடத்தில் நான் ரொக்கம்
பத்திக்கொண்டு அசல் பத்திரத்தை வாபஸ்
செய்யலாச்சுது. ரங்கநாதராவ்'

என்பது ஓர் ஆவணச் செய்தி. முத்திரை ஓலைகட்கு நகல் எழுதி வைத்துக்கொள்வதும் உண்டு. அதன் தலைப்பில் நகல் என்று எழுதப்பட்டிருக்கும். நகல் முத்திரையில்லாத வெற்று ஓலையில் எழுதப்பட்டது.

## நில அனுபோகம்

போக்கியம் அல்லது அடைமானம் மூலம் நிலத்தைப் பெற்றவர் நிலத்தில் களை முளை எடுத்துத் தண்ணீர் பாய்ச்சி ஒரு பூ அல்லது இரு பூ விளைவிக்கலாம். சர்க்கார் வரியை அவரே செலுத்தவேண்டும்.

நிலத்தில் தாம் வேண்டும் பலனை யிட்டுக்கொண்டு
சருக்கார் வரி நிலுவை சுத்திகரிச்சு இறை
ஆள் அமஞ்சி தச்சன் கொல்லன் சுதந்திரம்
அளித்து சில்லறைத் தொழிலாளி சேவுகன்
பொலி பிச்சை கணக்குப் பிள்ளை புதியது
மாமூல் வழக்கப்படி நடத்தவேண்டும்

என்று சில ஆவணங்களில் எழுதப்பட்டுள்ளது.

நிலத்தைக் குறிக்க சங்கரதேவன் செய், வண்ணான்செய், மலட்டாம்பள்ளம் செய் என்று பெயர் குறிக்கப்பட்டன. சில ஓலைகளில் நிலப்பெயருடன் அளவை எண்ணும் குறிக்கப்பட்டது. 808 நம்பர் சொட்டயன் செய், 222 மணலிக்கன்று செய், 717 மறைக்கண்டன் செய் என்பன அவை. சில நிலங்கள் எண்களால் மட்டும் குறிக்கப்பட்டன. இவை கம்பெனி ஆட்சியில் நிலம் அளக்கப்பட்டுச் சர்வே எண் அளிக்கப்பட்ட செய்தியைத் தெரிவிக்கிறது.

## பதிவு செய்தல்

அரசு கருவூலத்தில் வாங்கி எழுதப்பட்ட முத்திரை ஓலைகள் முதலில் மீண்டும் பதிவு செய்யப்படவில்லை. ஆனால் பிற்காலத்தில் அவை பதிவு செய்யப்பட்டுள்ளன. திருச்சி மாவட்ட லால்குடி வட்ட நெரிஞ்சலக்குடியில் கிடைத்த ஓர் ஓலை ஆவணம் முத்திரைஓலை பதிவு செய்யப்படும் விபரத்தைத் தெரிவிக்கிறது.

> றாமச்சந்திர றாயர் அவர்களுக்கு அய்யாபுள்ளை தெண்டனிட்ட விண்ணப்பம். இப்பவும் நாளைதினம் யெக்கமய்யர் கோபாலய்யருக்கும் ஆங்கரையில் சாசனம் பண்ணின பேர்களுக்கும் கோசம் பதியவைக்க போகுறபடியால் தாங்களும் யிவடம் வந்தால் கோசம் பதியவச்சு போடுகறோமெண்டு யெக்கமய்யர் அவாள் சொல்லுகுறார். ஆகையால் தாங்கள் சாசனம் வாங்கின பத்திரமும் முன் ஈட்டு பத்திறமும் நெல்புரியல் சீட்டும் யெடுத்துக் கொண்டு வந்தால் தாங்கள் பேறால் கோசம் தாக்கல் பண்ணி கொண்டு போகலாம். தங்களுக்கு வறத்துக்கு சறிப்படாமல் போனால் யாறு பேறுக்கு ஆவது ஒறு வகாலத்து நாமா கொடுத்து மேற்படி தெஸ்தாவேஜிகளையும் குடுத்து அனுப்பிவித்தால் கோசம் தாக்கல் பண்ணிக்கொண்டு போகலாம்.

## மொழிநடை

19ஆம் நூற்றாண்டு மொழிநடைக்குச் சான்றாக வழங்கும் இவ் ஓலைகளில் பேச்சுத் தமிழ்ச் சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. எண்பத்து ஒன்பது எண்பளத்தி ஒன்பது எனக் குறிக்கப்பட்டதை அதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டலாம். தகப்பன் என்பது தோப்பன் என்றும், கொடு என்பது குடு என்றும் எழுதப்பட்டுள்ளன.

உருது, ஆங்கிலச் சொற்கள் பல பயன்படுத்தப் பட்டுள்ளன. ஆஜர், இசறா முச்சலிக்கா, கச்சேரி, கலெக்டர், கடுதாசி, கும்பினி, சாஸ்தி, சாப் ( SHOP ), தாலுாகா, பத்திரம், பசலி, பேரிஷ் ( நிலவரி ), மிராசு, ரசீது, வாபீஸ் என்று பல சொற்களைக் காணுகிறோம்.

## நில அளவு

விற்கப்படும் நிலத்தின் நீள அகலங்கள் காலடிகளால் அளந்து கணக்கிடப்பட்டது. 1842ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 6ஆம் தேதி திருச்சி உறையூரில் காலடி அளவில் சந்தேகம் வந்ததால் மீண்டும் சாதியடிக்கோலால் ( கம்பெனி அளவை? ) அளக்கப்பட்டது. இரண்டு அளவுகட்கும் சிறு வேறுபாடு இருந்தது.

## முடிவுரை

19ஆம் நூற்றாண்டின் வரலாற்றுச் செய்திகளுக்கு வரலாற்றாசிரியர்களும், ஆய்வாளர்களும் ஆவணக் காப்பகத்தை மட்டுமே நாடுகின்றனர். இந்த முத்திரை ஓலை ஆவணங்களும், ஓலை ஆவணங்களும் அக்கால அரசியல், சமூக, பொருளாதார நிலைகளைக் காட்டுவதுடன் அக்கால மொழிநிலையை ஆராயவும் மிகச்சிறந்த ஆதாரங்களாகத் திகழ்கின்றன. காலவெள்ளத்தில் அழிந்துவரும் ஓலை ஆவணங்களைத் தொகுத்துப் பாதுகாத்துப் படித்து வெளியிட்டு ஆய்வு செய்தல் நம் தலையாய கடமையாகும்.

## பிற்சேர்க்கை

நிலம் சுத்தக் கிரய சாசனம்

( 1858 மே 22 )

( எட்டணா ஓலை )

1858 வருஷம் மே மாதம் 22 தேதிக்குத் தமுள் காலயுக்தி வருஷம் வய்யாசி மாதம் 10 தேதி கொண்டயம் பேட்டையில் யிறுக்கும் ஜகன்னாத றாயர் குமாரன் றாமச்சந்திர றாயற் உள்ளத்தாறுக்கு ஆங்கரையில் யிறுக்கும் சுப்பய்யன் குமாரன் ராமனாத சாத்திரியன் நஞ்சை நிலம் சுத்த கிரய சாசனம் பண்ணி குடுத்தபடி யென்னமென்றால் ( நகர கிராமத்தில் ) யென் சொந்தமான நஞ்சை அப்பத்திலமோட்டு கட்டளை வாக்காலுக்கு கிளக்கு பங்குனிக்கு கிளக்கு தம்முடைய வயலுக்கு மேர்க்கு நெரிஞ்சிகுடி கண்ணிக்கு வடக்கு ராம ( சுவாமிய்யன் ) வயலுக்கு தெர்க்கு யிது வாங் ( கெல்லைக்கு ) உள்பட்ட

நஞ்சைக்குழு 63 யிதுவும் முள்ப்பத்து குடிகிறாமத்தில் யென் சொந்தமான நஞ்சை அப்பத்தல் மோட்டு கட்டளை வாக்காலுக்கு மேர்க்கு ராமசுவாமிய்யன் வயலுக்கு தெர்க்கு மேற்படியார் வயலுக்கு வடக்கு அப்பாசாமிய்யர் வயலுக்கு கெளக்கு யிது வாங்கலைக்கு உள்பட்ட நஞ்சை செய் 1.2 குழி 75 ஆ (க) கிராமம் 2 க்கு நஞ்சை குழி (138) யிதுவும் மேற்படி நகர கிராமத்தி.... ளி யாடிபார கட்டளை (கம்பியும் சேர்த்து) மேற்படி தேதியில் தமக்கு சுத்தகிரய சாசனம் பண்ணி குடுத்த உபயானு சம்மதமாக நிச்சயித்த சுத்த கிரையம் ரூ.250 யிந்த யெறனூாத்தி அம்பது ரூபாயும் நான் ரொக்கம் பத்தி கொண்டபடியினாலெ மேல் எழுதி (ய) நஞ்சை நிலத்தைத் தாம் ஆசந்தறாக்கஸ்தாகியாயி புத்திர பவுத்தர பாரம்பரியமாக தானாதி விநிமய விக்ரயங்களுக்கு சொந்தமாக ஆண்டு அனுபவிச்சு கொண்டு கக- கள் சம்மதிச்சு ராமச்சந்திர றாயனுக்கு ராமனாத சாத்திரியன் நஞ்சை நில சுத்த கிரய சாசனம் பண்ணி குடுத்தேன் ஓம்.

யிந்தபடி ராமனாத (சாத்திரி) சம்மதி. சாட்டியள், மாந்துரை அப்பா வய்யன் அறிவேன். அய்யா பிள்ளை அறிவேன். (நகர) கணக்கு சுப்புவய்யனறிவேன். யிந்த சாசனம் யெழுதினது மாந்துரை (கணக்கு) ராயர்.

1858 வருஷத்திய நம்பர் 289. வாலுகெடி தாலுகா ஆங்கரையிலிருக்கும் சுப்பய்யன் குமாறன் றாமனாத சாஸ்திறிகளுக்கு மேற்படி தாலுகா நகற முள்பதுகுடி கிறாமத்திய நஞ்சை நிலம் ரூ.250க்கு சுத்த கிறைய சாசனத்துக்கு மேறபடியாள் வசம் 8 அணா ஓலை விற்க்கலாச்சுது. 1858ம் வருஷம் மே மாதம் 15 தேதி.

---

*முனைவர் எ. சுப்பராயலு, திருச்சிராப்பள்ளி மாவட்ட ஓலை ஆவணங்கள், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ஜூன் 1991, பக்.58-59.

# 16. மோடிப் பலகணி ஆவணங்கள் - ஓர் ஆய்வு

திரு. இராக. விவேகானந்த கோபால்

மோடி என்ற சொல் மோட், மோடணே என்ற மராட்டி வேர்ச்சொல்லின் அடியாகப் பிறந்ததாகும். மோடணே எனில் அதன் பொருள் உடைதல் அல்லது சிதைதல் என வரும். அக்கால வழக்கிலிருந்த தேவநாகரி வரிவடிவமே மோடி எழுத்துக்களாகும்.[1] இதனை உருவாக்கியவர் தேவகிரி யாதவ அரசர்களின் அவையில் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் ஆவண அலுவலராக இருந்த ஹேமாட்பந்த் என்பவரே ஆவார்.

மன்னராட்சியில், மோடி எழுத்துக்களை அரசவைப் பயன்பாட்டிற்கு மட்டுமே உரியனவாகக் கொண்டனர். அன்றாட அரசவை நடவடிக்கைகள், கடிதப் போக்குவரத்து, கணக்கு, வழக்கு, ஆணைகள் முதலியன மராட்டி மொழியில் - மோடி எழுத்துக்களால் எழுதப்பட்டன. இவ்வெழுத்து முறையானது ஒரு நேர்கோட்டில் தொடர்ச்சியாக இடைவெளியின்றி வேகமாக எழுதப்படுவதாகும். எனவே, ஆவணங்கள் மராட்டி மொழியில் இருந்தாலும், மோடி என்னும் தனிவகை எழுத்துக்களால் எழுதப்பட்டதால், இவை மோடி ஆவணங்கள் என்றே அழைக்கப்பட்டன. மோடி ஆவணங்கள் பெரும்பாலும் காகிதச் சுவடிகளாகவே உள்ளன.

மராட்டிய மன்னர் தஞ்சை வளநாட்டைக் கையகப்படுத்தித் தம் ஆட்சியை நிறுவிய பின்னர் ஈண்டும் மோடி எழுத்துக்களில் எழுதப்பட்டன. இத்தகைய ஆவணங்கள் சுமார் 1500 மூட்டைகளுக்கும் மேலாகக் கட்டி வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

## மோடி ஆவணமும் தமிழ் ஆவணமும்

மராட்டிய மன்னர்களின் ஆட்சியில் அரசவை மொழி மராட்டியாக இருந்தமையின், மராட்டி மொழியை மோடி எழுத்துக்களில் எழுதுவது இயலுவதாயிற்று. எனினும், தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட தஞ்சைவாழ் மக்கள் தம்முடைய விண்ணப்பங்களையும், குறைகளையும் தமிழிலேயே எழுதித் தந்தனர். எனவே, அவ் விண்ணப்பங்களின் உட்பொருளைச் சுருக்கமாக மராட்டி மொழியில், மோடி எழுத்துக்களில் எழுதி மன்னரின் பார்வைக்காகவோ, அல்லது சர்க்கேல் என்ற அமைச்சரின் பார்வைக்காகவோ வைக்கும் மரபு இருந்தது. அவ்வாறே, மன்னரின் மராட்டிமொழி ஆணை மக்களைச் சென்றடையும் போது தமிழில் எழுதி வழங்கப்பட்டது. இவ்வாறு எழுதப் பட்ட தமிழ் ஆவணங்கள் மோடி ஆவணங்களுக்கு இடையிடையே இன்றும் காணப்படுகின்றன.

மோடி ஆவணங்கள் தனித்தனித் தாளில் எழுதப்பட்டு வலது இடது விளிம்புகளைச் சேர்ந்து இரண்டாக மடிக்கப்பட்டு சிறுசிறு கட்டுக்கள் பலவற்றை ஒன்று சேர்த்து துணியில் மூட்டையாகக் கட்டிவைத்தனர். இம்மூட்டையை ஒரு மாளிகையாகவும், உள்கட்டுக்களை அறைகளாகவும் கொண்டால், ஒவ்வொரு கட்டிலும் இடையிடையே கிடைக்கும் தமிழ் ஆவணங்களை அவ்வறைகளிலுள்ள பலகணியாகக் கொள்ளலாம். இத்தமிழ் ஆவணங்களில் மோடி ஆவணத்திலுள்ள செய்திகள் பலவும் இடம்பெற்றுள்ளன. எனவே, மோடி என்ற சுவரால் மறைக்கப்பட்டுள்ள செய்திகள் ஆங்காங்கே உள்ள தமிழ் ஆவணங்கள் என்ற பலகணி வழியாகக் காட்டப்படுவதால் - மோடி மாளிகையில் தமிழ்ப் பலகணி வழியாக நோக்கிய சில முக்கிய செய்திகளைக் கூறுவான் வேண்டி, இவை தஞ்சை அரச ஆவணங்கள் ( The Tanjore Raj Records ) என்றிருந்தபோதிலும், மோடிப் பலகணி என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.[2] இம்முயற்சியினை முதன்முதலில் தொடங்கி வைத்தவர் தஞ்சாவூர் சரசுவதி மகாலின் முன்னாள் தமிழ்ப் பண்டிதர் திரு. வி. சொக்கலிங்கம் ஆவார். தொடக்க காலத்தில் இத்தமிழ் ஆவணங்கள் தனியே

பிரிக்கப்பட்டு, அவை கூறும் பொருளடிப்படையில் தொகுக்கப்பட்டு நூலக இதழில் வெளியிடப்பட்டன. அவை கூறும் பொருட்களாவன:

1. நாணயங்கள்
2. கப்பல் செய்திகள்
3. கோயில்கள்
4. உத்தரவுகள்
5. அணிகலன்கள்
6. மரச்சாமான்கள் முதலியவை
7. போர்ச் செய்திகள்
8. அல்லா பண்டிகையின் வரலாறு
9. பொதுச் செய்திகள்

இத்தலைப்புகளில் 52 ஆவணங்கள் வெளியிடப்பட்டன.[3] இவற்றைத் தொடர்ந்து, மேலும் 128 ஆவணங்கள் ( 53 முதல் 180 வரை ) பின்னர்த் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் வெளியிடப்பட்டன.[4] எனினும், இவை எந்த மூட்டைகளி-லிருந்து எடுக்கப்பட்டன என்ற குறிப்பு எழுதிக் கொள்ளப் படாமல் விடுபட்டுவிட்டதால், இதே செய்தி அந்த மூட்டைகளிலுள்ள மோடி ஆவணங்களிலும் காணப் படுகின்றதா என்பதனைச் சரிபார்க்க இயலவில்லை. தமிழ் ஆவணங்களைப் பிரித்தெடுக்கும் பணி தொடர்ந்து நடை பெற்று வருவதால், தற்போது அவ்வாறு எடுக்கப்படும் ஆவணங்களில் அவை எடுக்கப்பட்ட மூட்டை எண்கள் குறிப்பிடப்படுகின்றன. தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் பிரித்தெடுக்கப்பட்டு வெளியிடப்பட்ட 72 மோடிப் பலகணி ஆவணங்கள் மூட்டை எண்கள் C-2, C-4, C-5, ஆகியவற்றிலிருந்தவையாகும்.[5] இக்கட்டுரைக்காக அண்மையில் C-8இலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட வெளியிடப்படாத சுமார் 28 ஆவணங்களும் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

## வகைப்படுத்தல்

இதுவரை கிடைத்துள்ள சுமார் 280 மோடிப் பலகணி ஆவணங்களை ஆய்வு செய்ததின் அடிப்படையில், இவற்றைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

அ. வழக்கு தொடர்பான ஆவணங்கள்
ஆ. அரச ஆணைகள்
இ. உடன்படிக்கைகள்
ஈ. விண்ணப்பங்கள்
உ. பட்டியல்கள்
ஊ. கடிதத் தொடர்பு ஆவணங்கள்
எ. பொதுச் செய்திகளைக் கூறும் ஆவணங்கள்

ஆகியன. தவிர, இன்னும் நூற்றுக்கணக்கான மோடி ஆவண மூட்டைகளிலிருந்து தமிழ் ஆவணங்கள் பிரித்தெடுக்கப்பட வேண்டியதுள்ளன. அவற்றையும் பிரித்தெடுப்பின், இவ்வகைப்பாடு விரியும்.

## அ. வழக்கு தொடர்பான ஆவணங்கள்

கிடைக்கக்கூடிய ஆவணங்களில் வழக்கு தொடர்பான ஆவணங்களே அதிகமாகக் காணப்படுகின்றன. தஞ்சை மராட்டியர் ஆட்சியில் வழக்குகளை விசாரிக்க நால்வகை நீதிமன்றங்கள் இருந்தன. அவை, முத்திரித சபை, தரும சபை, நியாய சபை, நியாயாதீச சபை என்பனவாகும். முத்திரித சபையில் 100 பணத்திற்குள் அமையும் வழக்குகளும், அதற்கு மேற்பட்ட வழக்குகள் தரும சபையிலும் விசாரிக்கப்பட்டன. குற்றவியல் வழக்குகள் நியாயசபையில் விசாரிக்கப்பட்டன. முத்திரித சபை வழக்குகள் மேல்முறையீட்டிற்காகத் தரும சபையிலும், தரும சபை வழக்குகள் மேல்முறையீட்டிற்காக நியாயாதீச சபையிலும் கொடுக்கப்படலாம். நியாய சபையில் விசாரிக்கப்பட்ட குற்றவியல் வழக்குகளும் மேல் முறையீட்டிற்காக நியாயதீச சபையில் கொடுக்கப்படலாம். இவை தவிர, கோட்டைக்கு வெளியே உள்ள வழக்குகளைத் தீர்க்க பிரதிஷ்டித சபை இருந்தது. இதிலுள்ள வழக்குகளை மேல்முறையீட்டிற்காக கார்பார் பிரசங்கத்தில் கொடுக்கலாம்.[6]

இவ்வகையான நீதிமன்றங்களில் விசாரிக்கப்பட்ட வழக்குகளாவன:

(1) கடன் சீட்டு எழுதிப் பெற்றுக் கடன் கொடுத்த தொகையை மீட்டுத்தர வேண்டிய வழக்கு

(2) நகையைக் கொடுத்துவைத்துத் திருப்பித்தர மறுத்தமையை மீட்டுத்தர வேண்டிய வழக்கு

(3) வீடு, வயல் முதலியவற்றில் ஏற்பட்ட வழக்குகள்

(4) ஜீவனாம்சம் வேண்டிய வழக்கு

(5) குதிரைக்கு மருத்துவம் செய்த செலவை மீட்டுத்தர வேண்டிய வழக்.கு

(6) ஜாமின் கேட்டது

போன்றவைகளாகும்.

## ஆ. அரச ஆணைகள்

அரசன் பல்வேறு சூழல்களில் வழங்கிய ஆணைகளும் தமிழ் ஆவணங்களாகக் கிடைக்கின்றன. சான்றாகச் சில,

(1) கி.பி. 1820இல் மன்னர் சரபோஜி காசியாத்திரை சென்றபோது தனது மகனுக்கு இளவரசுப்பட்டம் கட்டி வைத்துத் தாம் திரும்பி வருகிற வரையில் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் பற்றி எழுதிவைத்துச் சென்றுள்ளார். இந்த ஆணையினை சர்க்கேல் இராமாஜி சர்ஜேராவ் காட்கே பெயரில் தமிழில் எழுதி வைத்துள்ளார். இதில் 32 விதிமுறைகள் உள.[7]

(2) ஜமாபந்தித் தொகையை முடிவு செய்வதற்காக, நிலத்தின் தரத்தை நிர்ணயிக்க வழங்கப்பட்ட ஆணை.[8]

(3) அரசு இலாக்காக்களில் கிராம முன்சீப் நியமனம் செய்ய வேண்டியது தொடர்பான ஆணை.[9]

## இ. உடன்படிக்கைகள்

மன்னருக்கும் பிற பகுதி ஆட்சியாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட உடன்படிக்கை. மன்னருக்குக் கீழே இயங்கிய பன்னிருமநால் பதினெண் கானா ஆகியவற்றில் பணிபுரிந்தோர் உருவாக்கிய உடன்படிக்கை எனச் சில ஆவணங்கள் கிடைக்கின்றன.

(1) கர்ச் (செலவு) மகாலில் வேலைபார்த்த பதினாறு பேரின் மேல் சுமத்தப்பட்ட திருட்டுக் குற்றச்

சாட்டை மறுத்தும், உரிய நபரைக் கண்டுபிடித்து ஒப்புவித்த பின் அவனிடமிருந்து திருடுபோன பொன், வெள்ளி ஆகியவற்றை மீட்டுக்கொள்வது. பாக்கி விழுந்தால் மேற்படி பதினாறு பேரும் அதனை ஒப்புக்கொள்வது என உடன் படிக்கை எழுதிக் கொடுத்தனர்.[10]

## ஈ. விண்ணப்பங்கள்:

வழக்கு தொடர்பான விண்ணப்பங்கள் தவிரப் பிறவகை விண்ணப்பங்களும் மன்னரின் முகவரியிட்டுத் தரப்பட்டுள்ளன. சான்றாகக் கரீதி ( பொருட்கள் வாங்கும் ) மகாலில் வாங்கப்பட்ட பொருட்களைப் பழுதுபார்த்துப் பேணும் வேலையினைச் செய்யத் தங்களுக்குப் பணி வழங்குமாறு கோட்டைவெளி வடக்குவாசலைச் சார்ந்த ஐவர் விண்ணப்பம் அனுப்பியுள்ளனர்.[11]

## உ. பட்டியல்கள்

பலவகையான பட்டியல்கள் மோடிப் பலகணியில் கிடைக்கின்றன. சான்றாக, கல்யாண மகாலில் நாணய வரி[12] என்பதில் அக்காலத்தில் பழக்கத்திலிருந்த நாணயங்களின் பட்டியலைக் கொடுத்துள்ளனர். அவ்வாறே, அரண்மனையி-லிருந்த நகைகளின் பட்டியல், தட்டுமுட்டுச் சாமான்களின் பட்டியல், பணியாளர்களின் பட்டியல் முதலியனவும் கிடைக்கின்றன.

## ஊ. கடிதத் தொடர்பு ஆவணங்கள்:

சரபோஜி அமர்சிங்கின் பிடியிலிருந்து விடுபட்டுச் சென்னையிலிருந்தபோது அவருடன் யஷ்வந்த கிருஷ்ணாஜி என்ற அலுவலர் இருந்தார். தஞ்சையில் பாபண்ணா என்பவர் தஞ்சை அரசின் நிலைமையை அவ்வப்போது சரபோஜியின் அலுவலருக்குத் தெரிவித்துவந்த கடிதங்கள் தமிழிலேயே உள்ளன.

இராஜஸ்ரீ யஷ்வந்தராவ்ஜி அவர்களுக்குச் சேவகன் அண்ணாவின் நமஸ்காரம்

என்று தொடங்கிப் பின் செய்தியை எழுதுகின்றார். அதேபோல அண்ணாஜி பண்டிதருக்கு யஷ்வந்த கிருஷ்ணாஜியும் எழுதுகிறார்.[13]

இவ்வாறு மன்னர் மற்றவருக்கும், மன்னரின் கீழுள்ள அலுவலர்கள் தமக்குள்ளும் அரசு தொடர்பாக எழுதிக்கொண்ட ஆவணங்கள் நிறையக் கிடைக்கின்றன.

## நிறைவுரை

இவ்வாறாகப் பல்வேறு நிலைகளில், தமிழில் எழுதப்பட்டு மோடி ஆவணங்களுக்கிடையே புதையுண்டு கிடக்கும் அரிய தகவல்களைத் தனியே தொகுப்பின், அவற்றின் மூலம் சுமார் 180 ஆண்டுக்காலம் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்களின் அரசியல், சமய, பொருளாதார நிர்வாக நிலைகளைத் தெளிவாக அறிதற்கு இயலும். தமிழக வரலாற்றின் ஒரு பகுதியாகிய தஞ்சை மராட்டிய மன்னர் கால வரலாறு பற்றிய அரிய தகவல்களை மோடிப்பலகணி ஆவணங்கள் அளிக்கின்றன என்பதில் ஐயமில்லை. இவ்வாவணங்களைத் தமிழ் தெரிந்தோரும் படித்துப் படியெடுத்து ஆய்வு செய்ய இயலும்.

## அடிக் குறிப்புக்கள்

1. *Molesworths Marathi-English Dictionary, pp.669-70.*
2. *The Journal of the Tanjore Sarasvati Mahal Library, Vol.16. No.1. 1962.*
3. மேற்படி - தொகுதி 16 முதல் 36 வரை.
4. தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும் - தொகுதி-2, சுப்ரமணியன், பா (ப.ஆ.), 1989.
5. மேற்படி நூல், பக்.356-413.
6. மேற்படி நூல், ப.XV.
7. மேற்படி நூல், ஆவண எண்.172, பக்.255-59.

8. மேற்படி நூல், ஆவண எண்.171, பக்.252-55.

9. மேற்படி நூல், ஆவண எண்.170, பக்.251-52.

10. மேற்படி நூல், ஆவண எண்.120, பக்.302-303.

11. மேற்றபடி நூல், ஆவண எண்.126, பக்.309.

12. மேற்படி நூல், ஆவண எண்.152, பக்.233-35.

13. மேற்படி நூல், ஆவண எண்.161-168, பக்.241-249.

*****

# 17. தமிழகத்தில் மலர்ந்த தெலுங்குச் சுவடிகள்

நா. விசுவநாதன்

மிகப் பழங்காலம் தொட்டே தமிழ்நாட்டிற்கும் வடுக நாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்துள்ளது. இங்கு எப்படி ஓர் அகநானூறு தொகுக்கப்பட்டதோ, அதேபோன்று வடுக நாட்டில் ஒரு காதாசப்தசதி மலர்ந்தது. தஞ்சைக்கும் தெலுங்கர் நாட்டுக்கும் இருந்த உறவு பற்றி எண்ணற்ற தமிழ்க் கல்வெட்டுக்கள் பேசுகின்றன. சோழர், கீழைச் சாளுக்கியர் இணைந்ததால் இலக்கியத்திலும், கலைகளிலும் எண்ணற்ற பரிமாற்றங்கள் ஏற்பட்டன.

இதேநிலை விசயநகரப் பேரரசு செங்கோலோச்சும் போதும், அவர்களது பிரதிநிதிகளான செஞ்சி, மதுரை, தஞ்சை நாயக்கர்கள் காலத்திலும் தொடர்ந்தது. தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட தஞ்சை நாயக்கர் அவையில் தமிழோடு தெலுங்கும் இணைந்து வளர்ந்தது. இரு மொழிகளிலும் எண்ணற்ற சுவடி நூல்கள் இங்கு இடம் பெற்றன.

கி.பி. 1535இல் தஞ்சையை ஆளத்தொடங்கிய சேவப்ப நாயக்கர் காலம் தொடங்கி கி.பி. 1675இல், விசயராகவ நாயக்கரால் நாயக்கர் ஆட்சி முடிவுற்றபோதும், பின்பு வந்த மராட்டியர் ஆட்சிக் காலத்திலும் தஞ்சை மண்ணில் தெலுங்கு இலக்கியம் வளம்பெற்றுச் செழித்தது. இங்கு உயிர்த்த தெலுங்கு இலக்கியப் பயிருக்குத் தமிழும், சம்ஸ்கிருதமும் உரமாய் அமைந்து பசுமை பெறச் செய்தன. இவ்வாறு விளைந்த அத்தெலுங்குச் சுவடிகள் தஞ்சை அரண்மனை நூலகமான சரசுவதி மகாலில் இடம்பெற்று, மொழி மணமும் கலைமணமும் பரப்பி நிற்கின்றன.

தஞ்சை நூலகத்தில் மட்டும் 750 தெலுங்குச் சுவடிகள் உள்ளன. தஞ்சை மட்டுமின்றிச் சென்னைக் கீழ்த்திசை நூலகத்திலும் தெலுங்குச் சுவடிகள் உள்ளன. தமிழ்நாட்டில் கிடைக்கும் தெலுங்குச் சுவடிகளை ஆழ்ந்து நோக்குகையில் அவற்றில் தமிழக வரலாற்றையும் இசை, நாட்டியம், நாடகம் போன்ற தமிழ்க் கலைகளின் கூறுகளையும், அவை பெற்ற வளர்ச்சிகளையும் காணமுடிகின்றது.

## தமிழக வரலாற்றுக்குத் துணைபுரியும் சுவடிகள்

### இரகுநாதப்யுதயம், இரகுநாத நாயகாப்யுதயம்

இரகுநாதநாயகாப்யுதயம் (யக்ஷகானம் - ஈரடிச் செய்யுள்) கி.பி. 1631இல் இருந்து 1675 வரை தஞ்சை அரியணையில் அமர்ந்து அரசு செலுத்தியவன் விசயராக நாயக்கனாவான். இவன் இரகுநாத நாயக்கனின் மகன். 34க்கும் மேற்பட்ட தெலுங்கு நூல்களை இயற்றினான். இவன் எழுதிய நூல்களுள் குறிப்பிடத்தக்கவை இரகுநாதாப்யுதயம் எனும் யக்ஷகான நாடக நூலும், இரகுநாத நாயகாப்யுதயம் எனும் ஈரடிச் செய்யுட் காவியமும் ஆகும். இவ்விரண்டு சுவடிகளிலும் இம்மன்னவன் தன் தஞ்சையின் வாழ்க்கை, அவன் காலத்திய போர் நிகழ்வுகள் போன்ற பல செய்திகளைக் கூறியுள்ளான். இரகுநாதநாயக்கன் காலையில் படுக்கயைிலிருந்து எழுந்திருப்பதிலிருந்து மீண்டும் இரவு அவன் படுக்கைக்குப் போவது வரை ஒரு நாளில் நிகழும் அவனது பணிகள் அத்தனையும் விவரிக்கப் பெற்றுள்ளன. தஞ்சை அரண்மனையின் அமைப்பு, எந்தெந்தப் பகுதிக்கு என்ன பெயர், அங்கு என்ன நிகழும் என்பது பற்றிய குறிப்புகள் போன்றவை காணப்பெறுவதால் இச்சுவடியின் துணை கொண்டு நாயக்கர்கால அரண்மனை எவ்வாறு நிகழ்ந்தது என்பதறிகிறோம். இவ்வரண்மனையில் இருந்த அரிய ஓவியங்களைப் பற்றிய குறிப்புகள் இச்சுவடியில் காணப் பெறுகின்றன. அரண்மனை, நாட்டியசாலை பற்றிய குறிப்புகள்; கலை பயிலும் அரங்கம் பற்றிய குறிப்புகள்; புலவர் குழுமிய இடம்பற்றிய குறிப்புகள்; ஆகியவையும் உள்ளன. கல்லணைக்கு அருகில் உள்ள தோகூர் எனும் ஊரில் இரகுநாத நாயக்கரால் நிகழ்த்தப்பெற்ற போர் வரலாற்றுச்

சிறப்புடையதாகும். இப் போரில் இரகுநாத நாயக்கர் ஜக்கநாயக்கன் எனும் விசயநகரத்துக் கலகக்காரனையும், மதுரை, செஞ்சி நாயக்கர்களையும் வென்று உண்மையான விசயநகரத்து வாரிசு இராமராயன் என்னும் சிறுவனுக்குப் பேரரசனாக மணிமுடி சூட்டினான். வரலாற்றுச் சிறப்புடைய இப்போர் பற்றிய ஆவணங்கள் பல கிடைத்திருந்தும் போர் நிகழ்ச்சிகள் பற்றியும், எவ்வாண்டு இப்போர் நிகழ்ந்தது என்பது பற்றியும் ஆய்வாளர்களுக்குத் தெரியாமல் இருந்தது. ஆனால் மேலே குறிப்பிட்டுள்ள விஜயராகவ நாயக்கரது தெலுங்குச் சுவடியால் போரின் முழு விவரத்தையும் நாம் அறிவதோடு கி.பி. 1616ஆம் ஆண்டு ஜூன் மாதம் போர் நிகழ்ந்தது என்ற தெளிவான வரலாற்றுக் குறிப்பையும் அறிகிறோம்.

இவ்விரண்டு சுவடி நூல்களிலும் தஞ்சை அரண்மனையின் உணவுக்கூடம் எவ்வாறு இருந்தது, அங்கு எத்தனை வகையான சைவ, அசைவ உணவுகள் தயாரிக்கப் பெற்றன என்ற சுவையான தகவல்களும் உள்ளன. நாட்டிய சாலை பற்றிக் குறிப்பிடும்போது அங்கு நிகழ்ந்த நாட்டியங்கள் பற்றியும், கொலுமண்டபம் பற்றிக் குறிப்பிடும் இடத்தில் அரசு நடைமுறைகளும், அரண்மனை வருவாய்த்துறை பற்றிய தகவல்களும் கூறப்பெற்றுள்ளன.

## 2. மன்னாருதாச விலாசம்

இரங்காசம்மா என்னும் விசயராகவ நாயக்கரின் அவைக்களப்புலவர் மன்னாருதாச விலாசம் என்ற தலைப்பில் நாடகச்சுவடி ஒன்றும், காவியச் சுவடி ஒன்றும் படைத்துள்ளார். நாடக நூலில் தஞ்சை அரண்மனை பற்றிய குறிப்புகள் மன்னார்குடி, இராசகோபாலசுவாமி கோயில் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள், விசயராகவனுடன் வாழ்ந்தவர்கள், அவனது அலுவலர்கள், இராசகுரு போன்றவர்கள் பற்றிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன. விசயராகவ நாயக்கர் குறித்து ஆராய்கின்ற வரலாற்று ஆசிரியர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

## தெலுங்குமொழியில் தமிழகத்துப் புராணங்கள்:

மதுரை திருவிளையாடல்புராணம் அறுபத்துமூவர் கதை கூறும் 'பசவபுராணம்', ஆரூரில் சுந்தரருக்காக இறைவன் தூது சென்ற கதையைக் கூறும் 'குருநம்பி சரிதம்' ஆகிய தெலுங்குச் சுவடிகள் சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் இருப்பது போன்று திருவரங்கத்துத் தலபுராணம் கூறும் 'ஸ்ரீரங்க மான்மியம்' எனும் தெலுங்குச் சுவடி, தஞ்சை நூலகத்தில் இடம்பெற்றுள்ளது. இதனை 'முகுந்த யோகி' என்பவர் எழுதியுள்ளார். தெனாலிராம கிருஷ்ணன் எழுதிய சோளிங்கபுரத் தலபுராணம் கூறும் 'கடிகாசல மான்மியம்' எனும் தெலுங்குச் சுவடி, தஞ்சை நூலகத்தில் இடம் பெற்றுள்ளது. இதனை முகுந்த யோகி என்பவர் எழுதியுள்ளார். தெனாலி ராமகிருஷ்ணன் எழுதிய சோளிங்கபுரத் தலபுராணம் கூறும் கடிகாசல மான்மியம் எனும் சுவடியை ராமகிருஷ்ணரின் பெயரன் ஒருவர் தஞ்சை மராட்டிய மன்னருக்கசுக் காணிக்கையாக்கியுள்ளார். அச்சுவடியும் இந்நூலகத்தில் நல்ல நிலையிலுள்ளது.

## தேவார மூவர் போன்று திருக்கோயில்கள் தோறும் பாடிய சகஜி

மூவர் முதலியர் எவ்வாறு தமிழகத்துத் திருக்கோயில்களில் பதிகங்கள் பாடினரோ அதுபோன்று கி.பி. 1684-1712 வரை தஞ்சையை ஆட்சி செய்த மராட்டிய மன்னன் சகசி, சோழநாட்டுத் திருக்கோயில்கள் தோறும் சென்று தெலுங்குப் பாடல்களைப் பாடியுள்ளார். இவர் தனது இஷ்ட தெய்வமாகத் திருவாரூர் தியாகேசப் பெருமானைக் கொண்டதால் ஒவ்வொரு பாடல்களின் முடிவிலும், தியாக எனும் முத்திரையை இட்டுப் பாடியுள்ளார். தியாகேசபதமுலு என்ற தலைப்பின் கீழ் நூற்றுக்கணக்கான இவனது பாடல்கள் சுவடி வடிவில் தஞ்சை நூலகத்தில் திகழ்கின்றன. தமிழில் பாடல்பெற்ற திருக்கோயில்களுக்குத் தெலுங்கில் பாடல் தந்த இம் மன்னவன் திருவாரூர், மன்னார்குடி, திருவையாறு, திருபுள்ளிருக்கு வேளூர் (வைத்தீச்வரன் கோயில்) மயிலாடுதுறை போன்ற தலங்களில் நடந்த பங்குனித் திருவிழா, சித்திரைப் பெருவிழா, தேர்த்திருவிழாக்கள்,

பல்லக்கு சேவைகள் போன்றவை பற்றியும் விரிவான அழகான பாடல்களைத் தந்துள்ளார்.

ஒருமுறை மன்னார்குடி இரதோத்சவத்திற்கு அவர் சென்றபோது அத்திருக்கோயில் பெருந்தேர் மணலில் சிக்கி நகர முடியாமலிருந்தபோது அழகான தெலுங்குப் பாடலொன்றைப் பாடியுள்ளார். “சர்வலோகங்களுக்கும் தலைவனாகிய இராச கோபாலா! எங்களை ஏன் சோதிக்கிறாய்! மணலில் சிக்கிய உன் தேரை இழுக்க முடியாமல் அவதிப்படுகிறோமே! உனக்கு இது ஒரு பெரிய காரியமா? கோபால! அன்று ஆயர்பாடி மக்களைக் காப்பதற்குக் கோவர்த்தனகிரியை ஒரு கையாலே தூக்கிக் காத்தவனாயிற்றே. உனக்கு இந்தத் தேரை நகர்த்துவது சிரமம் அல்லவே” என்று பாடுகிறார். இவ்வாறு அரிய வரலாற்று நிகழ்வுகளையும் சுவை பயக்கும் கவிதைகளையும் சுந்தரத் தெலுங்கில் பாடிய இம்மராட்டிய மன்னனின் தெலுங்குக் கவிதைச் சுவடிகள் சரஸ்வதி மகாலுக்குக் கிடைத்த அரும்பெரும் செல்வங்களாகும்.

## மூன்றுமொழிச் சொற்கள் இணைந்த கவிதை

வாரும் தயதோ ஆஜி, சேரும் பாகுக சிவசங்கரா பாவி தென்றல் வச்சி பாதிதோ வக்காரக் குயில் இபுடு கூஜிதோ ஆவி ஹெச்செனு துஜவரீ அந்தமதி சிச்சு ஸேய நிவாரீ கன்னல் வில்லு வேஸெ பஹா, கண்ணொரக்கம் ராது பஹா - எனத் தெலுங்கினை நேசித்த இம்மன்னவன் ஒரே பாடலில் தமிழ் தெலுங்கு, மராட்டி ஆகிய மூன்று மொழிச் சொற்களையும் இணைத்துக் கவிதைகளை எழுதியுள்ளான். திருவாரூரில் கோயில் கொண்டுள்ள தியாகப்பெருமான்இரவு பள்ளியறைக்குச் செல்லும் காட்சியை நடனமாதர்கள் பாடியும் ஆடியும் போற்றும் வண்ணம் ஓர் இலக்கியம் படைத்துள்ளான். இது சங்கர பல்லக்கி சேவாபிரபந்தம் எனும் தெலுங்கு நூலாகும்.

இதுபோன்றே மன்னார்குடி இராசகோபால சுவாமி பள்ளியறைக்குச் செல்லும் காட்சியை விவரித்து விஷ்ணு பல்லக்கி சேவா பிரபந்தம் என்ற நூலையும் எழுதியுள்ளான். இவ்விரண்டு தெலுங்குச் சுவடிகளும் தஞ்சை நூலகத்தில்

இடம்பெற்றுள்ளன. பிரபந்தம் இயற்றியதோடல்லாமல் நாள்தோறும் நடனமாதர் இவற்றைக் கோயிலில் நடிப்பதற்காக நிவந்தமும் அளித்துள்ளான்.

### தியாகராச விலாசம்

தமிழ், தெலுங்கு, மராட்டி இம்மூன்று மொழிகளும் சங்கமிக்கும் வண்ணம் சகசி மன்னரால் எழுதப்பட்ட நூலே தியாகராச விலாசம் எனும் நூலாகும். சேக்கிழார் பெருமாள் பெரியபுராணத்தில் கூறியுள்ள ஒரு கதையைக் கருப்பொருளாகக் கொண்டு, தன் கற்பனை வளத்தை அதில் குழைத்துத் தெலுங்கு மொழி இலக்கணத்தைக் கலந்து மராட்டிய மொழியில் இச்சுவடி நூலைப் படைத்துள்ளார். இச்சுவடி எழுதப்பட்ட லிபியோ தெலுங்கு என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சுந்தரரின் கதையைக் கூறும் சேக்கிழார் பெருமான் பரவையாரின் அழகைக் கண்டு மயங்கிய சுந்தரர் நிலையைக் கூறிப்பின் ஆரூர் இறைவன் பரவையிடம் தூது சென்றதைக் கூறியுள்ளார். சகசியோ இதே கதைக்கு மேலும் மெருகூட்டுகின்றார். சுந்தரர் பொருட்டுப் பரவையார் வீட்டுக்குச் சென்றதைப் புரிந்துகொள்ளாத அம்மை பார்வதி ஈசன் மேல் ஊடல் கொள்வதையும் பின்னர்ச் சுந்தரர் மூலமாக ஊடல் தீர்க்கப் பெற்றதையும் கூறியுள்ளார்.

சேக்கிழார் பெருமான் பரவையை அறிமுகப்படுத்தும் போது

"மானிளம் பிணையோதெய்வ வளரின முகையோ
வாசத்
தேனிளம் பதமோ வேலைத் திரையிளம் பவள வல்லிக்
கானிளங் கொடியோ திங்கட் கதிரிளங் கொழுந்தோ
காமன்
றாளிளம் பருவங் குறிக்குந் தனியிளந் தனுவோ
வென்ன"

என்று கூறுவதோடு பரவையைக் கண்ட சுந்தரர்

"கற்பகத்தின்பூங் கொம்போ காமன்றன் பெரு
வாழ்வோ

பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்
சுமந்து
விற்குவளைப் பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
வற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார்"

என்று கூறியுள்ளார். இதே காட்சியைக் காட்டும் சகசி மன்னர்

ராஜவதனா நவே ராஜஹம்ஸீஹே - ராஜஹம்சிநவே
ரதிஹாதிசராவே - நதிஹாதசராநவே சதுரமோநீஹே
சதுரமோதிநவே - சாம்ப்யசீகளீ - சாம்ப்யாசீ களி
நவே
கம்பி தலதாஹே-கம்பி தலதாநவே காமசராஹே
சாம சரா நவே சோமகளாஹே-ஸோம களா நவே
ஸுருசிரபீஜ ஸுருசிரபீஜநவே வரரத்ன கனீஹே
வரரத்ன கனீநவே பரவயுவதீ ஹே

என்று அந்தாதி அமைப்பில் பாடுகிறார். இப்பாடலில் சேக்கிழார் பெருமானின் கவிதையின் சாரம் இருப்பதைக் காணும்போது சகஜி மன்னர் தமிழகப் புராணங்களிலும், தமிழ்மொழியின் நயத்திலும் விருப்புடையவராகத் திகழ்ந்தார் என்பதை அறிகிறோம்.

தியாகராஜ விலாசத்தில் எவ்வாறு சுந்தரரின் கதை நயம்பட விவரிக்கப்பட்டுள்ளதோ அதுபோன்று சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலுள்ள குருநம்பி சரிதம் என்னும் தெலுங்கு மொழி ஏட்டுச்சுவடி சுந்தரரின் கதையை விவரிப்பதாகும். இந்நூல் இதுவரை பதிப்பிக்கப்பெறவில்லை.

**பாவைக்கூத்து**

பொம்மலாட்டமென்று பாமரர்களால் போற்றப் பெறும் கிராமியக் கலை தமிழகத்தில் நெடுநாட்களாக இருந்து வரும் கலையாகும். விசயநகரப் பேரரசர்கள் காலத்தில் இக்கலைக்கு ஆக்கம் மிகுந்திருந்தது. அவர்கள் தெலுங்கு, கன்னட மொழி பேசுபவர்களாக இருந்ததால் தமிழ்நாட்டில் நடத்தப்பெற்ற பொம்மலாட்ட நாடகங்களில் தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மும்மொழிகளிலும் சங்கமித்தன. இந்நாடகங்களை இவற்றுள் எந்த ஒரு மொழி தெரிந்தவரும் கண்டுகளிக்க முடியும். அர்ச்சுனனுக்குப் பாசுபத

மளிப்பதற்காகச் சிவபெருமான் கிராதனாக (வேடனாக) வரும் கதையை மையமாகக் கொண்ட 'கிராதார்ஜினியம்' எனும் தெலுங்கு சுவடி தஞ்சை சரஸ்வதி மகால் நூலகம் சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகம் மற்றும் அடையாறு நூலகம் ஆகிய இடங்களில் உள்ளன. பொம்மலாட்டம் பற்றிய இச்சுவடி நூல், சாம்பய்யா என்பவரால் கி.பி. 1750இல் எழுதப்பெற்றதாகும்.

## நிறைவுரை

இவ்வாறு சரஸ்வதி மகால் நூலகத்திலும் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலும் இடம்பெற்றுள்ள தெலுங்குச் சுவடிகள் தமிழ் மண்ணில் மலர்ந்த காரணத்தால் தமிழகப் பண்பாடு, வரலாறு, இலக்கியம், இசை, நாட்டியம் போன்ற பல்வேறு கூறுகளின் வெளிப்பாடாகவே திகழ்கின்றன. இந்நூல்களைத் தமிழாக்கம் செய்வது ஆழமாக ஆராய்தல் தமிழக வரலாறு, பண்பாடு முதலிய துறைகளைத் துலக்கிக் காட்டப் பெரிதும் பயன்படும்.

*****

# 18. சரசுவதி மகால் நூலகத்தில் காணப்பெறும் தமிழ்மொழித் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள்

வித்துவான் என். சீனிவாசன்

தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்தில் வடமொழிச் சுவடிகள் சுமார் 40,000க்கு மேல் உள்ளன. இவை காகிதச்சுவடிகளாகவும், ஓலைச்சுவடிகளாகவும் உள்ளன. இரண்டாம் சரபோஜி மன்னர் ( கி.பி. 1800 - 1832 ) காலத்திற்கு முன் இப்பிரிவுக்குரிய சுவடிப் பட்டியல் இல்லை. ஆதலால் பதவியேற்ற பின் 1805, 06, 07ஆம் ஆண்டுகளில் இத்துறையின் சுவடிகளுக்குரிய சுவடி விவரப் பட்டியல் தயாரிக்கப்பெற்றது. மேலும் இம்மன்னரின் ஆட்சிக் காலத்தில் வட இந்திய நகரங்களிலிருந்து புலவர்களிடம் இருந்து பொருள் கொடுத்து வாங்கியும், படியெடுக்கப் பெற்றும் சுவடிகளை இத்துறையில் சேர்த்தார் மன்னர் சரபோஜி.

சரபோஜியின் மகன் சிவாஜி ( 1832-1855 ) தனது ஆட்சியின் காலத்தில் இத்துறையிலுள்ள சுவடிகளை மீண்டும் பட்டியல் இடும் பணியை மேற்கொண்டார். சிவாஜியின் காலத்திற்குப்பின் ஆங்கிலேயர்களின் ஆட்சி ஏற்பட்டமையால் அரிய சுவடிகளைக் குறித்ததொரு பட்டியல் தயாரிக்கப்பட்டு அச்சிடப் பெற்றுள்ளது. இவற்றையும் அடிப்படையாகக் கொண்டுதான் டாக்டர் எ.ஸி. பர்னல் அவர்களின் தலைமையில் புலவர் குழு செயல்பட்டு, சுவடிகளுக்கு வரிசை எண்களிடப்பட்டு சிறு குறிப்புகளுடன் 1878ஆம் ஆண்டிலும் 1880ஆம் ஆண்டிலும் இரண்டு தொகுதிகளாக ( A Classified Index to Sanskrit Mss in the Palace Library என்ற பெயரில் )

வெளியிட்டார். இவர் சுவடிகளுக்குக் கொடுத்துள்ள வரிசை எண்களின் படியே இன்றும் சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

இதற்குப் பின் ஜம்புநாத பட்வான்டகே, பதங்க அவதூத போன்ற அறிஞர்கள் தங்களது இல்லங்களில் தொகுத்து வைத்திருந்த சுவடித் தொகுப்புகளை இந்த நூலகத்திற்கு அளித்துள்ளனர. இவை அவர்களின் பெரிலேயே ( Collection Mss ) என்ற பெயரில் தொகுத்து வைத்துப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவற்றையும் சேர்த்து 1929ஆம் ஆண்டு தொடங்கி 1934ஆம் ஆண்டுவரை, 19 தொகுதிகளாக சுவடி விவரப் பட்டியல் தயாரித்து வெளியிடப்பெற்றுள்ளன. இந்த அரிய, கடினமான பணியை நிறைவேற்றியவர் திரு. ......... சாஸ்திரியாவார். 1934ஆம் ஆண்டுக்கு சுவடி விவர அட்டவணை தயாரிக்கும் பணியைத் தற்போது செய்து வருகிறோம். இவைகள் இத்துறையின் பொதுச் செய்திகளாகும்.

இச்சுவடிகளை ஆராயும் போது இலக்கியம், நாடகம், சிற்பம் போன்ற பல்வேறு பிரிவுகளில் பல அரிய சுவடிகள் உள்ளன. இவற்றில் தமிழ் மொழித் தொடர்புடைய வடமொழிச் சுவடிகளைப் பற்றிய சில சுவையான செய்திகளைக் காண்போம்.

## தமிழ்த் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள்

தமிழ் மொழியின் யாப்பிற்கும்,வடமொழியின் யாப்பிற்கும் வேறுபாடுகள் பலவுண்டு. இவ்விரு மொழிகளின் யாப்பின் அமைப்புக்கள் வெவ்வேறானவை என்பது அனைவரும் அறிந்ததே. இருப்பினும் 300 ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த மராட்டிய மன்னன் இரண்டாம் சகஜி ( கி.பி. 1684-1710 ) யின் காலத்தில் வாழ்ந்த சப்தரிஷி என்றும் இருமொழிப் புலவர் ஒரு புதுமையைக் கையாண்டுள்ளான். இவர் இயற்றிய மோகினி விலாஸ குறவஞ்சி என்னும் நூலில் தமிழ் யாப்பியலில் காணப்படும் வெண்பா, கட்டளைக் கலித்துறை, அகவல், அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், மட்டு விருத்தம்

போன்ற யாப்புக்களை, தமிழிலக்கணப்படி கையாண்டு வடமொழிச் சொற்களுடன் புனைந்துள்ளார். இதனுள் இத்தகைய பாடல்களை 'சுலோகம்' என்று எப்படிக் கூறுவது? இது தமிழ்-வடமொழி ஆகிய இருமொழிகளிலுமுள்ள யாப்பிலக்கண ஆராய்ச்சியாளர்களுக்கு ஒரு வித்தாக அமையும் என்பதில் அய்யமில்லை. உதாரணமாக, வெண்பா

காமலர் தீநா: கடிதவதீ கா:பூர்வம்
காமநித்வம் காந்தை: கதயமே - ஸேமமுகி
நாமகத நாத்தாஸாம் நளிநேக்ஷ ணேமமச
காமஸர பாதாவ ஸீ

இது நாள் என்னும் வாய்பாடானின்ற ஒருவிகற்ப ஓராசிடையிட்ட நேரிசை வெண்பாவாகும். தமிழ் யாப்பிற்கேற்ப முதல் மூன்றடிகளிலும், ஒன்று, மூன்று சீர்களில் மோனை வந்துள்ளது. சொற்கள், வினைமுடிவு முதலியன வடமொழியாகவும், யாப்பு மட்டும் தமிழாகவும் அமைந்துள்ளது. இதில் மூன்றாம் அடியில் மட்டும் நாத்தாஸாம் நளிநேக்ஷ எனக் காய்முன் நிரை வந்து கலித்தளைாகிறது. இது சுவடி எழுதியவரின் பிழையாகலாம்.

## மட்டுவிருத்தம்

இந்த நூலாசிரியர் சப்தரிஷி என்னும் புலவர் தமிழ் யாப்பிலக்கணத்தில் ஆழ்ந்த பற்றும், நல்ல அனுபவமும் கொண்டவர் என்பதற்கு மட்டு விருத்தத்தை மற்றொரு உதாரணமாகக் கூறலாம். இவ்வகை விருத்தப் பாக்களை யாப்பிலக்கண நூல் வாயிலாக அறிய முடியாதெனினும் அனுபவத்தாலும் திவ்யப்ரபந்தம் போன்ற நூற் பயிற்சியாலுமே அறிய முடியும். தாலஸத்ரு ஸஸ்தநி மாம்ப்ருச்ச ஸிஹி காந்தேந தந்விபூர்வம் மேலிதவதீ காம்வதேதி ஸ்ருணுதா: காந்தைர்மே ப்ரபாவத் ஆலிபுவி தமயந்தீ ருக்மிணீ சாந்யாஸ்ர யோஜிதாஸ்தத் சோலபதி நாத்வமபி ஸாஹ பூபேநபவ ஸுகவதீஹ.

இதில் ஒவ்வொரு சீரும் குற்றெழுத்தால் முடிவதும், ஐந்து முதல் எழுசீர்களையுடையதும், ஒரே ஓசையாய்ச் செய்வதும் மட்டு விருத்தம் எனப்படும்.

மோஹினீ விலாஸ குறவஞ்சி என்னும் இந்தச் சுவடியில் 18 அறுசீர் விருத்தங்களும், 7 கட்டளைக் கலித்துறையும், எண்சீர் விருத்தம், அகவல், வெண்பா மட்டுவிருத்தம் ஆகியவை ஒவ்வொன்று வீதமும் தமிழ்ப் பாவகைகளைக் கொண்ட நூலாகும். இந்த நூல் ஒரேயொரு சுவடிதான் உள்ளது. காகிதச் சுவடி. இந்த நூல் 1985ஆம் ஆண்டில் இந்த நூலகத்தின் வாயிலாக அச்சில் வெளிவந்துள்ளது.

**உதாரணம் - 2**

தமிழ்ச் சிற்றிலக்கிய வகையில் வண்ணம் என்பதொன்றாகும். வடமொழியிலும் இவ்விலக்கியத்தைப் படைத்துள்ளார் ஒரு கவிஞர். கவியின் பெயர் தெரியவில்லை. இந்த நூலும் இரண்டாம் சகஜியின் காலத்தே தந்தங்களின் ஓசையை அடிப்படையாகக் கொண்டு இயற்றப்படும் இவ்வகை இலக்கியத்தில், இந்த நூலில் வெவ்வேறு வகைப்பட்ட பன்னிரண்டு வகைச் சந்தங்களில் பாடல்கள் அமைக்கப் பட்டுள்ளன.

ஒவ்வொரு வண்ணமும் எட்டு வரிகளைக் கொண்டதாகவும், அகத்துறையும் ஏதேனும் ஒரு துறையைக் கொண்டு புனையப்பட்டதாக அமைக்கப்படுவது தமிழ் வண்ணம். ஆயின் இந்த நூலில் அகப்பொருளுக்குப் பதிலாக சகஜி மன்னனின் காதல், வீரம், கொடை ஆகிய புறப் பொருளைக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது. இதில் ஒவ்வொரு வண்ணமும் 8 வரிகளைக் கொண்டது ஆனால் கொளுச் செய்யுள் காணப்படவில்லை. இதுவே வேறுபாடு.

தனதன தானன தாத்த தானன
தனதன தானன தாத்த தானன
தனதன தானன தாத்த தானன
தனதன தானன தாத்த தானன
தனதானன தனதானன
தனதானன தன தானன
- தானதான தனதன தானனா

சரதுடு நாயக தீப்தி பாஸுர
சகலதி சானம ஸீஸ்த நாசல
யுகலத கூலம் யோத்த ரீயத
நிகபஹு தானஜ கீர்த்தி ஜாலக
குஸுமாயுத ஸுஷமாபர
லகிமாவஹ ஸுகுமாரக
ஸமரத லாதிது ராக்ர ஹாகத
விசரத ராதிம ஹீக்ஷி தாவளி
சலபஸ மூஹத வாக்ர பாவக
ஸத்ருயநி ஜாதிம ஹாப்ர தாபக
சரணாகத பரணாதிக
நிபுணாதுல கருணாகர
சஹந்ருப மாகத மாத்ர கேரள
குதுபதி கோசல ராஷ்ட்ர நாயக
வரமது ராபதி மாத்ஸ்ய பூபதி
மலயம ஹீபதி கௌர்ஜக ராதிபி
ரவணீபதி நிகரைரதி
ருசிபாஸுர மணிபாபரி
- பாஸமான நிஜபத பீடிகா.

இத்தகைய சந்தங்களையும் தமிழ்யாப்பையும் தன்னகத்தே கொண்டுள்ள சுவடிகளைத் தமிழ்மொழித் தொடர்புடைய வடமொழிச் சுவடிகளாகக் கொள்ளலாம்.

## தமிழிலக்கிய ஒப்புமைச் சுவடிகள்

### பெரியபுராணம்

சேக்கிழார் பெருமானால் இயற்றப்பெற்ற பெரியபுராணம் தமிழகத்தின் வரலாறு, கலை, பண்பாடு, நாகரீகம் ஆகியவற்றின் கண்ணாடியாகத் திகழ்வதாகும். இதில் கூறப்படும் நாயன்மார்களின் வரலாற்றை சிவபத்த விலாஸம் என்னும் வடமொழி நூல் கூறுகிறது. சிவபக்த விலாஸம் என்ற பெயரில் இரண்டு நூல்கள் உள்ளன. அகத்தியர் அருளிய சிவ பக்த விலாஸம் என்றும், உபமன்யு அருளிய சிவபக்த விலாஸம் என்றும் அழைக்கப்படும். இந்த

இரண்டு நூல்களுமே அச்சிடப் பெற்றுள்ளன. இந்த நூல் பற்றிய செய்தி அனைவரும் அறிந்தவைதான். இருப்பினும் இவ்விரண்டையுமன்றி நாயன்மார்களின் வரலாற்றினைச் சுருக்கமாகக் கொண்டுள்ள மற்றொரு சுவடி சிவரஹஸ்யம் என்னும் நூலாகும். இது 9வது அம்சத்தில் 18 அத்தியாயத்தில் சுந்தர மூர்த்தி ஸ்வாமிகளின் வரலாற்றை, தடுத்தாட் கொண்ட புராணந் தொடங்கி விளங்குகிறது. மேலும் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகையில் கூறப்பட்டுள்ளவாறே நாயன்மார்களின் வரலாறு கூறப்பட்டுள்ள செயதி பலரும் அறியாததாகும். காரணம் இதுவரை அச்சாகாமல் காகிதச் சுவடியாகவே இந்த நூல் இருந்து வருகிறது.

இச்சுவடியை அச்சிடும் பணியை எங்கள் நூலக நிர்வாகம் மேற்கொண்டுள்ளது. பெரியபுராண ஆய்வுக்கு இது மிகவும் பயன்தரும் என்பதை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஆக பெரியபுராணத்திற்குரிய ஒப்புமைச் சுவடிகள் இந்த நூலகத்தில் உள்ளன.

## திருவாய்மொழி

நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழி ஆயிரம் பாசுரங்களைக் கொண்டதாகும். இந்த ஆயிரத்தையும் நூறு பதிகங்களாகத் தொகுத்து உள்ளனர். இந்த நூறு பதிகங்களுக்கும் 100 சுலோகங்களாக இயற்றப்பெற்றுள்ள சுவடி த்ரமிடோப நிஷத் தாத்பர்ய ரத்நாவளி என்னும் சுவடியாகும். இது இளயவல்லி ஸ்ரீநிவாஸாச்சாரியார் அவர்கள் அன்பளிப்பாகக் கொடுத்துள்ள சுவடியாகும் ( எண்.3200/57 ). இச்சுவடி அச்சாகிவிட்டது.

## பிறமொழி எழுத்துக்களில் தமிழ்ச்சுவடிகள்

மராட்டிய மன்னர்களின் காலத்தில் தஞ்சை அரண்மனையில் இசை, நாட்டியக் குழு பணியாற்றி வந்தது. இக்குழுவில் பணியாற்றியவர்களும், பங்குகொண்ட கலைஞர்களும் தெலுங்கு மொழி பேசிய தெலுங்கர்கள். இவர்களுக்குத் தமிழ் மொழியில் எழுதப் படிக்கத் தெரியாது.

இதனால் தமிழ் மொழி நாடகங்களை நடிக்க வேண்டுமாயின் தங்களது வசதிக்கேற்ப கிரந்தம், தேவநாகரி அல்லது தெலுங்கு மொழி எழுத்துக்களில் தமிழை எழுதிக் கொண்டு பயன்படுத்தி வந்துள்ளனர். இச்சுவடிகள் நாடகத்தின் பகுதியாகவோ, அல்லது முழுமையுமாகவோ உள்ளன. இத்தகைய தமிழ் மொழி நாடகங்களும், தமிழிசைப் பாடல்களுள் வேற்றுமொழி எழுத்துக்களில் எழுதப்பெற்ற தமிழ் மொழிச் சுவடிகளாகும். சுவடியை மேலெழுந்தபடி பார்க்கும்போது வேற்று மொழியாகக் காணப்பட்டாலும், அவற்றைப் படிக்கும்போதுதான் அதன் மொழி தெரியவரும். இந்த வகையில், கீழே காணும் தமிழ் மொழிச் சுவடிகள் பிற மொழி வரி வடிவத்தில் காணப்படுபவைகளாகும்.

1. விஷ்ணு சாகராஜ விலாசம் ( B. 13996 ( d ) )
2. மோஹினி விலாஸகுறவஞ்சி ( T.S. 1115 )
3. சங்கர நாராயண விலாஸம், நாடகம்
4. வாசுதேவ கவி பதங்கள் ( தமிழிசைப் பாடல்களும் நாட்டிய பதங்களும் - வெளிவந்துள்ளன )
5. ராமபாரதி பதங்கள்
6. பாவப்ராகாசிகா ( தமிழ்-அறுசீர்விருத்தத்தில் N.N.B. 14673 )
7. தியாகராஜர் குறவஞ்சி ( N.N.B. 14673 )
8. சரபேந்திரர் வைத்தியம் ( 766 அந்தாதிப் பாடல்கள் - N.N.B. 14673 )

ஆகியவற்றை இங்கு குறிப்பிடலாம். இவையனைத்துமே வடமொழிப் பிரிவில் பாதுகாக்கப்பட்டு வருவனவாகும். இவற்றை பதிப்பிக்க தமிழ் மொழி அறிவுடன் பிற மொழிகளில் நல்ல பயிற்சியும் தேவை.

## வடமொழி நூலுக்குரிய தமிழுரைச் சுவடிகள்:

இப்பிரிவில் காணப்படும் சிற்பம், புராணம், வைத்தியம், ஜோதிடம், இலக்கியம், நிகண்டு போன்ற

பிரிவுகளில் தமிழுரையுடன் கூடிய ஓலைச் சுவடிகள் பல உண்டு. இவை வடமொழியறியாத தமிழ் மக்கள் அறிந்து கொள்ள உதவியாக இருக்கும். இவ்வுரை நூல்கள் மணிப்ரவாள நடையில் (தமிழும்-வடசொல்லுமாக) எழுதப் பெற்றுள்ளன. சிறப்பச் சுவடிகளில் பல இத்தகைய மணிப்ரவாள நடையுடன் இந்த நூலகத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன.

இவற்றைத் தவிர தமிழகக்கலை, கலாச்சாரத் தொடர்புடைய பல அரிய சுவடிகளைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது சரஸ்வதி மஹால் நூலகத்தின் வடமொழிப் பிரிவு எனில் மிகையில்லை.

*****

# 19. தமிழக வரலாறு மற்றும் கலைத் தொடர்புடைய வடமொழிச் சுவடிகள்

பண்டிதர் எஸ். ராஜலட்சுமி

தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்திலுள்ள வடமொழிச் சுவடிகள் தஞ்சை நாயக்க மன்னர்களின் ஆட்சிக்காலத்திலும், தஞ்சை மராட்டிய மன்னர்களின் ஆட்சிக்காலத்திலும் இயற்றப்பெற்ற மற்றும் சேகரிக்கப்பெற்றவைகளே ஆகும். இவற்றை இயற்றிய புலவர்களில் பலர் தஞ்சைத் தரணியில் பிறந்து வாழ்ந்தவர்கள். இவர்கள் தமிழகத்தில் வாழ்ந்தமையால் இவர்களது படைப்புக்களில் தமிழகத்தினுடைய கலை, கலாச்சாரங்களின் தாக்கங்கள் காணப்படுகின்றன. தமிழகத்தில் பிறந்த வடமொழிப் புலவர்களில் நீலகண்ட தீக்ஷிதர், அப்பைய தீக்ஷிதர், சொக்கநாதமகி, வீழிநாதன், சதாசிவ பிரும்மேந்திரர், ஸ்ரீதரவெங்கடேசர் போன்ற புலவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்கள் தமிழகத்தில் - அதுவும் தஞ்சை மாவட்டத்திலேயே பிறந்து வளர்ந்து, வடமொழி இலக்கியங்களை வளப்படுத்தியவர்கள் எனில் மிகையில்லை.

இந்தியாவிலேயே அதிக அளவில் வடமொழி இலக்கணம் பற்றிய நூல்கள் குறிப்பாக பதஞ்சலி இயற்றிய மஹாபாஷ்யம் சிதம்பரத்திலும் பாலமனோரமாவை இயற்றிய வைத்தியநாத தீக்ஷிதர் கும்பகோணத்தை அடுத்த சுவாமிமலையிலும் வாழ்ந்தவர்கள். இவர்கள் இயற்றிய நூல்களை அடிப்படையாகக் கொண்டுதான் வடமொழி இலக்கணங்கள் வளம்பெற்றன.

இவை போன்றே, தமிழ் மண்ணில் பிறந்த பல சம்ஸ்கிருத நூல்கள் சரஸ்வதி மகாலில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவைகளில் இலக்கியம், வரலாறு, மருத்துவம் ஆகிய துறைகளில் காணப்படும் தமிழகத் தொடர்புடைய செய்திகளை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## தஞ்சை மராட்டிய மன்னர்களின் போர்கள்

தஞ்சை மராட்டியர்கள் காலத்தில் நடைபெற்ற போர்கள் பற்றிய பல குறிப்புகள் சரஸ்வதி மகால் நூலகத்தில் உள்ள சம்ஸ்கிருதச் சுவடிகளில் காணப்படுகின்றன. குறிப்பாக இரண்டாம் சகஜியின் ( 1684-1719 ) காலத்திலும் அவரது தம்பி முதலாம் சரபோஜியின் ( 1711-1728 ) காலத்திலும் நடைபெற்ற போர்கள் பற்றிய விளக்கமான செய்திகள் காணப்படுகின்றன. ஆயினும் இத்தகைய போர்களைப் பற்றிய செய்திகள் அச்சில் வெளிவந்துள்ள தமிழக வரலாற்றுப் போர்களின் வரிசையில் காணப்பெறவில்லை.

குறிப்பாக மதுரையை அரசாண்ட ராணி மங்கம்மாவிற்கும், ராமநாதபுரத்தை அரசாட்சி செய்த கிழவன் சேதுபதி என்று சொல்லப்படுகின்ற ரகுநாத சேதுபதிக்கும் நடைபெற்ற போரைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இப் போருக்கு தஞ்சை மன்னன் இரண்டாம் சாஹாஜி தனது படைகளை அனுப்பி உதவி செய்து வெற்றிபெற்ற செய்திகளை சாஹேந்திர விலாசத்தின் ஆறாவது காண்டத்தின் 47-55 வரை உள்ள சுலோகங்கள் வாயிலாக அறியமுடிகிறது. இச்செய்தி 'காந்திமதி பரிணயம்' என்ற நாடகத்திலும் காணப்படுகிறது. இதற்கு மகிழ்ந்த கிழவன் சேதுபதி தஞ்சை மன்னன் சஹாஜியை ராமநாதபுரத்திற்கு வருமாறு அழைத்ததாகவும் அதனை ஏற்றுக்கொண்ட தஞ்சை மன்னன் சகஜி தனது தாய் தீபாம்பாளுடன் இராமநாதபுரம் சென்றதாகவும், அங்கு சகஜி மன்னர் தன்னுடைய தாயாருக்கு சொர்ணதுலாபாரம் கொடுத்தார். அந்த துலாபாரத்தில் கிடைத்த பொருளைக் கொண்டு பெண்களின் வளர்ச்சிப் பணிக்கும் மற்றும் அவர்களுடைய வாழ்க்கைக்கும் தீபாம்பா செலவிட்டுள்ளார். மேலும் அரண்மனையில் பணியாற்றிக் கொண்டிருந்த இசைக்கலைஞர்களுக்கும் இப் பொருளைக் கொண்டு உதவிகள் செய்ததாகவும் தீபாம்பா மகாத்மியம் என்ற குறுஞ்சுவடியால் அறியமுடிகிறது. மேலும் இப்போர் 1700க்கும் 1702க்கும் இடையில் நடைபெற்ற போராகக் கருதலாம். தனக்கு உரிய நேரத்தில் உதவி செய்த சகஜி மன்னனுக்கு கிழவன் சேதுபதி, சேதுநாட்டின் வடகிழக்குப் பகுதியில் உள்ள பாம்பாற்றுக்கு வடக்கேயும், பட்டுக்கோட்டைக்குத் தெற்கேயும் உள்ள

நிலப்பகுதியை அளித்துள்ளான், என்றும் அறியலாகும். இப்போர் பற்றிய ஓவியக்காட்சிகள் இராமநாதபுரம் அரண்மனையான இராமலிங்க விலாசத்தில் காணப்பெறும் ஓவியத் தொகுதியில் சித்தரிக்கப்பெற்று இருப்பதை இங்கு ஒப்பிட்டு நோக்கலாம். இந்த ஓவியத்திற்குக் கீழே காணப்படும் செய்திகளாவன:-

"தஞ்சாவூர் சரபோஜிராஜாவும், அவருடை தம்பி துக்கோஜியும், அவருட மருமகனும் சண்டையிட ஏரணம் என்கிற பீரங்கி கொடுத்தது. முத்து விஜயரகுநாத சேதுபதிகள் சிம்பாஷகிரா போட்ட திருநீலகண்டன்மேல் எழுந்தருளி அவருட மருமகன் சூரியநாராயண தேவரும் சகல சதுரங்க சேனையுடன் சன்மயத்தராய் சண்டை தொடுத்தது". இந்த ஓவியத்தின் மூலமாய் மேலும் பல செய்திகளை அறிய முடிகிறது. செஞ்சியை அரசாண்டவனும் இவனது சகோதரனுமான ராஜாராமன் ஆட்சி செய்து கொண்டிருந்த காலத்தில் தஞ்சை மன்னன் இரண்டாம் சகஜி தனது படையை அனுப்பி சுல்பர்கானின் தலைமையில் போரிட வந்த மொகலாயப் படையை எதிர்த்து வெற்றி பெற்றார். இந்தப் போர் பற்றிய செய்திகளை இம்மன்னன் காலத்தில் தோன்றிய பல இலக்கியங்களிலும், நாடகங்களிலும் காணலாம்.

கிழவன் சேதுபதிக்குப்பின் இராமநாதபுரம் அரசு கட்டிலுக்குப் போட்டி ஏற்பட்டது. இப் போட்டி கட்டையத் தேவருக்கும், பவானிசங்கரத் தேவருக்கும் நடந்த போட்டியாகும். இதற்காகத் தஞ்சையின் அரசுப்படையை உதவிக்குக் கேட்டுக்கொள்ள முதலில் சரபோஜி தனது படைகளைத் தஞ்சையின் எல்லையிலிருந்த அறந்தாங்கிக்கு அனுப்பினான் என்றும், அது சமயம் அறந்தாங்கிக் கோட்டை மராட்டிய ஆட்சிக்கு உட்பட்டு இருக்கவில்லை என்றும் இதனை மீட்க முதலாம் சரபோஜி கடும் போர் புரிந்ததாகவும் சரபோஜி சரித்திரம் என்னும் குறுநூலில் காணப்படுகிறது. இப்போரில் யானைப்படைகளை ஏவி அறந்தாங்கிக் கோட்டை தகர்க்கப்பட்டதாகவும், அதில் தஞ்சைப்படை வெற்றிபெற்று முன் போலவே இழந்த நிலப்பகுதியைச் சேதுபதியிடமிருந்து மீட்டதாகவும் இச்சுவடியால் அறியமுடிகிறது. எனவே தமிழகத்தில் கி.பி. 17, 18ஆம் நூற்றாண்டுகளில் நடைபெற்ற போர்கள் பற்றிய செய்திகளை இந்நூலகத்தில் காணப்படும் சம்ஸ்கிருதச் சுவடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

## தஞ்சை அரண்மனையைப் பற்றிய செய்திகள்

தஞ்சை அரண்மனையில் இன்று காணப்படுகின்ற பல பகுதிகளுக்குப் பெயர்கள் பல இடப்பட்டு இருந்தன. அவற்றில் கிருஷ்ண விலாசம், லட்சுமி விலாசம் ராமசௌதம் போன்ற இடங்களைப் பற்றிய செய்திகள் மராட்டிய மன்னர்களின் காலத்தில் எழுந்த இலக்கியங்களில் காணப்படுகின்றன. 'லட்சுமி விலாசம்' என்பது இன்று காணப்படும் மராட்டிய தர்பார்ஹால் என்ற செய்தியை சாஹேந்திரவிலாசம் மூன்றாவது காண்டத்தின் ஐம்பத்தொன்பதில் இருந்து அறுபத்திநான்கு வரை உள்ள ஸ்லோகங்கள் நமக்கு விளக்குகின்றன. மேலும் இதே கருத்தை 'போசலவம்சாவளிசம்பூ' என்ற நூலும் கூறுகிறது. சாஹித்ய ரத்னாகரம் என்னும் நூலிலும் லஷ்மி விலாசத்தை இந்திர சபைக்கு நிகரானதாகக் கூறுகிறது.

கிருஷ்ண விலாசம் பற்றிய குறிப்பு 'சரபராஜவிலாசம்' என்ற நூலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதே கிருஷ்ண விலாசத்தில் இரண்டாம் சரபோஜி காலமானபோது மக்கள் அஞ்சலி செலுத்துவதற்காக அவருடைய உடல் வைக்கப் பட்டிருந்ததாக மோடிச் செய்திகளும் வலியுறுத்துகின்றன. கிருஷ்ணவிலாசம் எது என்பதில் அறிஞர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. 'ராமஸௌதா' என்ற இடம் பற்றிய குறிப்பு 'சங்கீத சுதா' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது. இதுபற்றி குடவாயில் பாலசுப்ரமணியன் அவர்கள் 'தஞ்சாவூர்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும் தஞ்சை அரண்மனையில் காணப்படும் கட்டடங்களின் ஒவ்வொரு பகுதிகளிலும் குறிப்பிட்ட சில அலுவல்களே நடை பெற்றிருந்தன என்பதையும் நன்கு அறிய முடிகிறது. குறிப்பாக 'சரபராஜ விலாசம்' என்னும் சுவடியில் அரண்மனையில் முதல் சுற்றுப் பிரகாரத்தில் வேற்று நாட்டு அரசர்களால் அனுப்பப்பட்ட தூதர்கள் பல கடிதங்களைத் தங்கள் கைகளில் வைத்துக்கொண்டு மன்னனை நேரில் கண்டு சமர்ப்பிக்கக் காத்துக்கொண்டு இருக்கின்றனர் என்றும், இரண்டாம் சுற்றுப் பிரகாரத்தில் சற்றே உயரமான, பொன் மயமான இருக்கைகளில் வேற்றுநாட்டு மன்னர்கள் நவரத்தினக் கற்கள் பதித்த பலவகை அணிகளையும் அணிந்து கொண்டு மன்னர் சரபோஜியின் தரிசனத்திற்காகக் காத்திருந்தனர் என்றும், மூன்றாம் பிரகாரத்தில் வரவு

செலவுக் கணக்குகளை எழுதும் கணக்காயர்களும், காவலர்களும், அரசருக்கு மிகவும் நெருக்கமானவர்களும், வக்கீல்களும், அரசாங்க அலுவலர்களும் நிறைந்து இருந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளது.

## தமிழ்க் கலாச்சாரத் தொடர்புடைய செய்திகள்

தமிழகத்தில் உள்ள கிராமங்களில் மக்களின் பொழுதுபோக்கிற்காக நடத்தும் ஆட்டுக்கிடா சண்டை, சேவற் சண்டை, யானைப்போர், மல்யுத்தம் போன்ற கிராமீய விளையாட்டுக்களையும், பூம்பூம் மாட்டுக்காரன், குடுகுடுப்பாண்டி, கழைக்கூத்து, சூதாட்டம், சதுரங்கம், பாம்புப்பிடாரன், செப்பிடுவித்தை போன்ற பல்வேறுவிதமான மக்களின் கலாச்சாரங்களைப் பற்றிய செய்திகளை 'அனங்கவிஜயபாணம்' மற்றும் சரபராஜவிலாசம் போன்ற வடமொழிச் சுவடிகளில் காணமுடியும்., வயல்களில் நாற்று நடும்போதும், களை எடுக்கும்போதும், அறுவடையின்போதும், தமிழகத்துப் பெண்மணிகள் இனிமையாகப் பாடும் தெம்மாங்குப் பாடல்கள் பற்றிய செய்தகளையும் பரண்கள் மேலிருந்து பயிர்களைப் பாதுகாக்கும் மகளிர்கள் பற்றிய செய்திகளையும் 'சரபராஜவிலாசம்' என்னும் நூலில் சுட்டிக் காட்டப்படுகின்றது.

பரதார்ணவம், மதங்கபரதம், அர்ஜுனபரதம், ஆதிபரதம், ஹஸ்தலட்சணம், நர்தனநிர்ணயம், சங்கீதசிந்தாமணி, சங்கீத மகரந்தம், ராகரத்னாகரம், தாளதீபிகா, தாள இலட்சணம், கீதம், பதம் முதலிய நாட்டிய, சங்கீத சம்மந்தமான பல செய்திகள் தாங்கிய சுவடிகள் வடமொழிப் பிரிவில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

தஞ்சை மாவட்டத்திலுள்ள ஆலயங்களில் வஸந்தோத்சவம், பிரும்மோத்சவம் என்ற இரண்டு திருவிழாக்கள் நடைபெறுவது வழக்கம். இந்தத் திருவிழாக்களில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள பல ஆலயங்களில் நாடகங்கள் நடத்தப்பட்டு வந்துள்ளன. இந்த நாடகங்களில் பல சம்ஸ்கிருத நாடகங்களும் மக்கள் முன்னிலையில் நடிக்கப்பட்டு வந்ததற்கான சான்றுகள் பல உள்ளன. குறிப்பாக பாரிஜாத நாடகம், ரகுநாத விலாசம், வித்யாபரிணயம், காந்திமதி பரிணயம், ராகவாப்யுதயம், நீலாபரிணயம், அனங்கவிஜயபாணம்போன்ற நாடகங்களைக் கூறலாம். மேலும் கோவில்களில் மட்டும் அல்லாது

தமிழகத்தின் மிகப்பெரும் விழாவாகக் கொண்டாடப்படும் மகாமகத்திலும் இத்தகைய வடமொழி நாடகங்கள் நடைபெற்றுள்ளன என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. அதிபுதபஞ்சரம் என்னும் நாடகமும் சுபத்ராபரிணயம் என்னும் நாடகமும் மகாமகத்தில் நடைபெற்றுள்ள செய்தியை இச்சுவடிகளின் வாயிலாக அறியமுடிகிறது.

இவற்றைத் தவிர தஞ்சை அரண்மனையிலேயே நடைபெற்ற விநாயக சதுர்த்தி, கோகுலாஷ்டமி போன்ற விழாக்கள் இருபது நாட்களுக்கு மேலாக நடந்துள்ளன. இத்தகைய விழாக்களிலும் பல நாடகங்கள் நடைபெற்று இருக்கின்றன. அவற்றில் இசை நாட்டிய நாடகங்களும், பிற நாடகங்களும் நடிக்கப்பெற்றுள்ளன. இத்தகைய இசை நாட்டிய நாடகங்களில் சந்திரசேகர விலாசம், மோஹினி விலாச குறவஞ்சி, இந்துமதி பரிணயம் போன்ற வடமொழி நாடகங்களைக் குறிப்பிடலாம்.

## மருத்துவம்

இப்பிரிவில் காணப்படும் மருத்துவச் சுவடிகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். மக்களுக்கு உரிய வைத்தியம் என்றும், விலங்குகளுக்கு உரிய வைத்தியம் என்றும் இரண்டு வகையாகப் பிரிக்க முடிகிறது. ஆயுர்வேத முறையில் மக்களுக்குரிய வைத்தியச்சுவடிகளில் இரஸவாதமுறைகளும், தைல லேகிய வகைகளுடன் கூறப்பட்டுள்ளன. மிருக வைத்தியங்களில் கஜ சாஸ்திரம், அஸ்வ சாஸ்திரம், போன்ற சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இதில் மிருகங்களின் நோய்களுக்கான அறிகுறிகள், அதனை நீக்குதற்குரிய பச்சிலைகள், மருந்துப் பொருட்கள் அவற்றின் அளவு முறைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. நோயுற்ற விலங்குகளை அறியும் பொருட்டு வண்ண வண்ண ஓவியமாகத் தீட்டப்பெற்று உரிய குறிப்புக்களுடன் காணப்படுகின்ற சுவடிகளும் இங்குள்ளன.

ஆக, தமிழகத்தின் வரலாறு, கலை, மருத்துவம் போன்ற சுவடிகளைப் பற்றிய செய்திகளே இங்கு விளக்கப்பட்டுள்ளன. இதுபோன்று ஏனைய பிரிவுகளையும் ஆராயும்போது பல்வேறு தமிழகத் தொடர்புடைய செய்திகள் நமக்குக் கிடைக்கின்றன.

*****

# 20. சுவடிகளில் காணும் தாய்சேய் நோய்களும் மருத்துவமும்

மருத்துவர் சு. செல்வரங்கம்

## முன்னுரை

ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் பேணி வளர்த்த பெருமைக்குரியது தமிழகம். அக் கலைச்செல்வங்கள் யாவும் காலந்தோறும், ஏடுகளில் எழுதி வைக்கப்பெற்றுக் காலங்காலமாக மக்களிடையே வழங்கி வருகின்றது. மேலைநாட்டுத் தாக்கத்தால் வாழ்க்கை முறையில் ஏற்பட்ட மாற்றங்கள் காரணமாக இக்கலைகளிலிருந்து இடையில் சில காலம் நாம் விலகிப் போக நேரிட்டது. எனினும் நமது தனித் தன்மையையும், பெருமையையும் உலக அரங்கில் நிலைக்கச் செய்யக்கூடிய ஆற்றல் வாய்ந்தவை இக்கலைகள் என்பதை உணர்ந்து இன்று நம் பழம்பெரும் கலைகளை நோக்கித் தமிழரின் பார்வை திரும்பி உள்ளது வரவேற்கத் தக்கது. குறிப்பாகத் தமிழர்தம் பெருமை பேசும் சித்தமருத்துவம் இச்சிறப்பில் தலைமை பெறுகின்றது.

## மருத்துவச் சுவடிப் பதிப்புகள்

பண்டைய சுவடிகள் இன்றைய அச்சு வடிவில் நூல்களாகப் பதிப்பிப்பதன் வழிச் சிறப்புப் பெற்றன. தமிழ்ச் சுவடிகளுள் பெரும்பாலானவை மருத்துவச் சுவடிகளே. அம் மருத்துவச் சுவடிகளில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற மருத்துவ முறையோ, நமது பாரம்பரியமிக்க சித்தமருத்துவ முறையாகும். சித்தர்களால் போற்றி வளர்க்கப்பட்ட இம் மருத்துவமுறை இடைக்காலத்தில் மக்களிடையே வழக்கு ஒழிந்து ஏடுகளிலும், கிராமப்புற மக்களின் மனங்களிலும் மட்டுமே வாழ்ந்து வர நேரிட்டது. தற்போது பிற மருத்துவ முறைகளால் கைவிடப்பெற்ற பிற மருத்துவ முறைகளுக்குச்

சவால் விடக்கூடிய - பல நோய்களைப் போக்கும் தனித்தன்மையும், பின்விளைவுகள் இன்மையும், மரணத்தைத் தள்ளிப் போடக்கூடிய மருத்துவமும் முதலான சிறப்புகளால் மீண்டும் மக்களிடையே செல்வாக்கைப் பெறத் தொடங்கியுள்ளது. இந்நிலையில் சுவர்களுக்குள் புதைந்துகிடக்கும் இம் மருத்துவ நூல்களை எல்லாம் அச்சேற்றி வெளிக் கொண்டுவருவதன் மூலம், உலகில் நோயற்ற வாழ்வை நிலைநிறுத்த முடியும் என்று உறுதியாகக் கூறலாம்.

மருத்துவச் சுவடிப் பதிப்புகள் பெருக வேண்டியது காலத்தின் தேவை; உலகத்தையே பயமுறுத்திக் கொண்டு இருக்கும் AIDS முதலான நோய்களுக்கு, நமது பாரம்பரிய மருத்துமுறையில் முயற்சி மேற்கொள்ளப்பட்டு, இன்று ஓரளவு வெற்றியும் கிடைத்திருப்பது இம்மருத்துவத்தின் பெருமைக்குச் சான்று ஆகும்.

## மனித இனமும் நோய்களும்

இவ்வுலகில் மனிதர்க்குத் தோன்றக்கூடிய நோய்களாக 4444 வகையினைச் சித்த மருத்துவம் எடுத்துரைக்கின்றது. வாத, பித்த, கபம் என்ற மூன்று குற்றங்களின் அடிப்படையிலேயே மனித உடற்கூற்றுத் தன்மைக்கேற்ப இந்நோய்கள் வகைப்படுத்தப்படுகின்றன. எனவே இவற்றை,

1. முக்குற்ற அடிப்படை - வாத, பித்த, கப நோய்கள்
2. உறுப்பு அடிப்படை - தலை, கழுத்து, மார்பு, கண், செவி
3. மனிதப் பிரிவு அடிப்படை - ஆடவர், மகளிர், குழவி நோய்கள்
4. தன்மை அடிப்படை - எளிய நோய்கள், கொடிய நோய்கள்

என்றவாறு வகைப்படுத்திக்காண வாய்ப்புண்டு. எனினும் மனிதரின் பிரிவுகளான ஆடவர், பெண்டிர், குழந்தைகள் என்ற நோக்கில் காணும்போது நோயின் தன்மைகளை நன்கு உணர்த்த முடியும்.

## மகளிரும் குழந்தைகளும்

மனித இனத்தை உடற்கூறு அடிப்படையில் ஆண், பெண் என இரண்டாகப் பிரித்துக் காட்டுகிறது. இனப்பெருக்கத்திற்கு ஆதாரமாக விளங்குபவள் பெண். எனவே, கருத்தாங்கி, பிள்ளளை பெறுதலுக்கு ஏற்றவாறு உடலுறுப்புகள் அமையப்பெற்று அப்பெண்ணின் உடலமைப்பு ஆணிலிருந்து வேறுபட்டு அமைகிறது. அந்த வேறுபாட்டின் அடிப்படையில் தோன்றக்கூடிய நோய்கள் பெண்களுக்கே உரிய நோய்களாக விளங்குகின்றன. அவ்வாறே குழந்தை நிலையில் உடல் உறுப்புகள் யாவும் முழுமையான வளர்ச்சி பெறாததோடு மிகவும் மென்மையான இயல்பைப் பெற்றிருத்தலால், இக்குழந்தைப் பருவத்தில் தோன்றக்கூடிய நோய்கள், பால் சுரி பருவத்திற்கு முற்பட்டனவாக அமைந்து வளர்ந்த மனிதரிடமிருந்து வேறுபட்டுக் குழந்தைகளுக்கே உரிய நோய்களாக அமைகின்றன. மேலும் கருத்தாங்கும் நிலையிலும், மகப்பேறுக்குப் பின்னும் பெண்ணுக்குத் தோன்றும் நோய்கள், தாய்சேய் இருவரையுமே பாதிக்கக்கூடியதாக அமைந்துவிடும். எனவே, பெண்களுக்கான நோய்களையும், குழந்தைகளுக்கான நோய்களையும் ஒன்றிணைத்துப் பார்ப்பது தாய் சேய் நலத்தில் மிகுந்த பயன் விளைவிக்கும்.

## மகளிர் நோய்கள்

பெண்ணின் வளர்ச்சி நிலையின் முழுமை நிலை - பூப்பு அடைதல்.

குழந்தை பெறுவதற்கு ஏற்ப, பெண்ணின் உறுப்புகள் முழுமையான வளர்ச்சியைப் பெற்றுவிட்டதை அறிவிக்கும் அடையாளமே பூப்பு அடைதல் ஆகும். கருப்பையிலிருந்து மாதமொருமுறை 3 முதல் 5 நாள் வரை குருதிக் கழிவு வெளியேறும் நிகழ்ச்சியே இப்பூப்பின் செயல்பாடாகும்.

கருவுற்ற காலம், குழந்தைகட்குப் பால் கொடுக்கும் காலம் ஆகிய நாட்கள் தவிர, தொடர்ந்து ஏறக்குறைய 45 வயதுவரை மாதந்தோறும் இந்நிகழ்வு தொடரும். பெண்ணின் தனித்தன்மை, உறுப்பு அமைதி ஆகியன பூப்படைதல், கருத்தாங்குதல் என்ற இரண்டையும் மையமிட்டு அமைவதால்

அவர்கட்கு வரக்கூடிய நோய்களும் இவற்றின் சார்பாகவே அமையும். அவற்றை,

பூப்புத் தொடர்பான நோய்கள்
உறுப்புத் தொடர்பான நோய்கள்
மகப்பேறு தொடர்பான நோய்கள்

என்ற வகையில் பிரிக்கலாம்.

பூப்பு நிகழாமை, பூப்புக் காலத்தில் உண்டாகும் வலி, வாயுக்கட்டு, வெள்ளைபடுதல், பெரும்பாடு முதலியன பூப்புத் தொடர்பான நோய்கள்.

கருவாய் நோய்கள், மார்பக நோய்கள் முதலியன உறுப்புத் தொடர்பானவை.

மலட்டுத் தன்மை, கருத்தாங்கும் நாட்களில் தோன்றுவன ஆகியவை மகப்பேற்றுத் தொடர்பான நோய்களாகும்.

இவற்றை விரிப்பின் பெருகும் என்பதால் ஒருசில நோய்களுக்கு மருத்துவச்சுவடிப் பதிப்புகள் காட்டும் தீர்வுகள் மட்டும் இங்கே ஆராயப் பெறுகின்றன.

## 1. பூப்பு நிகழாமை

குறித்த வயதுக்கு மேலும் பூப்பு ஏற்படாத நிலை, கருப்பை தகுந்த வளர்ச்சி அடையாமை, இரத்தத்தில் பரவி நிற்கும் சுரப்பு நீர்கள் குறைபாடு, தசை அடைப்பு ஆகியன காரணங்களாக அமையலாம். இத்தகைய நிலையில் பூப்படையச் செய்வதற்கு என்று சில எளிய மருந்துகளைச் சித்த மருத்துவச் சுவடிப்பதிப்புகள் குறிப்பிடுகின்றன.

(1) கொள்ளை வேகவைத்து அந்நீரில் பெருங்காயத்தை உரைத்து உள்ளுக்குக் கொடுக்க வேண்டும்.

(2) மாவிலங்கப் பட்டை, பூண்டு, மிளகு, இவற்றைச் சம அளவு எடுத்து அரைத்து மூன்று நாள் உள்ளுக்குக் கொடுக்க வேண்டும்.

(3) கலியாண பூசணி விதைப்பருப்பு 10 எடுத்து பனைவெல்லம் கூட்டி 10 மாத்திரைகளாக உருட்டி அவற்றை 5 நாட்கள் இருவேளை உள்ளுக்குக் கொடுக்க வேண்டும்.

மாதவிடாய் வராதவருக்கு மருந்து:
பார்த்து வேலிப் பருத்திக் கொழுந்தில்
மார்த்து நாலைந்து வைமிளகைந்து நால்
சேர்த்துக் கட்டித் திரட்டி யரைத்துடன்
நேர்த்து நாளே ழிருபோது முண்டிடே
உண்டு கொர்ப்பத்தி லுள்ளது வாயுவாங்
கண்டு வோடிக் கழண்டு நீருவிழும்
யுண்டு வுப்புப் புளிபுகை தள்ளிவிட்
டண்டு வென்னீரோ டன்னமு மூட்டிடே

(1) சூதம் வெளிப்படாத பெண்ணுக்கு உத்தாமாணியிலை 20 மிளகு 20 கூட்டி அரைத்து ஏழுநாள் இருவேளை கொடுத்து பத்தியம் காக்க வேண்டும். சூதகம் வெளியாகும்.

(2) மஞ்சளைக் குடிநீராகக் காய்ச்சி அருந்த வேண்டும்.[2]

(3) சிறுகுறிஞ்சா இலையை ஆவின்பாலில் கூட்டி 3 நாள் இருவேளை உண்ண வேண்டும்.[3]

(4) எருக்கன் இலை, வேளை, நொச்சி, புளி, சவரியிலை இவற்றைக் கூட்டிக் குடிநீராகக் காய்ச்சிக் கொள்ள வேண்டும். வெள்ளாட்டுப்பால், சிற்றாமணக்கெண்ணெய் இரண்டையும் அதனோடு கலந்து காய்ச்சிக் கொள்ள வேண்டும். இதனை உடலில் பூசி வர வேண்டும்.[4]

அ. சூதகவலி

மாதவிலக்கு காலத்தில் கருப்பபையினுள் அதிக இரத்த ஓட்டம் பாய்வது இயல்பு. இதில் சிலரது உடல் இயல்புக்கு பொருந்தாத நிலையில் அதிக வலி ஏற்பட வாய்ப்புண்டு. இதுவே சூதக வலி (Dysmenorrhow) எனப்படும். இதற்குப் பொதுவாக ரோஜா மொக்கு, சரக்கொன்றை, புளி, சுக்கு, சோம்பு முதலியவ்றைப் பயன்படுத்துவது வழக்கு. மேலும், கலிங்காதி எண்ணெய், கழற்சி எண்ணெய், ஆமணக்கு எண்ணெய், பேதி உப்பு, பட்டுக்கருப்பு, சித்திரமூல வேர்ப்பட்டை, கருஞ்சீரகம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதும் உண்டு.

## சுவடிப்பதிப்பின் வாயிலாக அறியவரும் எளிய மருந்து

துத்தி இலை, பூண்டு, மிளகு, வசம்பு ஆகியவற்றை வகைக்கு 10 கிராம் எடுத்து அரைத்து மாத விலக்கின் போது மூன்று நாள் வெறும் வயிற்றில் உட்கொள்ள வேண்டும். இவ்வாறு மூன்றுமாதம் உட்கொள்ள வலி நீங்கும்.

கெர்ப்பசூலை விளக்கம்:

உந்திக்கீ ழுதிரம்புக்கு மூலமும் போன்றிருக்குங்
கர்துடன் விருவிருத்துக் கானுடல் நடுங்கிவேர்க்கு
மர்தமா யுடனும்வற்றி மறுகியே சத்திதோன்று
மிர்தமெய்க் குணங்கள் கண்டா ளதுகெர்ப்பச்
சுரேணியென்றே[5]

## இ. பெரும்பாடு

மாதவிலக்கின்போது அதிக குருதிப்போக்கு பெரும்பாடு என்று அழைக்கப்படும். இதற்கான எளிய மருத்துவம்:

1. வாழைப்பூ வடகம்

2. அத்திப்பட்டை ஒரு பங்கும், கடுக்காய் பூ 1/4 பங்கு சேர்த்துப் பசும்பால் விட்டரைத்து காலை, மாலை மூன்று நாள் கொடுக்க நீங்கும்.

3. தென்னம்பாளை மட்டையோடு பரித்து பூக்களை உருவி பின் கல் உரலில் இட்டு கடப்பாரையில் இடித்து சாறு எடுக்க வேண்டும். இச்சாற்றை பசும்பாலில் கலக்கி மூன்று நாள் மூன்று வேளை கொடுத்துவர பெரும்பாடு நீங்கும்.

4. அலங்கொழுந்து மதினமுது மான பூனை யதின் வேரும்
கோல மாவாரை வேர்ப்பட்டைக் குணமாம் பசும்பால்தனிற் கொடுக்க
ஆலம் புகழும் பெரும்பாடு வற்றே விழுந்து மாறியிடும்
காலன் வந்து மிடுகானே கருது மருந்து மிதுவாமே[6]

### பொருள்

ஆலங்கொழுந்து+ஆலம்பால்+பூனைக்காலி வேர்+ஆவாணி வேர் பட்டை - இவற்றை கூட்டி அரைத்துப் பசும்பால் கலந்து உட்கொள்ளவும் பெரும்பாடு நீங்கிவிடும்.

### மலட்டு நோய்கள்

பெண்ணின் கருப்பை, கருத்தாங்கும் தகுதியற்ற நிலையே மலடு என்று குறிப்பிடுவர். இம்மலட்டுத் தன்மைக்கு ஆறு விதக் காரணங்களைத் திருவள்ளுவர் ஞானவெட்டியான் விளக்குகின்றது.

### பேறுகால நோய்கள்

பேறுகால நேரத்தில் மகப்பேற்றுக்கு முன்னும், பின்னும் வலிப்பு தோன்ற வாய்ப்புண்டு. இது சூல் வலிப்பு எனப்படும்.

### இதற்கான மருந்துகள்

பேதி உப்பு, ஐங்கூட்டு நெய் வகைக்கு ½ படி சேர்த்து வெள்ளுள்ளி, வசம்பு, பெருங்காயம், திரிகடுகு, ஓமம், கிராம்பு, சதகுப்பை, கடுகுரோகிணி, சித்திரமூலம் வகைக்கு ½ பலம் கூட்டி காடி விட்டு அரைத்துக் கொள்ள வேண்டும்.

இக்கலவையை மேற்படி நெய்யுடன் கூட்டி, காடி இரண்டு படி கலந்து எரித்து, மெழுகு பதத்தில் இறக்கிக்கொள்ள வேண்டும். இதனைக் காசு எடை அளவு உள்ளுக்குக் கொடுத்தும், மேலுக்கும் தடவி வர வலிப்பு நீங்கும்.

முசுறு முட்டை எண்ணெயும் இவ்வலிப்பை நீக்கும் தன்மை வாய்ந்தது.

தாய்ப்பாலில் கிராம்பைப் போட்டு கண்ணில் கலிக்கமாக இடுதலும் வழக்கில் உண்டு. அன்றியும் வீர மெழுகு, பஞ்சசூத மெழுகு மகா வீர மெழுகு, அண்ட தைலம், பட்டுக் கருப்பு, நிம்பாதி எண்ணெய் ஆகியனவும் அவ்வலிப்பைப் போக்குவதற்குரிய மருந்துகளாகச் சுட்டப்படுகின்றன.

## குழந்தை நோய்கள்

தாயின் வயிற்றில் கருவாகி, உருப்பெற்று, பத்து திங்கள் முழு வளர்ச்சி பெற்றுக் குழந்தை பிறக்கின்றது. இப்பிறப்பு தொடங்கி பாலரி பருவத்து முற்பட்ட வளர்ச்சி வரை ஆண், பெண் என்ற வேறுபாட்டிற்கு உட்படாது. இக்காலக்கட்டத்தில் அக்குழந்தைகளின் வளர்ச்சி நிலைக்கு ஏற்பக் குழந்தைப் பருவம், சிறுவர் பருவம் எனப் பிரிப்பர். இவற்றுள் குழந்தைப் பருவம் என்பது தாயின் அரவணைப்போடு கூடிய காலமாகும். தன்னுடைய துன்பத்தை எடுத்துச்சொல்ல இயலாத பருவம் என்பதால் இக்காலங்களில் தாயே முழுமையாகக் கண்காணித்து என்ன நோய் என்பதை அறிந்து செயல்பட வேண்டும்.

தாயின் செயல்பாடுகளும், சமயங்களில் குழந்தையைப் பாதிப்பதுண்டு. இக்குழவிப் பருவ நோய்களில் குறிப்பிடத் தக்கவை கிரந்தி, தோடம், மாந்தம், கணம் ஆகியன. இவையன்றி அக்கரம், கரப்பான், கக்குவான், வலிப்பு, இளம்பிள்ளை வாதம் போல்வன.

### கிரந்தி

பிறந்தது முதல் 3 மாதம் வரை குழவிகட்கு வரக்கூடிய நோய் ஆகும். இது கருங்கிரந்தி, செங்கிரந்தி என இருவகைப்படும்.

செங்கிரந்தி: உடல் முழுவதும் சிவந்து காணும்; கொப்புளங்கள் தோன்றும்.

கருங்கிரந்தி: தொண்டை கட்டச் செய்யும்.
"செங்கிரந்தி தேகம் சிவப்பால் கருங்கிரந்தி
பொங்கி மிடறுகட்டிப் போகுமே"

செங்கிரந்திக்குச் சிறந்த மருந்து கோரோசனை யாகும். இதனைத் தாய்ப்பால், கற்பூரவள்ளி இலைச்சாறு, முருங்கைக் கீரைச்சாறு, வெள்ளைப் பூண்டை நசுக்கிச் சேர்த்த குன்றிமணி இலைச்சாறு இவற்றை ஏதாவது ஒன்றுடன் சேர்த்து உள்ளுக்குக் கொடுக்க வேண்டும்.

செம்முள்ளிக் கீரை போட்டு காய்ச்சிய நீரில் குளிப்பாட்ட வேண்டும்.[8]

## கருங்கிரந்திக்கு மருந்து

பசுநெய், ஆமணக்குநெய், எள்நெய் இவை மூன்றும் வகைக்கு கால்படி எடுத்துச் சங்கு இலைச்சாறு சம எடை கூட்டிக் கொள்ள வேண்டும். திரிகடுகை நீர்விட்டரைத்து மேற்படி கலவையில் கரைத்து வெய்யிலில் வைத்துச் சாறு எல்லாம் சுண்டியவுடன் வடிகட்டி வைத்துக்கொள்ள வேண்டும். இந்த நெய்யை உள்ளுக்கும் கொடுத்து, உடம்புக்கும் பூச வேண்டும். பின்னர் செம்முள்ளிச் செடியையும், கிரந்திநாயகத்தையும் இடித்துப் போட்டுக் காய்ச்சிய நீரில் குளிப்பாட்ட வேண்டும்.

## தோடம்

குழந்தைக்கு 3 மாதத்திலிருந்து ஒரு வயது வரை தோன்றக்கூடிய நோய்களுள் குறிப்பிடத்தக்கது தோடம்.

நண்பகல், நள்ளிரவு, அந்தி, சந்தி வேளைகளில் குழந்தையை தெரு, புழக்கடை, வெட்டவெளிப் பகுதிகளில் எடுத்துச் செல்வதினால் பட்சி தோடங்கள் உண்டாகின்றன என்பர். தாகம் ஏற்படல், பேதியாதல், கண்கள் குழி விழல், குடித்த பால் வாந்தி யெடுத்தல், கண் சோருதல், தேகம் இளைத்தல், முதலியன இத்தோடத்தின் வெளிப்பாடுகளாகும்.

கோரோசனை, அதிமதுரம், திப்பிலி இவற்றை வகைக்கு அரைக்கால் (1/8) வராகனெடை எடுத்துத் தாய்ப்பாலில் கலக்கி மூன்று நாள் ஊட்ட கருட பட்சி தோடம் நீங்கும்.

## மாந்தம்

குழந்தைக்கு ஒரு வயதிலிருந்து மூன்று வயது வரை தோன்றக்கூடிய நோய் மாந்தம் ஆகும்.

மந்த இயல்புடைய நோய் என்பதால் மாந்தம் எனப் பட்டது.

உண்ணக்கூடாதவற்றைத் தாய் உண்பதால் அத்தாயின் பாலைக் குடிக்கின்ற குழந்தைக்கும் மலச்சிக்கல் உண்டாகி உடல் கனத்து, சுரத்துடன் கூடிய கழிச்சல் ஏற்படுதலே இம் மாந்தத்தின் குறியாகும்.

மாந்தம் 34 வகைப்படும் என்பர்.

## சிறுமாந்தத் தைலம்

சித்த வைத்தியத் திரட்டு VA-544.

சிற்றாமணக்கெண்ணையுடன், அறுகம்புல், வெள்ளைப்பூண்டு, மஞ்சள், உசிலம்பட்டை, இண்டங் கொழுந்து, ஆற்றுக் கும்மட்டி ஆகியவற்றை எடுத்துக்கொள்ள வேண்டும். இவற்றுள் குமட்டிக்காயை நறுக்கிக் கொண்டும் பிறவற்றை சிதைத்தும் சிற்றாமணக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்ச வேண்டும். இவற்றுள் குமட்டிக்காய் சிவக்கும் பதமே எண்ணெய்க்குரிய பதமாகும். இது சிறு மாந்தத் தைலம் என்று கூறப்பெறுகிறது. இதனைக் காலையில் ஒரு காசு எடையளவு உள்ளுக்குக் கொடுக்க எண்வகை மாந்த நோய்களும் தீரும்.[10]

## மாந்தத்திற்கு மருந்து

நொச்சியிலை, பொடுதலை இலை, நுனா இலை, உத்தாமணி இலை, இவற்றைத் தனித்தனியாக இடித்துச் சாறு பிழிந்து சம அளவாகக் கூட்டிக் குழந்தைக்கு மூன்று நாள் காலை வேளையில் கொடுக்க மாந்தம் நீங்கும்.

## கணம்

மூன்றாம் ஆண்டு முதல் ஏழாம் ஆண்டு வரை தொடரக்கூடிய நோய் கணம் ஆகும்.

உடற்சூடு மிகுந்து சளி கூடுதல், பல நீர்களை அருந்தி சளிமிக்க தாய்ப்பால் உண்ட குழந்தைக்கு கண நோய் தோன்றும். இந்தக் கண நோய் 24 வகைப்படும்.[11]

மாந்த நோய் முற்றிய நிலையில் அதுவே கணமாக மாறும். வயிறு நோதல், நாக்கு வேதல், மேல்மூச்சு வாங்கல், இழுப்புடன் கூடிய இருமல், சுரம் காய்தல், கண்கள் நிறமாறல், தொண்டைக்கம்மல், வியர்த்தல், வயிறு கழிதல் முதலியன இதன் குறிகளாகக் காணப்படுகிறது.

## மருந்து

நீர்முள்ளி, வெங்காயம், கடுக்காய் தோல், நெல்லிக்காய், தான்றிக்காய் தோல் இவற்றை 1/4 பலம் எடுத்து இடித்து ½ படி பசு மோரில் சேர்த்து 1/4 படியாகக் குறுக்கக் காய்ச்சி இரும்புப் பாத்திரத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

இதனை நாளொன்றுக்கு இருவேளை இரண்டு சங்களவு என மூன்று முதல் ஐந்து நாள் கொடுக்கக் கண நோய் நீங்கும்.

## கக்குவான்

தொற்றுநோய் வகையைச் சார்ந்தது கேவலுடன் கூடிய மிகுந்த இருமல், முகம் சிவத்தல், கோழை சிக்குதல் ஆகியன இதன் குறி குணங்களாகும்.

மருந்து: தூதுவளை நெய்.

(1) தூதுவளைச் சாறு 1 படி, பசுநெய் 1 படி கூட்டி, உயர்ந்த கோஷ்டம் 1 பலம் எடுத்துப் பொடித்துக் கலந்து காய்ச்ச வேண்டும். ஊறிய பதத்தில் இறக்கி நாளொன்றுக்கு இருவேளை உச்சிக் கரண்டியளவு கொடுத்துவர கக்குவான் நோய் தீரும்.

(2) வேறு மிளகுப்பொடி, மயிலிறகு சுட்ட சாம்பல் இரண்டையும் கலந்து பசு வெண்ணெயில் கலந்து கொடுக்க விரைந்து குணமாகும்.

## இளம்பிள்ளை வாதம்

நோய் எதிர்ப்பு இல்லாத நிலையில் சுரம் மிகுந்து இந்நோய் வரும்.

"நோயற்ற வாழ்வு நான் வாழவேண்டும்" என்ற வள்ளலாரின் வேண்டுதல் மக்கள் அனைவருக்கும் வாய்ப்பாக அமைவதற்கு வழிகாட்டக்கூடியது சித்தமருத்துவம். சாதாரணத் தலை வலி தொடங்கி கொடிய புற்று வகையிலான அனைத்து நோய்கட்கும் மருந்து கண்டு வையத்தை வாழ்விக்கச் செய்யும் ஆற்றல் இம்மருத்துவத்திற்கே உண்டு.

இம்மருத்துவத்தை விளக்கும் இலக்கியங்களுள் மூன்றில் இருபங்கே அச்சேறி உள்ளன. எனவே, இன்னும் பெரும்பகுதி சுவடிகளுக்குள்ளேயே முடங்கிக் கிடக்கிறது. அவற்றைத் தக்க முறையில் பதிப்பித்து அச்சேற்றுவதன் வழி மனித குலத்தைத் தழைக்கச் செய்யலாம்.

*****

## குறிப்புகள்

1. தேரையர் வைத்தியம் 1001, ப.72, பா.515-516.
2. சித்தர் குருநூல், பா.47.
3. சித்தர் குருநூல், பா.132.
4. தேரைவாகடம், பா.232.
5. அகத்தியர்-2000, பா.28.
6. தேரையர் வைத்தியம் 1001, ப.112, பா.809.
7. பாலவாகடம், ப.4, பா. ( சு ) .
8. பாலவாகடம், ப.5.
9. பாலவாகடம், ப.6.
10. சித்த வைத்தியத் திரட்டு, பா.544.
11. அயோதிதாசன், பாலவாகடம், பா.27.

## துணைநூற் பட்டியல்


1. சித்த மருத்துவாங்கச் சுருக்கம், க.சு. உத்தமராயன், H.P.I.M., பதிப்பு, 1953.
2. தேரையர் வைத்தியம் 1001.
3. சித்தர் குரு நூல்.
4. தேரையர் வாகடம்.
5. அகத்தியர் 2000, பதிப்பு ஆசிரியர் டாக்டர் எஸ். வேங்கடராஜன், தஞ்சாவூர் மகாராஜா சரபோஜி சரஸ்வதி மஹால் நூல் நிலையம், பதி. 1970.
6. கா.சு. முருகேச முதலியார், பதி. 1933.
7. சித்த வைத்தியத் திரட்டு.
8. தாள் சுவடி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.
9. அகத்தியர் பாலவாகடம் 100.
10. அகத்தியர் அஷ்டமா சித்து.
11. தன்வந்திரி சிமிட்டு ரத்தன சுருக்கம்.

# 21. சித்தமருத்துவச் சுவடிப் பதிப்புச் சிக்கல்கள்

மருத்துவர் சா. வாசுகிதேவி

## முன்னுரை

பல்வேறு கலைகளும் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஓலைச்சுவடிகளில் எழுதிவைக்கப்பட்டுள்ளன. இயற்கையாலும், செயற்கையாலும், வறுமையாலும், அறியாமையாலும், உற்றவராலும், மற்றவராலும், அழிந்தது போக, மீதி இருந்த பலவற்றில் சில சுவடிகள் மட்டுமே தனிமனிதர்களாலும், பல நிறுவனங்களாலும் சுவடிப்பதிப்பு நூல்களாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இன்னும் பதிப்பிக்கப் படாமல் முடங்கிக் கிடக்கும் சுவடி நூல்கள் ஏராளம், ஏராளம். அவற்றுள் சித்தமருத்துவச் சுவடிகள் முக்கியமானவைகளாகும். நவீன மருத்துவத்தால் சித்த மருத்துவம் விலக்கி வைக்கப்பட்டுள்ளதுபோல், நம்மால் சித்த மருத்துவச் சுவடிநூல்களும் தீண்டுவாரில்லாமல் விலக்கி வைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு பல்வேறு காரணங்களால் அழியக்கூடிய, மறைக்கப்பட்ட, விலக்கி வைக்கப்பட்ட மருத்துவச் சுவடிகளை அழியாமல் பாதுகாப்பது மூலம் இன்றையச் சமுதாயத்திற்கு மட்டுமல்லாமல், வரக்கூடிய தலைமுறையினர்க்காகவும், பாதுகாத்துப் பதிப்பிப்பது தமிழ் உலகுக்குச் செய்யும் தொண்டாகும்.

சித்தமருத்துவ நூல்கள் வெளிவருவது முன்பைக் காட்டிலும் இப்பொழுது அதிகரித்துள்ளது என்றாலும், மற்றத் துறைகளைப் பார்க்கும்போது, வெளிவரும் நூல்களின் எண்ணிக்கை மிகவும் குறைவே.

மருத்துவம் தொடர்பான செய்திகள் யாவும்,

1. ஓலைச்சுவடிகள்
2. தாள் சுவடிகள்
3. நூல்கள் ஆகியவற்றில் காணப்படுகின்றன.

சுவடிகளைப் பதிப்பிப்பது என்பது, எளிதான செயலல்ல. சுவடிகளைத் தேர்வு செய்வதிலிருந்து, பதிப்பித்து விற்பனை செய்வது வரை பல சிக்கல்கள் உள்ளன.

## சித்த மருத்துவச் சுவடிகள் வகை

சித்த மருத்துவச் சுவடிகள் என்னும்போது மருத்துவம் மட்டுமல்லாமல், ஞானம், இரசவாதம், மாந்தரீகம், மந்திரம் போன்றவையும் அடங்கும். மேலும், மந்திரமும் மருத்துவமும் சர்வ சம்ஹார விஞ்சை என்றும் தாள் சுவடியில் சேர்ந்தே காணப்படுகிறது (தாள் எண்.2. நூ. எண்.22 உ.த.ஆ.நி.) மற்றும் புலஸதீசர் விளக்கிய ஞான கறப்ப 22இல் ஞானமும் சேர்ந்து காணப்படுகிறது. (தாள் எண்.2, நூ.எண்.20, உ.த.ஆ.நி.).

மருத்துவச் சுவடிகள் பெரும்பாலும் ஆசிரியர் பெயரால் அமைகின்றன. (உ-ம்.) அகத்தியர் வைத்திய காவியம் 1500 அகத்தியர் முன் 80.

தேரையர் தைல விளக்கச் சுருக்கம், அகத்தியர் சஞ்சீவி எண்ணெய்கள் என மருந்து முறையாலும், அகத்தியர் நயனவிதி 500, நாகமுனிவர் நயனவிதி 200 போன்றவை நோயின் பெயரால் அமைகிறது. குழந்தை வாகடம், பிள்ளைப்பிணி வாகடம் என்பன நோயாளியின் பெயராலும், மாட்டு வாகடம், மிருக வைத்தியம் என விலங்குகள் பெயராலும் சுவடிகள் உள்ளன.

பச்சிலை வைத்தியம், ஔசத முறைகள் எனப் பொதுவாகவும் சுவடிகள் காணப்படுகிறது.

வர்மக்கலையின் பெயரால் வர்ம பீரங்கி, வர்மக் கண்ணாடி என்றும், செய்யுள் அமைப்பினைக் கொண்டும் சில

சுவடிகள் பெயரிடப்பட்டுள்ளன (உ-ம்.) வைத்திய சிந்தாமணி, வெண்பா 4000. சில சுவடிகள் எண்ணிக்கைப் பெயரால் அமைகின்றன (உ-ம். அகத்தியர் செந்தூரம் 300).

## பழைய நூல்களைப் பதிப்பித்தலின் அவசியமும் சிக்கல்களும்

ஒரு சில குறிப்பிட்ட நூல்களைத் தவிர மற்ற நூல்கள் எல்லாம், பல ஆண்டுகளுக்கு முன் பதிப்பிக்கப்பட்ட நிலையிலேயே உள்ளன. ஏற்கனவே பதிப்பிக்கப்பட்ட நூல்களைப் பதிப்பிக்க முற்படும்போது, அவை உரையுடன் இல்லாமல் செய்யுள் வடிவிலும் ஒருசில நூல்கள் பிழைகளுடனும் காணப்படும் ஒன்று அல்லது அரை நூற்றாண்டுக்கு முன் வந்தவை மிகவும் பழமை வாய்ந்த நேரத்தில் ஒரே நூல் வெவ்வேறு காலக்கட்டத்தில் பதிப்பித்து வெளிவந்துள்ளன. ஆனால் பொதுவாகக் கிடைக்க வாய்ப்பில்லாமல் ஒப்பிட்டுப் பார்த்துச் சரியாகத் திருத்தப் பதிப்பை வெளியிட முடியாத சிக்கல் ஏற்படுகிறது. ஒரு நூலைப் பதிப்பிக்க முற்படும்போது, அந்நூல் பதிப்பிக்கத் தகுதி வாய்ந்ததா என்று அறிந்தபின் வேறுநூல் இதே மாதிரி உள்ளதா என்று அறிய வேண்டும் (உ-ம்.) ஆத்மரச்சாமிர்த வைத்திய சார சங்கிரகம் என்னும் நூல், தற்போது ஆவி அளிக்கும் அமுத முறையாக வெளிவந்துள்ளது. இவ்வாறு வந்த நூல்களையே மீண்டும் மீண்டும் வெவ்வேறு தலைப்புகளில் பதிப்பித்தலைக் காட்டிலும், அரிதான இதுவரை பதிப்பில் வராதவற்றை நன்கு ஆய்ந்து வெளியிட வேண்டும். ஆகவே பதிப்பித்த நூல்களைப் பதிப்பிப்பதாக இருந்தாலும், அதிக கவனமும், உழைப்பும் தேவை.

## மருத்துவச் சுவடிகளைப் பதிப்பித்தலின் அவசியம்

பதிப்பிக்க வேண்டிய சுவடிகள் நிறைய உள்ளன. சுவடி படிப்பவர்களும் குறைந்து வரும் இந்நாளில் ஏற்கனவே சுவடிகளில் உள்ளதை எதிர்காலத்தினருக்காகப் பதிப்பிக்க வேண்டியதுள்ளது. நோய்கள் பல்வேறு புதிய பெயர்களில் பெருகி வரும் இந்நாளில் மருத்துவச் சுவடிகளைப் பதிப்பித்தல்

மிகத் தேவையான ஒன்றாகும்.' சுவடியிலிருந்து இனிப் பதிப்பிக்க ஒன்றுமில்லை என்பர். ஆயின் சுவடிகளும் 1, 2 நூற்றாண்டுகளில் அழியக்கூடியதாக இருப்பதால், அவற்றிலிருக்கும் செய்திகளை அழியாமல் நாம் தற்சமயம் நூல்களாகப் பதிப்பிக்க வேண்டியுள்ளது.

## சுவடியைத் தேர்வு செய்வதில் ஏற்படும் சிக்கல்கள்

ஆய்வாளர் சுவடியியல் பட்டய மேற்படிப்பிற்கான ஆய்வு நூல் செய்ய வேண்டி சுவடி தேடியபோதும், நூல் ஒன்றைப் பதிப்பிக்க முற்பட்டபோதும் ஏற்பட்ட சிரமங்கள் அதிகம்.

## தலைப்பில் தடுமாற்றம்

ஒவ்வொரு சுவடி நூலகத்திலும் பல சுவடிகள் காணப் படுகின்றன. இந்நிறுவனத்தில் ஆய்வாளர் பயின்ற பொழுது விவர அட்டவணை இல்லை. ஆகவே இங்கிருந்த சுவடியை எடுத்து ஆய்வு செய்ய இயலாமல் அடையாறு தியாசபிக்கல் நூல் நிலையத்தில் சென்று பார்க்க நேரிட்டது. தற்போது விவர அட்டவணை இல்லை. இதனால் சுவடிகளைத் தேர்ந்தெடுக்க நிறையக் காலம் வீணாகியது.

'யூக்குனி கரிசல்' என்னும் நூல் ஏற்கனவே வெளிவந்துள்ளது. ஆனால் 'அகத்தியர் கரிசல்' என்னும் நூல் வெளிவரவில்லை. இச்சுவடியைப் பார்த்தவுடன் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளலாம் என்று நிம்மதி ஏற்பட்டது. சிறிது சந்தேகம் ஏற்பட்டு யூகி நூல் பாசமுடன் ஒப்பிட்டுப் பார்த்த பொழுது இரண்டும் ஒன்றாக இருந்தது. இவ்வாறு நிறைய சுவடிகளை ஒப்பிட்டுப் பார்த்துப் பதிப்பிக்காத நூல் தேடுவதில் நிறைய உழைப்பைக் கொடுக்க வேண்டியதாயிற்று. நூலகத்திலும் ஒவ்வொரு சுவடியாக எடுத்துக் கொடுத்து உதவினர். பின் அவர்களும் எடுத்துத் தரத் தயங்கினர்.

சில நேரங்களில் ஒரே நூல் பல்வேறு தலைப்புகளில் காணப்படுகிறது (உ-ம்) ஆய்வாளர், ஆய்வு நூலான வைத்திய சிந்தாமணி வெண்பா 4000 (ஆர். 2421) என்னும்

சுவடி, கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் உள்ளது. இதே நூல் நிலையத்தில், இதே நூல் சிந்தாமணி வெண்பா ஆர். 948, என்னும் தலைப்பிலும் மணி 4000 என்னும் தலைப்பில் சென்னை சி.ஆர்.ஐ. நூலகத்தில் மற்றும் தஞ்சாவூர் நூல் நிலையத்திலும் உள்ளது. பல்வேறு தலைப்பு ஒரே நூலாகக் காணப்படுவதால், சுவடிகளைப் பாரக்கும் முன், வெவ்வேறு நூலோ என்ற குழப்பத்தை விளைவிக்கிறது.

இதுவரை பதிப்பில் வெளிவந்துள்ள மருத்துவ நூல்கள் பற்றிய விவர அட்டவணை இல்லாததால் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. சித்த மருத்துவ அகராதி என்ற நூல் பயனுள்ளதாக உள்ளது. இந்நூல் பதிப்பில் வந்துள்ள நூற்கள் பற்றிய அட்டவணையைக் கொண்டுள்ளது. ஆனால் இதன் மூலம் நூல் பற்றிய விபரங்களைத் தெளிவாக அறிய முடிய வில்லை.

## நூலகச் சிக்கல்

சுவடி நம்மிடத்தில் இருந்துவிட்டால் பதிவு செய்வது எளிது. சுவடி நூலகங்களிலோ, அரசு, தனியார் நிறுவனங்களிலோ இருப்பின், எடுத்து எழுதுவதிலும் சுவடித் தேர்வு செய்வதிலும் சிக்கல் ஏற்படுகிறது. பெரும்பாலான நிலையங்களில் விளக்க அட்டவணை இல்லை. இருப்பினும் சரியாகப் பயன்படுவதில்லை. அட்டவணை பார்த்து பின் விளக்க அட்டவணையில் மருத்துவம் தொடர்பு பட்டது என்று இருப்பின் முழுக்க முழுக்க ரசவாதம், யோகம் பற்றியதாக உள்ளது. மருத்துவர் அல்லாதவரால் விளக்க அட்டவணை தயாரிப்பதால் இச்சிக்கல் ஏற்படுகிறது. ஆகவே விளக்க அட்டவணையைத் துறை வல்லுனர்கள் மேற்பார்வையில் தயார் செய்தல் வேண்டும். சுவடித் தேர்வு செய்யும் முன்னும், பின்னும் அனுமதி பெற வேண்டியுள்ளது. அரசுப்பணியில் இருப்பவர்கள் தினம் நூலகம் சென்று பதிவு செய்வது முடியாத ஒன்று. நூலக விடுமுறை நாட்களில் பணியினைத் தொடர முடிவதில்லை. தினமும் சுவடி அடுக்குமிடம் சென்று பதிவு செய்வது என்பது சற்றுக்

கடினமான செயலே. நகல் எடுக்கும் வசதி இருப்பின் பிரச்சினை இல்லை.

ஆய்வாளர் சில கட்டுகளை நகல் எடுக்க வேண்டி சென்னைப் பல்கலைக்கழக நூல்களை அணுகி நகல் எடுக்க அனுமதி கேட்டபோது அனுமதியாமல் காலம் தாழ்த்தினர். அவர்கள் கூறிய காரணங்களில் ஒன்று, சுவடி நூலகமும், பல்கலைக்கழக நூலகமும் வெவ்வேறு, மேலும் சுவடிகளை எடுக்க மை அதிகம் செலவாகும். அதனால் பல்கலைக் கழகத்தில் இருக்கும் புத்தகங்களை நகல் எடுக்க வருபவர்களுக்குப் பாதிப்பை ஏற்படுத்தும் என்றார். இதனாலும் காலதாமதம் ஏற்பட்டது.

சில சமயத்தில் நாம் பார்க்க எண்ணியிருக்கும் அல்லது பார்த்த சுவடிக்கட்டு காற்றுப்புகாப் பெட்டியில் வைத்து விட்டால், அதற்காகப் பல நாட்கள் காத்திருக்க வேண்டியுள்ளது.

சில நேரங்களில் நாம் செல்லும் நாட்களில் நூல் நிலையத்தில் குறிப்பிட்ட பணியாளர் விடுப்பில் இருந்தால் வேலை தாமதப்படும்.

இவ்வளவு பிரச்சினைக்கிடையில் நூல்களைப் படியெடுத்தோ (அ) நகல் எடுத்தபின் ஒப்பிட்டுப் பார்க்க வேறு சுவடி இருந்தும் ஒப்பிட வசதியின்றிக் கிடைக்காமலோ போய்விடுகிறது.

ஒரு சுவடியினை ஒரு நூலுடனோ அல்லது வேறு சுவடியுடன் ஒப்பிட்டுப் பார்க்கவோ சில நாட்கள் தேவையாக உள்ளன.

### பல்வேறு நூலகங்களை நாடவேண்டியதன் அவசியம்

இதுவரை வெளிவந்துள்ள நூல்கள் எல்லாம் பதிப்பில் வெளிவராத ஒரே இடத்தில் இல்லாத காரணத்தால் சுவடியை ஒப்பிட்டுப் பார்க்க அல்லது திருத்தப் பதிப்பை வெளியிட பல்வேறு நூல் நிலையங்களுக்கும் செல்ல வேண்டியுள்ளது.

## மருத்துவச் சுவடிப் படியெடுப்பில் ஏற்படும் சிக்ககல்கள்

### கையெழுத்துத் தெளிவின்மை

சுவடிகளைத் தேர்வு செய்தபின், சுவடி ஓரளவிற்கு நல்ல நிலையில் இருந்து, தெளிவாக, பிழைகள் அதிகமில்லாமல் இருப்பின் படியெடுப்பதில் சிரமம் அவ்வளவாக ஏற்படாது. உ-ம். சட்டை முனி சூத்திரம் 200 ( ஆர். 268 கீ.சு.நூ. ) சில சுவடிகள் கையெழுத்துத் தெளிவாக இருந்து பிழைகள் அதிகமாக இருக்கும் ( உ-ம். ) சூதர் வாக்கியம் ( டி. 1932 கீ. சு.நூ. )

சுவடி எழுதியவர் மருத்துவம் தெரியாதவராக இருந்தால் பொருள் குற்றம் அதிகமாகக் காணப்படும். தமிழ் அறிவு ஓரளவிற்கு உடையவர்கள் எழுதியிருப்பின் இலக்கணப் பிழை அதிகரித்துக் காணப்படும்.

வட்டாரப்பேச்சு வழக்கு சுவடி எழுதுவோரால் பயன்படுத்தப்பட்டிருந்தால் அவ்வட்டார வழக்கு தெரியாதவர்க்கு பொருள் எழுதுவதில் சிரமம் ஏற்படும் அல்லது பொருள் வேறுபாட்டினை ஏற்படுத்தும்.

மருத்துவம், சோதிடம் ஆகிய சுவடிகளில் பேச்சு நடைச் சொற்களும், பிறமொழிச் சொற்களும் அமைந்து பலவாறாக வடிவம் பெற்றுள்ளன. தமிழ் மொழியில்லாத பிறமொழியைத் தாய்மொழியாக உடையவர்கள் சுவடி எழுதி இருந்தால் வேற்று மொழிச் சொற்கள் கலந்து காணப் படுகின்றன. ( உ-ம். ) கொங்கண மூர்த்தியாரருளிச் செய்த கற்ப சூத்திரம் முற்றிற்று 1848ஆம் வருஷம் ஆடிமாதம் 15ஆம் தேதி பல்லாண்டு எழுதி நிறைந்தது.

( கொங்கணர் கற்ப சூத்திரம் நூலக எண். ஆர். 2280 )

( கீழ்த்திசைச் சுவடி நூலகம் )

தற்காலத்தில் வழக்கில் இல்லாத சொற்களும் அளவுகளும் சரிவரத் தெரியாத காரணத்தால் பொருள் விளங்கிக் கொள்வதில் சிறிது குழப்பம் ஏற்படும்.

( உ-ம் ) கவிழ்த்தியதேர் குகை தூரிய ( டி. 1932 )

பணம் போல் பொத்து ( சூதர் வாக்கியம் )

( கீ. சுா. நூ. )

பணம் அளவிற்கு ஓட்டையை உண்டாக்குதல் என்று பொருள்படும்.

மற்ற துறைச் சுவடிகளைப் போலவே மருத்துவச் சுவடிகளின் புற அமைப்பு காணப்படுகிறது.

### அக அமைப்பில்

குரு வாழ்த்து இறைவணக்கம், காப்புப் பாடல், நூல், முடிவு என்று அமைகிறது. பொதுவாகக் குரு வாழ்த்து இன்றி ஒரு மருத்துவச் சுவடியும் இருக்காது. ஒன்றிரண்டு இதற்கு விதிவிலக்காகவும் உள்ளன. இறைவணக்கம் நூலோடு தொடர்புடையதாகவும், நூலாசிரியர் அல்லது சுவடி எழுதுவோரால் செய்யப்பட்டதாகவும் இருக்கும். சிலவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட கடவுள் மீது பாடப்பட்ட பாடல்களும் உண்டு.

சிவமயம் - சட்டமுனி சூத்திரம்

ஹரி ஓம் நன்றாக - கவுசிகமுனி வகார சூத்திரம் 32

( ஆர். 145, கீ.சு.நூ. )

தேவி சகாயம்

குருவே துணை - சிவகிருபையுண்டாகவும் - சுந்தரனார்

- தர் அருளிய சூத்திரம் 110

( கீ.சு.நூ. )

பல கடவுளுக்கு எடுத்துக்காட்டாக

ஒருவாலி ஒவ்வாய் மாதமுன் றிலோர்
இருநாளின் முத்தா ளிசைய -- வருமோக்
களிற்றை யினிதுரைக்கக் கல்வியிற் போர்தர்
வெண்டாவாய் யானும் விளம்புதற் கென்னாவில்

( ஆர். 2421 மற்றும் ஆர். 948 )

( வைத்திய சிந்தாமணி )

காப்புப் பாடல் நூலோடு மற்றும் பாடல் எண்ணிக்கையில் தொடர்புடையதாகவும் உள்ளது.

(உ-ம்.) நீரான உமைதேவி பாதத்தைப் போற்றி
பேரான அதிசெய நூல் முப்பதாகும்

என்பதிலிருந்து நூல் பாடல் எண்ணிக்கை முப்பது என்று அறியலாம். (சுந்தரனார் அதீதசூத்திரம் 30 டி. 2450) (சீ.சு.நூ.)

சில சுவடிகளில் குரு வாழ்த்தோ கடவுள் வாழ்த்தோ இன்றியும் காணப்படுகிறது. சூதர் வாக்கியம் என்ற சுவடியில் (டி. 1932)

செந்தமிழமா முள் எனக்குச் செப்பி ஓரே (86)

என்று நூலின் இடையில் வரும் பாடலில் காணப்படுகிறது.

இவ்வாறு நூலின் நுதலிப் புகும் தன்மையால், நூலை எழுதியவர், நூல் தன்மை பற்றி அறிய முடியும். மேற்கண்டவாறு பாடல்கள் அல்லது செய்திகள் இல்லாவிடில் நூல் எங்கிருந்து தொடங்குகிறது. தலைப்பு போன்றவற்றை அறிவதில் சிக்கல் ஏற்படும்.

## மருத்துவச் சுவடியின் இறுதி அமைப்பு

இதில் ஆசிரியர் பெயரும், நூல் பெயரும், பாடல் எண்ணிக்கையும் கூறி நூல் முற்றும் என்ற கூற்று இறுதியில் காணப்படும். சில அறிவுரைகள், நூலினைக் கற்போர் பெறும் பயன் கூறி வாழ்த்துடன் முடிப்பதும், உண்டு. (உ-ம்.) சூதர் வாக்கியம் என்னும் சுவடியில் நந்தீசர் வாக்குப்படி சூதர் வாக்கியம் முற்றும் என்றும், சுந்தரானந்தர் சூத்திரம் 25 எழுதி (ஆர். 268) (கீ.சு.நூ.) முற்றிற்று உ சிவ மயம் 2 ஒத்திடப்பட்டது. இஃது என்றும் எழுதப்பட்டுள்ளது. மற்றும்,

சுந்தரானந்தர் அத்த சூஸ்திரம் முப்பத்தாறும்
முடிந்தது குருரதம் துணை
இஃது ஐத்ரசாயரடையது
யெடுத்தவர்கள் குடுக்கவும்

என்ற தொடர் இறுதியில் உள்ளது. இதன்மூலம் இச்சுவடி யாருக்கும் சொந்தமானது, எண்ணிக்கை 36 என்பதும் முழுமையான நூல் என்றும், முஸ்லீம் ஒருவருக்குச் சொந்தமானது என்பது போன்ற செய்திகள் கிடைக்கிறது. இதன் மூலம் 200 அல்லது 300 ஆண்டுகளுக்கு உட்பட்டதாக இச்சுவடி இருக்கும் என்பன போன்ற செய்திகள் கிடைக்கின்றன.

> சட்டை முனியார் அருளிச் செய்த சூத்திரமயிறுனறு யெழுதி முற்றிற்று (ஆர். 268, கீ.சு.நூ.)
>
> கவுசிகமுனி அருளிச் செய்த வகார சூத்திரம் 22-ம் எழுதி நிறைவேறியது.
> சிவமயம் தேவி சகாயம் (ஆர். 145 கீ.சு.நூ.) )
> என எழுதப்பட்டுள்ளது.

இவ்வாறு சுவடி இறுதியில் எழுதப்பட்டிருப்பின், நூல் முடிந்ததையும் பிற செய்திகளையும் அறியலாம். மேற்கண்டவாறு காணப்படாதிருப்பின், சுவடி படிக்கும்போது சில தகவல்கள் கிடைப்பதில் சிக்கல்கள் ஏற்படும்.

சில சுவடிகளில் அடித்தல், திருத்தல் அதிகம் காணப்படும். சிலவற்றில் சாதாரணமாகப் பழக்கத்தில் இருந்து வரும் மருந்துப் பெயர்கள் பயன்படுத்தப்படாமல் வேறு பெயர்களால் குறிப்பிட்டிருப்பர். இதனால் சாதாரணமாக நமக்குத் தெரிந்த பெயர்கள்கூடத் தெரியாமல் தடுமாறும் சிக்கல்.

(உ-ம்) இஞ்சியை வேர்க்கொம்பு என்றும்

சமுத்திராப்பழம் - அப்பி என்பது போன்று
மஞ்சட்டி அமுதரம்

எழுதப்பட்டிருக்கும்.

சில சுவடிகளில் மருந்துப் பெயர்கள் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளது.

(உ-ம்) கடுக்காய் - கடு
சிறுகாஞ்சொற்வோர் - சொற்

சில சுவடிகளில் சில இடத்தில் அடித்து எழுதப்பட்டிருக்கும். சிலவற்றில் விட்ட எழுத்துகள் மேலே எழுதப்பட்டும் காணப்படுகிறது. இவ்வாறு இருப்பின் நன்கு கவனித்துப் படியெடுக்க வேண்டும்.

சில நேரங்களில் பாடலின் தொடக்கத்திற்கு முன், அல்லது சுவடியின் வலது ஓரத்தில் எழுதப்பட்டிருக்கும் உட் தலைப்புகள் பொருளில் வேறுபட்டிருப்பின் அவற்றைச் சரியான தலைப்பாக மாற்ற வேண்டும்.

மருத்துவச் சுவடிகள், அறுசீர் விருத்தத்தில் எண்சீர் விருத்தத்தில் மிகுதியாக அமைகின்றன. வெண்பாவில் அமையும் சுவடிகளும் பல உள்ளன. ஆயின் பிறவிருத்தங்களில் ஆசிரியப் பாக்களில் அமையும் பாடல்கள் குறைவு.

மருத்துவ நூல்கள் பெரும்பாலும் பாட்டு வடிவில் சீர், தளை பிரிக்கப்படாமல், உரைநடை போன்று தொடர்ந்து எழுதப்பட்டிருக்கும். ஒருசில சுவடிகளில் மட்டும் அடிகள் பிடிக்கப்பட்டு எழுதப்பட்டுள்ளது (உ-ம்) கலை கேவுக்கு மகரிஷி பிள்ளை சொக்கரை அருளிச்செய்த சூத்திரம் (ஆர். 254) (கீ.சு.நூ.).

ஆகவே சீர்கள் பிரிப்பதில் கவனம் செலுத்த வேண்டியதுள்ளது. எதுகை, மோனை, போன்ற பாட்டமைப்பிற்காக அமைக்கப்பட்ட சொற்கள் சில நேரத்தில் பொருள் குறிப்பதில் சந்தேகத்தைஉண்டாக்குகிறது. புள்ளியில்லாமை, கால், கொம்பு ஆகிய எழுத்துத்தன்மை, பிறவாகிய கையெழுத்து வேறுபாடுகள் குழப்பத்தை விளைவிக்கின்றன. இவ்வாறான குழப்பங்களுக்குச் சில சான்றுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

### ஒற்றுக்கள் விடுபட்டுள்ள நிலை

காய்ச்சின் - காச்சி - (4) (10) (வை.சி.வெ)

### ஓரொற்று வரவேண்டிய இடத்தில் பிறிதொரு ஒற்று வரல்

குமிழ் - குமிள் - 23

கர்ணிகமாஞ் - கற்ணிகமாஞ் 75 (வை.சி.வெ)

**ஒற்று மிகக் கூடாத இடத்தில் ஒற்று மிகல்**

விழுது - விழுதுத் (7) (வை.சி.வெ)

ா என்ற துணை எழுத்து சில இடங்களில் விடுபட்டுள்ளன.

பேராமுட்டி - பேரமட்டி (14) (வை.சி.வெ)

**ந-ன க்களில் குழப்பம்**

புக்நேத்திர - புக்னேத்திர (76) (வை.சி.வெ)

**ரி-றி க்களில் குழப்பம்**

மூத்திர கிகீச்சத்து - சூத்திர கிறீச்சத்துக்கு (வை.சி.வெ.)

குறில் நெடில் பேதமின்மையாலும், ே, ெ என்ற எகர ஒகர உயிர்மெய்கள் வேறுபாடில்லாமையாலும் சில நேரங்களில் மருந்தின் பெயர்களை அறிவதில் சிக்கல் ஏற்படுகிறது.

(உ.ம்) மாற்சொற்றி என்றால் பாற் சொற்றிக்கீரை எனவும்,

பால்சோற்றி என்றால் எருக்கம்பாலையும் குறிக்கிறது.

பாடல்களில் சில நேரங்களில் சிக்கல் மிகுந்து காணப்படும். அதே சமயம் மிகுந்த சீர் மருந்துப் பெயராகவும் உள்ளது.

தனற்காய்ச்சி (க் குமரி புளி) யிலை பொன்னாங்காணிச் சாற்றில் (3) (ஆ. வாக்கியம் (கீ.க.நூ)

மூலபாடத்தைத் திருத்தக்கூடாது என்று இருப்பினும் சரியான பொருள் கொள்ள வேண்டித் திருத்தி எழுத வேண்டியது மருத்துவத்துறையில், கட்டாயமும், அவசியமாகவும் உள்ளது. காணவே பற்றிய மண்கலத்தில் பாதி - என்பதை காணவே பற்றிய அண்டத்தில் பாதி என்று (28) (ஆ. வாக்கியம்) திருத்தம் செய்ய வேண்டியதுள்ளது. சில பாடங்களில் காணப்படும் சொற்களுக்கு பொருள் தெரியாதபோது

மூலச்சொற்களளை அப்படியே எழுதியும் முடிந்த வரை 231 232

**சரியான பொருள் கொடுக்க வேண்டியதுள்ளது**

(உ-ம்) பட்டிடா சூதமொன் பார்பரை விந்துமொன் (வாக்கியம்) இதில் சூதம் விந்து என்பது ரசத்தைக் குறிக்கும்.

பரைநாதம் - கந்தகத்தைக் குறிக்கும். ஆகவே பரை விந்து என்பதை பரைநாதம் எனப் பொருள் எழுத வேண்டியுள்ளது.

மருத்துவச் சுவடி என்றால் ஓரளவிற்கு எழுத்துப் பிழைகள் இருப்பின் சரி செய்து பதிப்பிக்கலாம். ஆனால் யோகம், ரசவாதம் போன்ற பொருளுடைய சுவடிகளை உரை எழுதிப் பதிப்பிப்பது கடினம் (உ-ம்) சுந்தரானந்தர் அருளியவை கழட்டுகிற விதம் அற்றும்படி - -ர 2401 (கீ.சு.நு.)

சுந்தரானந்தர் தண்டஜம் ஆர் 278 போன்றவை எழுதிப் படிக்கும்படி (கீ.சு.நூ) போன்றவை எழுதிப் படிக்கும்படி இடைவெளிவிட்டு உள்ளது. ஆனால் படித்துப் பொருள் உணர்தல் மிகவும் கடினமாக உள்ளது.

(உ-ம்) சுக்குத் தழுநாழை தூயா மணக்கம் வேர்
தக்க செருப்படிகத் தண்டுதம்பை - மிக்கவே
கோதமாய்க் காய்ச்சிக் குடித்திடவே
வாதசுரம்
பேதமறப் போமே பிரிந்து

என்று மருத்துவரல்லாதவரும் பொருள் கொள்ளும்படி உள்ளது.

**பரிபாஷை அல்லது மறை பொருள்**

சித்தர்கள் அரிய மருந்து முறைகளைப் பூடகமாக மறைத்து வைத்தனர். அவர்கள் பரிபாஷைச் சொற்களைப்

பயன்படுத்தினர். இதனால் ஒரு சிலரால் மட்டுமே அல்லது ஒரு குழுவால் மட்டுமே அறிய முடியும். பரிபாஷை அதிகம் உள்ள சுவடிகளைப் பதிப்பிப்பது மிகவும் கடினம்.

(உ-ம்) வானபடியை - தாயைக்கொன்றான் எனவும்
குப்பைமேனியை - பூனை வணங்கி என்றும்
எழுதப்பட்டிருக்கும்.

தலைவலி கண்டவேர்க்குத் தயவாக மருந்து கேளும்
மலையின் மேல் பாராங்கல்லை வண்டிமேல்
ஏற்றிவந்து
தலைவலி கண்ட பேரைத் தரைதனில் படுக்க
வைத்துத்
தலையின்மேல் உருட்டிவிட்டால் தலைவலி நீங்கும்
தானே.

வண்டி என்பதற்கு மிளகு என்றும் உள்ளங்கை என்றும் பொருள் கொள்ளலாம்.

மலையின்மேல் பாராங்கல்லை - மலைப்பாரை மூலிகை என்பதாகும்.

(உள்ளங்கையில் வைத்துத் தேய்த்து அல்லது மிளகுடன் சேர்த்து) என்று பொருள் கொள்ள வேண்டும்.

மீறுவெறுங் கண்ணினடு வோலைச் சுன்னம்
பொறுக்கிப்
போதமெனுந் தீயிற்புடமிட்டு ஊதியுண்ண
வீக்கம் பீலிகையுடனே மீறுமக்கினி மந்தம்
பார்க்கப் பறந்துரயோம் பண்
மூக்கிரட்டை வேரைச் சுன்னம் பொதுக்கில் போது
பெறும்
பார்க்கப் பறந்துரபோம் பண்
தீயிற்புடமுட்டு ஊதியுண்ண - மேற்கண்ட வியாதிகள்
நீங்கும்

- 13 தேரையர் அருளிச்செய்த நோயின் சாரம்
(ஆர். 3413) கீ.சு.நூ.

மூக்கரட்டையை - கண்ணின் நடுவேர் என மறைபொருளாக கூறப்பட்டுள்ளது.

சுவடியில் செல்லரித்துள்ள இடங்களில் ஒருசில எழுத்துக்கள் என்றால் ஓரளவிற்கு உய்த்துணர்த்தும், ஒருசில நேரங்களில் எழுத்துக்களை உய்த்துணர முடியாதபோது மிகவும் சிரமப்பட வேண்டியதுள்ளது. வேறு சுவடி அல்லது நூல் சுவடி இருப்பின் ஒப்பிட்டுப் பார்த்தும், இல்லாவிடில் அறிஞர்களை அணுகி விடுபட்டுள்ள எழுத்துக்களை உய்த்துணர்ந்து மீட்டுருவாக்கம் செய்ய வேண்டியதுள்ளது.

மேற்கண்ட பல சிக்கல்களை மீறி நூல் எழுதி, அரசுப் பணியில் இருப்பவர் என்றால் துறை அனுமதி பெற வேண்டியதுள்ளது. அனுமதி கிடைப்பதற்குக் காலதாமதம் ஏற்படுகிறது.

## பணப்பிரச்சினை

பொதுவாகச் சித்த மருத்துவ நூல்கள் எல்லாம் மற்ற துறை நூல்களைப் போலன்றித் தரம் குறைந்த நிலையிலே வெளிவந்துள்ளன.

அச்சகத்தில் கொடுத்து நூலாக அவர்களிடம் வாங்குவதற்குப் பலரிடம் அலைய வேண்டியதுள்ளது. குறிப்பிட்ட தேதியில் அவர்களிடம் இருந்து வாங்குவது என்பது குதிரைக் கொம்பே. புத்தகமாக வந்தபின் அதை விற்பதில் சிரமம். பதிப்பகங்கள் மூலம் சென்றால் அவர்களுக்கு 40% பணம் தரவேண்டிய நிலை. பொது நூலகத்தாரும், நாம் அனுப்பும் நூலை வாங்க ஆணை வழங்குவர் என்பதும் நிச்சயம் இல்லை.

## சிக்கலைத் தீர்த்துக்கொள்ளும் வழிகள்

1. இதுவரை பதிப்பில் வெளிவந்துள்ள அனைத்து நூல்களையும் ஒரே இடத்தில் கிடைக்கச் செய்தல்.

2. சுவடி நிறுவனங்களில், சுவடிகளைப் பற்றிச் சரியான விளக்கப் பட்டியல் இருக்கச் செய்தல்

3. சுவடி நூல்களைப் பதிப்பிக்க முன்வருபவர்களுக்கு அரசு மான்யம் அளித்தல், அனுமதி அளிக்க காலம் தாழ்த்தாமை.

4. சுவடி நூலகங்களில், சுவடிகளை நகல் எடுக்க வசதி செய்து தருதல்.

5. தேவையான மருத்துவ அகராதி, பரிபாஷை அகராதிகள் கலைக்களஞ்சியங்கள் தயாரித்தல்

6. சுவடிகளை நல்ல பாதுகாப்புடன் வைத்தல்

7. சுவடிப் பதிப்புகளைப் பொது நூலகத்தால் வாங்க அரசு ஏற்பாடு செய்தல்.

கீ.சு.நூ. - கீழ்த்திசை சுவடி நூலகம், சென்னை.

உ.த.ஆ.நி. - உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

**துணை நூல்கள்**

சூதமுனி வாக்கியம் : டாக்டர் அ. வாசுகிதேவி, வைத்திய சிந்தாமணி, வெண்பா ( ஆய்வு நூல் ).

*****

# 22. சித்தமருத்துவச் சுவடிகள் வெளிவந்தவை - வராதவை ஒரு பார்வை

மருத்துவர் கா. பழநிச்சாமி

ஓலைச்சுவடிகள் எண்ணிலடங்காது கிடைக்கின்றன. அவைகளைத் தொகுத்து வழங்குவதிலே உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும், தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையமும், சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகமும், பிற அரசு மற்றும் தனியார் நிறுவனங்களும் அவ்வப்போது முயன்று வருகின்றன. சமீபகாலமாக ஆசியவியல் ஆய்வு நிறுவனம் எங்கெல்லாம் ஓலைச்சுவடிகள் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன என்ற செய்திகளைத் திரட்டி அட்டவணைப்படுத்த இருப்பதாக அறிகிறோம். ஆக அட்டவணைகளை வெளியிடுவதில் காலம் வெகுவாகக் கழிந்து வருகிறதே தவிர, வெளியிடுதல் என்பது மிகவும் குறைவாகக் காணப்பெறுகிறது.

தமிழ் இலக்கிய ஓலைச்சுவடிகளை வெயிலென்றும், மழையென்றும், பசியென்றும் பாராது அலைந்து திரிந்து நூற்களாக வெளியிட்டுத் தமிழ் இலக்கியங்களுக்குப் பெருமை சேர்த்த தமிழ் தாத்தா டாக்டர் உ.வே. சுவாமிநாதர் அவர்களைப்போல் யாரும் இல்லையோ என்ற ஏக்க உணர்வு தோன்றுகிறது.

சித்தமருத்துவத்தில் 18 சித்தர் பரம்பரை என்ற வழக்கு உண்டு. 1924ஆம் ஆண்டு அக்கால அரசாங்கத்திற்கு இந்திய முறை மருத்துவங்களின் முன்னேற்றத்திற்காக உஸ்மான் என்ற மருத்துவரின் தலைமையின்கீழ் ஏற்படுத்தப் பட்ட குழு சமர்ப்பித்த அறிக்கையில் கண்டபடி அகத்தியர்

முதல் யூகி முனிவர் ஈறாக உள்ள சித்தர்களின் பெயர்களில் வெளிவந்திருந்த நூற்களின் எண்ணிக்கை 168. சித்தர்கள் பெயர்களைத் தாங்கி அப்போது வெளிவராது ஓலைச் சுவடியாகவே இருந்தவைகளின் எண்ணிக்கை 532.

1988ஆம் ஆண்டு மருத்துவர் பிரேமா அவர்கள் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியீடாக வெளியிட்ட நூலோதி என்ற நூலின்படி சித்தர்களின் பெயர்களைத் தாங்கி வெளிவந்துள்ள நூற்களின் எண்ணிக்கை 248.

சித்தர்கள் பெயர் குறிப்பிடாமல் நூலாக வெளிவந்தவைகள் சுமார் 400. 1934இல் இருந்து 1988 வரையிலான காலத்தில் சித்தர்களின் பெயர்களைத் தாங்கி அரிதாக வெளிவந்த நூல்கள் சுமார் 100.

உலகம் முழுதும் சித்தமருத்துவ ஓலைச்சுவடிகள் பல்வேறு நிறுவனங்களிலும் சேமித்து வைக்கப்பெற்று, ஒவ்வொரு நாளும் அழிந்து வருகின்றன. காலம் செல்லச்செல்ல ஒன்றுமே இல்லாது அழிந்துபோகும் நிலை ஏற்படலாம். சில நிறுவனங்களில் மைக்ரோ பிலிம் செய்து வைக்கின்றனர். இதனால் பாதுகாப்பதிலே காலத்தை நீடிக்கச் செய்யலாமே தவிர வேறொன்றும் செய்ய இயலாது. பல நிறுவனங்களில் ஓலைச்சுவடிகளுக்கு அட்டவணை செய்து வைத்துள்ளனர். இது என்னென்ன ஓலைச்சுவடிகள் உள்ளன என்பதை மட்டுமே தெரிவிக்கும். சில நிறுவனங்கள் விவர அட்டவணை செய்துள்ளன. அவைகள் ஓலைச்சுவடிகளில் என்னென்ன செய்திகள் உள்ளன என ஓரளவு வெளிப்படுத்துபவைகளாக அமையும்.

நம்முடைய எண்ணம் ஓலைச்சுவடிகளிலுள்ள செல்வங்களை நூலாக வெளிக்கொணர்ந்து விடுவோமானால் நாம் வெற்றி பெற்றவர்களாக விளங்குவோம். கிட்டதட்ட 64 ஆண்டுகளில் சுமார் 100 ஓலைச்சுவடிகள் நூலாக வெளிவந்துள்ளன என்றால் மிகவும் குறைவுதான். ஆசியவியல் நிறுவனம் எடுத்த கடுமையான முயற்சியினால் உலகம் முழுதும் உள்ள நூலகங்களில் உள்ள ஓலைச்சுவடிகளின்

எண்ணிக்கை சுமார் 65,000. இவைகளில் மருத்துவ ஓலைச்சுவடிகள் சுமார் 60 விழுக்காடு இருக்கும் எனக் கூறுவதால், மருத்துவ ஓலைச்சுவடிகளின் எண்ணிக்கை சுமார் 30,000. தனியாரிடம் இருப்பதைக் கணக்கில் சேர்க்கவில்லை. இவைகளைக் கண்ணுறும்போது நாம் விரைந்து செயல்படவில்லை என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

சமீபகாலமாக ஆசியவியல் நிறுவனம் அதிக முயற்சி எடுத்துப் பிற நிறுவனங்களில் உள்ள ஓலைச்சுவடிகளுக்கு விவர அட்டவணை செய்து வருவதாக அறிகிறோம். தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் உலகத் தமிழ்ச் சுவடி அட்டவணை என 5 தொகுதிகள் வெளியிட்டுள்ளமை பாராட்டுக்குரியது. அரசு, தனியார் நிறுவனங்களும், சுவடி நூலகங்களும் விளக்க அட்டவணைகளை வெளியிட்டுள்ளன. இவற்றை அடிப்படையாக வைத்துக்கொண்டு கீழ்க்கண்டவைகளைச் செய்து முடித்தோமானால் வெற்றி பெறலாம்.

1. இதுவரை வெளிவந்துள்ள நூல்களைப் பட்டியல் செய்ய வேண்டும்.

2. மொத்த ஓலைச்சுவடிகளில் வெளிவந்த ஓலைச்சுவடிகளை நீக்கி மற்றவைகளை எடுத்து வெளியிடலாம். அவைகள் 70-80 சதவீதம்.

3. ஒரே நிறுவனம் வெளியிடுவது இயலாது. எனவே வெளியிடுவதை ஒவ்வொரு நிறுவனமும் பங்கீடு செய்துகொண்டு வெளியிடலாம். எடுத்துக்காட்டாகத் திருமூலர் வைத்தியம் 8000 என்ற ஓலைச்சுவடியை நூலாக வெளியிட ஒரு நிறுவனத்திற்கு ஒதுக்கீடு செய்தோமானால், பிற நிறுவனங்கள் எல்லாம் அதே ஓலைச்சுவடி வைத்திருப்பின், அதனின்றும் எடுத்து எழுதிய கையெழுத்துப் பிரதியை நூலாக வெளியிட இருக்கும் நிறுவனத்திற்கு அனுப்பிடல் வேண்டும். அவர்கள் ஒப்புநோக்கி வெளியிடுதலில் விரைந்து செயல்பட முடியும்.

4. ஓலைச்சுவடிகளில் இருக்கின்ற செய்திகளை முதலில் அப்படியே படி எடுக்க வேண்டும். இந்தப் பணியைச் சில

நிறுவனங்கள் செய்து வருகின்றன. ஆனால் ஓலைகள் அழியும் நிலையோடு ஒப்பிட்டு நோக்கும்போது மிக மிகக் குறைவாக உள்ளது. எனவே விரைந்து படி எடுத்தால்தான் குறைந்த அளவு செய்திகளாவது அழிந்துவிடாமல் பாதுகாக்கலாம்.

5. படி எடுக்கப் பயிற்சி பெற்றவர்கள் உடனடியாகத் தேவை. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சுவடிப் பயிற்சி கொடுக்கப்பெற்று வருகின்றது. பெரும்பான்மையான சுவடிகள் படி எடுக்கப்பட வேண்டும்.

அ. சித்தமருத்துவத்திற்கும் பிற மரபு வழி மருத்துவத்திற்கும் அடிப்படை ஓலைச்சுவடிகள். எனவே சித்தமருத்துவம் பயிலும் மாணவர்களுக்கு உடற்கூறு, உடலியல்போன்ற பாடங்கள் கட்டாயமாக உள்ளதுபோல் சுவடியியல் படிப்பும் கட்டாயமாக்கப்பட்டுப் பயிற்சி கொடுக்க வேண்டும். ஒவ்வொரு மாணவரும் இரண்டாம் ஆண்டு இறுதியில் ஒவ்வொரு ஓலைச்சுவடியைத் தாளில் படி எடுத்துக் கொடுக்க வேண்டும். தேர்வும் மதிப்பெண்களும் கொடுக்க வேண்டும். இந்த நிலை ஏற்படின் ஆண்டிற்கு 150 வெளியிடாத ஓலைச்சுவடிகள் படி எடுக்கப்பெற்றுவிடும்.

ஆ. இதேபோல் தமிழகம் முழுவதும் உள்ள கல்லூரிகளில் இளங்கலைத் தமிழ் படிப்புக்கும் மாணவர்களுக்கும் கட்டாயமாக்கப்பட்டால் அவர்களுக்கும் ஆர்வம் ஏற்படுவதோடு படி எடுத்தவைகள் கூடுதலாகும்.

இ. நவீனமுறை மருத்துவத்தைத் தமிழில் சொல்லிக்கொடுக்க முயற்சி எடுக்கும் அரசு, நவீனமுறை மருத்துவ மாணவர்களுக்கும் இரண்டாம் ஆண்டு முடிவில் இந்த மருத்துவ மாணவர்களைப் போலப் படியெடுக்கும் பணியினைச் செய்ய வைத்தால் அவர்களுக்கு நம்மிடமுள்ள செல்வத்தை உணரச் செய்வதற்கும், பிறநாட்டவர்க்கு எடுத்துச் சொல்லவும் வாய்ப்பு அதிகமாகும். இந்த நிலையில் ஆண்டுதோறும் குறைந்தது 500 ஓலைச்சுவடியாவது படி எடுக்கப்படும்.

ஈ. அரசில் பணிபுரியும் சித்தமருத்துவர்களுக்கும், பரம்பரை சித்தமருத்துவர்களுக்கும் கோடைகாலப் பயிற்சி கொடுக்கப்பெற்று ஆண்டுதோறும் குறிப்பிட்ட நாட்களில் குறைந்தது ஒரு ஓலைச்சுவடியாவது படி எடுத்துக் கொடுக்க வேண்டும் எனக் கட்டாய மாக்கப்பட்டால் குறைந்தது 1000, ஓலைச்சுவடிகள் படி எடுக்கப்பெறும்.

6. இந்தப்பணி தொடர்ந்து 10 ஆண்டுகள் நடந்தால் இரண்டாவது கட்டமான படி எடுக்கும்பணி முடிவுற்று நம்முடைய முன்னோர்களின் மருத்துவச் சொத்து என்ன என்பதைத் தெளிவுபடத் தெரிந்து கொள்ளலாம்.

7. ஒரே செய்தியைப் பல்வேறு சித்தர் பெயர்களில் வெளிவந்துள்ளவைகளையும் சரிசெய்து வெளியிட வாய்ப்பு உள்ளது. எடுத்துக்காட்டாக அகத்தியர் காவியம் 100, தட்சிணாமூர்த்தி காவியம் 100, ஒன்றா, வேறு வேறா என்று அறிந்து வெளியிடலாம். ஒரே சித்தர் பெயரில் சூத்திர நூல் 80 என்பது 16 எனப் பலவாறு வருகின்றன. இவைகளில் 80ம் 16ம் அடக்கமா வேறு வேறா எனத் தெரியவும் வாய்ப்பு உள்ளது.

8. இதனால் தீர்க்க முடியாத நோய்களுக்குப் பல மருந்துகள் கண்டுபிடிக்க ஏதுவாக அமையும்.

9. எனவே இனிமேலும் காலத்தை வீணாகக் கழிக்காமல் விரைந்து நாமும், அரசும் செயல்பட்டால் தமிழர்களிடம் எண்ணற்ற மருந்துகளும், மருத்துவம் தொடர்புடைய செய்திகளும் உள்ளன என்பதை உலக மக்களுக்கு எடுத்தியம்பி உலக மக்கள் நோய் நொடியின்றி வாழ்ந்திட வழிவகை செய்யலாம்.

தமிழ்ச்சமுதாயத்திடம் இயற்கையிலேயே அமைந்திருக்கும் தன்முனைப்பைத் தட்டி எழுப்பிட வேண்டும். அதுவும் விரைந்து செயல்பட வேண்டும். இல்லையெனில் இடைக்காலத்தில் இச்சமுதாயத்திடம் வந்து ஒட்டிக் கொண்டிருக்கும் பிறநாட்டார் எதுவும் செய்யமாட்டார்களா!

கண்டுபிடிக்கமாட்டார்களா! என்ற ஏக்க உணர்வே நீடிக்கும். அதை நீடிக்கவிடக்கூடாது. விரைந்து செயல்படுவோம். வெற்றிகொள்வோம். மருத்துவ உலகுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவோம்.

*****

## கட்டுரைக்குத் துணைநின்ற நூல்கள்

1. *Siddhars Science of Longivity and Kalpa Medicine of India, Dr. A. Shanmugavelan.*

2. *Siddha Medical Manuscripts in Tamil, V.R. Madhavan.*

3. சித்தமருத்துவ நூலோதி, மருத்துவர் சே. பிரேமா.

4. உதிரும் மலர்கள், டாக்டர் ஜி. ஜான்சாமுவேல்.

# 23. தமிழகத்தில் மனுநீதிச் சோழன் கதைச் சுவடிகள்

புலவர் ச. திலகம்

சோழ மன்னர்களின் பெருமைகளுக்கு எல்லாம் திலகமாகத் திகழ்வது மனுநீதிச் சோழனின் கதையாகும். ஏறத்தாழ 1,600 ஆண்டுகளாக இக்கதையினைப் பல தமிழ்ச்சுவடிகள் எடுத்தியம்புகின்றன. சிலம்பில் தொடங்கி, இராமலிங்க வள்ளலார் காலம் வரை இக்கதை பெற்ற மாற்றங்களும், சிறப்புகளும் மொழிநடை அமைதியும் சுவை பயப்பனவாகும். இச்சுவடிகள் வரிசையில் தஞ்சைச் சரசுவதி மகால் நூலகத்தில் இதுவரை அச்சாகாத 3 சுவடிகள் உள்ளன. மனுநீதிச் சோழன் கதையில் இச்சுவடிகளின் சிறப்புப் பற்றி இனிக் காண்போம்.

> வாயிற் கடைமணி நடுநா நடுங்க
> ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத்தான் தன்
> அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
> பெரும்பெயர்ப் புகார் என்பதியே[1].

என்று கண்ணகியின் கூற்று வாயிலாக இளங்கோவடிகள் இக்கதையைச் சிலப்பதிகாரத்தில் இரத்தினச் சுருக்கமாகக் கூறியுள்ளார். இதன் பிறகு, தமிழ் இலக்கிய வரிசையில் செயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணியில் (முதலாம் குலோத்துங்கன் காலம்)

> அவ்வருக்கன் மகன்ஆதி மனுமேதினி புரந்து
> அரிய காதலனை ஆவினது கன்று நிகரென்று
> எவ்வருக்கமும் வியப்ப முறை செய்த[2]

என்று கூறுகின்றார்.

மையல்கூர் சிந்தனை யாவிற்கு முற்றத்
திருத்தேரில் மைந்தனை யூர்ந்த மறவோளும்[3]

என்று விக்கிரம சோழனுலாவும்,

பார்மேல் மருளப் பசுவொன்றின் அம்பர்
நோய்தீர உருளுந் திருத்தேர் உரவோன்[4]

என்று குலோத்துங்க சோழனுலாவும்,

அறவாழி மைந்தன் மேல் ஊர்ந்தோன்[5]

என்று இராசராச சோழனுலாவும்,

வெய்யோனும் செம்மலைப் பண்டூர்ந்த
தோரோனும்[6]

என்று சங்கர சோழனுலாவும், மனுநீதிச் சோழனின் பொற்புறு செயலைப் பறை சாற்றுகின்றன. அறவாழி மைந்தன் மேல் செலுத்திய இவ்வரிய நிகழ்ச்சி திருவாரூர்த் திருவீதியில் நடைபெற்றதாகச் சேக்கிழார் பெருமான் கூறுவார்.

செயங்கொண்டாருக்கும், சேக்கிழாருக்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த விக்கிரம சோழனின் அரிய கல்வெட்டொன்று[7] திருவாரூர்த் திருக்கோயிலில் உள்ளது. இக்கல்வெட்டுச் சாசனம் ஆரூர் வீதி விடங்கப் பெருமானே கூறுவதாக அமைந்துள்ளது. இதில் சேக்கிழாரின் பெரியபுராணத்தில் இடம்பெறாத பல செய்திகள் உள்ளன. மனுநீதிச்சோழனின் மந்திரியின் பெயர் இங்கநாட்டுப் பாலையூர் உடையான் உபய குலாமலன் என்றும் மனுவேந்தனின் மைந்தன் பெயர் பிரியவிருத்தன் என்றும் கூறுகிறது. உபய குலாமலன் என்னும் அமைச்சனின் வழித் தோன்றியவனான இங்கநாட்டுப் பாலையூர் உடையான் சந்திரசேகரன் ஆதிவிடங்கனான குலோத்துங்க சோழ மாபலி வானாதிராயன் என்பானுக்கு விக்கிரமசோழன் 120 குழி அளவில் பாரம்பரியமாக அனுபவித்து வரும் மனையை அவனுக்கு உறுதிசெய்து அளித்ததை இக்கல்வெட்டு கூறுகிறது. இக்கல்வெட்டில் மனுநீதிச் சோழனின் கதையும் சுருக்கமாகக் கூறப்பெற்றுள்ளது. இச் சாசனத்தின் துவக்கத்தில்,

"பூமாலை மிடைந்து பொன்மாலை திகழும்"

எனத் தொடங்கும் விக்கிரம சோழனின் மெய்க்கீர்த்தி கூறப்பெற்றுள்ளது. அம்மெய்க்கீர்த்தியில் தன் "கோயில் கொற்றவாயிற் புரத்து மணி நா ஒடுங்க" எனும் சொற்றொடர் காணப்பெறுகின்றது. "வாயிற் கடைமணி நடு நா நடுங்க" என்ற இளங்கோவடிகளின் அடியை இங்கு ஒப்பிட்டு நோக்கும்போது மணியோசை நடுங்குவதும், ஒடுங்குவதுமாக இரண்டு நிலைகளைக் காண்கிறோம்.

திருத்தொண்டர் மாக்கதையாம் பெரியபுராணத்தில் மனுவேந்தன் கதை மிக அழகாகக் கூறப்பெறுகின்றது. சேக்கிழார் பெருமானின் பாடல்கள் பின்னாளில் பல புலவர்களை மயங்கச் செய்துள்ளது. தஞ்சைச் சரசுவதி மகால் நூலகத்தில் தமிழ்த்துறையில் உள்ள சுவடிகளின் வரிசையில் **தேரூர்ந்த சோழபுராணம்** (சுவடி எண். 320) எனும் தலைப்பில் 85 ஏடுகளைக் கொண்ட நூலொன்றுள்ளது. இதனை இயற்றிய புலவர் பெயரை அறிய முடியவில்லை. சேக்கிழார் கூறும் மனுநீதிச் சோழனின் கதையைச் சற்று விரிவாகப் புதிய செய்திகளுடன் இந் நூலாசிரியர் கூறுகின்றார். நூலில் ஆங்காங்கே சேக்கிழாரின் பாடல் அடிகளின் தாக்கத்தைக் காணமுடிகின்றது.

தேர்க்காலில் கன்று இறந்துவிட மன்னவனின் கோயிலின் மணியினைத் தாய்ப்பசு ஒலிக்கச் செய்யவே, மகன் செய்த பிழையறிந்த மனுவேந்தன் அமைச்சர்களைக் கூட்டி என்ன செய்வது என்று வினவும் இடத்தில் சேக்கிழார்,

"மந்திரிக ளதுகண்டு மன்னவனை யடிவணங்கிச்
சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றார்
கொந்தலர்த்தார் மைந்தனைமுன் கோவதைசெய்
தார்க்கு மறை
யந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறமென்றார்"[8]

"வழக்கென்று நீர்மொழிந்தா் மற்றதுதான்
வளப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறுநோய்
மருந்தாமோ?

இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ்
சொல்லியவிச்
சழக்கின்ற நாளிசைந்தாற் றருமந்தான் சலியாதோ”[9]

என்று பாடியருளியிருக்கின்றார்.

தேரூர்ந்த சோழ புராணமோ,

நாட்டும் புகழ்புனை மந்திரிகள்
நவின்ற வாசகமது கேட்டு
மூட்டும் மெருங்கனல் தன்னிலிட்ட
முளரி போல முகம்வாடித்
துன்று புரிகுழல் செம்பியர்கோன்
சொன்னவமைச் சரைஅம் முகம்பாரார்
நன்று நீர்தான் சொன்னபடி
நடுவும் பாரா ராய்இருந்தீர்
வீட்டிற் படுந்தீ பட்டெரிய
வெளியிலே நீரை விடுவார்களோ
ஈட்டும் பயிர்தீர்ந் துலந்துவிட
இல்லாப் பாழுக் கிறைப்பார்களோ
போதப் பசிகொண்டு சிலர்வருந்தப்
புளித்தேப் பவர்க்குச் சோறிடுவார்களோ
காதற் குலமகள் தான்வருந்தக்
கள்ள மாதரைக் கருதுவரோ.
வென்றி மறையவர் சொற்கேட்டு
வேண்டும் தானங்கள் மிகவீந்தால்
கன்றை யிழந்து வருந்து....
கற்றாய்க்கு மருந்தாமோ[10]

என்று கூறுகிறது. அதுபோலவே,

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக்குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர் தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ[11]

என்று சேக்கிழார் குறிக்குமிடத்தைப் புராண ஆசிரியர்,

போராடும் படைப்பயமும் பொருட்பயமும்,
பொய்மொழியும்
பாராத கட்டுரையும் பசிப்பழியும் பலபழியும்
தாராரும் படைப்பயமும் தண்புயமும் திண்புவியில்
வாராமற் காப்பவனே மாநிலங்கா வலாவான்[12]

என்று கூறுகின்றார். இதுபோன்று இச் சுவடி நூல் முழுவதும் பெரியபுராணத்தின் தாக்கத்தையும் சேக்கிழாரின், சொல்லழகையும் காணமுடிகின்றது.

**தேரூர்ந்த சோழன் கதை**

முற்றிலும் வசனநடையில் அமைந்த இந்நூல், 21 ஏடுகளைக் கொண்டு திகழ்கிறது. இந்நூலின் இறுதியில் காணப்படும் தெலுங்குக் குறிப்பு[13] இந்நூல் ஒரு தளவாய் பதவி வகித்தவருக்குச் சொந்தமானது என்றுள்ளது. இக்குறிப்பு இந்நூல் தஞ்சையை ஆண்ட நாயக்கர்கள் காலத்தில் தோன்றியிருக்கலாம் எனக் கருத இடந்தருகிறது. தஞ்சை மராட்டிய மன்னர்களும் இந்நூலைப் போற்றிக் காத்துள்ளனர்.

தியாகேசர் குறவஞ்சி, தேரூர்ந்த சோழ புராணம் போன்ற நூல்கள் கூறும் மனுநீதிச் சோழனின் கதை இச்சுவடியில் வசனநடையில் எழுதப்பெற்றுள்ளது.

கன்றை இழந்த பசுவின் துயரறிந்த மனுவேந்தன், தன் தேவியை அழைத்து,

நான் செய்த தோழமென்ன? வேறு
ராச்சியத்தை அநியாயம் பண்ணி அடந்-
தோற்றமாக இறைகொண்டேனோ?
தேவதானம், மடப்பிரதானம், சிவநிந்தை,
குருநிந்தை செய்தேனோ? தண்ணீர்ப்பந்தல்,
நந்தவனம், திருவாசல் கோயில் மதில்களைப்
பிடுங்கி எல்லாம் மாறாட்டம் செய்தேனோ?
ஜனங்களைத் தூர்பித்தேனோ? மதத்துகளை,
தபோதனர்களை, மாதாபிதாவை இடறு

சொல்லப் பார்த்திருந்தேனோ? தீர்த்தவாசி
மயேசுரரை நிந்தை செய்தேனோ? ஊமை,
குருடர், முடவர், ஏழை சனங்களைக் கடித்துப்
பறித்தேனோ? வேதசாத்திரத்தைப் பழித்தேனோ
கறையில்லாத கண்டத்தோரையும், கறைபடும்
களியாரையும் கலந்தேனோ? ஆசார
ஈனம் பண்ணினேனோ? ...... சந்தியான
விரதங்களைத் தவிர்த்தேனோ? நம்பின
பேரைக்கைவிட்டு அற்பரையாளாக்கி-
னேனோ? வங்கிஷவான்களை நிந்தை
செய்தேனோ? துணையாகக் கூடிப்போய்
நடுவழியிலும், நட்டாற்றிலும் கை
விட்டேனோ? பாலகரை விருத்தரைக்
கொல்வித்தேனோ? நடுங்கப்பணிகொண்டு
கூலிக்கு நாளை வாவென்றேனோ? ஊர் முனிய
வாழ்த்தேனோ? விழுந்த பசுவை யெடாமல்
விலகிப் பார்ப்பேனோ? திருக்கோயில் மாதரைச்
சேர்ந்தேனோ? வாழை மரங்களை வெட்டிக்
கிணறுகளைத் தூர்ப்பித்தேனோ? கல்வெட்டுக்களை
யழித்தேனோ? நட்டகல்லைப்பிடுங்கி எல்லை
மாறாட்டஞ் செய்தேனோ? இந்தப்பசுவின்
பழிக்கு எந்த அளவிலே தீர்த்து அறுவிட்டுக்
கொடுப்பேன்?

என்று புலம்பும் பாங்கு குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் இதே கதையினை இராமலிங்க வள்ளலார் மனுமுறை கண்ட வாசகம் என்ற தலைப்பில்[14] வசன நடையில் எழுதியுள்ளார். அவருடைய நூலில் மனுநீதிச் சோழன் புலம்பும் இடத்தில்

நல்லோர் மனத்தை நடுங்கச் செய்தேனோ
வலிய வழக்கிட்டு மானங் கெடுத்தோனோ
தானங் கொடுப்போரைத் தடுத்து நின்றேனோ
கலந்த சிநேகரைக் கலகஞ் செய்தேனோ

மனமொத்த நட்புக்கு வஞ்சகஞ் செய்தேனோ
குடிவரி யுயர்த்திக் கொள்ளைகொண்டேனோ
ஏழைகள் வயிறு எரியச் செய்தேனோ
தருமம் பாராது தண்டஞ் செய்தேனோ
மண்ணோரம் பேசி வாழ்வழித்தேனோ
உயிர்க்கொலை செய்வோர்க்கு உபகாரஞ்
செய்தேனோ.
களவு செய்வோர்க்கு உளவு சொன்னேனோ
பொருளை இச்சித்துப் பொய் சொன்னேனோ
ஆசைகாட்டி மோசஞ் செய்தேனோ
வரவு போக்கொழிய வழியடைத்தேனோ
வேலையிட்டுக் கூலி குறைத்தேனோ
பசித்தோர் முகத்தைப் பாராதிருந்தேனோ
இரப்போர்க்குப் பிச்சை இல்லையென்றேனோ
கோள் சொல்லிக் குடும்பங் கலைத்தேனோ
நட்டாற்றில் கையை நழுவ விட்டேனோ
கலங்கியொளிந்தோரைக் காட்டிக் கொடுத்தேனோ
கற்பழிந்தவளை களித்திருந்தேனோ
குருவை வணங்கக் கூசி நின்றேனோ
குருவின் காணிக்கை கொடுக்க மறந்தேனோ
கற்றவர் தம்மைக் கடுகடுத்தேனோ
பெரியோர் பாட்டிற் பிழைசொன்னேனோ
பக்ஷியைக் கூண்டில் பதைக்க அடைத்தேனோ
கன்றுக்கு பாலூட்டாது கட்டி வைத்தேனோ
ஊன்சுவை யுண்டு உடல்வளர்த்தேனோ
கல்லும் நெல்லும் கலந்து விற்றேனோ
அன்புடையவர்க்குத் துன்பஞ் செய்தேனோ
குடிக்கின்ற நீருள்ள குளந் தூர்த்தேனோ
வெயிலுக் கொதுங்கும் விருக்ஷ மழித்தேனோ
பகைகொண்டு அயலோர் பயி ரழித்தேனோ
பொதுமண்டபத்தைப் போயிடித்தேனோ
ஆலயக் கதவை அடைத்து வைத்தேனோ
சிவனடி யாரைச் சீறி வைதேனோ

தவஞ் செய்வோரைத் தாழ்வு சொன்னேனோ
சுத்த ஞானிகளைத் தூஷணை செய்தேனோ
தந்தைதாய் மொழியைத் தள்ளி நடந்தேனோ
தெய்வ மிகழ்ந்து செருக்கடைந்தேனோ
என்ன பாவம் செய்தேனோ! இன்னதென்றறியேனே

சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள தேரூர்ந்த சோழன் கதை என்னும், இதுவரை அச்சாகாத இச்சுவடி நூலின் தாக்கம் அப்படியே வள்ளலாரின் நூலில் இடம்பெற்றிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

## மனுநீதிச் சோழ மகாராச நாடகம்

தஞ்சாவூர் மாவட்டம் வலங்கைமானுக்கு அருகில் உள்ள ஆண்டாங்கோவில் என்னும் சிற்றூரில் (இவ்வூர் தேவாரத்தில் கடுவாய்க்கரை தென்புத்தூர் என்று அழைக்கப் பெறும்) உள்ள திரு. காத்தய்யா வாயாடியார் என்பவரின் மூதாதையர்களால் பேணிக் காக்கப்பட்ட அரும் சுவடி நூல் ஒன்று உள்ளது. இதன் படியினைச் சரசுவதி மகால் நூலகத்தின் தமிழ்ப் பிரிவில் காணலாம்.

ஏறத்தாழ கி.பி. 1700இல் எழுதப்பெற்ற இச்சுவடி நூலில் காணப்பெறும் பாடல்களை ஆண்டுதோறும் ஆண்டாங் கோயிலில் இசை நாட்டிய நாடகமாக நடித்து வருகின்றனர். இச் சுவடி நூலில், சேக்கிழாரின் பெரியபுராணம் கூறும் மனுநீதியின் கதை, கால வளர்ச்சியில் பல மாற்றங்கள் பெற்றுக் காணப்பெறுகின்றது. ஒவ்வொரு பாடலிலும் அப்பாடலுக்கு உரிய ராகம் பாடல் வரிகளிலேயே கூறப்பெற்றிருப்பது சிறப்பு அம்சமாகும். இச்சுவடியில் ஆரூர்க் கோயிலின் திருக்கோபுர வாயிலின் சிறப்பு கூறுமிடத்து,

வாசலிது வாசலிது மகராசன் வாசலிது
நேசமு சுகுந்த மன்னன் நிதந்துதிக்கும் வாசலிது
அம்மே மறைநூலுங் கோபுரமாய் வான்கிழிக்கும்
நிறையாறு சாத்திரங்கள் நிறைந்திருக்கும் வாசலிது
அம்மே சைவநெறியாகமங்கள் தழைத்தோங்கும்
வாசலிது

மெய்யுரை செய்மூ வர்தமிழ் விளங்கிநிற்கும் வாசலிது
அம்மே வார்பெருங் குமிழ் முலையாள்
வளர்நடஞ்செய் வாசலிது
சீர்பெருகும் மனுநீதி செழிக்கத் தோடிபாடுமிது
அம்மே[15]

இச்சுவடிக்கும், காலத்தால் முந்தியதாகத் தேரூர்ந்த சோழபுராணம் எனும் சுவடியில் ஆரூர்க் கோயிலின் கோபுர வாயிலை விவரிக்குமிடத்து,

வானவர் பணியும் கோபுரம்
மாலயன் மருவும் கோபுரம்
ஞானிகள் உறையும் கோபுரம்
நான்மறை புகழும் கோபுரம்
யோகிகள் உறையும் கோபுரம்
யோகமதொழியும் கோபுரம்
மானுருவது கொண்டோர்
வாயாவரு மகிழுங் கோபுரம்[16]

என்ற பாடலையும், இதே மனுநீதிச் சோழனின் வரலாற்றைக் கூறும் தியாகேசர் குறவஞ்சி எனும் சுவடி நூலில் காணப்பெறும்,

வாசலிது வாசலிது
மகராசன் வாசலிது
மலர்மகளுங் கலைமகளுங்
வளர்ந்தோங்கும் வாசலிது
சிலைமதவேள் சகஜிராசன்
தினம்பணியும் வாசலிது
வாசவனும் மாலயனும்
வணங்குமணி வாசலிது
நேசமுசு குந்த மன்னன்
நிதந்துதிக்கும் வாசலிது
மறைநான்கும் கோபுரமாய்
வான்கிழிக்கும் வாசலிது
நிறையாறு சாத்ரபுராணங்கள் நிறை வாசலிது

சைவநெறி யாகமங்கள்
தழைத்தோங்கும் வாசலிது
மெய்யுரை செய்மூவர்தமிழ்
விளங்க நிற்கும் வாசலிது
மதிகதிருந் தினந்தவழ் பொன்
மதிலோங்கும் வாசலிது
துதிகொள்விட்ட வாசல்வளர்
தும்பிமுகன் வாசலிது[17]

என்ற பாட்டையும் ஒப்பிட்டு நோக்கும்போது, சேக்கிழார் காலத்திலிருந்து, இச் சுவடி நூல்கள் அனைத்தும், மொழி வளத்தாலும் பாடல்கள் அமைதியாலும் ஓர் இணைப்போடு திகழ்வதைக் காணமுடிகின்றது. தியாகேசர் குறவஞ்சியில் குறவஞ்சி இலக்கணத்திற்கேற்பக் கதையமைப்பில் சில மாறுபாடுகளைக் காணமுடிகின்றது.

சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள மனுநீதிச் சோழன்கதை கூறும் சுவடிகள் தவிர, சென்னைக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலும் மேனாட்டில் உள்ள சில நூலகங்களிலும் இக்கதை கூறும் ஏட்டுச் சுவடிகள் உள்ளன.

சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் தேரூர்ந்த வாசகம் என்னும் தலைப்பில் 6 ஏட்டுச் சுவடிகள் உள்ளன. இதே நூலகத்தில் முத்துக்கூடன் என்பவரது மகனான லட்சுமி நாராயணன் என்பவர் எழுதிய **தேரூர்ந்த புராணம்** எனும் சுவடி நூலும் உள்ளது. மேலும் **தேரூர்ந்த நாடகம்** என்ற தலைப்பில் 2 சுவடிகள் உள்ளன. **தேரூர்ந்த சோழன் கதை** என்னும் தலைப்பில் டென்மார்க் ( கோபன் ஹேகன் ) ராயல் நூலகத்தில் ஒரு சுவடியும், **தேரூர்ந்த சோழன் சரித்திரம்** என்ற தலைப்பில் பிபிலாதேகு நேஷனல் நூலகம், பாரிஸ், பிரான்ஸ் நாட்டில் ஒவ்வொரு சுவடியும், **தேரூர்ந்த மன்னன் கதை** என்ற தலைப்பில் உரைநடைச் சுவடி ஒன்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலும் உள்ளன.

சிலம்பில் தொடங்கி வள்ளலார் வசனநூல் வரை பல்வேறு சுவடிகளில் இடம் பெற்றுள்ள இம் மனுவேந்தனின்

கதையமைப்பிலும், மொழியமைப்பிலும் பல்வேறு நிலைகளைக் காணமுடிகின்றது. சரசுவதி மகால் நூலகத்தில் உள்ள அச்சில் வெளிவராத சுவடிகளான **தேரூர்ந்த சோழன் கதை வசனம், மனுநீதிச் சோழ மகாராச நாடகம்** ஆகியவை விரைவில் அச்சு நூல்களாக மலர்வதற்கு ஆவன செய்து வருகிறோம். இவை போன்று கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், பிரான்ஸ், டென்மார்க் ஆகிய இடங்களில் உள்ள நூலகச் சுவடிகளும் பதிப்பிக்கப்பெற்று, அவற்றின் துணையுடன் மனுநீதிச் சோழன் கதை குறித்து, ஒப்பாய்வு செய்வோமாயின் பல சுவையான அரிய தகவல்களைப் பெறமுடியும். அவை தமிழை அணிசெய்யும் என்பதில் ஐயமில்லை.

### அடிக்குறிப்புகள்

1. சிலப்பதிகாரம் - வழக்குரை காதை அடிகள் 53-54.
2. கலிங்கத்துப் பரணி - இராச பாரம்பரியம், பாடல் எண்.187.
3. விக்கிரம சோழனுலா - அடிகள் 6-8.
4. குலோத்துங்கன் சோழனுலா - அடிகள் 2-4.
5. இராசராச சோழனுலா - அடி 5.
6. சங்கர சோழனுலா, கண்ணி எண்.3.
7. திருவாரூர்த் திருக்கோயில், குடவாயில் பாலசுப்ரமணியன், கல்வெட்டு எண்.27, S.I.I. Vol.5, No.455.
8. திருத்தொண்டர் புராணம், திருநகரச் சிறப்பு, பாடல் எண்.34.
9. மேலது, பாடல் எண்.35.
10. தேரூர்ந்த சோழ புராணம், சுவடி எண்.320, 68ஆம் ஏடு.
11. திருத்தொண்டர் புராணம், திருநகரச் சிறப்பு, பாடல் எண்.36.
12. தேரூர்ந்த சோழ புராணம் - சுவடி எண்.320, 70ஆம் ஏடு.

13. தேரூர்ந்த சோழன் கதை - சுவடி எண்.215.

14. மனுமுறை கண்ட வாசகம் - திருவருட்பா, பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பு, பக்கம் 31-32.

15. மனுநீதி சோழ மகாராச நாடகம் - சரசுவதி மகால் கைப்பிரதி, பக்கம் 24.

16. தேரூர்ந்த சோழ புராணம், சுவடி எண்.320, 56ஆம் ஏடு.

17. தியாகேசர் குறவஞ்சி - சரசுவதி மகால் நூலகம் வெளியீடு, வெளியீடு எண்.13, பக்கம் 64-65.

*****

# 24. டாக்டர் நா. வானமாமலை அவர்களின் சமூகக் கதைப்பாடற் பதிப்புகள்

முனைவர் சூ. நிர்மலா தேவி

தமிழ்த் திறனாய்வுலகில் மார்க்சீயப் பார்வையயை முன்வைத்து, எதார்த்தவியலை வற்புறுத்தி, சில மரபுகளை வகுத்து, புதிய திருப்பங்களை உண்டாக்கி, விஞ்ஞான சோஷலிசத் திறனாய்வாளராகத் திகழ்ந்தவர் டாக்டர் நா. வானமாமலை அவர்கள். 35 ஆண்டுகள் தமிழ்ப் பணி ஆற்றிய இந்த மார்க்சீய அறிஞரின் ஆய்வு முறை தொல்லியல், தொல்பொருள் வரலாறு, மானிடவியல், சமூகவியல், அறிவியல் என்ற அத்துணையையும் உள்ளடக்கியது. ஆராய்ச்சி இதழ் மூலம் ஆராய்ச்சிப் பட்டாளத்தை உருவாக்கிய இவர், நாட்டுப்புற இலக்கியத்தைப் பேணி வளர்த்த விற்பன்னர்.[1] நாட்டுப்புறக் கதைப்பாடல் பதிப்புகளின் முன்னோடி எனக் கருதப்படும் இவரது சமூகக் கதைப்பாடல் பதிப்புகளைத் திறனாய்வு செய்வதே இந்த ஆய்வுக்கட்டுரையின் நோக்கம்.

## நா.வா.வின் கதைப்பாடற் பதிப்புகள்

தெய்வீக, புராண, இதிகாச, காவிய, சமூக, வரலாற்றுக் கதைப்பாடல் வகைகளில் சமூகக் கதைப்பாடல்கள், வரலாற்றுக் கதைப்பாடல் பதிப்புகளில் பேரார்வம் காட்டி இவ்வகைக் கதைப்பாடல்களில் எட்டு கதைப்பாடல்களைச் சிறப்பான முறையில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார் டாக்டர் நா.வா. அவர்கள். அவை,

1. வீரபாண்டியக் கட்டபொம்மு கதைப்பாடல்[2]
2. கட்டபொம்மு கூத்து[3]
3. கட்டபொம்மன் கதைப்பாடல்[4]

4. வீணாதி வீணன் கதை[5]

5. கான் சாகிபு சண்டை[6]

6. முத்துப்பட்டன் கதை[7]

7. காத்தவராயன் கதை[8]

8. ஐவர் ராசாக்கள் கதை[9]

என்பனவாகும். இவற்றில் சமூகக் கதைப்பாடல் பதிப்புகளான முத்துப்பட்டன் கதை, காத்தவராயன் கதை, வீணாதி வீணன் கதைப் பதிப்புகளை இக்கட்டுரை திறனாய்வு செய்கிறது.

## முத்துப்பட்டன் கதைப்பதிப்பு முறை

குமரி மாவட்டம் தாமரைக் குளத்திலிருந்து நண்பர் வேலாயுதம் பெற்றுத்தந்த இரு ஓலைச்சுவடிகளை, இரு அச்சுப்பிரதிகளுடன் ஒப்பிட்டு, பெரும்பாலும் ஓலைச்சுவடியைப் பின்பற்றி இக்கதைப்பாடல் பிரதி செய்யப்பட்டது என்றும், நெல்லையில் வழங்கும் வில்லுப்பாட்டு ஏடுகள் சிலவற்றை ஒப்புநோக்கி எழுதப்பட்டது என்றும் உள்ள இரு குறிப்புகளை முத்துப்பட்டன் கதை ஆராய்ச்சி என்ற பகுதியில் தருகிறார்.

இக்கதைப்பாடற் பதிப்பை 4 பகுதிகளாகப் பகுத்துக் கொண்டுள்ளார். முதலில் அமையும் முத்துப்பட்டன் கதை என்ற தலைப்பில் ஏழு பக்கங்களுக்குக் கதைச் சுருக்கம் இடையிடையே பாடல் வரிகளுடன் காணப்படுகிறது.

இரண்டாவதாக அமைந்துள்ள முத்துப்பட்டன் கதை - ஆராய்ச்சி 23 பக்கங்களில் இக்கதைப்பாடற் பதிப்பைப் பற்றிய அனைத்து விளக்கங்களும் அமைந்ததாக உள்ளது.

மூன்றாவதாக முத்துப்பட்டன் வில்லுப்பாட்டு என்ற மூலம் 19 பக்கங்களில் இடம்பெற்றுள்ளது. இதில் காப்பு, நாட்டுவளம், முத்துப்பட்டனின் கல்வி அறிவு, தமையன்மார்களுடன் சண்டையிட்டு கொட்டாரக்கரை செல்லுதல், முத்துப்பட்டனின் ஆற்றலைக் கொட்டாரக்கரை மன்னன் காணுதல் என்ற உட்தலைப்புகள் பதிப்பாசிரியரால் இடப்பெற்றிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது. இது குறித்த விளக்கமும், சுவடியிலிருந்த எழுதுமுறை, எழுத்துமுறை

குறித்த விளக்கங்களும் இவர் பதிப்பில் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

நான்காவதாக குறிப்புகள் என்ற பகுதியின் கீழ், கடினமான சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், அரிய சொற்கள் என்ற 44 சொற்களுக்கு விளக்கம் கொடுத்துள்ளார்.

## முத்துப்பட்டன் கதைச் சுருக்கம்

அந்தணர் குலத்தவனான முத்துப்பட்டன் செருப்புத் தைக்கும் தொழில் செய்துவந்த வாலப்பகடையின் பெண் மக்கள் இருவர் பாடிய நாட்டுப் பாடலில் ஈடுபட்டு அவர்கள்மீது காதல் கொண்டு, அவர்களை மணந்துகொண்டு அவர்கள் குலத் தொழிலைச் செய்து, அவ்வினப் பாதுகாவலனாய் வாழ்க்கை நடத்தி வருகிறான். தென்பாண்டி நாட்டிலிருந்து திருவனந்தபுரம் செல்லும் பொதிமாட்டு வண்டிகளுக்கு மலைப்பாதையில் பாதுகாப்பளிக்கிறான். பக்கத்து ஊர்களிலிருந்த ஜமீன்தார்களின் உதவியோடு காட்டுப்பாதையில் வரும் பொதிமாட்டு வண்டிகளைக் கொள்ளையடித்து வந்த கொள்ளைக்காரர்களுக்கு முத்துப்பட்டனின் பாதுகாவலிருந்த பகுதிகளில் நுழைய முடியவில்லை. இதனால் உயர்குலத்தில் பிறந்து சக்கிலியனாகிவிட்ட முத்துப்பட்டன்மீது பகைமை கொண்ட அவர்கள் ஒருநாள் இரவு முத்துப்பட்டன் உடல்நலமின்றி இருக்கும்போது அவன் பாதுகாவலிலுள்ள மாடுகளை ஓட்டிச் செல்கின்றனர். செய்தியறிந்து ஓடிவந்த முத்துப்பட்டன் போரிட்டு அனைவரையும் மடியச் செய்கிறான். அனைவரையும் கொன்றுவிட்டோம் என எண்ணி அவன் மீளும்போது, மறைந்திருந்த ஒருவன் அவனை முதுகில் குத்திக் கொன்றுவிடுகிறான். செய்தியறிந்த மனைவியர் ஓடிவந்து, ஒப்பாரி வைத்து சிங்கம் ஜமீன்தாரின் அனுமதியோடு உடன்கட்டையேறி மடிகின்றனர். இதுவே இவர் பதிப்பித்துள்ள கதைப்பாடலின் சுருக்கமாகும்.

## முத்துப்பட்டன் கதை - ஆராய்ச்சி

இவ்வாறு வழங்கிவரும் கதைப்பாடலை வில்லுப்பாடலில் பாடும் முறைப்படியும், ஏட்டில் உள்ள முறைப்படியும் பதிப்பித்துள்ள இவர் கதைப்பாடலின்

உண்மை வடிவம் எது என்பதைப் பல கோணங்களில் ஆராய்ந்து முத்துப்பட்டன் கதை - ஆராய்ச்சி என்ற பகுதியில் தெளிவுபடுத்தியுள்ளார்.

(1) கதைப்பாடல் குறிப்பிடும் இடப்பெயர்கள், ஆட்சியாளர் பெயர்கள், கதைப்பாத்திரச் சாதி கால்கொண்ட இடம்,, கதைத்தலைவனின் தெய்வக்கோயில் என்ற நான்கு கருத்துகளின் அடிப்படையில் காலத்தை உறுதி செய்து கி.பி. 1658 முதல் 1738 முடிய உள்ள காலகட்டத்தில் கதை நிகழ்ச்சி நடைபெற்றிருக்க வேண்டும் என்று காலத்தை வரையறை செய்துள்ளார்.

(2) கதைத்தலைவன் முத்துப்பட்டனை ஆரிய நாட்டவன் எனக் கதைப்பாடல் குறிப்பிடுவதால் இந்த ஆரிய நாடு எது என்பதைத் திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற இலக்கியச் சான்றுகள் மூலம் தெளிவுபடுத்தி, மேற்கு மலைத் தொடரின் தென்நிலப்பகுதியிலுள்ள குற்றாலம் உள்ளிட்ட மேல்மலைநாட்டுச் சிற்றூர்களே ஆரியநாடு என நிறுவியுள்ளார்.

(3) சக்கிலியர்கள் எக்காலகட்டத்தில் நெல்லைப் பகுதியில் பரவியிருக்கக்கூடும் என விவரித்து, கதை நிகழ்ச்சிகள் உண்மையே என உறுதிப்படுத்தியுள்ளார்.

(4) கதைத் தலைவன் முத்துப்பட்டன் தெய்வமாக வணங்கப்படும் பட்டவராயன் கோயிலுக்குச் சென்று கோயில் அமைந்துள்ள பொதிகைமலை, பட்டவராயன் சிலை அமைப்பு, இவன் மனைவியரான பொம்மக்கா, திம்மக்கா என்போரின் சிலை அமைப்பு, பட்டன் பயன்படுத்திய ஈட்டி, வல்லயம் போன்ற கருவிகள் இன்றும் கோயிலில் உள்ளமை, கோயில் முன்னுள்ள பாறைக் கல்வெட்டு, மலையில் நான்கு மைல் மேலேயுள்ள ஆதிபட்டவராயன் கோயிலிலேயே முன்பு சிலைகள் இருந்த விவரம், நேர்த்திக்கடனாக இன்றும் மக்கள் இக்கோயிலில் ஈட்டி, வல்லயம், செருப்பு போன்றவற்றைக் காணிக்கையாகச் செலுத்துகின்றமை, மலையின் பல பகுதிகள் கதை நிகழ்ச்சிகளுடன் தொடர்புபடுத்தப்பட்டுப் பசுக்கிடை விளை, கச்சைகட்டி முடுக்கு, படுகளப்பாறை எனப் பெயரிடப்பட்டுள்ள விவரங்கள் என்று இவை அனைத்தையும்

கள ஆய்வை மேற்கொண்டு கண்டறிந்து கதை நிகழ்ச்சிகள் உண்மையில் நடந்தவையே என்பதை மேலும் உறுதிப் படுத்தியுள்ளார்.

(5) பட்டவராயன் கோயிலில் முத்துப்பட்டன் கதையை வில்லுப்பாட்டாகப் பாடும் பரம்பரையைச்சேர்ந்த முத்துப்புலவர் என்பவரையும், கதை குறிப்பிடும் ஜமீனின் ஊரான சிங்கம்பட்டியைச் சேர்ந்த 100 வயது நிரம்பிய சுப்பிரமணியக் கவிராயர் என்பவரையும் சந்தித்து, இவர்களை நேர்முகத் தகவலாளிகளாகப் பயன்படுத்தி, கதை தொடர்பான பல விளக்கங்களைக் கேட்டறிந்து பதிப்பில் பயன்படுத்தியுள்ளார்.

(6) முத்துப்புலவர் பாடும் முத்துப்பட்டன் கதையில் பொம்மக்கா, திம்மக்காவைப் பிராமணப் பெண்களாக மாற்றிப் பாடியதற்குக் கோவிலுக்கு வரும் உயர்சாதியினரின் வற்புறுத்தலே காரணம் என்று இப்புலவர் ஒத்துக் கொண்டதை வெளிப்படுத்தியுள்ளார். உண்மையில் சக்கிலியர் குலப் பெண்களான பொம்மக்கா-திம்மக்காவை அந்தணனான முத்துப்பட்டன் சாதி, ஏற்றத்தாழ்வு கருதாது மணந்து, அவ்வினத்தாரின் பாதுகாவலனாக உயர்ந்ததை விளக்க வந்த இக்கதையின் உயிர்நாடியே இதனால் அடியோடு துண்டிக்கப் பட்ட விவரத்தை வெளிக்காட்டி, பதிப்பாசிரியர்கள் நாட்டார் படைப்புகளில் இத்தகு இடைச் செருகல்கள் ஏற்படுவதை இனங்கண்டு எடுத்துக்காட்ட வேண்டும் என எச்சரிக்கை செய்துள்ளார்.

(7) முத்துப்பட்டன் இறப்பின் பின்னர் உடன்கட்டையேற விரும்பிய பொம்மக்கா-திம்மக்கா சிங்கம்பட்டி சமீன்தாரிடம் அனுமதி கேட்டதாகவும், அவர் இந்த இளம் வயதில் இறக்க வேண்டாம் எனக்கூறி,

> "நித்தமொரு பட்டுடுத்தி நினைத்தபடி பூமுடித்து
> ..................
> மேனி நனையாமல் வேறுமுகங் காணாமல்
> சேனைதளம் சூழ்ந்திருக்கச் சிங்காதனத்தி லிருங்கோ"

என்று தன் மனைவியரோடு மனைவியாக வந்து இருக்க அழைத்ததாகக் கதைப்பாடலில் வரும் நிகழ்ச்சிகள்,

நிகழ்ந்திருக்க வாய்ப்பில்லை என்று சிங்கம்பட்டி சுப்பிரமணியக் கவிராயர் உரைத்ததாக எடுத்துக் காட்டியுள்ளார். இதற்கு அக்கவிராயர் சொன்ன காரணமாகக் கதை நடந்த காலத்தில் நீலகண்டன் என்ற தொட்டியானது மேற்பார்வையில் மலைக் காவல் இருந்ததாகவும் பின்னர் இவனை நல்லகுட்டி என்பவன் கொன்றுவிட்டு சிங்கம்பட்டி ஜமீனை நிறுவியதாகவும், எனவே கதை நடந்த காலத்தில் சிங்கம்பட்டி சமீனே தோன்றவில்லை என்று சொன்னதாக எடுத்துக் காட்டுகிறார். எனவே, ஜமீன்தார், பொம்மக்கா-திம்மக்காமீது ஆசை கொண்டதாக உள்ள பகுதியும் பிற்காலச் சேர்க்கையே என இயம்பியுள்ளார்.

(7) அச்சுப்பாட்டிலிருந்து முத்துப்புலவரின் கதை வேறு பல இடங்கள் என ஆறு கருத்துகளைக் காட்டி, இவை பதிப்பித்துள்ள கதையில் விடப்பட்டுள்ளன எனத் தெளிவு படுத்தியுள்ளார்.

(8) கதைப்பாத்திரங்களின் இயல்புகளை விளக்கிச் சொல்லி, இறுதியில் முத்துப்பட்டன் கதை போன்று காதலுக்காக உயிர்துறந்த பளிச்சியம்மன் கதை, சின்ன நாடான் கதை என்ற இரு கதைகளை விவரித்துத் தன் கதை ஆராய்ச்சிப் பகுதியை முடித்துள்ளார்.

ஒரு சமூகக் கதைப்பாடலை இடைச்செருகல்கள், பிற்சேர்க்கைகள் அறிந்து, கள ஆய்வு மேற்கொண்டு நேர்முகத் தகவல்களைத் திரட்டி செம்மையுற எவ்வாறு பதிப்பிக்க வேண்டுமோ அம்முறைப்படித் திருத்தப்பதிப்பாக முத்துப் பட்டன் கதைப்பதிப்பைக் கொண்டுவந்துள்ளார் டாக்டர் நா.வா. அவர்கள்.

## காத்தவராயன் கதைப்பதிப்பு

காத்தவராயன் கதைப்பதிப்புகள் 1873, 1877, 1880, 1886ஆம் ஆண்டுகளில் நான்கு பதிப்புகளாக வெளிவந்துள்ளன.[10] இவ்வாறு மக்கள் மத்தியில் பரவலாக நன்கு வழங்கப்பட்ட இக்கதைப்பாடலை இதன் சமூக முக்கியத்துவம் கருதி 1971ல் திரும்பவும் இவர் பதிப்பித்துள்ளார்.

சாதி அமைப்பு முறையை மீறிய திருமணமும், அதன் விளைவுகளுமே பாடற்பொருளாக உள்ள இக்கதைப்பாடல் திருச்சி, அதனைச் சுற்றியுள்ள சில ஊர்களில் கழுவேற்றப் பரிவேட்டை என்ற விழாவாகப் பங்குனி, பௌர்ணமி நாளில் பாடி ஆடப்படுவதாகக் கூறுகிறார். மாற்றுருவம் பல கொண்ட இக்கதை நிகழ்ச்சிகள் விஜயநகர ஆட்சிக் காலத்துக்கு முந்தையவை என்றும் பிற்சேர்க்கைகள் நிறைய உள்ளன என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஏட்டில் உள்ளதை ஒரு பாடகர் பாடக் கேட்டு நண்பர் சிவகுமாரன் எழுதி அனுப்பிய கதையைத் தான் பதிப்பித்துள்தாகக் கூறும் இவர், மற்றோர் பிரதியில் துரோதன வருஷம் வைகாசி மாதம் 10-தேதியில் முடிக்கப்பட்டதாக அடிக்குறிப்பு உள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

காத்தவராயன் கதைப்பாடல் என்று கதைப்பாடற் பதிப்பைப் பற்றிக் கூறும் பகுதி 6 பக்கங்களிலும், கதைப் பாடல் மூலம் 56 பக்கங்களிலும் 22 சொற்களின் விளக்கம் குறிப்புகள் என்று இறுதிப்பகுதியிலும் அமைத்து, ஆக மூன்று பகுதிகளாக இக்கதைப் பாடற் பதிப்பை அமைத்துள்ளார்.

பறையர் இனத்தைச் சேர்ந்த பரிமளம் ( பரிமணம் ) என்ற இயற்பெயர் கொண்ட காத்தவராயனின் பாடல் இனிமை கேட்டு[11] அவனைப் பின்தொடர்ந்து வந்து காதலித்து மணம் செய்துகொள்கிறார்கள். ஆரியமாலை என்ற அந்தணர் குலப்பெண். சாதி மீறிய இக்காதல் திருமணத்துக்கு எதிர்ப்பு தெரிவித்த அந்தணர்கள் முறைகேடான இச்செயலைச் செய்த காத்தவராயனைக் கழுவிலேற்ற ஆணையிடுமாறு அரசனிடம் முறையிடுவதிலிருந்து கதை தொடங்குகிறது. காத்தவராயன் பிறப்பில் பறையனாயிருக்க, இதை மாற்றும் நிகழ்ச்சிகள் கதையின் பிற்பகுதியில் இணைந்துள்ளன என்கிறார். மனிதர்கள் சாதியில் ஏற்றத்தாழ்வுடன் பிரிந்திருந்தாலும் அன்பால் பிணைக்கப்பட்டு மணம் செய்துகொள்ளலாம் என்ற கருத்து வளரக்கூடாது என்று காத்தவராயனை மூன்றுநாள் பறைச்சி முலைப்பால் உண்டவன் என்று கதையில் அமையும் பிற பகுதி இடைச்செருகல் என எடுத்துக் காட்டுகிறார். கதையின் முற்பகுதியில் பறைச்சி பெத்த பிள்ளை என்ற

கூற்றும், காத்தவராயனே தன்னைப் பறையன்என்று சொல்லும் கூற்றும்[12] உட்சான்றுகளாய் நின்று இவன் பறைக் குலத்தில் பிறந்தவன் என்பதை உறுதிப்படுத்துகின்றன என்கிறார்.

பறையன் பிராம்மணப் பெண்ணை மணந்து நாடு விட்டு நாடு போய் வாழ்ந்து விட்ட உதாரணம் பரவிவிட்டால் சாதிமுறை குலைந்துபோகும். சாதி அமைப்பை அடிப் படையாகக் கொண்டு நிலவுடைமை முறையும் சீர்குலைந்து போகும். இதனைத் தடுக்கவே பிற்கால மேல்சாதியினர் கதையின் ஆற்றலைப் போக்க, சில மாறுதல்களைச் செய்தனர். அதில் ஒன்றுதான் காத்தவராயன் முற்பிறப்பில் தேவனாயிருந்து ஆறு தவமாந்தரை மோகித்து, சிவனின் சாபத்துக்கு ஆளாகிப் பூமியில் பிறந்தான் என்ற முற்பிறப்புக் கதை என்கிறார். இந்த இடைச்செருகல் கதை சுந்தரர் கதையுடன் ஒத்துள்ளது என்றும் எடுத்துக் காட்டுகிறார்.

தேவனான காத்தவராயன் இவ்வுலகப் பிறப்பிலும் மனுதர்மம் மாறாமல் ஆரியமாலை என்ற பிராமணப் பெண்ணை மணந்தான் என்று கூறி, சாதியைப் பாதுகாத்துக் கொள்ளக் கதை முயலுகிறது என்கிறார்.

ஆரிய மாலை என்ற அந்தணர்குலப் பெண்ணையும், பிற சாதிகளிலிருந்து பிற பெண்களையும் மணந்து கொண்டிருந்த காத்தவராயன், தேவாதி மூவர்களும் பலதார மணம் செய்தவர்களே[13] என்று எடுத்துக்காட்டி, தான் செய்தது நியாயமே என அரசனிடம் காத்தவராயன் வாதிக்கும் முற்பகுதிகள் பழமையானவை என்றும், கதையின் பிறபகுதியிலுள்ள தன்னைத்தான் துஷ்டன், குற்றவாளி என்று காத்தவராயன் கூறிக்கொள்வதாக அமைந்துள்ள பகுதிகள் உயர்சாதியைச் சேர்ந்தவர்கள், சாதி உயர்வைப் பாதுகாக்க முயன்றவர்கள் சேர்த்தது என்றும் இனம் பிரித்துக் காட்டியுள்ளார்.

காத்தவராயனுடைய விவாதத்தைக் கேட்டதும், அரசன் மனம்மாறி, ஆரிய மாலையோடும், பிற மனைவியரோடும் வாழ்ந்திருக்கக் கூறினானாம். இதன் நோக்கம் அரச சாதிமுறையைப் பாதுகாப்பதில் கடைப்பிடித்த கடுமையான அடக்குமுறையை மறைப்பதற்காகும் என்கிறார்.

காத்தவராயன் கழுவேற்றப்பட்ட நிகழ்ச்சி உண்மையில் நடந்த நிகழ்ச்சி. கழுவேற்றப்பட்டவர்கள், கொல்லப்பட்டவர்கள் சிறுதெய்வங்களாக வணங்கப்பட்டு வந்தனர். காத்தவராயனும் இவ்வாறே தெய்வமாக வணங்கப்பட்டு வந்தான். கதையில் இதை மறைப்பதோ, மறுப்பதோ முடியாது. எனவே உயர்சாதியினர் காத்தவராயன் கடவுள் சாபத்தை நிறைவேற்றுவதற்காகத் தானே கழுவேற முன்வந்தான் என்ற செய்தியைப் புனைந்ததாகக் கூறுகிறார். உண்மைச் செய்திகளின் ஆற்றலைக் குறைக்க உயர்சாதியினர் இத்தகைய முயற்சிகளைப் பல முறை செய்திருக்கிறார்கள் எனக் குறிக்கிறார். நந்தன் கதையில் அவனே சோதியில் கலந்து விட்டான் என்று கூறப்படுகிறது. ஆனால் அவன் அந்தணரால் கோயில் முன் எரிக்கப்பட்டான் என்று உறுதியாக நிரூபிக்கலாம். இதுபோலவே காத்தவராயனைக் கழுவேற்றி விட்டு அவனே வேண்டிக் கொண்டதாகக் கதையை மாற்றி விட்டிருக்க வேண்டும் என்கிறார்.

நாட்டுப்பாடல் வடிவில் மக்கள் போற்றிய கதைக்கரு, தான் குற்றவாளியல்லவென்று அவன் வாதிக்கும் பகுதிகள், மனுதர்ம அநீதியை எதிர்த்து, கழுவேறிச் சாகத் துணிவு கொண்டு வளர்ப்புத் தந்தை கையில் அகப்பட்ட பகுதிகள் பழமையானவை. ஆழ்ந்து படிப்பவர்கள் இடைச்செருகல்களை அறிய முடியும் எனக் கூறுகிறார். சமூகச் சீர்திருத்த ஆற்றல் கொண்ட இலக்கியங்களை அழிக்கவும், மாற்றவும், சிதைக்கவும் மேல்சாதியினரும், சீர்திருத்தங்களால் தம் செல்வாக்கை இழக்கக் கூடியவர்களும் முயன்று வந்திருக்கிறார்கள். ஆராய்ச்சியாளர்கள் முயன்றால் கதைப்பாடல்களில் நாட்டு மக்களின் படைப்பான பகுதிகளையும், அதற்கு முரணான இடைச்செருகல்களையும் எளிதில் அறிய முடியும் என்கிறார். பாமர மக்களின் சிந்தனையை அடிமைப்படுத்தும் முயற்சிகளை எடுத்துக்காட்ட வேண்டும் என்று வேண்டுகோளும் விடுக்கிறார்.

இந்தக் காத்தவராயன் கதைப்பதிப்பில் இவருக்குரிய மார்க்சீயப் பார்வை கதையின் இடைச்செருகல்கள், பிற்சேர்க்கைகளான இனம்காண உதவியுள்ளது எனலாம்.

கதைப்பாடலில் காணப்படும் நடை, அய்யர் சொல் விருத்தம், ராசன் சொல் விருத்தம், வசனம், தூதருக்குச் சொல் விருத்தம் என்றுள்ள தலைப்புகள் சுவடியிலேயே இருந்திருக்கக் கூடும் எனக் கருத இடமுள்ளது.

## வீணாதி வீணன் கதைப்பதிப்பு

வீணாதி வீணன் கதை ஐவர் ராசாக்கள் கதையிலுள்ள கிளைக் கதை என்று நா.வா. அவர்கள் குறிப்பிடுகிறார். பிற்காலப் பாண்டியர் வரிசையில் வந்த குலசேகரப் பாண்டியன் தன் தம்பியருடன் வள்ளியூரில் கோட்டை கட்டி ஆட்சியை நிறுவிவிட்டு, காளிங்கன் என்ற தளபதியை நியமித்துவிட்டு, மதுரை சென்று விடுகிறான். மன்னனின் நேரடிக் கண்காணிப்பில்லாத நாட்டில் பல முறைகேடுகளும், அக்கிரமச் செயல்களும் தாண்டவமாடுகின்றன. உழைத்துப் பிழைப்போருக்கு மதிப்பில்லை. உழைக்க விரும்புவோருக்கு வேலை இல்லை. இச் சூழலில் பிறந்து வளர்ந்த வீணாதி வீணன் நாட்டுச் சூழல், தடியெடுத்தவனே தண்டல்காரன் என்ற நிலைக்கு ஆளாக்குகிறது. பொற்தந்தடி கைக்கொண்டு, தடி பிடித்த கையினராய் நூறு பேர்களையும் உதவியாளராகச் சேர்த்துக்கொண்டு குடத்தண்ணீருக்கும், சாவுக்கும், திருமணத்துக்கும் வரி வசூல் செய்து, பெரிய வீடு கட்டி, கீழறையில் வரி வசூல் செய்த பணத்தைச் சேர்த்து வைக்கிறார் வீணாதி வீணன். காளிங்கன் என்ற தளபதியோ, வீணாதி வீணனின் அதிகார வரி வசூலிப்பைக் கண்டு, மன்னனால் தனக்குத் தெரியாமல் அமர்த்தப்பட்ட அதிகாரி போலும் என்று வாளா இருந்துவிடுகிறான்.

தடியெடுத்தவன் தண்டல்காரன் என்ற இந்நிலைக்கு மன்னனே காரணம் என்பதால், அவனுக்கு நாட்டுச் சூழ்நிலையை விளக்கவே வீணாதி வீணன் இவ்வாறு பல செயல்களைச் செய்கிறான். ஒருநாள் நகர் சோதனைக்கு வந்த மன்னன், ஏழைப்பெண் ஒருத்தி தன் கணவன் இறந்துகிடக்க, இந்தச் சாவுக்கும் வரி கொடுக்க வேண்டுமே, தன் கையில் பணம் இல்லையே என்று கதறி அழக் கேட்டு விசாரித்து, சாவுக்கு வரி வசூலிப்பது வீணாதி வீணன் என அறிந்து அவனைத் தன்முன் அழைத்து வருமாறு ஆணையிடுகிறான்.

வீணாதி வீணனோ வர மறுக்க மன்னனுக்குப் போட்டியாகக் கட்டிய கோட்டையினுள் இருந்துகொண்டு போட்டியாட்சி நடத்துகிறான். குலசேகர பாண்டியன் தன் தம்பியரைப் படையுடன் வரவழைத்து, வீணாதி வீணனைச் சிறைப் பிடிக்கிறான். தன் செயல்களுக்கு மன்னனே முழுப் பொறுப்பு என்று வீணாதி வீணன் விளக்கிச் சொல்லக்கேட்டு, மன்னன் திருந்தி நாட்டை நல்ல முறையில் ஆட்சி செய்யத் தொடங்கியதாகவும் வீணாதி வீணனைத் தன் இளைய மந்திரியாக ஆக்கிக் கொண்டதாகவும் கதை அமைந்துள்ளது.

வீணாதி வீணனை இராபின் ஹுட்டுடன் ஒப்பிட்டு, இறுதியில் மன்னனை மனம் திருந்தவைத்ததால் இராபினை விடவும் உயர்ந்தவன் என நா.வா. குறிப்பிடுகிறார்.

வீணாதி வீணன் பாத்திரம் கற்பனையாக இருக்கலாம் என ஆராய்ச்சியுரையில் குறிப்பிடும் நா.வா. அவர்கள், வள்ளியூரில் கள ஆய்வு செய்தபின் தன் முடிவை மாற்றி, உண்மைப் பாத்திரம் என்பதற்கான சான்றுகளைப் பிற்சேர்க்கையில் தொகுத்துத் தந்துள்ளார். வள்ளியூரில் வீணாதி வீணன் நீராவி என்று உள்ளதையும், அதன் பாசனப்புறவில் 30 ஏக்கர் விளைநிலம் வீணாதி வீணன் பற்று என்ற பெயரில் அமைந்துள்ளதையும், இவனால் கட்டப் பட்டது எனக் கருதப்படும் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தின் முகமண்டபம், அர்த்தமண்டபம், தூண்களையும், இக்கோயிலின் முன்புள்ள கிணற்றில் 70 ஆண்டுகளுக்கு முன் தூர்வையெடுத்தபோது கிடைத்த சிலை வீணாதி வீணன் சிலை என்று கோவில் பூசாரியால் குறிப்பிடப்பட்டதையும், சிலை அமைப்பும், தலையில் கொண்டை, கழுத்தில் மாலை, இடையில் வளைந்தவாள், தட்டாடை, கையில் உடைந்த நிலையில் பொந்தந்தடி போன்றனவற்றுடன் அமைந்து விஜயரங்கப் பாணி பரவுமுன் செய்யப்பட்ட சிலைபோல் தோன்றுவதால் இது வீணாதி வீணன் சிலையே என்றும் குறிப்பிட்டு வீணாதி வீணன் சமூக நீதியைப் போதித்த உண்மைப்பாத்திரமே என்று உறுதிப்படுத்தியுள்ளார்.

## முடிவுரை

சமூகக் கதைப்பாடல் பதிப்புகளில் ஈடுபடுபவர்களுக்கு நா.வா. பதிப்புகள் சிறந்த வழிகாட்டிகளாக அமையக் கூடியவை. கதையின் பழைய வடிவங்களை, இடைச் செருகல்களை, எவ்வாறு இனம் காணுவது என்பதற்கு இவர் பதிப்புகள் சிறந்த கலங்கரை விளக்கங்கள். இவர் பதிப்புகளின் ஆராய்ச்சி முன்னுரைகள் ஆழ்கடலில் குளித்தெடுத்த முத்துக்கள் எனின் அது மிகையன்று. ஆயின் சுவடிகளிலிருந்த கதைப்பாடல்களைத் திருத்தப் பதிப்பாகக் கொண்டு வந்துள்ள இவர், சுவடிகளில் எழுத்து விடுகை, எழுத்து வடிவ ஒற்றுமை போன்றவற்றால் நிகழ்ந்துள்ள பிழைகளையும் நீக்கிப் பதிப்பித்திருந்தால், இவர் பதிப்பு மேலும் சிறப்புடையதாகத் திகழ்ந்திருக்கும்.

சான்றாக, முத்துப்பட்டன் கதையில், முத்துப்பட்டன் குத்துப்பட்டு இறந்த பின்னர், அவனது நாய் இரத்தத்தில் புரெண்டெழுந்து ஓடிவந்து அவன் மனைவியர் முன் நிற்கிறது. இது,

> நாய்வந்து காலைக்கட்டி ஒடுங்கியே மூச்செறிந்த
> வயலைக் கண்டுபெண்கள் சதியேது கோதை யேது

எனக் கூறுவதாகத் தொடர்கள் அமைந்துள்ளன. இத் தொடர்கள்,

> நாய்வந்து காலைக்கட்டி நடுங்கியே மூச்செறிந்த
> சாயலைக் கண்டுபெண்கள் சகதியேது சோனையது

என்றே அமைந்திருக்க வேண்டும். சோரை என்பது இரத்தத்தைக் குறிக்கும் மலையாள வழக்காகும். நா.வா. அவர்களின் பதிப்புகள் மறுபதிப்பாகும் பொழுது இதுபோன்ற பிழைகளையும் நீக்கிப் பதிப்பித்தால் சிறந்த சமூகக் கதைப்பாடற் பதிப்புகளாக இவர் பதிப்புகள் திகழும் என்பதில் ஐயமில்லை.

## குறிப்புகள்

1. தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், பேராசிரியர் மது.ச. விமலானந்தம், தொகுதி 1,2, பக்கம் 839, 1703-1704 தொகுத்த கருத்துகள்.
2. மதுரைப் பல்கலைக் கழக வெளியீடு, மு.ப. அக். 1971.
3. மதுரைப் பல்கலைக் கழக வெளியீடு, மு.ப. மார்ச், 1972
4. நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், மு.ப. 1961.
5. மேற்படி, 1967.
6. மதுரைப் பல்கலைக் கழகம், மார்ச், 1972.
7. மேற்படி, மு.ப. அக். 1971.
8. மேற்படி, 1971.
9. மேற்படி, 1974.
10. நாட்டுப்புற இலக்கிய வரலாறு, டாக்டர் சு. சண்முக சுந்தரம், மணிவாசகர் பதிப்பகம், மு.ப. 1990, பக்.163.
11. என் கிண்ணாரச் சத்தம் கேட்டு மிக நடந்தாள்
மாதயரே என் பின்னே வாராதே என்று சொன்னேன்
சோகக் கிளிமொழியாள் என்வசனம் கேட்காமல்
வாரதைக் கண்டு மனதில் பயம் பிடித்தது.
12. பாரதனிலே நானும் பறையன் பறையன் என்றேன்.
13. பார்வதியாள் தானிருக்க பரம சிவனாரும்
ஓர்சடையில் கன்னிதனை ஒளித்தும் வாழலையோ
உலக மளந்த தொரு உத்தமனாம் மாயவனும்
நலமுள்ள உருக்குமணியாள் நன்றாய் அருகிருக்க
தேசமதிலாய் சிறக்கவே கொண்டருளி
சத்திய பாமாவைத் தேடி யலையலையோ.

14. ஆராய்ச்சி ( இதழ் ), நா. வானமாமலை,
தமிழ்நாட்டுக் கதைப்பாடல்களில் சோக முடிவு ( கட்டுரை ), நா. வானமாமலை, மார்ச், 1971, மலர் 2 இதழ் 2 என்பதிலிருந்து மதுரை வீரன் கதை குறித்த நா.வா. அவர்களின் கருத்துக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன ( பக்.134-136 ).

# 25. அகத்தீசுவரம் வைத்தியர் புலவர் கு. ஆறுமுகப்பெருமாள் நாடார்

முனைவர் ஆ. தசரதன்

குமரி மாவட்டம் அகத்தீசுவரம் வில்லுப் பாட்டாளிகளாகிய வலங்கைச் சான்றோர் குலத்தினர் பலரின் பிறப்பிடமாகும். பிற்காலச் சோழர்களுக்குப்பின் இவ்வூரில் குடியேறிய வலங்கைச் சான்றோரும் பிற சான்றோரினத் தாரும் பாமரர் இலக்கியங்களான வில்லுப்பாட்டுகளையும், நாடகக் கலைவடிவங்களையும் எழுதி, பாடி, அரங்கேற்றிக் குமரிப் பகுதியில் பரப்பி வந்துள்ளனர். இது பல சான்றுகள் மூலம் தெரியவருகின்றது.

கி.பி. 1606-ல் பாடப்பபெற்ற வலங்கை நூல் எனும் வெங்கலராசன் கதை அகத்தீசுவரத்தைச் சார்ந்த ஆறுமுகம் என்பவரால் பாடப்பெற்ற வில்லுப்பாட்டாகும். இதே ஊரில் ஒரு நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்த நாகமணி மார்த்தாண்ட நாடாரும், அவர் வமிசத்தாரும் பல நாட்டுப்புறக் கலைவடிவங்களை எழுதி, பாடிவந்துள்ளனர்; பல ஓலைச் சுவடிகளைப் பெயர்த்தெழுதி, தமிழுக்கு அருந்தொண்டாற்றி யுள்ளனர். அவற்றுள் அனந்த பத்மநாபன் பாடிய சகுந்தலை நாடகம் (கி.பி. 1896) நாடக வரலாற்றில் முக்கிய இடம் பெறுவதாகும்.[1]

இக்கலைஞர்கள் வரிசையில் வைத்துப் போற்றத் தகுந்தவர் அகத்தீசுவரம் வைத்தியர் புலவர் கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் ஆவர். இவர் இந்நூற்றாண்டின் முதல் பத்துகளில் தோன்றி, எண்பதுகளில் அமரர் ஆனவர்.

### வைத்தியர் ஆறுமுகப் பெருமாள் நாடார்

கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் முதலில் வைத்தியர் என்றே அறியப்படுவார். இவர் வெளியிட்டுள்ள நூல்களில்

தன்னை வைத்தியர் என்றே குறிப்பிட்டுள்ளதைக் காண முடிகின்றது. சித்தமருத்துவத்தைத் தன் தொழிலாகக் கொண்டிருந்ததுடன் வரலாற்று ஆய்வுக் கண்ணோட்டத்தையும் தன் இலட்சியமாகக் கொண்டதின் காரணமாகவே பல அரிய நூல்களைப் பாடியும், பிரதி செய்தும், பதிப்பித்தும் வெளியிடும் அளவிற்கு அவரால் முடிந்தது.

ஆறுமுகப் பெருமாள் நாடார் அதிகமாக வைத்திய நூல்கள் வெளியிடாமையும், அதிகமாக வைத்திய ஓலைச்சுவடிகள் சேகரித்து வைக்காமையும் அவர்க்கு வைத்தியத்தில் அவ்வளவு ஈடுபாடு இருந்ததில்லை என்று தோன்றுகிறது. ஆயினும் அவர் ஒரு கைதேர்ந்த நாட்டு வைத்தியர் என்பதற்கு ஒரு சான்று தெரியவந்துள்ளது.

இலங்கையில் ராஜதாழை என்ற கோத்தாழையின் மடல் மிகப் பெரியதாகவும் அகலமாகவும் இருக்கும். கொழும்பில் வணிகராயிருந்த எஸ்.ஏ. இராமச்சந்திர டோகோ என்பவரிடம் தமக்கு 1 கிலோ எடையுள்ள உலர்ந்த தாழை மடலின் பொடி வேண்டுமென்று ஆறுமுகப்பெருமாள் நாடார் எழுதினாராம். அதேபோல் தாழை மடலின் பொடியும் கிடைத்ததாம். அதில் பல அரிய மருந்துகள் தயாரித்தாராம். இச்செய்தியை திரு. இராமச்சந்திர டோகோ அவர்கள் எனக்குக் கடிதம் மூலம் எழுதியிருந்தார். இலங்கையிலுள்ள கோத்தாழை இப்போது அருஞ்சுனை காத்த அய்யனார் கோயிலில் உள்ளது. இதை நான் எனது அருஞ்சுனை காத்த அய்யனார் கோயில் கையேடு என்ற நூலில் ( 1995, 1996 ) எழுதியுள்ளளேன்.[2]

## ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பணிகள்

வைத்தியத்துடன் வரலாற்றாய்வில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட ஆறுமுகப் பெருமாள் நாடார் ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகள் ஏடுகள் பெயர்த்தெழுதியும், சுயமாகவே பாட்டுக்கட்டி அதை ஏட்டில் எழுதியும், வில்லில் பாடவைத்தும், சொந்தப்பொருள் செலவு செய்து பல அரிய வில்லுப்பாட்டுக் கதைப்பாடல்களை அச்சிட்டு வெளியிட்டும் அருந்தொண்டாற்றியுள்ளமை தெரிகின்றது. இவற்றின் காரணமாக வறுமைக் கோட்டுக்குள் வந்து தம் குடும்பத்

தாரையும் அதில் ஈடுபடுத்தி இறுதியில் அமரராகி விட்ட அன்னாரின் வாழ்க்கை இன்று அருமையாக எண்ணிப் பார்க்கப்படுகின்றது.

## ஆறுமுகப் பெருமாள் நாடார் அச்சிட்ட நூல்கள்

கி.பி. 1925இல் தொடங்கி 1980 வரை ஆறுமுகப் பெருமாள் நாடார் தமது சுவடிப் பணிகளை மேற் கொண்டாலும், 1960க்குப் பின்புதான் நூல்களை அச்சிடும் பணியைச் செய்துள்ளார். இவருடைய முதலாவதானதும் மிகவும் பெருமைப்படத் தக்கதுமான வலங்கை நூல் எனும் வெங்கலராசன் கதை என்ற வரலாற்று வில்லுப்பாட்டு நூலை 1963இல் அச்சிட்டு வெளியிட்டு ஓர் அரிய சாதனையைப் படைத்தார். இவ் வெளியீடு வராமலிருந்தால் வலங்கைச் சான்றோன் வெங்கலராசனின் வரலாறு விளக்கம் பெறாமல் சரித்திரத்தில் மறைந்துபோயிருக்கும்.

வலங்கை நூல் எனும் வெங்சலராசன் கதையை முதலில் அகத்தீசுவரத்தைச் சார்ந்த ஆறுமுகம் என்பவர் கி.பி. 1606இல் பாடி, ஏட்டில் இடம்பெறச் செய்துள்ளார். ஏறத்தாழ முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்குப் பிறகு அந்நூலை அச்சிட்டு வெளியிட்ட காரணத்தால் ஆறுமுகப்பெருமாள் நாடாருக்கு வலங்கைக் குலச் சான்றோர் கடமைப்பட்டவர்களாவர். மேலும் இந்த வெங்கலராசன் கதையை கி.பி. 1926இல் ஏடு பெயர்த்தி எழுதிவைத்து அது கெட்டுப்போகாமல் பாதுகாத்த பெருமையும் அன்னாருக்கு உண்டு.

வலங்கைச் சான்றோர் வீரர் எழுவர் தொடர்புற்ற வலங்கை மாகாளி அம்மன் கதை என்ற நூலையும் ஆறுமுகப் பெருமாள் நாடார் 1968இல் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.[3] இக்கதையில், காளிமாதா வலங்கைப் பாலர் எழுவருடன் தாருகாசுரன் என்பானை வதைத்த செய்தி இடம் பெற்றுள்ளது. மேலும்,

1. பார்வதி அம்மன் கதை
2. குமரி அம்மன் கதை
3. முத்தாரம்மன் கதை
4. மாரியம்மன் கதை
5. பூலங் கொண்டாள் கதை

6. தோட்டுக்காரி கதை
7. சுடலைமாடன் கதை
8. பிச்சைகாலன் கதை
9. அகிலத் திரட்டு அம்மானை
10. இசக்கி அம்மன் கதை
11. சாத்தாவின் கதை
12. வள்ளியம்மன் கதை
13. முத்துப்பட்டன் கதை
14. அருள் நூல்
15. மறைந்து கிடைத்த மாணிக்கங்கள்
16. மால் பஜனைக் கீர்த்தனை
17. சன்மார்க்க சிந்தாமணி
18. மார்க்கண்டன் கதை

பிற நூல்கள் 1965ஆம் ஆண்டு முதல் 1980ஆம் ஆண்டுக்குள் ஆறுமுகப் பெருமாள் நாடாரால் பதிப்பித்து வெளியிடப்பெற்ற அரிய கதைப்பாடல்களாகும்.

திருவிளையாடற் புராணத்தில் ஒரு நிகழச்சியான வலவீசிய படலமே பார்வதி அம்மன் கதை என்றும் ஆண்டார் வலைவீசிய கதை என்றும் அழைக்கப்பட்டுக் கதைப்பாட்டாகப் புனையப்பட்டு வில்லுப்பாட்டிலும் பாடப்பெற்று வருகிறது. ஒரு நூற்றாண்டுக்கு முன்பு பாடப்பெற்றிருந்த இந்த நூலைப் பதிப்பித்து முதன்முதலாக வெளியிட்ட பெருமை ஆறுமுகப் பெருமாள் நாடாரையே சாரும்.[4]

குமரி அம்மன் கதை என்பது கன்னியாகுமரியில் கோயில் கொண்டுள்ள அம்மன் வரலாறும், அக்கோயில் பொருள்கள் களவாடப்பெற்று மீண்டும் கிடைத்ததுமான செய்திகளாகும்.

முத்தாரம்மன் கதை என்பது திரிபுரசம்காரத்தின் அடிப்படையில் எழுந்த வில்லுப்பாட்டுக் கதை ஆகும். இக்கதை பலவாறாக வழங்கப்படுகிறது.[5] ஆயின், ஆறுமுகப் பெருமாள் நாடார் வெளியிட்டுள்ள பிரதியில், இறுதியில் முத்தாரம்மன் அம்மை முத்துக்களைப் பெற்று அநியாயக்காரர்கள் மேல் விதைத்ததாக உள்ளது.

இவ்வாறான கதை முடிவு குமரி மாவட்டத்தில் பாடப்பெற்ற முத்தாரம்மன் ஏட்டுப்பிரதிகளில் மட்டுமே காணப்படும் தனித்தன்மையாகும். பிச்சாண்டி நாடார் ( 1955 ) பதிப்பித்த முத்தாரம்மன் கதை இதிலிருந்து சற்று வேறுபட்டது.[6]

மாரியம்மன் கதை நாகலோகத்தில் பிறவி செய்த மாரியம்மன் கயிலாயத்தில் தவம் செய்து வரம் வாங்கி அம்மை முத்துக்களை ஆங்கிருந்து பல ஊர்களிலும் விதைத்து அம்மை நோயை உண்டாக்கி இறுதியில் பல ஊர்களிலும் கோயில் கொள்வதாக உள்ளது.[7-8]

சுடலைமாடன் கதையை ஆறுமுகப் பெருமாள் நாடார் அரிதின் முயன்று பரமக்குடியில் பதிப்பித்து, அச்சிட்டு வெளியிட்டுள்ளார். இக் கதையில், சுடலைமாடன் கைலாயத்திலிருந்து வரம் வாங்கி, பொதிகை மலைப் பகுதியில் காத்திருந்து திருச்செந்தூர்ப் பகுதிக்குச் சென்ற நிகழ்ச்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. அத்தெய்வத்தின் பிற தீரச் செயல்களும் இடம்பெற்ற மிக அருமையான கதைப் பாடலாகும்.

குமரி மாவட்டத்தில் சமூக வரலாற்றுப் பிரச்சினைகளை மையமாக வைத்துப் பாடப்பெற்ற பூலங்கொண்டாள் என்ற மானிடப் பெண்தெய்வத்தின் கதையும்,[9] தோட்டுக்காரி எனும் பெண் தன் காதலனுக்காகக் காத்திருந்து உயிர்நீத்த கதையும்[10] பிச்சைகாலன் எனும் காவல் வீரன் அநியாயமாகக் பழி சுமத்தப்பெற்றுக் கொலை செய்யப் பட்டபின் தெய்வமாகிய கதையும்[11] ஆறுமுகப்பெருமாள் நாடாரால் நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன.

## ஆறுமுகப் பெருமாள் நாடாருடன் அறிஞர்கள் தொடர்பு

நாட்டு வைத்தியர்கள் தம்முடன் பல வைத்திய, மாந்திரீக ஓலைச் சுவடிகளையும் சேர்த்து வைத்திருப்பர். அதற்கு மாறாக ஆறுமுகப் பெருமாள் நாடார் நாட்டுப்புறக் கதைப்பாடல் ஓலைச்சுவடிகளையே மிகுதியாக எழுதியும் சேர்த்தும் வைத்திருந்தார். இச்செய்தியை அமெரிக்க தமிழறிஞர் ஸ்டுவேர்ட் பிளாக் பர்ன் என்பாருடைய ஆய்வு நூலிலிருந்தும், நண்பர்களான டாக்டர் சு. தங்கதுரை,

பி. கோவிந்தசாமி, அ. நடேசன் என்பார்களின் குறிப்புகளி லிருந்தும் அறியலாம்.

ஸ்டூவர்ட் பிளாக் பர்ன் என்பவர் தமது ஆய்வுத் தலைப்பான Performance as Paradigm என்பது தொடர்பாக ஆறுமுகப் பெருமாள் நாடாரைப் பேட்டி கண்டதும், அவரைப் பாடவைத்துக் கேட்டதும், குமரி மாவட்ட வில்லுப்பாட்டுக் கதைப்பாடல்களையும் ஓலைச்சுவடிகளையும் அவரிடமிருந்து அறிந்துகொண்டதும் வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சிகளாம். குமரி மாவட்ட கதைப்பாடல்களையே தம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ள அன்னார் ஆறுமுகப் பெருமாள் நாடார் பற்றிய அரிய உண்மைகளை மறைக்காமல் தம் ஆய்வு நூலில் எழுதியுள்ளார் என்பது பாராட்டிற்குரியது. ஆறுமுகப் பெருமாள் நாடாரை உலகுக்கு அறிமுகப்படுத்திய பெருமை இவரையே சாரும்.

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் ஆய்வாளர்களாக இருந்த மூவர் ஆறுமுகப் பெருமாள் நாடாருடன் அறிவுத் தொடர்பு வைத்திருந்ததைக் கட்டுரையாளர் 1983ஆம் ஆண்டு அறிந்துகொண்டிருந்தார். சு. தங்கதுரை அவர்கள் பலவேசஞ் சேர்வைக்காரன்[12] என்ற நூல் பதிப்புக்கும் ( 1983 ), சிதம்பர நாடார் கதை[13] ( 1982 ) என்ற சுவடி நூல் பதிப்புக்கும் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் பிரதிகளைப் பயன்படுத்திக் கொண்டமையை விட்டுவிடாமல் தம் நூல்களில் குறித்துவைத்துள்ளனர்.

வலங்கை நூல் எனும் வெங்கலராசன் கதையின் அச்சுப் பிரதியை அ. நடேசன் கட்டுரையாளருக்குத் தந்த பிறகுதான் ஆறுமுகப்பெருமாள் நாடார் பற்றி அறிந்துகொள்ள முடிந்தது.[13] திரு. பி, கோவிந்தசாமி தனது பார்வதி அம்மன் கதை என்ற ஆய்வுக் கட்டுரையில் ஆறுமுகப் பெருமாள் நாடார் பற்றி நன்றாகவே பாராட்டியுள்ளார். இம்மூன்று இளம் ஆய்வாளர்களே தமிழ் நூல்கள் வாயிலாக ஆறுமுகப்பெருமாள் நாடாரை ஆய்வு உலகுக்கு அறிமுகப் படுத்தினர் எனில் அது மிகையாகாது.

## ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் ஓலைச் சுவடிகள்

சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவன ஆய்வுத்திட்ட இயக்குநர் டாக்டர் ஜி. ஜான் சாமுவேல் அவர்களும் கட்டுரையாளரும் 15.8.85 அன்று குமரி மாவட்டத்தில் ஓலைச் சுவடிகள் சேகரிக்கச் சென்றனர். அமரர் ஆறுமுகப் பெருமாள் நாடாரிடமிருந்ததான அனைத்து ஓலைச்சுவடிகளையும் அன்று வாங்கி வந்தனர். அதுவரை குடத்துள் இட்ட விளக்காக இருந்த ஆறுமுகப் பெருமாள் நாடாரின் புகழ் குன்றின்மேல் இட்ட விளக்காகப் புகழ் பரப்பியது எனில் அதன் பெருமை அந்நிறுவனத்தையே சாரும்.

முதலில் திரு. சு. தங்கதுரையைச் சந்தித்து, அவரையும் அழைத்துக்கொண்டு அமரர் ஆறுமுகப் பெருமாள் நாடார் இல்லம் சென்றோம். அன்னாரின் விதவை மனைவியாரும் அறியாச் சிறுவனான பேரனும், வீட்டு நிலைமையும் வாழ்ந்து நொந்துபோன ஒரு தமிழறிஞரின் நிலையை உணர்த்தினர். அங்கிருந்த அனைத்து ஓலைச்சுவடிகளும் ரூபாய் ஆயிரத்துக்கும் சற்றுக் குறைவாகக் கொடுத்து வாங்கப் பட்டன. ஏறத்தாழ 40 கட்டு ஓலைச்சுவடிகள்; அதில் கதைப் பாடல்கள் மட்டுமே 25க்கும் மேலிருந்தன. மூலமும் பிரதிகளுமாக மொத்தம் 55 நூல்கள் தேறின. திரு. தங்கதுரை மட்டும் அன்று இல்லாமலிருந்தால் அரிய பெட்டகங்களான ஓலைச்சுவடிகள் கிடைத்திருக்கா. இன்றும் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் அமரர் ஆறுமுகப்பெருமாள் நாடாரின் அரிய ஓலைச்சுவடிகள் பாதுகாத்து வைக்கப் பெற்றிருப்பதுடன் ஆங்கில மொழிபெயர்ப்புடன் அழகாக அச்சிட்டும் வெளியிடப் பட்டும் வருகின்றன. வேறு எவரிடமாவது அவை மாட்டியிருந்தால் இந்த அளவு நூல் தன்மையை எட்டிப் பிடித்திருக்கா.

## ஆறுமுகப் பெருமாள் நாடார் ஓலைச்சுவடிகள் பதிப்பித்தல்

சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் ஓலைச்சுவடிகளில்,

**(1) உச்சினி மாகாளி அம்மன் கதை (1987)**

(2) **வெங்கலராசன் கதை** (1988)
(3) **பலவேசஞ்சேர்வைக்காரன் கதை** (1989)
(4) **புருஷாதேவி கதை**[14] (1995)

என்பவற்றை ஆங்கில மொழிபெயர்ப்புடன் வெளியிட்ட தோடன்றி, அந்நிறுவனத்திலுள்ள ஓலைச்சுவடிகள் விளக்க அட்டவணையிலும் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் ஓலைச் சுவடிகள் விளக்கங்களைக் கொடுத்துள்ளது.

The Wandering Voice என்ற தலைப்பில் அடங்கியுள்ள மூன்று கதைப்பாடல்களில் உச்சினி மாகாளியம்மன் கதையும் ஒன்று. ஆறுமுகப் பெருமாள் நாடார் இக் கதைச்சுவடியை 1931இல் பெயர்த்து எழுதியுள்ளார். இதைப்போன்ற மற்றொரு சுவடியும் விக்கிரம பூமன் என்ற தலைப்பில் அன்னாரால் எழுதி வைக்கப்பெற்றிருந்தமையும் தெரிகின்றது. உச்சினி மாகாளியம்மன் கதையையும் வெங்கலராசன் கதையையும், பலவேசஞ்சேர்வைக்காரன் கதையையும் முனைவர் நிர்மலாதேவி அவர்கள் பதித்துள்ளார்.

The Dateless Muse என்ற தலைப்பில் பதிப்பாகியுள்ள வெங்கலராசன் கதை ஒரு குறைப்பிரதி ஆகும். இதை ஆறுமுகப் பெருமாள் நாடார் ஓலைச்சுவடியில் 1926ஆம் ஆண்டு பெயர்த்தெழுதி வைத்ததாகத் தெரிகிறது. கி.பி. 1606இல் பாடப்பெற்ற பிரதியின் அச்சுநூல் இருக்க அதையும் சேர்த்து முழுமை பெறும் அளவில் வெளியிட்டிருந்தால் வலங்கைச் சான்றோன் வெங்கலராசனுக்கும் அவன் சந்ததியினர்க்கும் பெருமை சேர்த்ததாக இருக்கும்.

The Unsung Melodies என்ற தலைப்பில் பதிப்பாகியுள்ள பலவேசஞ்சேர்வைக்காரன் கதையை ஆறுமுகப் பெருமாள் நாடார் 1926இல் சரவெழுதி வைத்துள்ளார். இதுவும் பதிப்பாகியுள்ளது. டாக்டர் சு. தங்கதுரையும், டாக்டர் ஏ.என். பெருமாளும் ஏற்கெனவே பலவேசஞ்சேர்வைக்காரன் கதையைத் தனித்தனியாக வெளியிட்டுள்ளனர். சேர்வைக்காரனுக்கும் கட்டபொம்முவுக்கும் தொடர்பு இருந்ததாகக் காட்டும் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் ஓலைச்சுவடியில் வரலாற்றுண்மை திரிக்கப்பட்டு எழுதப் பட்டிருக்குமோ என அஞ்ச வேண்டியுள்ளது. இவை

அனைத்துக்கும் முற்பட்ட கி.பி. 1833ஆம் ஆண்டில் எழுதப் பட்ட மூலப்பிரதியில் சேர்வைக்காரர்கள் கட்டபொம்முவுக்கு முன்பாக வாழ்ந்து மடிந்ததாக உள்ளது.[15]

புருஷாதேவி கதையைப் பெண்ணரசியர் கதை என்ற தலைப்பில் தமிழிலும், ஆங்கிலத்திலும் ஆசியவியல் நிறுவனம் வெளியிட்டு ஆறுமுகப் பெருமாள்நாடாருக்குப் பெருமை சேர்த்துள்ளது. புருஷாதேவியர்க்குக் கோயில்கள் குமரி மாவட்டத்தில் உள்ளன. ஆங்கு நடைபெறும் கோயில் கொடையின்போது வில்லுப்பாட்டில் பாட அம்மன்கதை தேவைப்பட்டதின் காரணமாகவே ஆறுமுகப் பெருமாள் நாடார் அக்கதையைப் பாடினார் என்பர். அதன் காரணமாக அதில் சிறிது வரலாற்றுடனும், பின்பு பல்வேறு சிறு தெய்வங்களின் கலவைக் கதைகளாகவும் அமைந்துள்ள நிலையைக் காணமுடிகின்றது.

## ஆறுமுகப்பெருமாள் நாடாரின் பிற ஓலைச்சுவடிகள்

ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் ஆறுமுகப்பெருமாள் நாடார் வைத்திருந்த சுவடிகளில் பதிப்புப் பெறாத பல ஓலைச்சுவடிக் கதைப்பாடல்கள் உள்ளன. ஆனால் அவற்றின் பிரதிகள் பிற இடங்களில் பதிப்புப் பெற்றுள்ளன. சின்னணஞ்சி கதையைச் சிவனணைந்த பெருமாள் கதைப் பாடல் என்ற தலைப்பில் வேறொரு மூலப்பிரதியை வைத்து நான் பதிப்பித்து வருகிறேன். வேறொரு பிரதியான செங்கிடாய்க்காரன் கதையை விவேகானந்தன் என்பவர் அண்மையில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இவற்றைப் போன்றே அகிலத்திரட்டு வேறு இடங்களில் பல பிரதிகளில் வெளிவந்துள்ளது. வைகுண்ட அம்மானையும் அவ்வாறே பதிப்பாகி வருகிறது.

## ஆறுமுகப்பெருமாள் நாடாரின் வரலாற்றுப் பார்வை

ஆறுமுகப்பெருமாள் நாடார்க்கு வரலாற்றுக் கண்ணோட்டம் மிகுதியாக உள்ளமைக்குச் சில சான்றுகள் கூற இயலும். வலங்கைச் சான்றோர்களில் ஏழு பாலர்கள் பிறப்பு, வளர்ப்பு நடந்த இடம் கோலார்க்கருகில் உள்ள மலை அடிவாரம் என்பதை அன்னார் நேரில் சென்று கண்டு தம்மிடம் கூறியதாக ஆறுமுகநேரி அமரர் இராமச்சந்திர

டோகோ அவர்கள் முன்பு என்னிடம் தெரிவித்திருந்தார்.[16] ஆயினும் அதற்கு மாற்றுக் கருத்துக்கள் இப்போது வந்து கொண்டிருக்கின்றன. வலங்கையரின் பிறப்பு, வளர்ப்பு பற்றி எதுவும் அறுதியிட்டுக் கூற முடியாத நிலை உள்ளது என்பது ஆய்வாளர்கள் கருத்து. இதைப்போன்றே, தோட்டுக்காரி கதை, புருஷாதேவி கதை போன்றவற்றிலும் ஆறுமுகப் பெருமாள் நாடாரின் வரலாற்று விளக்கத்திற்குரிய சான்றுகள் உறுதியில்லாமலேயே உள்ளன. இதைக் காலம்தான் கணிக்க வேண்டும்.

## ஆறுமுகப்பெருமாள் நாடாரின் எழுத்து அமைப்பு

பல ஓலைச்சுவடிகளைப் பெயர்த்தெழுதியும், தாமே புனைந்துரைத்து அவற்றை ஏட்டில் எழுதியும் தொண்டாற்றிய ஆறுமுகப்பெருமாள் நாடாரின் சுவடி எழுத்துகளில் மலையாளத் தாக்கமும், குறியீடுகளின் பயன்பாடும், கூட்டெழுத்துக்களின் பங்களிப்பும், புள்ளியுடன் மெய்யெழுத்துக்கள் எழுதப்பட்டிருத்தலும், எடுத்துரை நடையில் கவிதையாக்கமும், விருத்தப்பா புனைவும் வித்தியாசமாக இடம்பெற்றிருத்தலை அறியமுடிகின்றது. மேலும் கதைப்பாடல்களின் தொடக்கம், முடிவு போன்றவை நெல்லைச் சீமைக் கதைப்பாடல் அமைப்புகளிலிருந்து சற்று வேறுபட்டுத் தனித்தன்மையுடன் மிளிர்வதும் காணக் கிடக்கின்ற அரிய செய்தியாகும். இன்னும் பல அரிய நுணுக்க முறைகளை அன்னார் பயன்படுத்தி ஓலைச்சுவடிகளில் ஓர் அழியா இடத்தைத் தக்கவைத்துக் கொண்டுள்ளார் எனக் கூறலாம்.[17]

## குறிப்புகள்

1. டாக்டர் ஆ. தசரதன், பதிப்பாசிரியர், சகுந்தலை நாடகம், ஆசியவியல் ஆய்வு நிறுவனம், 1994.

2. டாக்டர் ஆ. தசரதன், அருஞ்சுனை காத்த அய்யனார், தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம், சென்னை-41, ( 1995 ) 1996.

3. கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், வலங்கை நூலென்னும் மாகாளியம்மன் கதை, அகஸ்தீசுவரம், குமரி மாவட்டம், 1968.

4. பார்க்க: பி. கோவிந்தசாமி, தமிழக நாட்டுப்புற ஆய்வுகள், இன்டர்நேசனல் பிரிண்டர்ஸ் & பப்ளிசர்ஸ், 11, இராசாசி நகர், திருவான்மியூர், சென்னை, 1984.

5. பார்க்க: டாக்டர் ஆ. தசரதன், முப்புராதி அம்மன் கதைப்பாடல் 1995, தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம், சென்னை-41.

6. காவல் நகர் பெ. பிச்சாண்டி நாடார், முத்தாரம்மன் கதை வில்பாட்டு, கலைமகள் கம்பெனி, திருநெல்வேலி சந்திப்பு, 1955.

7. முனைவர் நிர்மலாதேவி, முத்தாரம்மன் கதை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995.

8. டாக்டர் ஆ. தசரதன், மாரியம்மன் கதைப்பாடல், தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம், சென்னை-41, ( 1995 ) , 1996.

9. கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், பூலங்கொண்டாள் கதை, நாகர்கோயில், குமரி மாவட்டம்.

10. கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், தோட்டுக்காரி அம்மன் கதை, நாகர்கோயில், குமரி மாவட்டம்.

11. பிச்சைகாலன் கதையின் பிரதி கிடைக்கவில்லை; இதனை, என். இராமச்சந்திரன் வேறொரு பதிப்பாக வெளியிட்டுள்ளார்.

11. டாக்டர் சு. தங்கதுரை, பலவேசஞ்சேர்வைக்காரர் கதை, சோபிதம் பதிப்பகம், நாகர்கோவில், 1983.

12. டாக்டர் சு. தங்கதுரை, சிதம்பர நாடார் கதை, மேலக்கிருஷ்ணன் புதூர், குமரி மாவட்டம், 1982.

13. டாக்டர் ஆ. தசரதன், வலங்கை வாழ்த்து, இன்டர்நேசனல் பிரிண்டர்ஸ் & பப்ளிசர்ஸ், குற்றாலம், 1984.

14. இது பெண்ணரசியர் கதை ( பதிப்பாசிரியர் முனைவர் ஜெயக்குமார், திரு. த. பூமிநாகநாதன், ஆசியவியல் நிறுவனம் ) என அச்சாகியுள்ளது.

15. பார்க்க: டாக்டர் ஆ. தசரதன், (பதிப்பாசிரியர்), பலவேசஞ்சேர்வைக்கார சுவாமிகள் கதைப்பாடல், (பதிப்பில்).

16. பார்க்க: டாக்டர் ஆ. தசரதன், வலங்கைச் சான்றோரும் சோழரும், தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம், சென்னை-41, (1995), 1996.

17. ஆறுமுகப் பெருமாள் நாடாரின் உண்மையான நிலையை உலகுக்கு எடுத்துக்காட்டும் வகையில் சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்திய தேசிய சுவடிக் கருத்தரங்கின்போது இக்கட்டுரை இடம்பெறுவதற்கு விருப்பு வெறுப்பற்ற நிலையில் முயற்சிகளை மேற்கொண்ட நிறுவன இயக்குநர்க்கும் ஆய்வு அலுவலர்களுக்கும் ஆய்வுலகம் நன்றிக் கடப்பாடுடையதாகும்.

# 26. சிற்பங்கள் ஓவியங்களில் சுவடிகள்

திரு. குடவாயில் பாலசுப்பிரமணியன்

தமிழகத்துக் கல்வெட்டுச் சாசனங்களை நோக்கும் போது மன்னனின் ஆணைகளை எழுதுகின்ற மந்திர ஓலை, அவற்றைச் சரிபார்க்கின்ற ஓலைநாயகம், வரிகளை ஏடுகளில் பதிவு செய்யும் வரிப்பொத்தகம் ஆகிய அலுவலர் பெயர்கள் எல்லாம் ஓலையின் அடிப்படையில் அமைந்து காணப் பெறுகின்றன. ஆவணங்கள் எழுதுவதற்காகப் பயன்படுத்தப் பெற்ற ஓலைகளைத் தமிழ்நாட்டில் ஏட்டுச்சுவடி என்றும், தக்காணத்தில் தாலபத்தரம் என்றும், வட இந்தியாவில் பூர்ஜபத்ரம் என்றும் அழைத்தனர். ஆவணங்கள் மட்டுமின்றி இலக்கியங்களும் சுவடிகளில்தான் மலர்ந்தன. இவற்றைத் தெளிவுபெற, அழகாக, முத்துமுத்தாக எழுதக்கூடிய திறம் பெற்ற எழுத்தச்சர்களே எழுதிவந்தனர். வடமொழியில் இவர்களை லேக்ககர் என்றும், இராஜலேக்ககர் என்றும் குறித்தனர். நாகார்ஜுனகொண்டாவில் கிடைத்த பௌத்த சிற்பத் தொகுதி ஒன்றில் ஏடு பிடித்து எழுத்தாணி கொண்டு எழுதும் இராஜலேக்ககர் சிற்பம் ஒன்று கிடைத்துள்ளது. தஞ்சைப் பெரியகோயிலில் உள்ள இராசராசன் காலத்து ஓவியத் தொகுதிகளில் ஏடுகளும் எழுத்தாணிகளும் சித்திரிக்கப் பெற்றுள்ளதைக் காணலாம்.

காலம் காலமாக இவ்வாறு பயன்படுத்தப்பெற்ற சுவடிகளைச் சிற்பங்களிலும் வண்ண ஓவியங்களிலும் காணும்போது அவற்றோடு வரலாறு, மொழிவளம், பேச்சு வழக்கு, எழுத்தமைதியின் வளர்ச்சி நிலைகள், கலை போன்ற பல்வேறு கூறுகளையும் காணமுடிகின்றது. ஏட்டுச்சுவடிகள் சிற்பமாகவும், ஓவியமாகவும் மிளிர்வதை ஒருபுறம் நாம் காணும்போது, அழகிய கோட்டோவியங்களும், வண்ண ஓவியங்களும் சுவடிகளுக்குள்ளும் மிளிர்வதை மற்றோர்புறம்

காண இயலுகின்றது. இவ்வாறு திகழும் இருவகைப் படைப்புக்களையும், அவை காட்டும் சிறப்புக்களையும் இனிக் காண்போம்.

### சிற்பங்களில் சுவடிகள்:

தமிழ்நாட்டுச் சிற்பங்களில் குறிப்பாகக் கல்லாலின் கீழ் அமர்ந்தானாகிய தட்சிணாமூர்த்தியின் கரத்திலும், பிரமன், கலைமகள் ஆகிய திருவுருவங்களின் கரங்களிலும் ஏட்டுச்சுவடிகள் இருப்பதைக் காணலாம். பொதுவாகச் சிவமூர்த்தத்தினை 32 வகைகளாகப் பகுத்துக் கூறுவர். இப்பகுப்பிற்கு உட்படாத ஒருவகைச் சிவ வடிவம் தஞ்சைப் பகுதியில் மட்டுமே சிற்பங்களாக உள்ளன. தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரை, சிவ வழிபாட்டின் உட்சமயங்களுள் ஒன்றான லகுளீச பாசுபதம் மிக்கோங்கி இருந்தது. பல்லவர்களும் சோழர்களும் இந்நெறியாளர்களுக்கு மிகுந்த ஆக்கம் நல்கினர். சிவபெருமானைச் சதுரானன் என்ற கோல நிலையில் நான்கு தலைகளுடன் தாமரைப்பீடத்தில் அமர்ந்தவராக, மூவிலைச் சூலம், உருத்திராக்க மாலை, ஏட்டுச்சுவடி, தாமரை மொக்கு ஆகியவை ஏந்தியவராகப் படைத்து வழிபட்டனர். இம் மூர்த்தத்தினைச் சதாசிவத்தின் உருவாகக் கொண்டு வாகீஸ்வரர் எனப் போற்றினர்.

தாமரையில் அமர்ந்து தாமரை மொக்கும் சுவடியும் ஏந்தித் திகழும் இம் மூர்த்தத்தினைத் திருஞானசம்பந்தர்,

> பதும நன்மலரது மருவிய சிவனது சிவபுரம்

என்று சிவபுரப்பதிகத்திலும், திருநாவுக்கரசர், தங்கையின் யாமும்வைத்தார் தாமரை மலரும் வைத்தார் என்று திருக்கழிப்பாலையிலும், புண்டரீகப்புதுமலர் ஆதனத்தார் போலும் என்று திருவீழிமிழலையிலும், தளம் கிளரும் தாமரை ஆதனத்தான் கண்டாய் என்று திருவலஞ்சுழி திருக்கோட்டையூர் பதிகத்திலும், கடிக்கமலமலர் வைத்தார் என்று திருநல்லூரிலும் பாடிப்பரவுகிறார். மணிவாசகரோ தாமரைச் சைவன் என்று குறிப்பிடுகிறார்.

சுவடி ஏந்தி ஞானம் உரைக்கின்ற இப்பரமனின் இச்சிற்பங்கள் தஞ்சை, செந்தலை, நந்திபுரம் (கண்டியூர், வீரசிங்கம்பேட்டை) ஆகிய பகுதிகளில் மிகுந்து காணப்படினும், திருநெய்த்தானத்திலுள்ள ஏடு ஏந்திய சிற்பம் குறிப்பிடத் தக்கதாகும். வட இந்தியாவில் தேவ்கார் எனும் இடத்திலுள்ள குப்தர்காலச் சிற்பம் ஒன்றில் தாமரை மொக்கும், சுவடியும், அக்கமாலையும் ஏந்தியுள்ள சிற்பத்தை ஒத்ததாகத் தஞ்சைப் பகுதிச் சிற்பங்கள் திகழ்கின்றன.

### சிற்பச்சுவடியில் திருவாசகம்:

தமிழகத் திருக்கோயில்களில் காணப்பெறும் மணிவாசகரது செப்புப் படிமங்களின், இடது கரத்தில் சுவடி காட்டப்பெற்றிருக்கும். அவற்றில் பெரும்பாலும் நமசிவாய என்ற ஐந்தெழுத்துப் பொறிக்கப் பெற்றிருக்கும். தஞ்சை மாவட்டம் மதுக்கூரில் கிடைத்தமணிவாசகரின் சோழர்கால செப்புப் படிமமொன்றின் கரத்தில் காணப்பெறும் சுவடியில் நமசிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க என்ற திருவாசகத்தின் முதல் அடி காணப்பெறுகின்றது.

இவ்வாறு சிற்பங்களிலும் செப்புத் திருமேனிகளிலும் சுவடிகள் காட்டப் பெற்றிருப்பதோடு அவற்றில் காணப்பெறும் எழுத்துப் பொறிப்புகளால் தமிழ் இலக்கியம் பற்றியும், சிற்பத்தின் காலக்கணிப்பு, எழுத்தமைதி (Paleography) போன்ற பல்வேறு செய்திகளையும் அறிய இயலுகின்றது.

### கல்லில் சொல்லோவியங்கள்:

தாராசுரம் திருக்கோயிலில் சுந்தரரின் திருத்தொண்டத்தொகை, நம்பியாண்டார் நம்பியின் அந்தாதி, நாவுக்கரசரின் ஐயாற்றுத் தேவாரம், சேக்கிழார் பெருமானின் திருத்தொண்டத்தொகை, சிவபுராணம் ஆகிய அனைத்தும் இலக்கியத்திலிருந்து சிற்ப வடிவம் பெற்றுத் திகழ்கின்றன. அங்குச் சோழனின் சிற்பி சுவடிகளைச் சிற்பமாகக் காட்டிப் பல கதைகளைக் கூறியுள்ளான். சுந்தரர் திருவெண்ணெய் நல்லூர்ச் சபையோர் முன் ஆவண ஓலை காட்டுவது, புத்தகக் கவளியிலிருந்து குத்துவாள் எடுத்து மெய்ப்பொருளாரை வீழ்த்துவது, வைகை நதியில் ஞானக்

குழந்தை இடும் தமிழ் ஏடுகள் நீரின் போக்கை எதிர்த்துச் செல்லுவது, சங்கப்புலவோர் சுவடி ஏந்தி நிற்பது, கணநாதாண்டார் சுவடி ஏந்தி நூற்பொருள் விரித்துரைப்பது, காரியார் சுவடி ஏந்தித் தமிழ்க் கோவை பாடுவது, ஐயடிகள் காடவர் கோன் சுவடி ஏந்தி வெண்பா பாடுவது போன்ற அரிய சிற்பத் தொகுதிகளைக் காண இயலுகின்றது. அங்குச் சுவடிச் சிற்பங்களை நாம் காணுவதோடு, அச்சிற்பத் தொகுதிகளுக்கு மேலாகப் பொறிக்கப்பெற்றுள்ள கல்லெழுத்து வரிகளைக் காணும்போது தமிழின் சிறப்பையும் சைவத்தின் மேன்மையையும் அறியலாம்.

### ஆவண ஓலை காட்டினபடி:

ஒரு சிற்பத் தொகுதியில் வெண்ணைநல்லூர்ச் சபையோர் முன்பு ஈசனார் கிழவேதியராக ஆவண ஓலை காட்டி நிற்கிறார். அதனைக் கையில் வாங்கிய சுந்தரர் திகைப்புற்று நிற்க, சபையோர் இருவர் ஆவணக் களரியின் சுவடிக்கட்டுக்களைப் பிடித்த வண்ணம் அமர்ந்திருந்திருக் கின்றனர். சிற்பத் தொகுதிக்கு மேலாக ஆவண ஓலை காட்டினபடி என்ற தமிழ் எழுத்துப் பொறிப்பு காணப் பெறுகின்றது. ஆட்சியில், ஆவணத்தில், மற்றயலார்தம் காட்சியில் ஒன்றான ஆவணம் காட்டும் இக்காட்சி தமிழகத்தில் அறங்கூர் அவையத்தார் மேற்கொண்ட நெறி முறைகளைச் சுட்டிக் காட்டுவதாகும். ஆவணக்களரி என்பது தமிழரின் வாழ்வியலில் பெற்ற இடத்தினை இக்காட்சி சிறப்புற எடுத்துக்காட்டுகின்றது.

### தத்தா நமரே காண் என்கின்றாராக... :

மெய்ப்பொருள் நாயனாரின் கதைத் திறம் கூறும் சிற்பத் தொகுதியில் பொய்த்தவ வேடங்கொண்ட முத்தநாதன் தவிசின்மேல் அமர்ந்திருக்க, மெய்ப்பொருளார் நிலத்தின் மிசையிருந்து ஆகமப்பொருளைச் செவிமடுத்துக் கேட்க முற்படும்போது முத்தநாதன் தான் கொணர்ந்த புத்தகக் கவளியிலிருந்து குறுவாள் ஒன்றினை உருவி மெய்ப் பொருளாரைக் குத்துதலும், அது கண்டு பொறாது அவனைக் கொல்வதற்கு வாளுடன் விரைந்த வாயிற்காவலனாகிய தத்தனை நோக்கிய மெய்ப்பொருளார் தத்தாநமர் ( தத்தா

இவர் நம்மவர் ) எனக் கூறித் தம் வலக்கையினால் தடுத்தலும், அருகே விடைமேல் அம்மையப்பர் தோன்றுதலும் ஆகிய காட்சிகள் இடம்பெற்றுள்ளன. இச்சிறபத் தொகுதிக்கு மேலாகத் தத்தா நமரேகாண் என்கின்றாராக என்ற சொற்றொடர் சோழர்காலக் காவி எழுத்தில் எழுதப் பெற்றுள்ளது. இக்கதையைக் கூறும் சேக்கிழார் பெருமானார்,

"கைத் தலத்திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல்
வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான்போன்று புரிந்தவர் விளங்கும்
போதில்"

"மறைத்தவன் புகுந்தபோதே மனம் அங்கு வைத்த
தத்தன்
இறைப் பொழுதின்கட் கூடி வாளினால்
எறியலுற்றான்
நிறைத்த செங்குருதி சோர வீழ்கின்றார்
நீண்டகையால்
தரைப்படும் அளவில் "தத்தா நமர்" எனத் தடுத்து
வீழ்ந்தார்"

என்று விளக்கிக் கூறுகின்றார்.

சேக்கிழாரின் காலத்திற்கு 150 ஆண்டுகள் முன்பாகவே தஞ்சைக் கோயிலில் இராசராசன் மிலாடுடை யாரான மெய்ப்பொருள் நாயனார்க்குச் செப்புப் படிமம் ஒன்றினை எடுக்கச் செய்தான். அதுபற்றிக் கூறும் தஞ்சைக் கோயில் கல்வெட்டு "தத்தா நமரே என்கின்றாராக மிலாடுடையார் பிரதிமம் ஒன்று" என்று கூறுகின்றது. இராசராசனின் காலத்தவர் எனக் கருதப்பெறும் நம்பியாண்டார் நம்பி தாம் எழுதிய திருத்தொண்டர் திருவந்தாதியில்,

"மற்றவன் தத்தா நமரே எனச் சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு ளாம்என்று பேசு
வரே"

என்று கூறியுள்ளார்.

சுவடியுடன் காட்டப்பெற்றுள்ள இச்சிற்பத் தொகுதியோடு, கல்வெட்டுக் குறிப்புகள் இலக்கியச் செய்திகள் ஆகியவற்றையும் தொகுத்து நோக்கும்போது "தத்தாநமர்" என்ற சொல்லாட்சி எப்படிக் கையாளப்பெற்றுள்ளது என்பதும், சுவடிக்குப் புத்தகம் என்ற பெயர் வழக்கில் இருந்ததும் அறிகிறோம்.

### சங்கப் பலகை

மதுரையில் தமிழ்ச் சங்கப் புலவர் வேண்டுகோட் கிரங்கிப் புலவர்களின் புலமை வரம்பினை அறுதியிட்டுக் காட்டுவதற்காகத் திருவாலவாயிறைவர் சங்கப் பலகையினைத் தந்தருளியதாகப் பெரும்பற்றப்புலியூர் நம்பியும் பரஞ்சோதி முனிவரும் **திருவிளையாடற் புராணத்தில்** குறிப்பர். இவர்களுக்குக் காலத்தால் முற்பட்டவரான சேக்கிழார் யாத்த **திருத்தொண்டர் புராணத்திற்குச்** சிற்பம் செய்த இரண்டாம் இராசராசனின் சிற்பி, தாராசுரம் திருக்கோயில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சங்கப் பலகையைச் சிற்பமாகக் காட்டியுள்ளான்.

இச்சிற்பத் தொகுதியில் திருவாலவாய்த் திருக்கோயிலும், சங்கப்பலகையும், ஒன்பது புலவர்கள் சுவடி ஏந்தி நிற்பதும் காணப்பெறுகின்றது.

**திருத்தொண்டத்தொகையில்** பொய்யடிமையில்லாப் புலவர் - என்று சுந்தரர் கூறுவதைத் தரணியிற் பொய்மை யில்லாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர் - என நம்பியாண்டார் நம்பியும்;

"செய்யுள் நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயன் இதுவே எனத் துணிந்து விளங்கி யொளிர்
மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை யில்லாத புலவர் எனப் புகழ்மிக்கார்"

என்று சேக்கிழார் பெருமானும் கூறும் இப்புலவர் குழாத்துள் நாற்பத்தொன்பதின்மர் இருந்தனர் என அறியமுடிகிறது.

இதனை விளக்கும் இச்சிற்பத் தொகுதியில் நாற்பத்தொன்பது புலவர்களையும் சிற்பமாகக் காட்ட இடம் போதாது என்பதால் முதலில் நான்கு கால்களின்மீது அழகிய வேலைப்பாடமைந்த சங்கப் பலகையைக் காட்டி அதன் அருகே நான்கு புலவர்கள் சுவடிகள் ஏந்தி நிற்பதையும் காட்டி, அதன் பக்கவாட்டில் ஐந்து புலவர்களையும் மதுரைக் கோயிலையும் சிற்பமாக்கியுள்ளான் சிற்பி. இப்போது நால்வரை நாற்பதின் குறுக்கமாகக் கொண்டு, பின்பு பக்கவாட்டிலுள்ள ஐவரையும் நால்வரோடு சேர்த்து ஒன்பதின்மராகக் கொண்டு, நாற்பதோடு இணைப்போமானால் நாற்பத்தொன்பது என்பது விளங்கும். நம்பியாண்டார் நம்பி கூறும் புலவர் குழாத்து எண்ணிக்கையை நுட்பமாகச் சித்திரித்துள்ள சோழச்சிற்பி, தகுதியுடைய சுவடிகள் ஏறத்தக்க சங்கப் பலகையை மிக அழகாகக் காட்டியுள்ளான். சங்கப் பலகை இப்படித்தான் இருந்திருக்கும் என நமக்குக் காட்டும் ஒரே சிற்பமிது.

**தஞ்சை ஓவியத்தில் வெண்ணெய் நல்லூர் ஆவண ஓலை**

சுந்தரரைத் தடுத்து ஆட்கொள்ள விரும்பிய பரமன் வெண்ணெய் நல்லூர்ச் சபையோர் முன் வழக்குரைத்த காட்சியினைச் சேக்கிழார் விரித்துரைப்பதற்கு 150 ஆண்டுகள் முன்பாகவே இராசராசனின் ஓவியன் தஞ்சைப் பெருங்கோயில் உண்ணாழிகையில் ஓவியமாகக் காட்டியுள்ளான். இவ்வரிய காட்சியில், காதலணி கண்டிகை வடித்த குழை தாழச் சோதிமணி மார்பில் அசைநூலினொடு தோளின்மீது புனை உத்தரிய வெண்துகில் நுடங்க ஆதபம் மணிக்குடை அணிக்கரம் விளங்கத் தள்ளு நடையோடு வந்த முதியவர் தன்கையில் ஏந்தியுள்ள மூல ஓலையான அடிமை ஓலையைச் சபையோரிடம் நீட்டுகிறார். அதனைப் பெற்ற சபையோர் அங்குள்ள ஆவணச் சுவடிகளை எடுத்து ஒப்பு நோக்குகின்றனர். இரண்டும் ஒத்திருந்த தென்னே! இனிச் செயல் இல்லை - என வியந்து கூறும் காட்சியும் அங்கு இடம் பெற்றுள்ளது. இவ்வாறு ஓலையை ஒப்புநோக்கும் சபையோர் கரத்தில் திகழும் ஓலையின் ஒருபகுதியை ஓவியன் நாம் காணும் வண்ணம் திருப்பியுள்ளான். அப்பகுதியில் இப்படி **அறிவன் இவை என் எழுத்து** என்ற வரி காணப்

பெறுகின்றது. இதனைப் பார்த்துத்தான் சேக்கிழார் பெருமான் வருமுறை மரபுளோடும் வழித்தொண்டு செய்தற் கோலை இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற் கிவை என் எழுத்து என்று கூறினார் போலும். இங்குக் காட்டப் பெற்றுள்ள ஓலையின் எழுத்தமைதி கொண்டு இவ்வோவியம் இராசராசன் காலத்துப் படைப்பு என்று அறுதியிட்டுக் கூற முடியும். மேலும் நெட்டெழுத்துப் பூர்த்தி என்று தற்காலம் வரை சாசனம் எழுதுவோரால் கூறப்பெறும் இம்மரபு எத்துணைத் தொன்மையானது என்பதையும் அறிகிறோம்.

### சுவடியியலில் புதிய உத்தி:

வடமொழியிலும், தமிழிலும், தெலுங்கிலும் பாடல்கள் வடிவில் எழுதப்பெற்ற புராணச் சுவடி நூல்களைப் பாமரரும் அறியும் வகையில் வசனமாக (உரைநடையில்) எழுதும் முறையை கி.பி. 15ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு கைக் கொண்டனர். வசன நடையில் மட்டும் சுவடியில் எழுதுவதைத் தவிர்த்து, எழுத்தோடு ஓவியத்தையும் இணைத்துப் புதுமை படைத்தனர். பனையோலைச் சுவடிகளில் ஓவியம் எழுதுவது என்பது எளிதல்ல. மேலும் காட்சி விளக்கம் கொடுப்பதும் கடினம். எனவே, இதற்கெனத் திருக்கோயில் மண்டபங்களின் விதானங்களைத் தேர்வு செய்து அங்கு வண்ணக்கலவை கொண்டு ஓவியத்தோடு சுவடிகளை இணைத்தனர். சுவடியியல் வளர்ச்சியில் இது ஒரு புதிய உத்தியாகும். திருவாரூர் திருக்கோயிலிலுள்ள முசுகுந்த புராண ஓவியங்கள், இராமநாதபுரம் இராமலிங்க விலாசத்திலுள்ள இராமாயண பாகவத ஓவியங்கள், தஞ்சைக் கோவிலிலுள்ள தேவி மகாத்மியம், ஆலவாய்ப் புராணம் ஆகிய ஓவியங்கள் இவ்வகையில் தீட்டப்பெற்றவையாகும். இதனை ஒத்த படைப்புக்கள் மேலும் பல திருக்கோயில்களில் காணப் பெறுகின்றன. இவ்வோவியங்களைக் காணும்போது சுவடி படிக்கும் உணர்வு ஏற்படுவதோடு தமிழ்நடை, எழுத்தமைப்பு, வட்டார வழக்குச் சொற்கள், வடமொழிச் சொற்களைத் தமிழில் பயன்படுத்தும் பாங்கு, போன்ற பல்வேறு செய்திகளைக் காட்சிகளோடு காணமுடிகின்றது.

## ஓவியமான இராமாயண பாகவதச் சுவடிகள்:

முத்து விசய ரகுநாத சேதுபதி அமர்ந்திருக்க அவருக்கு முன்பு புலவர் ஒருவர் இராமாயணச் சுவடியொன்றைப் படித்துக் காட்டிய வண்ணம் இராம கதையைக் கூறுவதாகத் தொடங்குகிறது இராமலிங்க விலாசத்து ஓவியங்கள். அங்குக் காட்டப்பெற்றுள்ள சுவடியின் மேல் இராமாயணம் என்ற தெலுங்குக் குறிப்பு உள்ளது. எனவே ஓவியக் கூடத்தின் காட்சித் துவக்கம் தெலுங்குச் சுவடியிலிருந்து சொல்லப் படுவதாக அமைந்துள்ளது. அடுத்து வால்மீகி இராம கதையைச் சுவடியைப் பார்த்துக் கூறுவதாக அமைந்த காட்சியில் தொடங்கி இராம காதை முழுவதும் காட்சிக்குக் காட்சி அடியில் தமிழில் எழுதப்பெற்ற வசன நடையோடு காட்சியளிக்கின்றது. சில இடங்களில் தெலுங்கில் எழுதப்பெற்ற வரிகளும் உள்ளன. இதுபோன்றே **பரிசித்து மகாராசா பாகவத கதையைச்** சுவடியைப் பார்த்துக் கூறுவதாகக் காட்சியைத் தொடங்கிப் பாகவத கதை முழுவதும் காட்சிப்படுத்தப் பெற்றுள்ளது. இவை தவிரச் சேதுபதி மன்னர்களின் வரலாற்று ஓவியங்களும் விளக்கக் குறிப்புகளோடு காணப்பெறுகின்றன.

இவற்றைத் தொகுத்து நோக்கும்போது தெலுங்கில் அமைந்த இராமாயணம் பாகவதம் போன்ற சுவடி நூல்களுக்குத் தமிழில் மொழிபெயர்ப்பாகக் காட்சி விளக்கங்களோடு இவ்வோவியக்கூடம் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது. முகவை மாவட்டத்து வட்டாரப் பேச்சு வழக்கு, அக்காலத் தமிழ் எழுத்தமைதி, வரலாற்று உண்மை நிகழ்வுகள் ஆகியவை அனைத்தும் இங்குச் சித்திரிக்கப் பெற்றுள்ளன. சுவடிகள் சித்திரமானதற்கு இவ்வோவியக் கூடம் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

## ஆரூர் ஓவியக் கூடம்:

திருவாரூர்த் திருக்கோயிலிலுள்ள தேவாசிரிய மண்டபத்தினைச் சேக்கிழார் பெருமான், **தேனுறக் கற்பக வாச மாலைத் தேவாசிரியன் தொழுதிறைஞ்சி** என்று கூறுவார். வரலாற்றுச் சிறப்புடைய இம்மண்டபத்தின் சுவரிலும், விதானத்திலும் சுவடிகளாகவுள்ள இரண்டு

புராணங்கள் ஓவிய வடிவம் பெற்றுள்ளன. இவற்றைத் தஞ்சை மராட்டிய மன்னன் சஹஜி தீட்டச் செய்துள்ளான். தேரூர்ந்த சோழபுராணம், மனுநீதி கண்ட புராணம் என்ற பெயர்களில் பாடல்களாகவும், உரைநடையாகவும் உள்ள சுவடி நூல்கள் இங்கு மனுநீதிச் சோழன் வரலாறாகக் காட்சி பெற்றுள்ளன. தமிழில் விளக்கக் குறிப்புகளோடு காணப்பெறும் இக்காட்சிகள் காலவெள்ளத்தில் கரைந்தபோதும், விதானத்தில் உள்ள முசுகுந்த புராணம் இங்குச் சிறப்பாக உள்ளது.

திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமாலின் மார்பிலே வீற்றிருந்தருளும் தியாகேசப் பெருமான் இந்திரனது வேண்டுகோட்கிரங்கித் தேவருலகில் எழுந்தருளிப் பின்பு முசுகுந்த மன்னன் பேரன்பிற்கிசைந்தருளி அமரர் நாட்டினின்று ஆரூருக்கு எழுந்தருளியுள்ளார் என்பது கந்தபுராணத்தால் அறியப்பெறும் செய்தியாகும். இப்புராணக் கதையின் அடிப்படையில் பின்னாளில் மராட்டியிலும் வடமொழியிலும் முசுகுந்த புராண ஏட்டுச் சுவடிகள் மலர்ந்தன. இவை ஓவிய வடிவம் பெற்று, தமிழில் சுவடியில் எழுதப்பெற்றது போன்றே காட்சிகளுடன் விளக்கம் பெற்றுத் திகழ்கின்றது. புராணக் கதையுடன் ஆரூரில் நிகழ்ந்த விழாக்காட்சிகளும் தமிழில் எழுதப்பெற்ற விளக்க உரைகளோடு காணப்பெறுகின்றன.

கேரள மாநிலத்துத் திருவனந்தபுரம் பத்மநாப சுவாமி கோயிலில் நடைதிறப்பு என்று ஒரு நிகழ்ச்சி நாள்தோறும் நடைபெறுவதாகும். மன்னர் முன்னிலையில் வேத கோஷம் முழங்கக் கருவறைக் கதவு திறக்கப்படும். இதேபோன்று கி.பி. 1700இல் ஆரூர்த் திருக்கோயிலில் தமிழ் பாடிக் கருவறைக் கதவு திறக்கப்பட்ட காட்சியை இங்குள்ள ஓவியம் காட்டி நிற்கின்றது.

மன்னனின் அலுவலரான சாமந்தனாரும் மற்ற அலுவலர்களும் பூட்டப்பட்ட கருவறைக் கதவின் முன் நிற்க ஓதுவார் இருவர் தேவாரம் பாடக் கதவினை ஒருவன் திறக்கும் காட்சி உள்ளது. தமிழில் தெளிவாக விளக்கங்களும் எழுதப்பெற்றுள்ளன.

ஹாலந்து நாட்டை உலந்தீசு என்றும், ரோலண்ட் கிரேப் என்பான் பெயரை ரூலங்கலப்பை என்றும், ஜெனரல் என்பதை சென்னரல் என்றும் தமிழில் எழுதியுள்ளது சுவை பயப்பதாகும்.

## ஏடுகளில் ஓவியம்:

பனை ஓலைகளில் அரிதின் முயன்று எழுத்தாணி கொண்டு சில கோட்டோவியங்களை வரைந்துள்ளனர். இத்தகைய ஓவிய ஏடுகளில் சில தஞ்சை அரண்மனை நூலகத்திலுள்ளன. திருவாய்மொழி வாசகமாலை எனும் சுவடி நூலில் கிடந்த கோலத்திருமாலின் வரைகோட்டோவியம் காணப்பெறுகின்றது. அது போன்றே வடமொழிச் சுவடிகளில் பலவகையான பூவேலைப்பாட் டோவியங்கள் காணப்பெறுகின்றன. காகிதச் சுவடிகளிலும் அதன் முகப்புப் பலகைகளிலும் பல வகையான வண்ண ஓவியக் காட்சிகளைத் தீட்டும் அரிய கலை பத்தொன்பதாம் நூற்றாண்டில் மிக்கோங்கியிருந்தது. இராமாயணம், பாகவதம், பாரதம், புராணங்கள் போன்றவை காட்சி வடிவம் பெற்றன. நூல் படைத்த புலவர், ஆக்கம் தந்த மன்னர் ஆகியவர்களின் உருவ ஓவியங்களும் சுவடிகளில் இடம்பெற்றன. இத்தகைய ஓவிய படைப்புக்கள் பல தஞ்சை அரண்மனை நூலகத்தில் உள்ளதை இன்றும் கண்டு மகிழலாம்.

# 27. கணிதச் சுவடிகள்

முனைவர் மா. சத்தியபாமா

தொன்மைமிக்கத் தமிழகத்தில் பல நூற்றாண்டுகளுக்கு முன்பிருந்தே எண்ணற்ற கலைகள் தோன்றி வளர்ந்திருந்தன. பழந்தமிழர், மேலைநாட்டார் போற்றும் வகையில் ஓவியக்கலை, சிற்பக்கலை, மருத்துவக்கலை, கட்டடக்கலை, நாடகக்கலை, நாட்டியக்கலை போன்றவற்றில் சிறந்து விளங்கினர். அவர்கள் தங்கள் எண்ணங்களையெல்லாம் எழுத்துருவாக்கி எழுதுபடு பொருள்களில் பதித்து வைத்தனர். அவற்றுள் பெரிதும் பரவலாகப் பயன்படுத்தப் பட்டது ஓலைச்சுவடிகளாகும். பழந்தமிழரின் எண்ணங்களை இன்று நமக்கு உணர்த்தும் கருவூலங்களாக இவை திகழ்கின்றன.

மனித வாழ்வில் இரு கண்களென விளங்குவன எண்ணும் எழுத்தும். அன்றாட வாழ்வில் பொருள்களை எண்ணிக் கணக்கிடவும் அளந்தறியவும் பொருள்களை வாங்கவும் விற்கவும் எனப் பல்வேறு நிலைகளில் இவை இன்றியமையாதனவாக விளங்குகின்றன. கலைகளோடும் வாழ்வியலோடும் இரண்டறக் கலந்திருந்த கணக்குகளில் பழந்தமிழர் சிறப்புற்று விளங்கினர். இலக்கண இலக்கிய நூல்கள் இவற்றுக்குச் சான்று பகர்கின்றன.

இன்று நமக்குக் கிடைக்கும் தமிழ்நூல்களில் பழமையானது தொல்காப்பியம். இத்தொல்காப்பியத்தில் பழந்தமிழரின் அளவை முறைகள், கணக்கியல் முறைகள், எண்களைப் பற்றிய செய்திகள் போன்ற பல்வேறு வகையான செய்திகள் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியர் காலத்திலேயே பழந்தமிழர் எந்த அளவிற்குச் சிறந்து விளங்கினர் என்பதற்கு செய்யுளியல் நூற்பா உரைகல்லாக விளங்குகிறது.

மெய்பெறு மரபின் தொடைவகை தாமே
ஐயீ ராயிரத் தாரைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை யிட்ட பத்துகுறை எழுநூற்
றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே

என்ற அந்த நூற்பாவில் கூறப்பட்டுள்ள எண் முறை 5x200+6x500+709-19[1] என்பதாகும். இதன் வாயிலாகக் கூட்டல், பெருக்கல் முறைகளோடு கழித்தல் கணக்கு முறை கூறப்பட்டு இருப்பதைக் காணுகின்றோம்.

பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்களிலும் பழந்தமிழரின் கணக்கியல் செய்திகள் பலவும் காணப் படுகின்றன. காலவெள்ளத்தாலும் இயற்கையின் சீற்றத்தாலும் மூடநம்பிக்கைகளின் காரணமாகவும் விலை மதிப்பற்ற தமிழ்நூல்கள் பலவும் அழிந்தன. அவற்றுள் பல கணக்கியல் நூல்களும் அடங்கும்.

**தமிழ்க் கணக்குச் சுவடிகள்:**

தமிழகத்திலும், பிற மாநிலங்களிலும், மேலை நாடுகளிலும் தமிழ்ச் சுவடிகள் பலவும் விரவிக் கிடக்கின்றன. அவற்றுள்ளும் கணிதச்சுவடிகள் தமிழகத்தில் சென்னை கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம், சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனம், டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூலகம் மற்றும் தஞ்சை சரசுவதி மஹால் நூலகம், தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகம் முதலானவிடங்களிலும், கேரளா, மேற்கு வங்காளம், ஆந்திரா போன்ற வெளிமாநிலங்களிலும் கிடைக்கின்றன.

கேரளா - திருவனந்தபுரம் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

மேற்கு வங்காளம் - கல்கத்தா இந்திய தேசிய நூலகம்

ஆந்திரா - ஸ்ரீ வெங்கடேசுவரா பல்கலைக் கழகம்

மேலைநாடுகளில் பிரான்ஸில் உள்ள பிபிலோதேகு நேஷனல், டென்மார்க்கில் உள்ள தேசிய அருங்காட்சியகம் ஆகிய இடங்களிலும் கணக்குச் சுவடிகள் உள்ளன.

## கணக்குச்சுவடிகளின் வகைப்பாடு:

கிடைத்த வரையிலான தமிழ்க் கணக்குகள் தொடர்பான சுவடிகளை 3 நிலைகளில் பாகுபடுத்திக் காணலாம்.

1. எண்சுவடிகள்
2. வரவு செலவு கணக்குச் சுவடிகள்
3. கணக்கதிகாரச் சுவடிகள்

என்பனவாகும்.

## எண்சுவடிகள்:

அக்காலத்தில் கல்வியின் தொடக்கநிலையில் உள்ளவர்கள் பயன்படுத்தும் சுவடிகள் அரிச்சுவடிகள், எண்சுவடிகள் எனப்பட்டன. அரிச்சுவடிகள் என்பன தமிழ் எழுத்துககளை எழுதிப் பார்க்கப் பயன்பட்டவை. எண்சுவடிகள் என்பவை எண்களை எழுதிப் பார்க்கவும் வாய்பாடுகள் மற்றும் அளவைகளைப் பற்றியும் தெரிந்து கொள்ளவும் பயன்பட்டவை; அடிப்படையான கணக்குகளைத் தன்னகத்தே கொண்டவை.

இத்தகைய சுவடிகள் நடுநரம்பு எடுக்கப்படாத நீண்ட ஓலைகளாகக் காணப்படுகின்றன. பயன்படுத்துவோரைப் பொறுத்து அமைப்பில் மாறுபாடு உடையனவாக இவை அமைகின்றன.

## வரவு செலவு கணக்குச் சுவடிகள்:

அரசுக்குக் கிடைக்கும் ஆண்டு வருவாய்க் கணக்குகள், நிலவரி விபரங்கள், கோயில்களுக்கு உரிய நில விளைச்சல் விபரங்கள், பூசைக்காகும் செலவு விபரங்கள், அரசுப் பதிவேடுகள், தனியார் வரவு, செலவுக் கணக்குகள் போன்றவை வரவு செலவு கணக்குச் சுவடிகள் என்ற தொகுப்பில் அடங்குவனவாகும். இத்தகைய சுவடிகள், சுவடிகள் நூலகங்களில் மட்டுமல்லாது ஆவணக் காப்பகங்களிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இதுபோன்ற சுவடிகளுள் குறிப்பிடத்தக்கவை.

1. கேரள மாநில ஆவணக் காப்பகச் சுவடிகள்
2. செங்கல்பட்டு மாவட்ட வருவாய்க் கணக்குச் சுவடிகள்
3. அழகிய பாண்டிபுர முதலியார் சுவடிகள்
4. மெக்கன்ஸியின் சேகரிப்பில் உள்ள சில சுவடிகள்.

வரவு செலவு கணக்குச் சுவடிகள் பெரும்பாலும் ஓலைகளாகவும் சிறுபான்மை தாள்களிலும் காணப் படுகின்றன. நடுநரம்பு எடுக்காத ஓலைகளே இவ்வகையில் அதிகமாக அமைந்துள்ளன. சில இடங்களில் நடுநரம்பு நீக்கப்பட்ட நீண்ட ஓலைகளாகவும் காணப்படுகின்றன. ஓர் ஓலையில் கணக்கெழுதி நடுவில்ஒரு துளையிட்டுக் கயிற்றில் ஒவ்வொரு நாளும் எழுதும் கணக்கைச் சேர்த்துக் கொண்டே வருவர். நீண்ட எண்ணிக்கையில் அதிகமான ஏடுகளைக் கொண்ட இவற்றைப் பாய் சுருட்டுவது போல் சுருட்டிக் கட்டி வைப்பர். எனவே, இவை சுருணைகள் என்றே அழைக்கப் படுகின்றன. சுவடியின் மாறுபட்ட அமைப்பின் காரணமாக இவை பெரும்பாலும் சுவடிகளின் விளக்க அட்டவணைகளில் இடம்பெறுவது இல்லை.

வரவு செலவு கணக்குச் சுவடிகள் சுமார் 1000 ஏடுகளைக் கொண்டவையாக இருப்பதும் உண்டு. இத்தகைய ஏடுகளில் அதிக நீளம் உடைய ஒற்றை ஓலை திருவனந்தபுரம் ஆவணக் காப்பகத்தில் உள்ளது. கொல்லம் 4.10.1028-ல் (கி.பி. 1853) எழுதப்பட்ட அரசுவரித் தொடர்பான இவ்வோலை 109 சென்டிமீட்டர் நீளம் உடையது.

இத்தகைய வரவு செலவு கணக்குச் சுவடிகள் அக்காலத்தைய நில அமைப்பு, கிராம அமைப்பு, பொருளாதாரம், சமூக அமைப்பு, கோயில்களின் வரவு செலவு கணக்குகள் போன்ற ப்ல்வேறு செய்திகளைத் தாங்கி ஆய்வுக் களங்களாக விளங்குகின்றன.

**கணக்கு நூல்கள்:**

பண்டைய எண், நீட்டல், முகத்தல், நிறை, கால அளவைகளையும், கணக்குகள் தொடர்பான சூத்திரங் களையும் புதிர்க் கணக்குகளையும் உடைய நூல்கள் கணக்கு

நூல்கள் என்ற பிரிவில் அடங்கும். கணக்கதிகாரம், ஆஸ்தான கோலாகலம் என்னும் நூல்களில் இருந்து இவற்றை அறிகின்றோம்.

கணக்கதிகாரம், ஆஸ்தான கோலாகலம் ஆகிய இரண்டு நூல்களில் இருந்துதான் தமிழ்நாட்டுக் கணக்கு வளர்ச்சி பற்றி அறிய முடிகிறது. மேற்கண்ட நூல்களைத் தவிர மறைந்துபோன தமிழ்க் கணக்கு நூல்களாக கொறுக்கையூர் காரி என்பவரின் கணக்கதிகார நூலில் ஏரம்பம், அதிசாகரம், கலம்பகம், திரிபுவன திலகம், கிளராலயம், சிறுகணக்கு, கணித ரத்தினம் முதலான நூல்கள் சுட்டப்பட்டுள்ளன. ஏரம்பம் என்ற நூல் திருக்குறள் (பாடல் எண்.372) பரிமேலழகர் உரையில் செய்தி காணப்படுகிறது.

சிறுகணக்கு, பெருங்கணக்கு, மலையான் கணக்கு ஆகிய மூன்று நூல்களையும் ஆஸ்தான கோலாகலம் சுட்டுகிறது.

ஓலைச்சுவடிகளில் சுமார் 65 கணிதச் சுவடிகள் கிடைக்கின்றன. இவற்றில் 43 சுவடிகள் கணக்கதிகாரம் என்ற பெயரில் கிடைக்கின்றன. இவையன்றி, கணித நூல், ஆஸ்தான கோலாகலம், கணக்கு ரத்தினச்சுருக்கம், குழி பெருக்கம், பெருங்குழி மாறல் போன்ற கணக்குச் சுவடிகளும் காணப்படுகின்றன.

இவற்றுள் கணக்கதிகாரம், ஆஸ்தான கோலாகலம் என்ற இருநூல்கள் அச்சாகியுள்ளன. கணக்கதிகார நூட்களுள்ளும் கொறுக்கையூர் காரி என்பவர் எழுதிய கணக்கதிகார நூல் மட்டுமே அச்சாகியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

### கணக்கதிகாரம் (காரி)

இந்நூலின் பழைய பதிப்பு 1862-ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. அதன் பின்னர் 1899, 1938, 1958 ஆகிய ஆண்டுகளில் அச்சான கணக்கதிகார பதிப்புகள் உள்ளன. பிரஜோத்பதி ஆண்டு என்று தமிழ் ஆண்டின் பெயரை மட்டும் குறிப்பிடும் கணக்கதிகார நூல் ஒன்றும் உள்ளது. ஆங்கில ஆண்டு குறிப்பிடப்படாமையால் இந்நூல் 62 ஆண்டுகளுக்கு

முற்பட்ட நூலா அல்லது 122 ஆண்டுகளுக்கு முற்பட்ட நூலா என்பது தெரியவில்லை. 1899, 1938, பிரஜோத்பதி ஆண்டுகளில் வெளிவந்த கணக்கதிகார நூல்கள் தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகத்தில் இன்று கிடைக்கிறது.

கணக்கதிகாரம் என்பது ஒரு குறிப்பிட்ட நூலின் பெயர் என்பது பெரும்பாலோர் கருத்து. கணக்கதிகாரம் என்பது பொதுப்பெயராகும். இன்று கணித நூல், கணக்கு நூல் என்று பொதுவாக வழங்குதல் போல கணக்குத் தொடர்பான நூல் கணக்கதிகாரம் என்று அழைக்கப் பட்டிருக்கிறது. காரியினுடைய கணக்கதிகார நூல் மற்ற கணக்கதிகார நூல்களைக் காட்டிலும் காலத்தால் முந்தியதாகவும் வகுத்தும் தொகுத்தும் அமைக்கப்பட்ட சிறப்பினாலும் தனித்த சிறப்புடையதாக விளங்குகிறது. மேலும் இந்நூல் மட்டுமே பதிப்பிக்கப்பட்டிருக்கின்ற காரணத்தால் கணக்கதிகாரம் என்பது ஒரே நூலின் பெயர் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்துள்ளது.

தமிழ்க் கணக்கு நூல்களுள் கணக்கதிகாரத்தை அடுத்துப் பதிப்பிக்கப்பட்டுள்ள ஆஸ்தான கோலாகலம் என்ற நூலில்,

> இக் கணக்கதிகாரம் திருவடி தேசத்திலே பிறந்து பெரியோர் சிறியோர் யாவரும் பார்க்கவேணு மென்று பொற்கணவரென்ற ஞானியார் உடம்பிச்சது

எனவும்,

அந்தக் கணக்கதிகாரங்களைக் குருவாக எண்ணிச் சுருக்கமாக எந்தவகைக் கணக்கிலும்.... எனவும் சொல்லப் பட்டுள்ளன. இவற்றால் கணக்கதிகாரங்களின் தொகுப்பு நூலே **ஆஸ்தான கோலாகலம்** என்பதும், ஒன்றுக்கும் மேற்பட்ட கணக்கதிகார நூல்கள் இருந்தன என்பதும் பெறப் படும். மேலும் கிடைத்த வரையிலான சில கணக்கதிகாரச் சுவடிகள் அச்சில் வெளிவந்துள்ள கணக்கதிகார நூலில் இருந்து பல இடங்களில் மாறுபட்டுக் காணப்படுகின்றன. வேறு சில முற்றிலும் மாறுபட்ட அமைப்பு உடையனவாக உள்ளன.

இவை மேற்கண்ட இக்கருத்தை வலியுறுத்துவதாக அமைகின்றன.

**கணக்கதிகார நூல் பதிப்புகள்:**

இதுவரை வெளியாகியுள்ள கணக்கதிகாரப் பதிப்புகளை இரண்டு நிலைகளில் பாகுபடுத்திக் காணலாம்.

1. பழைய பதிப்புகள்

2. பிற்கால பதிப்புகள்

**கணக்கதிகாரம் - பழைய பதிப்புகள்:**

கி.பி. 1862ஆம் ஆண்டு முதல் 1950ஆம் ஆண்டு வரையிலான பதிப்புகளைப் பழைய பதிப்புகள் எனலாம். இக்காலத்தில் பதிப்பிக்கப்பட்டு இன்று கிடைப்பவை மூன்று நூல்களாகும். இவற்றைக் கொண்டு பழைய கணக்கதிகாரப் பதிப்புகளின் தன்மைகளை அறியலாம். இம்மூன்று பதிப்புகளிலும் எவ்வித மாற்றமும் இல்லை. ஒத்த பதிப்புகளாகக் காணப்படுகின்றன. மேலும் பக்கங்களின் எண்ணிக்கையில் கூட எவ்வித மாற்றமும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆதலால் பழைய பதிப்புகளின் தன்மைகளைக் கூறுவதற்கு 97 ஆண்டுகளுக்கு முன்னர் 1899இல் பதிப்பிக்கப்பட்ட கணக்கதிகார நூல் இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

இந்நூலில் மூலம், உரை போன்றவை தனித்தனியாகத் தெளிவாகப் பிரித்தறியும்படி அமைந்துள்ளன. பாடல்களுக்கு எண்கள் தரப்பட்டிருப்பதோடு, தக்க இடங்களில் சிறுதலைப்புகள் தரப்பட்டுள்ளன. இப்பதிப்பு பிழைகள் மலிந்த பதிப்பாகக் காணப்படுகிறது. முன்னுரை, பதிப்புரை, முடிவுரை போன்ற பகுதிகள் எதுவும் இல்லை. பாடல்களில் சீர்கள் முறையாகப் பிரிக்கப்படாமல் உரைநடையைப் போன்று தொடர்ந்து செல்லும் நிலையைக் காணலாம். அடிப்பிரித்தல் அமைந்துள்ளது. நிறுத்தற்குறிகள் பெரும்பாலான இடங்களில் விடுபட்டுக் காணப்படுகின்றன. எண்களில் பிழைகளும் எழுத்துக்களில் பிழைகளும் மலிந்து காணப்படுகின்றன.

1958ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டுள்ள கணக்கதிகார நூலின் முன்னுரையில்,

இந்நூல் ஏட்டுப்படியிலிருந்து அச்சுப்படியேறி ஆண்டுகள் பல ஆயினவேனும், வெளியீடுகள்பல வாயினவேனும் இதன் உண்மை வடிவம் ஒருவர்க்கும் புலப்பட இயலாத நிலையின் நின்றது. சொல் வழுக்கள் ஆய்ந்து திருத்திப் பதிப்பிப்பாரின்றிச் செய்யுளுக்கு உரை முரணாகவும், உரைக்குச் செய்யுள் முரணாகவும் மாமுதல் முக்கால் வரையுள்ள சின்னங்களின் வடிவங்களும் தெற்றென விளங்காமல் வேறுபாடாகவும் தோன்றின என்று கூறப்பட்டுள்ளது. இதன் வாயிலாகப் பழைய பதிப்புகளின் நிலையைத் தெளிவாக அறியலாம்.

### கணக்கதிகாரம் - பிற்காலப் பதிப்பு:

1950ஆம் ஆண்டிற்குப் பின்னர் ஒரே ஒரு கணக்கதிகாரப் பதிப்பு மட்டுமே வெளிவந்துள்ளது. இந்நூலை 1958ஆம் ஆண்டில் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் திருந்திய பதிப்பாக வெளிக்கொண்டு வந்துள்ளது.

இந்நூல் சிறிய பதிப்புரையுடன் கூடியது. நல்ல தாளில் அச்சிடப்பட்டுக் காலிகோ கட்டமைப்புச் செய்யப்பட்டுள்ளது. பதிப்புரையில் எண், எழுத்துக்களின் சிறப்பு, கணக்காயர் - பெயர்க் காரணம், கணக்கதிகார நூலாசிரியர், அறுவழி கணக்குகள் போன்ற செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. தமிழ் எண்களின் விளக்க அட்டவணை ஒன்று இணைக்கப் பட்டுள்ளது. இது ஒரு சிறந்த முயற்சியாகும். ஆய்வாளர்களுக்கும் கணக்கு ஆர்வலர்களுக்கும், தமிழ் எண்களைப் பற்றி அறிய விரும்புபவர்களுக்கும் இது பெரிதும் உதவக்கூடியதாகும்.

சுவடிப்பதிப்பில் ஒப்பிடுதல் என்பது மிகவும் அவசியமானதாகும். இந்நூலின் மூலமும் உரையும் பிற கணக்கதிகாரச் சுவடிகளுடன் ஒப்பிடப்பட்டு பாடவேறுபாடுகள் குறிக்கப்பட்டுள்ளன. பாடல்களில் யாப்பு அமைப்பின்படி சீர்கள் பிரிக்கப்பட்டு அமைந்துள்ளன. பாடல்களுக்கு வரிசை எண்கள் தரப்பட்டுள்ள. தக்க இடங்களில் நிறுத்தற் குறிகளைப் பயன்படுத்தியுள்ளனர். தேவையான இடங்களில் குறிப்புகளைத் தந்துள்ளனர்.

கணக்குச் சுவடிகளில் பெருக்கல் குறியோ சமக்குறியோ குறிக்கப்பட்டிருக்காது. ஆனால் இந்நூலில் படிப்போருக்கு எளிமையாக இருக்கும் பொருட்டுத் தக்க இடங்களில் பெருக்கல்குறி, சமக்குறி முதலானவைகள் அமைக்கப் பட்டுள்ளன. இத்தகைய பதிப்பு முறையால் படிப்போர் எளிமையாகக் கணக்கின் பொருளை உணர முடியும்.

பிழைகள் பெரிதும் தவிர்க்கப்பட்டிருப்பினும் ஒருசில இடங்களில் பிழைகள் காணப்படுகின்றன. சான்றாக, கலம் ஒன்றுக்கு 1/320 எத்தனையென்றால் என்ற கணக்கில் 1/320 மரக்கால் என்று விடை சொல்லப்பட்டுள்ளது. கலம் ஒன்றுக்கு 3/4 எத்தனையென்றால் என்பதே சரியான வினாவாகும்.

இவ்வாறாகப் பழைய கணக்கதிகாரப் பதிப்புகளில் பிழைகள் மலிந்தும் பிற்காலப் பதிப்புகளில் அருகிய பிழைகளும் காணப்படுகின்றன.

### ஆஸ்தான கோலாகலம்:

கணக்கதிகாரத்தையடுத்து நமக்குக் கிடைத்துள்ள தமிழ்க் கணக்குநூல் ஆஸ்தான கோலாகலம் என்பதாகும். இந்நூல் 1951ஆம் ஆண்டு அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தால் வெளியிடப்பட்டது. பதிப்பித்தவர் திருமலை ஸ்ரீசைல சர்மா என்பவராவார். இந்நூல் பல நூல்களின் தொகுப்பு என்பதை அந்நூலின் பாடலின்வழி அறியலாம். அப்பாடல்,

முன்னூற் கணக்கால் மொழிந்தவை தன்னை
என்னால் அதிவிளி என்றமரி யாதி
சின்னூற் கணக்காய்த் திரட்டியக் கணக்கும்
நன்னூ லவர்முன் நயந்துரைப் பேனே (பாடல் - 1)

என்பதாகும். ஆஸ்தான கோலாகல அச்சு நூலுள்,

அந்தக் கணக்கதிகாரங்களைக் குருவாக எண்ணிச் சுருக்கமாக எந்தவகைக் கணக்கிலும் குறுக்கமாக அளக்கப் பட்டதும் எண்ணிக்கைப் பட்டதும், உள்வட்டம், பிரவட்டம், முத்துகை விகற்பம், கடைத்தலை, வில்ப்பூட்டு, சேவித்தான் கணக்கு, நிலத்தீர்வை, பணவரிசை, நெல்வரிசை, கொள்ளுகிற வகை, விற்கிறவகை, நிலமளவு, காலளவு, குளவெட்டு,

மரக்காலவியன், நெல்குத்தவிடுகிறது, ஐவகை விகற்பம், பதினொருவகை விகற்பம் அப்பாலுமிப்படிப் பேரிட்டு வந்த விகற்பக் கணக்கெல்லாம் சுருக்கமாகச் சொல்லுகிறேன் ( பக். 1-2 ) என்று ஆசிரியர் கூறுவதாக அமைந்துள்ளது. இதனால் இந்நூலில் எத்தகைய கணக்கு வகைகள் சொல்லப்பட்டுள்ளன என்பதை அறியலாம்.

பழந்தமிழ்க் கணக்குகளை அறிவதற்குக் கருவியாக இருக்கும் இந்நூலில், கடவுள் வாழ்த்து, அவையடக்கப் பாடல் உட்பட 57 பாடலகள் அமைந்துள்ளன. பிற கணிதம் தொடர்பான நூல்களில் இருப்பதுபோல பொருள் பாகுபாடு இந்நூலில் காணப்படவில்லை.

ஆஸ்தான கோலாகல நூலின் ஆசிரியர் மதுரையைச் சார்ந்த நாவிலிப் பெருமாள் என்பவராவார். அதை,

கூடலில் நாகன் குணம்ஓர் வளித்த
ஆடவர் தாரிண நாவிலிப் பெருமாள்
பாடலைப் பாணர் பாதம் பணிவோன்
நாடவர் நகைக்க நயந்துரைப் பேனே.
( பாடல் எண்.3 )

என்ற பாடலின் மூலம் அறியலாம்.

இந்நூல் ஒரு தொகுப்பு நூலாக அமைந்துள்ள காரணத்தால் பாடல்கள் பல்வேறு யாப்புகளில் அமைந்து காணப்படுகின்றன. வெண்பா, அறுசீர் விருத்தம், எண்சீர் விருத்தம், கட்டளைக் கலிப்பா போன்ற யாப்பு அமைப்புக்களில் இப்பாடல்கள் அமைந்துள்ளன. நூல் மூலமும் உரையுமாக அமைந்துள்ளது. இந்நூல் பாடல்களில் பல யாப்பமைப்பின்படி சீர்கள் பிரிக்கப்படாமல் காணப் படுகின்றன. சான்றாக,

பத்துமதிளுடையப் பார்வேந்தன் கோட்டைக்கி
வைத்தமதிளிடை ( யி ) லே வாசலாம் -
அத்திநீர் - உண்ணும் போதேகில்
( ஒன்று ) ஒண்ணுமுதல்ப்
பத்தளவு மென்று
நீரே மாண்டிருந்து ( பாடல் எண்.41 )

என்ற நேரிசை வெண்பாவை எடுத்துக்காட்டலாம். இருப்பினும் பாடல்களுக்கு எண்கள் தரப்பட்டுப் பிற நூல்களில் கூறப்பட்டுள்ள கணக்கு முறைகளோடு ஒப்பிட்டுப் பதிப்பித்து இருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நூல் கணக்கதிகார நூல்களில் இருந்து எடுத்துச் சொல்லப்பட்டுள்ளதால் அந்நூல்களில் உள்ள கணக்கு முறைகளே இந்நூலிலும் காணப்படுகின்றன.

### கணக்கதிகாரம் ( சூரியபூபன் ):

இது தஞ்சை சரஸ்வதி மஹால் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டுவரும் ஒரு கணக்கதிகார ஓலைச்சுவடியாகும். இந்நூல் இதுவரை அச்சில் வெளிவராத நூலாகும். பாடலும் உரையுமாக அமைந்துள்ளது.

சீரியல் வேத வடகலை நூலுடன் தென்கலையும்
ஏரிய லான புலவோர் அடியினை யேற்றுகின்ற
காரியங் காவைத் திருப்பணி தந்த கருணாகுலன்
சூரிய பூபன் கணக்கதி காரஞ் சொல்லினனே
(பாடல் 6)

என்பதன் மூலம் இந்நூலை எழுதியவர், காரியங்காவைத் திருப்பணி செய்த சூரியபூபன் என்பவர் என அறியலாம். இந்நூல் 89 பாடல்களால் ஆனது. பெரும்பாலான பாடல்கள் கலித்துறை யாப்பிலும் சிறுபான்மையாக வெண்பா, அகவற்பா முதலான பா அமைப்புகளிலும் பாடல்கள் அமைந்துள்ளன. இதற்கு ஒத்த வேறு சுவடி இதுவரை கிடைக்கவில்லை. ஆதலின் அரிய ஓலைச்சுவடி எனல் பொருந்தும்.

இந்நூலில் நான்கு வகையான பொருள் பாகுபாடுகள் காணப்படுகின்றன. அவை 1. நிலம், 2. நெல், 3. பொன், 4. நீர் என்பனவாகும். இவற்றைத் தவிர எண்ணல் அளவை, கால அளவை, சாலிவாகன சகாப்தம் அறிதல், கலியுக சகாப்தம் அறிதல், நூற்றைந்திற்குள் நினைத்த எண்ணைக் கூறும் கணக்கு முறை, சீவராசிகளின் எண்ணிக்கை, பந்துக்கட்டு, பொன்னின் மாற்று அறிய ஆணிக்கோர்வை, சோதிடம் முதலான செய்திகள் காணப்படுகின்றன.

மேலும், 24 புதிர்க் கணக்குப் பாடல்களும் உரைநடையாக அமைந்த 23 புதிர் கணக்குகளும் அமைந்துள்ளன.

## கணக்கு ரத்தினச் சுருக்கம்

இது தனியார் ஒருவரிடத்திலுள்ள தமிழ்க் கணக்குச் சுவடியாகும். இதுவரை அச்சில் வெளிவராத நூலாகும். அறுசீர் விருத்தங்களால் ஆனது.

வள்ளியைப் பாகம் வைத்த மயிலூர்தி பாதம் போற்றி
தெள்ளிய கண்டன் மைந்தன் சிவனருள் மறவர் வள்ளல்
வள்ளியில் வலத்துரு வாக்கும் பெருமாள்வண் டமிழாற் செய்த
தெள்ளிய கணக்கு ரத்தினச் சுருக்கமென் றுலகில் நிற்க
(பாடல் 5)

என்ற பாடலின் மூலமாக இந்நூலின் ஆசிரியர் வைகுந்த நாட்டில் அமைந்துள்ள வள்ளியூர் வலத்துரு வாக்கும் பெருமாள் என்பதை அறியலாம்.

சொல்வது திரட்டு ம ாறல் தொகுசெடம் பிரித்தல் வர்க்கம்
நல்லதோர் மூல மீதில் நக்கன வர்க்க மூலஞ்
சொல்வன கருவி யாகுந் தொடுபுணர் தழுவ லேற்றல்
செல்வன கூட்டல் தாக்குஞ் சேர்ந்தது திரட்டுக் கூறே
(பாடல் 5)

என்பதன் வாயிலாக திரட்டுதல், மாறுதல், செடம் பிரித்தல், வர்க்கம், வர்க்கத்தின் மூலம், ஈதல், கனவர்க்கமூலம் ஆகிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன என்பது தெரிகிறது.

இந்நூலில் முகவுரை சூத்திரங்கள், நிலவழி, பெருங்குழி, சிறுகுழி, தொகைக் கணக்குகள், ஆணிக்கோர்வை, பொன், கால்வழி, உள்மாணம், பிறமாணம், பலிசை, பொதுவியல், கல்வழி, நெல்வழி போன்ற செய்திகள் காணப்படுகின்றன.

இந்நூலின் இறுதிப்பாடலின் உரையில்,

கணக்கு வல்லவர்கள், சிறிது கற்றவர், குற்றமற நூல்கள் செய்த பெரும்புலவோர்க ளிவர்கள் சீர்பதங்களைத்

தொழச் செய்ய இரத்தினச் சுருக்கமென்னும் நூறு விருத்தமாகச் செய்யப்பட்ட கணக்கினைக் காப்பாயென்றுங் கடமுக வண்ணத்தா யென்றவாறு என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் நூலில் 81 பாடல்களே அமைந்துள்ளன.

## கணக்கதிகாரம் ( சுப்பையன் )

தனியார் ஒருவரிடத்திலிருந்த சுவடியைப் பார்த்துப் படியெடுக்கப்பட்டது இந்நூல். இந்நூலை எழுதியவர் இலவத்தூலைச் சார்ந்த சுப்பையன் என்பவராவார். இந்நூல் 60 அறுசீர் விருத்தப் பாக்களால் ஆனது. ஏதானடி என்று சொல்லும் கூட்டுத்தொகை காணும் முறை, சிறுகுழி, பெருங்குழி காணல், நிலங்களை அளக்கும் விபரம், பொன் விபரம் மற்றும் புதிர் கணக்குகள் போன்றவை காணப்படுகின்றன.

இந்நூலில், கூட்டுத்தொகைக் காணல் ( Arithmetic Progression ) முறை சிறப்பாகவும் விளக்கமாகவும் சொல்லப்பட்டுள்ளது.

$1+2+3+4+5+6$ .............

$1+3+5+7+9+11$ ............

$2+6+8+10+12+14$ ..........

$1+11+21+31+41+51$ .........

$2+22+32+42+52+62$ ..........

$1+10+2+20+3+30$ .............

$1/320+10/320+100/320+2/320+20/320$ .........

$1/80+1/40+3/80+1/20+5/80$ ...........

$1^2+2^2+3^2+4^2+5^2$ ............

$4\ 1/4^2+4\ 1/2^2 + 4\ 3/4^2$ ..........

என பலவிதமான கூட்டுத்தொகைக் காணல் முறைகள் சொல்லப்பட்டுள்ளன. இந்நூல் இதுவரை அச்சாகவில்லை.

**கணித நூல்**

இது அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டுவரும் சுவடியாகும்.

நூலள வாகிய எண்ண ளவின்பயன் நுண்ணிடையாய்
கோலள வின்பயன் னான விரிவாய் கூறியபின்
காலள வான துரையள வென்றும் கடிகைவட்டில்
நாளள வானது ஓதுங் கருவையில் நஞ்சையனே
(பாடல் 5)

என்ற பாடலால் கருவையைச் சார்ந்த நஞ்சையன், என்பவர் இந்நூலை எழுதியுள்ளார் என்பது புலனாகும். 70 கலித்துறையைச் சேர்ந்த பாடல்களாலானது என்பது உரையின்வழி தெரிகிறது. அகச்சான்றின் மூலம் இந்நூலின் காலம் கி.பி. 1683 என்பதை அறியமுடிகிறது.

எண்ணின்வழி சூத்திரங்கள், கோலாலறிய சூத்திரங்கள், காலளவு அறிய சூத்திரங்கள், துலாவளவு அறிய சூத்திரங்கள், நாளளவு அறிய சூத்திரங்கள் என்று ஐந்து வகையாகப் பகுக்கப்பட்டு சூத்திரங்களுக்கு விளக்கமும் கணக்குகளும் அமைக்கப்பட்டுள்ளன.

நூலின் இறுதியில் புதிர் கணக்குகள் சில தரப்பட்டுள்ளன. அவற்றுக்குச் சூரடிபதி அதிகாரம், வேதியரதிகாரம், வேந்தரதிகாரம், விக்கினேசுரதிகாரம் என்று கணக்கில் கூறப்பட்டுள்ளோர் பெயரில் தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

இதுவரை அச்சில் வெளிவராத இந்நூலைப் பதிப்பித்தால் 17-ஆம் நூற்றாண்டின் கணிதம் தொடர்பான செய்திகளை அறிந்துகொள்ள முடியும். நூல் எழுதப்பட்ட காலம் சரியாகத் தெரிவது இந்நூலின் தனிச்சிறப்பாகும்.

<u>கணிதச் சுவடிகளின் பதிப்பில் ஏற்படும் சிக்கல்கள்</u>

கணக்ககுப் பதிப்புப் பணியில் ஈடுபடுவோருக்குக் கணக்குப்பற்றிய அறிவு இன்றியமையாதது. பழந்தமிழ்க் கணக்குகள் இன்று வழக்கில் இல்லாத காரணத்தால் அவற்றின் செய்முறைகளைப் பற்றி அறிய இயலவில்லை. எனவே பலமுறை படித்த பின்னரே அதைப்பற்றி அறிய முடியும்.

(1) தமிழ்க் கணக்குகளை இன்று எல்லோரும் புரிந்துகொள்வது சிரமமானதாகும். தமிழ் எண்கள் இன்று வழக்கில் இல்லை என்பது இங்குச் சுட்டத்தக்கது. கணக்குச் சுவடியில் பயன்படுத்தப்படும் முழஎண் குறியீடுகள், பின்ன எண் குறியீடுகள், அளவைக் குறியீடுகள் போன்றவற்றைப் பற்றிய தெளிவான அறிவு தேவை. எண் - எழுத்து மயக்கம், எண் - எண் மயக்கம், எண் அளவு மயக்கம் போன்ற காரணங்களால் பதிக்கும்போது சிக்கல் ஏற்படுகிறது.

எண்-எழுத்து மயக்கம் - க,ரு,அ,எ,ய,ள -
க,ரு,அ,எ,ய,ள

இனிய மாத்தில் - இனி, 10 மாத்தில்

அளமானால் - 8 கலமானால்

ஒண்ணுரு வாச்சுது - ஒன்று 5 ஆச்சுது

எ வராகன் - 7 வராகன்

**எழுத்து - பிற அளவைக் குறியீடுகள் மயக்கம்**

| | | |
|---|---|---|
| ஆழாக்கு | - | தமிழ் எழுத்து று |
| உழக்கு | - | தெ |
| நாழி | - | உ |
| 4 மரக்கால் | - | த |
| கலம் | - | ள |
| மா | - | ப |

**எண் மயக்கம்**

ஒரு எண்ணிற்குப் பல குறியீடுகள்.

எண் - பிற அளவைக் குறியீட்டு மயக்கம்

| | | |
|---|---|---|
| அரைக்கால் | - | ஆழாக்கு |
| முக்கால் | - | உழக்கு |
| இரண்டு | - | நாழி |
| நூறு | - | கலம் |

(2) கணக்குப் பதிப்புகளுக்கு முறையான பதிப்பு நெறிமுறைகள் இதுவரை வகுக்கப்படாததால் அதுவும் பதிப்பாசிரியரின் பணியாகிறது.

(3) செவ்வியல் இலக்கியங்களில் பாடல்களை யாப்பின்படிப் பிரித்துச் சரியாக அமைத்தல், பிற சுவடிகளோடு ஒப்பிடுதல், விளக்கம், உரை எழுதுதல் போன்றவை பதிப்பு நெறிமுறைகளில் முதன்மையானவை களாக அமைகின்றன. கணக்குச் சுவடிகளைப் பதிப்பிக்கும் பொழுது, பாடல்களை யாப்பின்படிப் பிரித்துச் சரியாக அமைத்தல், பிற சுவடிகளோடு ஒப்பிடுதல், கொடுக்கப் பட்டுள்ள உரையைத் தெளிவாக்கி எழுதுதல், இன்று வழக்கிலுள்ள இந்தோ-அராபிய எண்களாக அனைத்துத் தமிழ் எண்களையும் மாற்றி எழுதுதல், கணக்கின் விடைகாணும் முறையை விளக்குதல், இன்றுள்ள கணக்கு முறைகளோடு ஒப்பிட்டுக் காணல், கணக்குகளில் உள்ள பிழைகளைச் சரிசெய்தல் போன்றவைகள் அமைகின்றன.

(4) கணக்குச் சுவடிகளை ஒப்பிடுதல் என்பது மிகவும் இடர்தரும் பணியாகும். இவை செவ்வியல் இலக்கியங்களைப் போல ஒத்தவடிவுடையன அல்ல. ஒன்றோடொன்று சிறிதளவு ஒன்றுபட்டு பெருமளவில் மாறுபட்ட அமைப்புடன் விளங்குகின்றன. சிறிதளவு ஒன்றுபடும்போதும், ஒரு சுவடியியல் இரண்டாவது ஏட்டில் எழுதப்பட்டுள்ள ஒரு பாடல் மற்றொரு சுவடியில் பதினைந்தாவது ஏட்டின் முதல்பக்கத்தில் அமைந்து காணப்படுகிறது. இதனால் கணக்குச் சுவடிகளை ஒப்பிட அதிக முயற்சியை மேற்கொள்ள வேண்டியதாக இருப்பதோடு, அதிக நேரத்தையும் செலவிட வேண்டியதாக உள்ளது.

(5) சுவடிகளில் உள்ள கணக்குகளோடு தேவைப் படும் இடங்களில் இன்றுள்ள கணக்கு முறைப்படி எவ்வாறு விடைகாண வேண்டும் என்பதைக் காட்ட வேண்டும். இதற்கு இன்றுள்ள கணிதம் பயின்றவர்களின் உதவியை நாடவேண்டிய கட்டாயத்திற்கு உட்பட வேண்டியதாக உள்ளது.

(6) கணக்குச் சுவடிகள் பல்வேறு நூலகங்களில் பல ஊர்களில் இருப்பதால் அங்குச் சென்று சுவடிகளை ஒப்பிடுவதற்குப் பொருட்செலவு ஏற்பட்டதோடு, பயணத்தின் போது நேரத்தைச் செலவழித்தல் தவிர்க்க முடியாததாகிறது.

(7) சுவடிகளைப் படிக்கும் பொழுது இடையிடையே கூட்டெழுத்துக்கள் இயல்பாக அமைந்து வருவதைக் காணலாம். கணக்குச் சுவடிகளில் இத்தகைய கூட்டெழுத்துகள் அதிகமாகப் பயின்று வருகின்றன. பதிப்பிப்போர் இக்கூட்டெழுத்துகளின் சரியான பொருளை உணரவேண்டும். இல்லாவிடில் குழப்பம் ஏற்படும்.

டட - ட்ட என்று கருதுவோம். ஆனால் இது பணம் என்பதைக் குறிப்பது.

பொன், நெல் இரண்டும் ஒத்த வடிவுடைய குறியீடுகளால் குறிக்கப்படுகிறது. இதுபோல சுவடிகளில் ஒத்தவடிவில் வெவ்வேறு பொருளுடைய கூட்டெழுத்துக்களும் அமைவதுண்டு. இவற்றின் பொருளை இடத்திற்குத் தக்கபடி உணர்தல் இன்றியமையாததாகும்.

(8) மருத்துவம், வானவியல், சோதிடம், கணிதம் முதலான அறிவியல் துறைகளில் அறிவியல் கலைச்சொற்கள் பயின்று வரும். அவற்றின் பொருளை அத்துறையைச் சார்ந்தவர்களே எளிமையாக அறிய முடியும். கணக்குச் சுவடிகளில் இத்தகைய கலைச்சொற்கள் காணப்படுகின்றன. இவற்றை இனங்கண்டு பொருளுணர்ந்த பின்னரே கணக்கின் முழுப்பொருளை உணர முடியும். இதற்கு முன்னர் வந்த கணக்குப் பதிப்புகளில் இவை குறித்த விளக்கம் எதுவுமின்மையால் பதிப்பாசிரியர் தானே முயன்று பொருளுணர வேண்டியதாக உள்ளது.

## தமிழ் கணக்குச் சுவடிகளின் பதிப்பு நெறிமுறைகள்

கால மாற்றத்திற்கேற்ப பழந்தமிழ்க் கணக்குப் பதிப்புகள் செம்பதிப்பாக வெளிவர வேண்டும். மேலும், அச்சேறாத கணக்குச் சுவடிகள் பலவும் பதிப்பிக்கப்பட வேண்டும். இந்நிலையில் இதற்கு முன்னர் உள்ள பதிப்புகளில்

உள்ள பிழைகளை நீக்கிக் கிடைத்தவரையிலான பழந்தமிழ்க் கணக்குகளின் வடிவம் சிதையாத நிலையில் நல்ல பதிப்பைக் கொண்டு வருதல் வேண்டும்.

கணக்குச் சுவடிகள் கடந்த நாற்பது ஆண்டுக் காலத்தில் பதிப்பிக்கப்படவில்லை. இதனால் பிற இலக்கியப் பதிப்புகளில் தோன்றிய புதிய பதிப்பு நெறிமுறைகள் கணக்குநூல் பதிப்புகளில் தோன்ற இயலாமல் போய்விட்டது. எனவே, பல ஆண்டுகளில் பிற பதிப்புகளில் ஏற்பட்டுள்ள பதிப்பு வளர்ச்சிக்கு ஏற்றவகையில் பல்வேறு நெறிமுறைகளை வகுக்கவேண்டியது இன்றியமையாததாகும்.

(1) யாப்பு அமைப்பு சரியாக அமையும்படி பாடல்களில் சீர்கள் பிரிக்கப்படவேண்டும்.

(2) கூட்டெழுத்துக்களைத் தனித்தனி எழுத்துக்களாக எழுத வேண்டும்.

(3) கணக்குச் சுவடிகளில் சூத்திரப்பாடல்களை யடுத்து சான்று கணக்குகள் தரப்பட்டிருக்கும். அவற்றை அ, ஆ என இருநிலைகளில் எழுதுதல் வேண்டும். அ பகுதியில் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி வைத்து ெ, ே இவற்றையும் ா, ர இவற்றையும் இடத்திற்கு ஏற்றாற்போன்று எழுதவேண்டும். ஆ பகுதியில் கணக்கில் சொல்லப்பட்டுள்ள தமிழ் எண்களுக்குப் பதிலாக இந்தோ-அராபிய எண்களையும் $x$ = முதலான கணக்குக் குறியீடுகளைத் தேவைப்படும் இடங்களிலும் பயன்படுத்த வேண்டும். இது அனைத்து நிலையில் உள்ளவர்களும் கணக்கைப் புரிந்துகொள்ள உதவுவதாக அமையும்.

புதிர்க் கணக்குகளாக இருப்பின், அ, ஆ, இ என்ற மூன்றும் இடம்பெற்றிருக்க வேண்டும். இ பகுதியில் இன்றைய கணக்கு முறையின்படி எவ்வாறு புதிர்க் கணக்கிற்குத் தீர்வு காணவேண்டும் என்பது விளக்கப்பட வேண்டும். இப்பகுதி அக்கால கணக்கு முறைக்கும் இன்றைய கணக்கு முறைக்கும் உள்ள வேறுபாட்டை அறிந்துகொள்ள உதவும்.

(4) சில சமயங்களில் படியெடுப்போரின் கவனக் குறைவால் அல்லது அவசரத்தால் எண்கள் மாறி எழுதப்பட்டிருக்கக்கூடும். அவற்றைச் சரிபார்த்தல் வேண்டும்.

(5) கணக்குச் சுவடிகளில் பெரும்பாலும் அளவைகள், கணக்குகள் போன்றவை ஆங்காங்கே மாற்றி மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. அங்ஙனமிருப்பின் அவற்றைத் தக்கபடிப் பகுத்து அமைத்தல் வேண்டும்.

(6) பேச்சு வழக்குச் சொற்கள் இருப்பின் அப்படியே எழுதுதல் மொழியியல் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் என்பதால் அப்படியே எழுதவேண்டும்.

(7) புதிர்க்கணக்குகளில் பாடல்நிலையில் உள்ள கணக்குகளையும் உரைநடையாக அமைந்துள்ள கணக்குகளையும் தனித்தனியாகத் தொகுத்தமைத்தல் வேண்டும்.

(8) தமிழ் எண்களில் பின்ன எண்கள் கணக்குகளில் அடிக்கடி பயன்படுத்தப்படும். பின்ன எண்கள் தனித்தனி குறியீடுகளின் மூலம் குறிக்கப்படுகின்றன. 1/320, 1/160, 1/80, 1/40, 3/80, 1/8, 1/20, 1/10, 3/20, 1/5, 1/4, 1/2, 3/4, 1/16, 3/16 என்ற பின்னக் குறியீடுகள் மட்டுமே தமிழில் உள்ளன. எனவே மதிப்புக்குத் தக்கபடி ஒரு பின்ன எண்ணோ ஒன்றிற்கு மேற்பட்ட பின்னங்களோ தொடர்ந்து எழுதப்படும். தொடர்ந்து எழுதப்படும்பொழுது ஒன்றிற்கு மேற்பட்ட பின்னங்கள் அமைந்தால் அவற்றுக்கு இடையே + குறி இடல் வேண்டும்.

(9) கணக்கில் புரியாமல் இருக்கும் பல இடங்கள் இருப்பது இயல்பு. அத்தகைய நிலை ஏற்படின் பதிப்பாசிரியருக்குப் புரியாத இடம் என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டும். பழந்தமிழ்க் கணக்குகளில் ஆய்வு மேற் கொள்பவருக்கு இத்தகைய குறிப்புகள் உதவக்கூடும்.

(10) பதிப்பிக்கும் நூலை எல்லோருக்கும் புரியும் வண்ணம் எளிமையாக்கித் தருவது பதிப்பாசிரியரின் கடமையாகும். கணக்கு நூல்களில் சில இடங்களில் ஒரு சூத்திரத்திற்கு இரண்டு சான்று கணக்குகள் தரப்பட்டிருக்கும். அவ்வாறு இருக்குமிடங்களில் இரண்டு கணக்குகளாகத் தரப்படாமல் அமைந்துக் காணப்படும் புதிர்க் கணக்குகளிலும் இந்நிலை அமைவதுண்டு. இவ்விடங்களில் பதிப்பாசிரியரால் கணக்குத் தெளிவாகச் சொல்லப்படுதல் வேண்டும். எந்தெந்த

இடங்களில் கணக்குப் பதிப்பாசிரியரால் எழுதிச் சேர்க்கப்பட்டது போன்ற செய்திகள் தரப்பட வேண்டும்.

(11) கணக்குச் சுவடிகளைப் பதிப்பித்தலில் கணக்குச் செய்முறைகளின் ஒவ்வொரு படிநிலையிலும் சரியாகக் கணக்கிடப்பட்டிருக்கிறதா என்பதைச் சரிபார்த்தலோடு, கணக்கின் விடைகளையும் சரிபார்க்க வேண்டும்.

(12) கணக்குச் சுவடிகளைப் பொறுத்தவரையில் பூச்சிகளால் அரிக்கப்பட்டிருந்தாலும் காலத்தால் பழமையானதாக இருந்து ஒடிந்து போயிருந்தாலும், கணக்கில் விடுபட்டுள்ள இடங்களை உரையிலும், உரையில் விடுபட்டுள்ள இடங்களைக் கணக்கிலும் கண்டு சரிசெய்ய இயலுமானால் செய்தல் வேண்டும்.

இத்தகைய பதிப்பு நெறிமுறைகளைக் கையாண்டு கணக்குச் சுவடிகளைப் பதிப்பித்தால் அவை எல்லோருக்கும் புரியும்படியான பதிப்பாகச் சிறந்த பதிப்பாக அமையும்.

**செய்ய வேண்டுவன**

1. அச்சில் வெளிவந்துள்ள நூல்களை அவற்றில் உள்ள பிழைகளைக் களைந்து செம்பதிப்பாக வெளியிடவேண்டும்.

2. சுவடிப் பதிப்பாசிரியர், கணக்கு வல்லுநர் ஆகியோர் இணைந்து திட்டப்பணியாக இப்பதிப்புகளைச் செய்தல் வேண்டும். இத்தகைய பணியை மேற்கொள்ளச் செய்து அரசும், ஆய்வு நிறுவனங்களும் அவற்றை நூல்களாக வெளியிட வேண்டும்.

3. முதலில் இதுவரை வெளிவராத அரிய கணக்குச் சுவடிகளைப் பதிப்பிக்கச் செய்தல் வேண்டும்.

4. பழந்தமிழ்க் கணக்கு நூல் பதிப்பிப்போரை ஊக்குவிக்கும் வகையில் ஊக்கத்தொகை வழங்குதல் வேண்டும்.

இவ்வாறு செய்யின் பண்டையத் தமிழ்க் கணக்கு நூல்களின் சிறப்பை அனைவரும் அறியச் செய்ய முடியும். இது தமிழர்தம் பெருமையை நிலைநாட்டும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

## பயன்படுத்தப்பட்டவை

1. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக அட்டவணைகள், டி.எண். 1-11, ஆர்.எண். 1-14, அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலக வெளியீடுகள், சென்னை-5.

2. ஆஸ்தான கோலாகலம், ஸ்ரீ சைல சர்மா, திருமலை, (பதி.) அரசினர் சுவடி நூலக வெளியீடு, சென்னை-5, 1951.

3. கணக்கதிகாரம், ஸ்ரீ பத்மநாப விலாச அச்சுக்கூடம், சென்னை, 1899.

4. கணக்கதிகாரம், கழக வெளியீடு, முதற்பதிப்பு, 1958.

5. கணக்கதிகாரம், பிரஜோத்பதி வருஷம்.

6. கணக்கதிகாரம், 1938.

7. கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிகள், புலவர் மு. சண்முகம் பிள்ளை, டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, சென்னைப் பல்கலைக் கழகம், 1979.

8. தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, இரா. நிர்மலாதேவி, (பதி.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

9. தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடிகள் அட்டவணைகள், தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, தஞ்சை-5.

10. திருக்குறள் பரிமேலழகர் உரை.

11. தொல்காப்பியம், பொருளதிகாரம் - செய்யுளியல், அடிகளாசிரியர் (பதி.), தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, 1985.

### ஆய்வுக் கட்டுரைகள்

1. வரலாற்றுச் சான்றுகளும் சுவடிகளும் (கட்டுரை), கி, நாச்சிமுத்து, தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழக சுவடித்துறை கருத்தரங்கக் கட்டுரை, 24.4.1990.

2. கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் (கட்டுரை), இரா. நிர்மலாதேவி.

## ஓலைச்சுவடிகள்

*1.* கணக்கதிகாரம் (சூரியபூபன்), தஞ்சை சரசுவதி மகால் நூலகம், சுவடி எண்.*736a.*

*2.* கணக்கதிகாரம் (சுப்பையன்), தனியார் சுவடி.

*3.* கணித நூல், அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சுவடி எண். ஆர். *8641.*

*4.* கணக்கு ரத்தினச் சுருக்கம், தனியார் சுவடி.

*****

# 28. சுவடிகளில் காணும் குறிப்புகளும் குறியீடுகளும்

*திரு. த. பூமிநாகநாதன்*

அச்சு இயந்திரம் பயன்பாட்டிற்கு வருவதற்கு முன் கடந்த நூற்றாண்டின் முக்கால் பகுதிவரை (1875) தமிழ் நூல்கள் ஏட்டுச் சுவடிகளிலேயே எழுதப்பெற்று வந்தன. இன்றையச் சூழலில் எல்லாப் புத்தகங்களுமே அச்சு இயந்திரத்தின் துணையோடு வருகின்ற காரணத்தால் ஏட்டுச்சுவடிகள் கேட்பார் அற்றுப் புறக்கணிப்புக்கு உள்ளாயின. காலதேவனின் கடும்பிடியில் ஏட்டில் புதைந்துள்ள இலக்கியச் செல்வங்கள் மண்ணுக்கும் செல்லுக்கும் இரையாயின.

பண்டைய சுவடிகளில் இருக்கும் தமிழ்க் கருவூலங்களை வெளிக்கொணரும் பணியில் தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர், சி.வை. தாமோதரம் பிள்ளை, வையாபுரிப்பிள்ளை, ஆறுமுக நாவலர் இன்னும் பிறர் ஊண் உறக்கம் இன்றி உழைத்து, மண்ணில் மறைந்து போயிருக்க வேண்டிய தமிழ் இலக்கியங்கள் பலவற்றை அச்சில் வார்த்து நிலைபேறு அடையச் செய்தனர்.

ஆனால், இன்று தமிழ்ச் சமுதாயத்தில் அத்தனை ஆர்வம் காட்டவல்லார் மிகவும் குறைந்தே காணப் படுகின்றனர் என்பது மறுக்க முடியாத ஒன்றாகும்.

ஆகவே சுவடிகளில் உள்ள அரிய செல்வங்களை வெளிக்கொணர சுவடி பற்றிய பட்டறிவு இன்றையக் கல்வியாளர்களுக்கு மிகவும் பயனுடையதாக அமையும் என்ற கருத்தில் தமிழகத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் சுவடியியலில் ஒரு புதிய விழிப்புணர்ச்சியைத் தூண்டும் வகையில் 1979ஆம் ஆண்டு முதல் இதற்கென ஒரு துறையைத்

தொடங்கியது. அண்மையில் நிறுவப்பட்ட தஞ்சைப் பல்கலைக் கழகத்தின் ஐந்து புலன்களில் சுவடிப்புலம் ஒன்றாக அமைக்கப் பெற்றுள்ளது. இதுபோல் சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மற்றும் பாளையங்கோட்டை புனித சேவியர் கல்லூரி போன்ற பல்வேறு கல்லூரிகளிலும், சென்னை சுவடிப் பாதுகாப்பு மையம் போன்ற தனியார் துறைகளும் இன்று சுவடியியலில் கவனம் செலுத்தி வருவதைக் காணலாம்.

பழந்தமிழ் நூல்கள் பெரும்பாலும் செய்யுள் அமைப்பிலேயே சுவடியில் அமைந்துள்ளன. தமிழில் உரைநடை பல்கிப் பெருகியது வீரமாமுனிவர் காலத்துக்குப் பிறகுதான். அப்போதெல்லாம் உரைநடை வெகுகுறைவாகவே இங்கொன்றும் அங்கொன்றுமாக இருந்தது.

காகிதப் புழக்கமும் அச்சுப் புழக்கமும் வரும்வரை இந்த நிலைதான் இருந்தது. இந்த முறை பரவும் வரை மக்கள் நூல்களைப் பெரும்பாலும் மனப்பாடமாகவே பயின்று வந்தனர். இப்படி மனனம் செய்வதற்கு ஏற்றதும் செய்யுள் அமைப்பே. ஆதலால் பழந்தமிழ் நூல்கள் எல்லாம் கவிதை அமைப்பிலே வடிவமைந்துள்ளது. உரையாசிரியர்கள் கையாண்ட உரைநடைகள் கூட ஏதோ ஒருவகையில் மனப் பாடம் செய்வதற்குரிய முறையில் இருக்கும்.

அச்சுப் பதிப்பு இல்லாத காலத்தில் இவ்விதம் மனப் பாடம் செய்து வந்ததுடன், மாணாக்கர் தாம் படிக்கும் நூல்களை ஏட்டில் பிரதி செய்து பயின்று வந்தனர். ஒரே வகுப்பில் பயிலும் மாணாக்கர்களில் ஒருவர் படிக்க மூன்று நான்குபேர் கேட்டு எழுதியும் நூல்களைப் பிரதி செய்தனர். மேலும் நூலை இயற்றும் ஆசிரியர் தாமே ஏட்டில் பிரதி செய்வதில்லை. செய்யுட்களை அவர், வாய் மொழியாகக் கூற வேறொருவர் அவ்வப்போது பிரதி செய்து வருவார். அப்படிப் பிரதி செய்பவரைக் கற்றுச் சொல்லிகள் என அக்காலத்தில் அழைப்பர்.

மாமன்னர், நிலக்கிழார், வள்ளல் பெருமக்கள், ஊர்ப் பெருமக்கள் சமுதாயத்தில் உயர்நிலையில் இருந்தவர்கள், பல்வேறு பணியாளர்களைப் பணிக்கு அமர்த்தி சுவடிபெயர்த்து எழுதச் செய்துள்ளனர். இப்படிக் கூலிக்கு எழுதுபவர்கள் படி எடுப்போர் என அழைக்கப்பட்டுள்ளனர்.

இவ்வகைப் பணியாளர்கள் ஏதோ வயிற்றுப் பிழைப்பிற்காக இப்பணிகளைச் செய்து வந்ததால் இவ்வளவு ஓலைகள் பிரதி செய்தோம் எனக் கணக்கிடவே பிரதி செய்தனர் அல்லாது, நூலின் தரத்தைப் பற்றியோ நயத்தைப் பற்றியோ கவலைப்படாமல் கைக்கு வந்த வண்ணம் பிழைகள் மலியப் பிரதி செய்தனர். கற்றுச் சொல்லிகளும் ஆசிரியரிடம் பயில வந்தவராகையால் அவர்களிடம் சிறந்த புலமை இருக்க வாய்ப்பில்லை. மேலும், சொல்லுவதைக் கேட்டு எழுதும்போது அவர்கள் காதில் கேட்டவண்ணம் பிரதி செய்கையில் வல்லினம், இடையினம், ஒற்றுகள், ணகர, நகர, னகர ஒலிப்புகள், றகர-ரகர ஒலிப்புகள் சந்தி விதிகள் இவை புரியாமற் பிரதி செய்தமையாற் தமிழ்ச் சுவடிகளிற் பலபிழைகள் பிரதிபேதங்கள் மலியக் காரணமாயிருந்தன.

பொதுவாகச் சுவடிகளில் சந்தி, குறில், நெடில், மெய், உயிர்மெய், கொம்பு, கால் இவற்றை அவ்வவற்றிற்குரிய வண்ணம் பிரதி செய்வோர் கையாண்டு இருக்க மாட்டார். ஒற்றுகள் புள்ளியின்றியும் பாடல்கள் சீர்பிரித்து எழுதப்பெறாமலும் ஒரே சங்கிலித் தொடர் போல எழுதும் பழக்கமும் காணப்படுகின்றது.

இத்தகைய சுவடிகள் பல்வேறு துறைகளில் நமக்குக் கிடைக்கின்றன. அவற்றில் குறிப்பாக இலக்கியச் சுவடிகள், மருத்துவச் சுவடிகள் மற்றும் சோதிட மந்திரச் சுவடிகளே மக்களிடம் பெரும் செல்வாக்கைப் பெற்ற துறைகளாக விளங்கின.

பதிப்பு நூலாகக் கொண்டுவரத் துணியும் இக்கால பதிப்பிக்கும் ஆர்வமுடையோர்க்குத் தக்க துணையாக அமையும் பொருட்டுச் சுவடிகளில் காணும் குறியீடுகள் குறிப்புக்கள் பற்றி ஈண்டுச் சிந்திக்கலாம்.

பொதுவாக தென்னை ஓலை, பனைவோலை என இருவகையான ஓலைகள் உண்டு என்பது யாவரும் அறிந்த ஒன்றே. எண்ணிக்கையில் பலவோலைகள் கொண்ட ஒரு கட்டினை ஓலைக் கட்டு என்கிறோம். எதுவும் எழுதப்படாத நிலையில் அமைந்த ஓலைகளை நாம் சுவடி எனக் கூறுவது இல்லை. ஆகவே எழுத்துக்களின் சுவடு கூர்மையான

எழுத்தாணியால் பதிக்கப்படுவதால் ஓலை-சுவடி என்ற பெயரைப் பெறுகிறது. அவ்வகையான ஓலைக் கட்டை நாம் சுவடி என்கிறோம்.

இத்தகைய சுவடிகளை நாம் மூன்று பாகங்களாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை முறையே சுவடியின் மேற்பகுதி, சுவடியின் இடைப்பகுதி சுவடியின் இறுதிப்பகுதி ஆகும்.

மேற்பகுதி என்பது சுவடியின் தொடக்க ஏட்டில் இருந்து மூலநூல் தொடங்கும் ஏடுவரை அமையும். இரண்டாவதாக இடைப்பகுதி என்பது மூலநூல் தொடங்கிய ஏட்டில் இருந்து அது முடியும் ஏடுவரை அமையும். இறுதிப்பகுதி என்பது நூல் முடிந்த பிறகு அமையக்கூடிய பிற ஏடுகள் பற்றியதாக அமையும்.

பாதுகாப்புப் புறக்கட்டையை அடுத்துள்ள முதல் ஏடு வெற்றோலையாக சுவடி பாதுகாப்புக் கருதி வைக்கப்பட்டிருக்குமே ஆகில், அதனை அடுத்து அமையும் முதல் ஏடு தரும் செய்திகள் அம்முதல் ஏட்டிற்கும் மூலநூல் தொடக்கத்திற்கும் இடையே உள்ள ஒருசில ஏடுகள் தரும் தகவல்கள் மூலநூல் தொடங்கி மூலநூல் இறுதிவரை உள்ள ஏட்டில் காணும் செய்திகள் இறுதி ஏட்டிற்குப்பின் அமையும் ஏடுகள் தரும், விளக்கங்கள் என்ற வகையில் சுவடிதரும் குறியீடுகள், குறிப்புகள் அமையும்.

பொதுவாக ஏடுகளை நோக்கும்போது, குறிப்புக்களைக் குறிப்பிடுவதில் முன்பின் என்ற வேறுபாடு இன்றி சில செய்திகளை வரைந்து செல்வதைக் காண முடிகிறது. ஆனால் மூலநூல் தொடங்கி அது முடியும் வரை உள்ள பகுதி ஒரு தனித்த நிலையிலேயே அமைகிறது. ஆகவே தொடக்க, இறுதி ஏடுகளை ஒரு நிலையிலும் இடையில் உள்ள மூலநூல் பகுதியைத் தனிப்பகுப்பாகவும் கொண்டு இரண்டு பெரும் பிரிவுகளாக எடுத்துக்கொண்டு ஆராயலாம்.

தொடக்க, இறுதி ஏடுகளில் குறிக்கப்படும் செய்திகளைக் கீழ்க்கண்ட பொருண்மைகளில் வகைப்படுத்திக் காணலாம். இறை நேய முகமன் அல்லது இறை நாம சாற்றுகள், காலக் குறிப்பீடுகள், சுவடிகள் கிடைத்த

ஊர்ப்பெயர்கள், ஆசிரியர் பெயர்க் குறிப்புகள், சுவடியை எழுதியவர், சுவடி உரிமையாளர் சுவடி யாருக்காக எழுதியது, சுவடியைப் படித்து வருபவர் பற்றிய குறிப்பு, சுவடி எழுதியவர் ( பிரதி செய்தவர் ) கைச்சாத்து சான்று அளிக்கும் திறன் மூல ஆசிரியர் குறிப்பு மற்றும் பிற செய்திகள் ஆகிய கவன ஈர்ப்புக் குறிப்புக்கள், அவையடக்கக் குறிப்புகள், மந்திரப் படங்கள், எந்திரங்கள் இன்னபிற சிறப்புச் செய்திகள் அட்டவணைகள், அகராதிகள், சொல்லடைவுகள் போன்ற குறிப்புகள் எனப் பகுத்துக் கொள்ளலாம்.

ஏட்டினை எழுதத் தொடங்குவோர் ஏட்டின் இடது ஓரத்தில் சிறிது இடைவெளிவிட்டும் வலது ஓரத்தில் சிறிது இடம்விட்டும் அல்லது விடாமலும் எழுதுவது மரபு. கயிற்றின் துளை வரும் இடத்தில் நெருக்கி எழுதும் பழக்கம் பொதுவாக இல்லை எனலாம். இப்படி ஏடு எழுதத் தொடங்குவோர் நூலின் இடது ஓரத்தில் நன்றாக குருவாழ்க, குருவே துணை என்ற முகமன் கூறுவது பெரும் வழக்காக உள்ளது. இதன் அருகாமையிலேயே ஏடுகளின் தொடர் எண் இடப்படுவதுண்டு.

அவ்வகையில் பொதுவாகச் சங்க இலக்கியச் சுவடிகள் இலக்கணச் சுவடிகள், புராணச் சுவடிகள் முதலானவற்றில் சுபமஸ்து, திருச்சிற்றம்பலம், சிவகடாட்சம், பொன்னம்பலத்தரசே துணை, ஸ்ரீராம ஜெயம், கிருஷ்ண சகாயம் போன்ற முதற் சொற்றொடர்கள் காணப்படுகின்றன. சிற்றிலக்கியச் சுவடிகளில் கணபதி துணை, சரசுவதி துணை, தேவி சகாயம், குமரன் துணை, அரிஓம் நன்றாக என அந்த அந்தப் பகுதி இறைவர்களின் திருப்பெயர் கொண்ட நாமங்கள் குறிக்கப்படுகின்றன.

மருத்துவச் சுவடிகளில் சிவகிருபை உண்டாகவும், தேவிசகாயம், குருவே துணை, வாலை துணை எனப் பல ஏடுகளில் பலபடியாகக் குறிக்கப்பட்டுள்ளன.

முனைவர் பூ. சுப்பிரமணியம் தமது சுவடியியல் நூலில் ( உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991, ப.46ல் ) இதுபற்றிக் கூறும்போது சிறப்பு நிலையில் சில குறிப்புகளைத் தருகிறார். அவை வருமாறு:

சமண நூல் சுவடிகளில் - சுபமஸ்து

பெரியதிருமடல்,
பெரியதிருவந்தாதி,
திருவாசிரியம்,
திவ்வியப்பிரபந்தம்
முதலான வைணவ நூல்
சுவடிகளில் - ஆழ்வார் திருவடிகளே சரணம் பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம், இராமானுசர் பாதமே துணை.

திருப்பாவைச் சுவடிகளில் - ஆண்டாள் திருவடிகளே சரணம் ஆழ்வார் திருவடிகளே சரணம் என்ற குறிப்புகளும்

சைவநூற் சுவடிகளில்
அவற்றுள்ளும்
வள்ளியம்மை நாடகம் - சிவ சகாயம், மீனாட்சியம்மன் துணை, நந்தி தேவன் துணை சுப்பிரமணியர் துணை வள்ளி நாயகி துணையுண்டாகவும்

சிறுத்தொண்டர் யட்சகானம் - திருத்தணிகை ஆண்டவர் துணை

என எடுத்துக்கொண்ட இலக்கியத்திற்குத் தக்கவாறு இறைமுகமன் கூறப்பட்டுள்ளதைச் சுட்டுகிறார்.

## காலக் குறிப்பீடுகள்

சுவடி படி எடுத்தல் என்பது நம் தமிழகத்தில் என்று தொடங்கியது என்று அறுதியிட்டுக் கூறவியலாது. பாடல்களை மனத்தகத்கே மனனம் செய்து பலருக்கும் கல்வியறிவுதனைக் கேள்வி அறிவாக வளர்த்துவந்த காலத்திலே சொல்லப்படும் கருத்துக்கள் வாய்மொழியாக மட்டும் இருந்து மறைந்து விடாமல் இருக்க அதனை ஏட்டிலும் பதித்து வைக்கத் தொடங்கினர். அப்போது அவ்வேடு எழுதிய கால

கட்டத்தையும் குறிப்பிடுவது என்பது ஒரு மரபாகக்கூட அமைந்துவிட்டது எனலாம்.

காலத்தைக் குறிப்பிடுவதில் பலநிலைகளைச் சுவடிகளில் காணமுடிகின்றது. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கூறலாம்.

1) தமிழ் ஆண்டு மட்டும் கூறுவது
2) தமிழ் ஆண்டும் கொல்லம் ஆண்டும் கூறுவது
3) தமிழ் ஆண்டு கொல்லம் ஆண்டு மற்றும் கலியுகம் போன்ற ஆண்டுகளுடன் குறிப்பிட்டுக் கூறுவது
4) பல்வேறு ஆண்டுகளை இணைத்துத் தாம் எழுதிய ஆண்டுக்குச் சமமாகக் கூறுவது
5) ஆண்டு, மாதம் கூறுவது
6) ஆண்டு மாதம் கிழமை நாள் கூறுவது
7) ஆண்டு, மாதம், கிழமை, நாள், நட்சத்திரம் கூறுவது
8) ஆண்டு, மாதம், கிழமை, நாள், நட்சத்திரம், கரணம், யோகம் முதலியவற்றை நாழிகைச் சுத்தமாகக் கூறுவது.
9) சில சுவடிகளில் ஆங்கில ஆண்டும் குறிக்கப்பட்டுள்ளது.
10) இசுலாமிய சமயச் சுவடிகளில் இஜிரா ஊழி
11) பௌத்த சமய சுவடிகளில் புத்தர் ஊழி எனவும் இவையன்றிப் பர்மிய ஊழி, சாளுக்கிய ஊழி, பகலி ஊழி ( பசலி ) அக்பரால் தொடங்கப்பட்டது ) சக ஆண்டு போன்ற பல்வேறு விதமான காலக் குறிப்புகள் இடம் பெறுகின்றன.

**ஆண்டுகளும் அவற்றிற்குத் தொடர்புடைய கிறுத்து ஆண்டுகளும்**

| ஆண்டு | | தொடங்கும் காலம் |
|---|---|---|
| கலியுகம் | - | கி.மு. 3152 |
| புத்தர் ஊழி | - | கி.மு. 544 |
| மகாவீரர் ஊழி | - | கி.மு. 527 |
| விக்கிரமாதித்ய ஊழி | - | கி.மு. 57 |
| சகஊழி (சாலிவாகன சகாப்தம்) | - | கி.மு. 78 |
| இஜிரா ஊழி | - | கி.பி. 622 |
| பர்மிய ஊழி | - | கி.பி. 630 |
| கொல்லம் ஆண்டு | - | கி.பி. 825 |
| சாளுக்கிய ஊழி | - | கி.பி, 1076 |
| பகலி ஊழி | - | கி.பி. 1556 |

**ஆண்டு கணக்கிடும் முறை**

காட்டு: 1 கலியுக ஆண்டு 4200 என்பது - 4200-3152 = 58 ஆகவே கி.பி. 58ஆம் ஆண்டு.

கலியுக ஆண்டு 2500 என்பது - 2500-3152 = 652 ஆகவே கி.மு. 652 ஆகும்.

காட்டு: 2 சக ஆண்டு அல்லது சாலிவாகன சகாப்தம் 250 என்பது - 250+78 = 328 ஆகவே கி.பி. 328 ஆகும்.

காட்டு: 3 கொல்லம் ஆண்டு 520 என்பது - 520+825 = 1345 ஆகவே கி.பி. 1345 ஆகும்.

உ.வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் நூலக எண்.17 என்ற பாகவதம் ஏடு தரும் குறிப்பு ஒன்று எடுத்துக் காட்டிற்காகத் தரப்படுகிறது.

கலியுகம் 4892க்கு சாலிவாகன சகாப்தம் 1713க்கு விரோதி கிருது கார்த்திகை மீ 272 சுக்கிர வாரம், சதுர்தசி ரோகிணி நட்சத்திரம் செஞ்சிநகரம் நாராயணசாமி கோத்திரத்தில் வீரராகவப் பிள்ளை சற்புத்திரரான ராமசாமி அவர்களுக்குக் கூடலூரிலிருக்கும் குருவப்பிள்ளை எழுதிக் கொடுத்த பாகவதம்.[1]

இப்படி காலக் கணிப்பீடுகள் பற்றிய குறிப்புகள் பல சுவடிகளில் சுவடி எழுதுபவர்தம் பட்டறிவிற்கேற்பவும் அவர் ஏற்று ஒழுகும் சமயக் கோட்பாடுகளுக்குத் தக்கபடியும் நாழிகை சுத்தமாகப் பஞ்சாங்க முறையில் குறிப்புகள் பல, பலப்பல சுவடிகளில் காணப்படுகின்றன.

## ஆசிரியர் பெயர்கள்

அடுத்தபடியாக ஏட்டின் முன்புறம் காணப்படும் குறிப்புகளின் மூலம் ஆசிரியர் பெயர் இன்னது என்று நம்மால் அறிய முடியும். சில எடுத்துக்காட்டுகள் வருமாறு:

1) அகத்தியர் பூரண சூத்திரம் இருநூற்றுப் பதினாறு
2) அகஸ்தியர் வைத்தியம் ஆயிரத்தைந்நூறு
3) கருவூர்ச் சித்தர் பாடல் சூத்திரம்
4) உரோமரிசி ஞான சூத்திரம்
5) போகர் நாயன் சூத்திரம்
6) கொங்கணர் சரக்கு வைப்பு நூறு
7) சட்டை முனி நிகண்டு
8) திவாகரம்
9) மண்டல புருஷர் செய்த சூடாமணி நிகண்டு

போன்ற தலைப்புடைய சுவடிகளில் அதனை யாத்த ஆசிரியர் பெயரும் இணைத்து எழுதப்படுவதன் மூலம் நூல் செய்த மூல ஆசிரியர் பெயரை நாம் அறிந்துகொள்ள தக்கதொரு குறிப்பாக இவை அமைவதைக் காணலாம்.

## சுவடி எழுதியவர்

ஏட்டுச் சுவடிகளில் மூலநூல் ஆசிரியர்களின் பெயரைச் சேர்த்து முதற்பக்கத்தில் கூறுவது போல நூல் படியெடுத்த படியாளர் பெயரும் இடம்பெறுவதைக் காணலாம்.

ராமசாமி அவர்களுக்குக் கூடலூரிலிருக்கும் குருவப்பிள்ளை எழுதிக் கொடுத்த பாகவதம்.[2]

இவ்வேட்டில் படியாளர் பெயர் எழுதிக்கொடுத்த என்ற சொல்லின் மூலம் குறிப்பிடப்பட்டுள்ளது.

திருநெல்வேலியிலிருக்கும் இராமலிங்கம் கையெழுத்து[3]

இந்த ஏட்டில் இன்னார் கையெழுத்து என்பதன் மூலம் படியாளர் பெயர் விளக்கப்படுகின்றது.

அண்ணாசாமி உபாத்தியாயர் எழுதியது[4] இச்சுவடியில் எழுதியது என்ற பெயரில் படி எடுத்தவர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

........ அண்ணாமலை சொஸ்த லிகிதம்[5]

இவ்வேட்டில் ஏட்டை எழுதியோன் தனக்காகவே ஏடு எழுதிக்கொண்டான் என்ற குறிப்பை உணர்த்தும்படியாக சொஸ்த லிகிதம் என்ற சொல் அமைந்துள்ளது.

ஆகவே படி எடுத்தவர் பற்றிக் குறிப்பிடும்போது எழுதிக்கொடுத்தது கையெழுத்து சுகஸ்த லிகிதம் என்ற அளவில் குறிப்புகள் காணப்படுகின்றன.

இச்சுவடி எழுதியவர் என்ற குறிப்பின் மூலம் எழுதப் பட்ட பிரதி பற்றிய தகவல்களும் நமக்குக் கிடைக்கின்றன.

காசிக்காண்டம் எழுதி நிறைந்தது முற்றும். வெகுதானிய வருச, தை மாசம் 14ந் தேதி 2 சோம வாரமும் அமரபட்சமும் அமாவாசையும் உத்திராட நட்சத்திரமும் கூடிய சுபதினத்தில் மண்ணச்சி நல்லூரிலிருக்கும் ஆவிடைப் பிள்ளை அவர்கள் குமாரன் சொக்கலிங்க பிள்ளை யவர்கள் காசிக்காண்டம் எழுதி நிறைந்தது. இந்த ஏடு எழுதினது மன்னார் கோவிலிலிருக்கும் சுப்ப பண்டாரம்.[6] திருச்சிற்றம்பலம்.

இவ்வேட்டில் இரண்டு குறிப்புகள் காணப்படுகின்றன. மண்ணிச்சி நல்லூர் ஆவிடைப்பிள்ளை அவர்கள் குமாரன் சொக்கலிங்கம் பிள்ளை பிரதி செய்த காசிக்காண்டம் என்ற செய்தியும் அவ்வாறு படி எடுக்கப்பட்ட நூலை மன்னார் கோவில் சுப்ப பண்டாரம் அதனைப் பார்த்துப் படி எடுத்தார் என்ற செய்தியும் என இரண்டு செய்திகள் பின்னிக் கூறப் பட்டுள்ளமையைக் காணமுடிகிறது.

கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை என்ற நூலில் பின்வருமாறு ஒரு குறிப்புக் காணப்படுகின்றது.

தேறி மல்லன் வட்டி கணக்கு புதுப்பட்டியிலிருக்கும் சங்கரலிங்கம் பிள்ளைமகன் பாடகலிங்கம் பிள்ளை அருமைக் குமாரன் சுப்பிரமணியன் எழுதின கலியாண வாழ்த்து.[7]

இச்சுவடியில் நூலைப் பாடியவர் தேறி மல்லன்பட்டி கணக்கு, அஃதாவது கேறிமல்லன்பட்டி கணக்கனும் புதுப்பட்டியில் தற்போது இருக்கும் சங்கரலிங்கம் பிள்ளையின் மைந்தன் பாடகலிங்கம் பிள்ளை அருமைக் குமாரன் சுப்பிரமணியன் எழுதியது என்பதில் இருந்து நூலைப் பாடிய ஆசிரியர் பெயர், நூலின் வகை, நூலாசிரியரின் சுற்றம் தற்போது உள்ள முகவரி போன்ற பல செய்திகள் அறிந்துகொள்ளும்படியாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## இன்னார் படித்து வருவது

இச்சுவடி இன்னார் வாசித்து வரும் சுவடி என்ற குறிப்பின் மூலம் மூலநூலைப் படி எடுத்துப் பயன்படுத்தும் படிப்பாளர் பற்றியும் மூலநூல் ஆசிரியர் பெயர் பற்றியும் இக்குறிப்பின் மூலம் அறியமுடிகிறது. எடுத்துக்காட்டுகள் சில:

மா. பெருமான் கோன் வாசித்து வருகின்ற ஆண்டாள் திருப்பாவை[8]

குருவப்பன் குமாரர் வீரப்பன் படித்து வருகிற திருப்பரங்குன்ற மாலை[9]

சொரிமுத்துக் கோன் மகன் சொக்கலிங்கம் வாசித்து வருகிற நளன் கதை[10]

அனந்த சிவன் படித்து வந்த மூதுரை[11]

அனந்த சிவன் படித்து வருகிற உலகநீதி[12]

தெட்சணாமூர்த்தி அய்யர் அவர்கள் குமாரன் திருமலை சங்கு படித்துவருகிற சின்னப்போற்றி மாலை என்ற குறிப்புகள் மூலம் படிப்போனின் பெயர் அவன் படித்து வரும் நூலின் பெயர் அந்நூலைச் செய்த நூலாசிரியர் பெயர் என்ற வகையில் பற்பல செய்திகளை இவ்வகைக் குறிப்புகள் தெளிவு படுத்துவதைக் காணலாம்.

## ஏடு பாடியவர்

மூலநூல் ஆசிரியரின் பெயரை ஏடு பாடியவர் என்ற வகையில் குறிப்பிடும் ஒரு மரபு தென்பாண்டி சுவடிகள் மூலமாக அறியமுடிகிறது. ஊற்றுமலைத் துரையவர்களாகிய பூசைத்துரையவர்கள் பேரில் மதன வித்தார மாலை கடிகைமுத்துப் புலவன் பாடியது.[13]

முத்துக்கரைக் கண்டர் மொழிந்த வசனமிது[14]

கௌளி நூல் பாடியவர் பால் வீரரிருராசன் என்ற மன்னன் எனக் குறிப்புள்ளது[15]

ஆமையரசன் அம்மானை இராமநாதபுரத்து ஆறுமுகம் என்பார் பாடியது[16]

இதுபோன்ற குறிப்புகள் மூலம் மூலநூலாசிரியர் பெயர், நூலின் பெயர், நூலின் சிற்றிலக்கிய வகை போன்றவற்றைத் தெள்ளத் தெளிவாகக் கூறும்படியான குறிப்புகளும் காணப்படுகின்றன.

## கவன ஈர்ப்புக் குறிப்புகள் அல்லது எச்சரிக்கைக் குறிப்புகள்

சுவடிப் பாதுகாப்பில் நம்முன்னோர்கள் தனிக்கவனம் செலுத்திவந்துள்ளனர். ஏட்டைக் கையாளும் முறை, படிப்போர் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் முதலியன இவ்வேட்டிலேயே குறிக்கப்பட்டுள்ளன. சுவடியைப் படிப்பவர் அதனைக் களவாட முயன்றால் அல்லது படிப்பதற்கு வாங்கிச் சென்று தராது ஏமாற்றினால் அல்லது கவனக்குறைவினால் சுவடிக்குப் பழுது நேரும்படி நடந்துகொண்டால் அல்லது வேறு எவ்வகையான ஏமாற்று முயற்சியில் ஈடுபட்டால் அத்தகையோர் எவ்வகையான தண்டனைக்கு உள்ளாவார்கள் எனப் பல சுவடிகளில் குறிப்புகள் காணப்படுகின்றன.

1) பொதுநிலையில் எடுத்தபேர்கள் கொடுத்துவிட வேண்டிய தென்ற விண்ணப்பம்[17]

2) இந்தச் சூத்திரத்தைக் களவாண்டவன் தலைதெறித்துக் குறைநோவு முண்டாய் நரகத்துக்குப் போவான்[18]

3) இந்தச் சாஸ்திரத்தை ஆராகிலும் துஷ்ட புத்தியினாலே எடுத்துக் கொண்டு போனால் அவர்கள் கண் கெட்டுக் குட்டங் கொண்டு ரவிகோடி நரகமெய்துவார்கள். அப்படி வாராதே படிக்கி சகல சோடச யுப சாரத் தோடே வாங்கித் தெரிசனை பண்ணவும். பண்ணினால் கர்மங்கள் தீந்து சித்தனாவார்க ளென்றவாறு[19]

4 ) ஆறுமுகன் நாடான் ஏட்டை வாசித்துப் போட்டுக் குடுத்து விடவும் இல்லாவிட்டால் அவசத்துக்கு இடம் வரும்[20]

5) தாமிந்த சூஸ்திரத்தை கேணீ யீந்தால் தலை தெறித்துப் போகுமடா சத்தியஞ் சொன்னேன்[21]

6 ) இந்தச் சுவடியை எடுத்தவன் கொடாவிட்டால் அவன் சிரசு வெடிச்சுப்போம்

இத்தகு மொழிகள் சமூகத்தில் சுவடியின்மீது ஒருவித பயம் கலந்த மரியாதையை ஏற்படுத்தியிருக்கக் கூடும். சுவடிப் பாதுகாப்பில் விழிப்புணர்வையும் ஏற்படுத்தியிருக்க இவ்வெச்சரிக்கைகள் துணை நின்றன என்றும் எண்ணலாம். மருத்துவச் சுவடிகள், மாந்திரிகச் சுவடிகள், மந்திரச் சுவடிகள், இரசவாதச் சுவடிகள் போன்றவற்றைத் தவறான வழி முறையில் பயன்படுத்தி விடக்கூடாது என்ற காரணத்திற் காகவும் இம்மொழிகள் எழுதப்பட்டிருக்கக் கூடும்.

### அவை அடக்கக் குறிப்புகள்

கற்ற அவையின் முன்னே கல்விச் செறுக்கு இல்லாமல் எளிமையாகப் பழகும் பண்பாடே அவை அடக்கம் எனப்படுகிறது. கல்வியாளர்கள் கூடியுள்ள அவையில் தலை இவர்ந்து நின்று பேசுவதைக் கற்றவர்கள் பண்பாடாகப் போற்றவில்லை. நம் தமிழ் நூல்களில் அவையடக்கம் பற்றிய பல பாடல்கள் பயின்று வந்துள்ளன. ஆகவே இத்தாக்கம் ஏடு எழுதுபவர் இடமும் அல்லது புதிதாக நூல் செய்பவர் இடமும் தோன்றுவது இயல்பே. அவ் வகையில் சுவடிகளில் படி எடுப்போர், மூலநூலை ஓதும் ஆசிரியர் முதலானோர் அவையடக்கம் கருதி எழுதிய சில குறிப்புகள் ஈண்டுக் காணலாம்.

1) இந்த ஏடு நல்ல குற்றாலக் கவிராயரவர்கள் வகை ஏடு பார்த்து எழுதியது. பிழை பார்க்க வேணும்[22]

2 ) இந்த ஏட்டில் பிசகு இருந்தபோதிலும் வாசிக்கப்பட்ட புண்ணியவான்கள் என்பேரில் ( ஏடு எழுதியவர் ) தயவுசெய்து பிழை திருத்தி வாசிக்கும் படிக் கேட்டுக் கொள்கிறேன்[23]

3) இந்த ஏட்டில் ஏதாவது எழுத்தில் பிசகு இருந்த போதிலும் வாசிக்கப்பட்ட புண்ணியவான்கள் என்பேரில் தயவு செய்து மேற்படி பிசகைத் திருத்தி வாசிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்[24]

இவ்வகை ஏடுகள் தரும் குறிப்புகள் மூலம் அன்று ஏடு எழுதுபவர்கள் கல்விக்குத் தலை வணங்கி, கற்றோர் அவையைப் போற்றும் பேரறிவாளர் மரபு நாட்டுப்புற மக்களிடத்தும் ஊடுருவி நிற்றலைக் காணமுடிகிறது.

பிழை என்பது தெரிந்து செய்வது. பிசகு என்பது கவனக் குறைவில் நிகழ்வது என்பது போல ஒற்றுப் பிழைகளுக்குக் கவனக் குறைவே காரணம் எனச் சுட்டிக் காட்டியிருப்பது இக்குறிப்புகள் மூலம் அறியமுடிகிறது.

## சில சிறப்புச் செய்திகள்:

சில சுவடிகளில் வரலாறு, பண்பாடு, சமூகவியல் போன்ற துறைகளோடு தொடர்புடைய அரிய குறிப்புகள் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணக்கிடக்கின்றன. அவற்றில் சில:-

1) மாதர்கள் ஒன்று சேர்ந்து நேமியோனிடம் தங்கள் குறைவேண்டி நிற்க, திருமால் அதனைச் சீனர்கள் உங்களுக்கு விளக்குவர் எனக் கூற, சீனர்கள் மலடுக்குரிய காரணங்களைக் கூறலாக 28 பாடல்கள் உள்ளன[25]

2) கட்டபொம்மன் கும்மிப்பாட்டு[26] முத்தனந்த முதலியார் கும்மிப்பாட்டு[27] போன்ற சுவடிகள் ஆங்கில ஆட்சிக் கால வரலாற்றுக்குத் துணை புரிவன ஆகும்.

3) காரூர் கண்ணருள்
போரூர் முருகனை
போரூர் நசையினர்
சீரூர் முதல்வரே

இராமநாதபுரத்திலிருக்கும் இராமேசுர யிராமலிங்க சுவாமி தாட் கடிமை யாகிய சேதுபதி மந்திரி சோமசுந்தர பிள்ளை அவர்கள் பாடிய திருப் போரூர் கோவை[28]

இந்த ஏட்டில் இராமநாதபுரம் சமஸ்தான ஆட்சியாளர் சேதுபதி பற்றியும் அவர் அமைச்சர் செய்த நூல் பற்றிய குறிப்பும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

அச்சுப்புத்தகத்தில் இருந்து சுவடிக்கு மாற்றமான ஒரு நூல் பற்றிய குறிப்புப் பின்வருமாறு:

> சுத்த பாடமாக வழங்குவிக்கும் பொருட்டுத் தொண்டை மண்டலத்து வேளாளர்களில் உயர் துளுவ வேளாளராகிய தேனாம்பேட்டை வேங்கட கிருஷ்ண முதலியார் குமாரர் சின்னத்தம்பி முதலியார் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரால் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதிப்பித்துச் சென்னை கல்விச் சங்கத்துத் தமிழ்ப் புலவர் திரு வேங்கடாசல முதலியாரது சரஸ்வதி அச்சுக் கூடத்தில் பதிப்பித்தார்.
>
> சாலிவாகன சகாப்தம் 1762 சார்வரி வரு ஆனி மீ சார்வரி வரு ஆவனி 22 உ முடிந்தது. அண்ணாசாமி எழுதியது. காசிக் கலம்பகம் முற்றும்[29]

என்ற குறிப்பில் அச்சு நூல் எழுதத் தொடங்கிய நாள் அது முடிந்த நாள் உள்ளிட்ட பல செய்திகள் இணைந்துள்ளதைக் காணலாம்.

## அட்டவணை

பொதுவாக மருத்துவச் சுவடிகள், பக்தி இலக்கியச் சுவடிகள் அதிலும் குறிப்பாகத் தேவாரப் பதிகங்கள், சைவசமய சாத்திரங்கள் மற்றும் தலபுராணங்கள் ஆகிய நூல்களின் இறுதியில் பதிக விபரங்கள், பாடப்பட்ட தலங்கள் முதலியன அகர வரிசையில் தரப்பட்டுள்ள பல சுவடிகள் கிடைக்கப்பெறுகின்றன.

அதே போன்று மருத்துவச் சுவடிகள், பல்வேறு விதமான அட்டவணைகளைப் பெற்றுள்ளன. நோய் அட்டவணை, மூலிகை அட்டவணை, பாடல் முதற்குறிப்பு அகராதி போன்றவை அமைந்துள்ளன.

புராணம், தலபுராணம் போன்ற சுவடிகளில் படலங்கள் அல்லது உட்பிரிவுகளின் பெயர்கள் தொகுத்தும்,

பாடற் முதற் குறிப்பு அகராதி தொகுக்கப்பட்டும், தலங்கள் காட்டப்பட்டும் இப்படிப் பல்வேறு வகைகளில் அட்டவணைகள் காணப்படுகின்றன.

இங்ஙனம் ஏட்டின் முதல் இறுதிப் பகுதிகளில் இடம் பெறும் குறிப்புகளின் தன்மை ஒருவாறாக விளக்கப்பட்டது. இனி மூலநூல் தொடங்கி மூலநூல் இறுதிவரை அமையும் ஏட்டின் மையப்பகுதியைப் பற்றிச் சிறிது காண்போம்.

சுவடியின் நடுப்பகுதியை நோக்குவோமாயின் சிலவகைக் குறிப்புகள் பொதுவாகவும் ஒருசில குறிப்புகள் சிறப்பாகவும் பின்பற்றப்படுவதைக் காணலாம்.

சங்க நூல் பயின்று வரும் ஏடுகளில் இடப்புற ஓரத்தில் நூலின் பெயரைக் குறிப்பிடும் மரபைக் காணமுடிகிறது. நீதிநூல் இலக்கியங்கள் ஆகிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களின் பெயர்கள் அதேபோன்று குறிக்கப்படுவதைக் காணலாம். இம்மரபு மருத்துவம், சோதிடம் போன்ற பொருண்மைகளிலும் தொடர்வதைக் காணமுடிகிறது. சிலபல ஏடுகளில் பாடல்களின் தொடக்கச் சொல் இடதுபுற ஓரத்தில் குறிக்கப்பட்டுள்ளன. பக்தி இலக்கியங்களில் குறிப்பாகத் தேவாரம், சைவ சமய சாத்திரங்கள், பண்டார சாத்திரம் ஆகியன ஒன்றாக இணைக்கப்பட்டு ஒரே கட்டாகக் காணப் படுகின்றன. அதேபோன்று திவ்வியப் பிரபந்தம் பன்னிரு ஆழ்வார்களின் பாடற்றொகுப்பாக அமைந்துள்ளது.

சைவத்திருமுறை 12 நூல்கள், சைவ சமய சாத்திர 14 நூல்கள் பண்டாரச் சாத்திரம் 14 நூல்கள் என 40 நூல்கள் இணைந்த கட்டே மேற்சொல்லப்பட்டதாகும். இந்த நூல்களின் தலைப்பு மற்றும் நூல் தொடக்கப் பாடல் ஆகிய இரண்டு குறிப்புகளும் நூலின் இடதுபுறம் குறிக்கப்படும் மரபு காணப்படுகிறது.

திருவாவடுதுறை ஆதீனம், தருமபுரம் ஆதீனம், விருதாச்சலம் வீர சைவ மடம் ஆகிய பழைமையான மடங்களில் சிந்தனை ஏடுகள் என்ற பொருண்மையில் பல ஏடுகள் காணப்படுகின்றன. இச்சிந்தனை ஏடுகள் அனைத்துமே சைவ சமய சாத்திரம் பற்றிய விரிந்த விமர்சனமாகவே அமைந்துள்ளன. இவற்றின் தனிச்சிறப்பு யாதெனின்

ஒப்பிலக்கிய முறைமையில் இவை ஆராயப்பட்டு அவற்றின் பெருமைகள் தெளிவுபடுத்தப்பட்டுள்ளதே ஆகும்.

இவ்வேடுகளின் இடதுபுற ஓரத்தில் 14 நூல்களின் பெயர்கள் இடம்பெறுவதோடு ஒரு நூல் முடிந்து அடுத்த நூல் எந்த இடத்தில் தொடங்குகிறது என்பதைக் குறிக்க அந்நூல் தொடங்கப்பட்ட இடத்திற்கு நேர் இடதுபுறத்தில் அந்நூலின் தொடக்கச் சொல் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கது.

இப்படிப் பலவகையான குறிப்புகள் சுவடிகளில் பல்வேறு பொருண்மைகளில் நமக்குக் கிடைக்கப் பெறுகின்றன.

## குறியீடுகள்

பொதுவாகக் குறியீடுகள் என்பன எண்களில் பெரிதும் பயன்படுகின்றன எனலாம். பாடல்கள் முடியும்போது பாடல் தொடர் எண் தருதல் அல்லது ஏதேனும் ஒரு குறியீட்டை எடுத்துக்காட்டாக ( பி; -; 0; 2; ) போன்ற நிலைகளில் சுவடிகளில் காணப்படுகின்றன. இவை அன்றிப் பாடல் தொடர் எண்கள் இரு சிறு கோட்டிற்கு இடையே எழுதும் முறையும் எடுத்துக்காட்டாக 12ஆம் பாடல் என்பதை -12- எனக் குறிக்கப்பட்டுள்ளது.

## எழுத்து நீக்கம் - எழுத்துச் சேர்ப்பு

எழுதும் போது எழுத்துப்பிழை ஏற்படுவது தவிர்க்க முடியாத ஒன்றாகும். சுவடியில் அவ்வாறு பிழைகள் ஏற்பட்டு அவை திருத்தப்படும்போது தவறான எழுத்தின் மேல் எழுதுவது; தவறான எழுத்தை அடித்துவிட்டு அல்லது கோடுகளால் சுழித்துவிட்டு அவ்வெழுத்திற்கு மேலே எழுதுவது அல்லது நேர் கீழே எழுதுவது என்ற முறையில் எழுதப்படுவதைக் காணலாம்.

மருத்துவச் சுவடிகளில் குறியீடுகள் பெரும்பாலும் மருந்து அளவைகள் குறிக்கும் இடங்களில் கையாளப் படுகின்றன. 1/4, 1/2, 3/4, 1/16, 1/32, 1/64 போன்ற கணக்குக் குறிகள் குறிப்பிடப்படும்போது குறியீடுகள் பெரிதும் பயன் படுகின்றன எனலாம்.

மந்திரச் சுவடிகளில் எண்ணற்ற வரைபடங்கள் குறியீடுகளாகப் பயன்படுகின்றன. எடுத்துக்காட்டாகக் குழந்தை நோய் தீர்க்க, குழந்தைக்கு ஏற்படும் பறவை தோடங்கள் நீங்க, குழந்தைக்கு ஏற்படும் வயிற்று உப்பிசம், மாந்தம், குடல் ஏற்றம், குடல் இறக்கம் அதாவது உரம் விழுதல் போன்றவற்றிற்குரிய எந்திரங்கள் குறியீட்டு முறையிலேயே அமைந்துள்ளன.

இவை அன்றி, பேய் விரட்ட, சகல நன்மைகள் ஏற்பட, தெய்வங்களைக் கட்டுவிக்கவும், ஏவுவதற்கும் பலவகையான வரைபடங்கள் குறியீடுகளாகவே வரையப்பட்டுள்ளன.

இவ்வாறாகக் குறிப்புகளும் குறியீடுகளும் மலிந்து கிடக்கும் சுவடிகளின் வாயிலாக எண்ணற்ற செய்திகளை நம்மால் உணரமுடிகிறது. அன்றைய மக்கள் கையாண்டு வந்துள்ள எழுதுமுறைமை, பண்பாடு, வரலாறு, கணிதம், சோதிடம், மாந்திரிகம் போன்ற துறைகளில் முன்னோர்களுக்கு இருந்த பட்டறிவு முதலியவற்றைக் கணக்கிட்டுத் தெரிந்துகொள்ள இக்குறிப்புகளே பெரிதும் பயன்படுகின்றன. கிடைக்கப்பெற்றுள்ள அனைத்துச் சுவடிகளிலும் உள்ள குறிப்புகளையும் குறியீடுகளையும் திரட்டி ஆய்வு செய்து பார்த்தால் பண்டைத் தமிழகத்தில் கல்வி முறை, சுவடிகள் அதிகம் புழங்கிய இடங்கள், படியாளர் பற்றிய விவரங்கள், படி எடுக்கத் துணை நின்ற புரவலர் பற்றிய குறிப்புகள், வரலாற்றுச் சமூக விபரங்கள், சோதிட ஞானத்தின் தாக்கம், மருத்துவத்துறையில் எழுந்துள்ள நூல்கள், பயன்பட்ட அல்லது பயன்படும் மூலிகைகள் எனப் பல்வேறு பொருண்மைகளில் நமக்குச் செய்திகள் அகச் சான்றுகளாகக் கிட்டும் என்பதோடு தமிழகத்தில் கல்விக் கேள்விகளில் சிறந்து விளங்கிய ஊர்களின் பெயர்களும் தொகுக்க ஏதுவாகும்.

## குறிப்புகள்

1. டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையச் சுவடிகள் விளக்கம், தொகுதி 2, ப.19.

*2.* மேற்படி.

*3.* மேற்படி, *ப.17.*

*4.* மேலது.

*5.* மேலது.

*6.* மேற்படி, *ப.78.*

*7.* கேரளப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை, *ப.202.*

*8.* மேற்படி, *ப.49.*

*9.* மேற்படி, *ப.68.*

*10.* மேற்படி, *ப.86.*

*11.* மேற்படி, *ப.152.*

*12.* மேற்படி, *ப.170.*

*13.* மேற்படி, *ப.150.*

*14.* மேற்படி, *ப.173.*

*15.* மேற்படி, *ப.215.*

*16.* மேற்படி, *ப.286.*

*17.* மேற்படி, *ப.92.*

*18.* மேற்படி, *ப.180.*

*19.* மேற்படி, *ப.197.*

*20.* மேற்படி, *ப.300.*

*21.* மேற்படி, *ப.312.*

*22.* மேற்படி, *ப.124.*

*23.* மேற்படி, *ப.164.*

*24.* மேற்படி, *ப.268.*

*25.* மேற்படி, *ப.177.*

*26.* மேற்படி, *ப.203.*

27. மேற்படி, ப.148.

28. டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையச் சுவடிகள் விளக்கம், தொகுதி 2, ப.458.

29. மேற்படி, ப379.

## துணைநூற் பட்டியல்

மகா மகோபாத்யாய டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையச் சுவடிகளின் விளக்கம், தொகுதி-1, உ.வே. சாமிநாதையர் நூல்நிலையப் பதிப்பு, சென்னை, 1956.

மேற்படி, தொகுதி-2, 1961.

கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை (முதற் தொகுதி), பதிப்பாசிரியர் முனைவர் சு. நிர்மலா தேவி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995.

# 29. சுவடிப் பாதுகாப்பு

திரு. ப. பெருமாள்

உலகில் மனிதன் தனது கருத்துக்களையும் பட்டறிவையும் பிறருக்கும், தனக்குப் பின்வரும் சந்ததியினருக்கும் சொல்ல வேண்டும் என்ற நோக்கில் முதன் முதலாக எழுதுவதற்குப் பயன்படுத்திய பொருள் கல் ஆகும். மனிதன் மலைகளிலும், குகைகளிலும் வாழ்ந்து வந்தாலும் கல்லின் பயன்பாடு மட்டுமே அறிந்த காலமானதாலும், கல், பாறை மற்றும் குகைச் சுவர்களில் எழுதப்பட்டன. இவை நிலையான பொருட்களாக இருப்பதால் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்ல இயலா. அவ்வாறு எடுத்துச் செல்லக்கூடிய வகையில் செங்கல், ஓட்டுச்சில், உலோகத்தகடு போன்ற பொருட்களும் எழுதுவதற்குப் பயன் படுத்தப்பட்டன. இப்பொருட்களில் எழுதுவதும் கையாளுவதும் சிரமமாக இருந்ததால் எழுதுவதற்கு எளிதாக இருக்கக்கூடிய தாவரப் பொருட்களான மரப்பட்டை, பனை ஓலை, இலை, மரப்பலகை, மூங்கில் தப்பை, பேப்பரைஸ் என்ற கோரைப் புல்லின் தட்டு, மிருகங்களிடமிருந்து எடுக்கப்படும் தோல், எலும்பு, பார்ச்மெண்ட் எனப்படும் உள்தோல் மற்றும் இளம் கன்றின் தோல், யானைத்தந்தம், வட்டு மற்றும் பருத்தித் துணிகள் பயன்படுத்தப்பட்டன. இப்பொருட்கள் எங்கெங்கு அதிகமாகக் கிடைத்தனவோ அங்குப் பயன்படுத்தப் பட்டன. காகிதம் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர் மேல் குறிப்பிட்ட பொருள்களின் பயன்பாடு இல்லாமற் போயிற்று.

உலகில் சீனா, எகிப்து, கிரேக்கம், ரோம், ஆசியா போன்ற நாடுகளிலிருந்து நூலகங்கள் காலத்தின் மாறுபாட்டால் அழிந்து போயின. தொல்லியல் ஆய்வின் வாயிலாக இங்கு நூலகங்கள் இருந்ததற்கான வரலாற்றுச்

சான்றுகள் கிடைக்கப்பெறுகின்றன. பாபிலோனியாவில் களிமண்ணால் செய்த ஓட்டுச்சில் நூல்கள் பயன்படுத்தப் பட்டதாகக் கண்டுபிடித்து எடுத்து, தற்பொழுது அவை பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவை கி.மு. 4000ஆம் ஆண்டைச் சார்ந்தவை என ஆராய்ச்சியாளர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். இதுபோல் ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த சிரியா மன்னருக்குச் சொந்தமான நூலக நூல்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவை ஓட்டுச்சில் வடிவத்தி லிருந்தாலும் தகுந்த முறையில் அட்டவணைப் படுத்தப் பட்டுள்ளன. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் சீனாவில் எழுதப்பட்ட துணிகள், மூங்கில், தப்பைகள் கிடைத்துள்ளன. இந்திய புத்த விகாரில் எழுதப் பட்ட மரப்பலகைகள் இன்றும் ஆக்ஸ்போர்டில் உள்ள போட்லியன் நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. கிரிஸில் அலெக்சாண்டிரிய நூலகத்தில் 700000 சுவடிகள் இருந்ததாகத் தெரிகிறது. இந்தியாவில் காசி, தச்சசீலம், குரு, பாஞ்சாலம் போன்ற இடங்களில் இருந்த சர்வகலா சாலையில் நூலகங்கள் இருந்ததற்கான ஆதாரங்கள் கிடைக்கின்றன. அதுபோல் புத்த விகாரங்களிலும், ஜைன மடங்களிலும் கோவில்கள் மற்றும் பல அரண்மனைகளிலும் நூலகங்கள் இருந்ததற்கான சான்றுகள் காணக்கிடைக்கின்றன.

இந்தியாவில் கல், உலோகத்தகடுகள், துணிகள், பனை ஓலைகள், பூர்ஜ மரப்பட்டை, மரப்பலகைகள், காகிதம் போன்ற பொருட்கள் எழுதப் பயன்படுத்தப்பட்டன. ஆனால் எழுதுவதற்காக அதிக அளவில் பயன்படுத்தப்பட்ட பொருள் பனை ஓலைகளாகும். பனை ஓலை எப்பொழுது எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டது என அறுதியிட்டுக் கூற இயலாது. ஓலைகளில் எழுதுவதும் கையாளுவதும் எளிதாக இருந்தாலும், சரியான முறையில் பதப்படுத்தி எழுதிப் பாதுகாத்து வந்தால் அதிக நாட்கள் நிலைத்து இருக்கும் தன்மை கொண்டதாக இருப்பதாலும், பனை ஓலைகள் அதிகமாகப் பயன்படுத்தப்பட்டன. பனை ஓலைகளைத் தென்கிழக்காசிய நாடுகள் பலவற்றில் பயன்படுத்தி

யிருந்தாலும், ஓலைகளை எழுது பொருளாகப் பயன்படுத்தும் முறை தென்னிந்தியாவிலிருந்து பரவியிருக்கக் கூடும் எனக் கூறப்படுகிறது. ஆனால் எழுதும் முறை இடத்திற்கு இடம் வேறுபட்டுள்ளது. 16ம் நூற்றாண்டிற்கு முன் எழுதிய ஓலைச் சுவடிகள் ஒருசிலவே கிடைக்கின்றன. அவற்றுள் இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சுவடி ஒன்று ஜெர்மன் நாட்டில் பாதுகாத்து வரப்படுகிறது. அதுபோல் 6ம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு சுவடி ஜப்பான் அருங்காட்சியகத்திலும், ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த ஓலைச்சுவடி கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும், 10ம் நூற்றாண்டிற்குப் பின் எழுதிய சுவடிகள் இந்தியாவில் ஒருசில நூலகங்களிலும் பாதுகாக்கப்படுகின்றன. 16ம் நூற்றாண்டிற்குப்பின் 19ம் நூற்றாண்டு வரை எழுதிய சுவடிகளை இந்தியா மற்றும் உலகில் உள்ள பல நூலகங்களில் காணலாம்.

**பனை மரங்கள்**

பனை மரங்களில் நூற்றுக்கும் அதிகமான வகைகள் இருப்பினும் அவற்றுள் மூன்று வகையான பனை மரங்களின் ஓலைகள் எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டன. அவை,

1. நாட்டுப்பனை ( Borasus Flabellifer ) Palmyra

2. சீதாளப்பனை எனப்படும் கூந்தற்பனை. Coripha Umbra Califera

3. லந்தர் பனை. Coripha Utan ஆகும்.

இவற்றுள் நாட்டுப்பனை தென்னிந்தியாவில் அதிகமாக வளர்கின்றது. இவ்வகைப் பனை மரங்களின் ஓலைகள் 4 செ.மீ. முதல் 6 செ.மீ. அகலமும் இரண்டடி முதல் மூன்றடி நீளமும் கொண்டவை. தடிமனாகவும் இருக்கும். ஆனால் கூந்தற் பனை ஓலைகள் மிகவும் நீளமாகவும், 8 முதல் 10 செ.மீ. அகலமும், மிக மெல்லியதாகவும் இருக்கும். இவ்வகைப் பனை மரங்கள் இந்தியாவின் மேற்குக் கடற்கரை, இலங்கை, மலேசியக் கடற்கரைப் பகுதிகளில் அதிகமாக வளர்கின்றன. கூந்தற்

பனையின் ஓலை நாட்டுப்பனை ஓலையைவிட மிக மெல்லியதாகவும், வழவழப்பாகவும் நன்கு வளைந்து கொடுக்கும் தன்மையும் கொண்டது. இவ்விரண்டு வகை தவிர மூன்றாவது வகைப் பனையான லந்தர் பனை ஓலைகளும் எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டன. இவ்வகைப் பனை மரங்கள் அதிகமாக பர்மா, தாய்லாந்து, இந்தியாவின் வடகிழக்கு, பகுதிகளில் வளர்கின்றன. இப்பனை மரங்களின் ஓலைகள் கூந்தற் பனை ஓலைகளைப் போல் நீள, அகலமாகவும், நாட்டுப்பனை போல் மிகத் தடிமனாகவும் உள்ளன. இவ்வகைப் பனை ஓலைகளில் எழுதிய சுவடிகள் ஒருசில பல நூலகங்களில் உள. இவ்வகையைச் சார்ந்த ஒரு சுவடி தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலகத்தில் பாதுகாக்கப் பட்டு வருகிறது. இச்சுவடி வடமொழியில் பர்மீய எழுத்தில் எழுதப்பட்டு உள்ளது. அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் இதுபோன்ற சில சுவடிகள் உள்ளன. இச்சுவடிக்கட்டுகளின் இருபுறமும் சிவப்பு மற்றும் தங்க நிற வர்ணம் பூசப்பட்டுள்ளது.

## ஓலைகளை எழுதப் பயன்படுத்தும் முறை

பனை மரங்களில் ஆறு மாதம் வளர்ந்த ஓலைகளை வெட்டி நிழலிற் காய வைத்துப் பின் நீண்ட தலையோலைகளின் குறுகிய அடி நுனிகளையும் ஓலைகளின் நரம்பையும் நீக்கிவிட்டு ஒரே அளவாக ஓலைகள் வெட்டப் படுகின்றன. இவ்வோலைகளைக் கட்டி வைக்க மத்தியில் இரண்டு துவாரங்கள் ஓலையை மூன்று பகுதிகளாகப் பிரிக்குமாறு இடப்படுகின்றன. சுவடி பெரிய அளவில் இருந்தால் இரு துளையிடப்பட்ட ஓலைகளில் இடப்பக்கம் நூல் கயிறு கோர்த்தும் வலப்பக்கம் மெல்லிய குச்சியைச் செருகியும் சுவடி தொய்வடையாமல் கட்டி வைக்கப் படுகின்றது. நூல் கயிறு கட்டுவதும் இறுக்கமாகச் சுற்றாமல் சுவடி முழுவதும் ஒரே மாதிரியான அழுத்தம் கொடுக்கும் அளவிற்குச் சுற்ற வேண்டும்.

பனை ஓலைகளில் இரண்டு வகையாக எழுதப்பட்டன. ஒன்று ஓலைகளின் மீது எழுத்தாணி கொண்டு கீறி எழுதும்

முறை; மற்றும் பேனா கொண்டு எழுதும் முறை ஆகும். ஓலைகளின் மீது எழுத்தாணி கொண்டு எழுதும் முறை தென்னிந்தியாவிலிருந்து மற்றத் தென்கிழக்காசிய நாடுகளுக்குப் பரவியிருக்கக் கூடும் எனக் கூறப்படுகிறது. பனை ஓலைகளின் மேற்பரப்பு கடினமாக இருப்பதால் நேரிடையாக எழுத முடியாது. எழுதுவதற்காக வெட்டி வைக்கப்பட்டுள்ள ஓலைகளைப் பதப்படுத்துதல் வேண்டும். ஓலையைப் பதப்படுத்தல் என்றால் எழுதுவதற்கு மிருதுவாக்குதல் ஆகும். ஓலையின் மேற்பரப்பு மிருதுவாக இருப்பின் எழுதுவது எளிது. மேலும் மேற்பரப்பு சேதமடையாது. ஓலையைப் பதப்படுத்த பல முறைகள் பயன்படுத்தப்பட்டன. அவற்றுள் சில முறைகள்.

அ ) ஓலைகளைத் தண்ணீர் அல்லது பாலில் வேகவைத்தல்.

ஆ ) நீராவியில் வேக வைத்தல்

இ ) ஈரமணலில் புதைத்து வைத்தல்

ஈ ) நல்லெண்ணெய் பூசி ஊற வைத்தல்

உ ) ஈரமான வைக்கோற் போரில் வைத்திருத்தல்.

சில முறைகளில் ஓலைகளில் மேற்பரப்பு மிருதுவானதுடன் அதில் உள்ள லிக்னின் என்ற பொருள் வெளியேற்றப்படுகிறது. இதனால் ஓலைகள் விரைவில் சிதிலமடைவதில்லை. ஒரிசாவில் பாதுகாப்பிற்காக மஞ்சள் நீர் அல்லது அரிசிக்கஞ்சியில் அரைமணி நேரம் ஊறவைத்துப் பதப்படுத்தினர்.

ஓலைகளில் எழுத்தாணி கொண்டு கீறி எழுதும் முறை மிகப்பழமையானது. இதற்கு உதாரணம் மகாபாரதக் கதையைக் கொள்ளலாம். மகாபாரதத்தை வியாச முனிவர் சொல்ல விநாயகப்பெருமான் எழுதியதாகப் புராணங்கள் கூறுகின்றன. இதில் அவர் எழுதிய எழுத்தாணி தேய்ந்து போனதால் தன்னுடைய கூரிய தந்தத்தை ஒடித்து

எழுதியதாகக் கூறப்படுகிறது. இதிலிருந்து இவ்வெழுத்து முறையும், தந்தங்களின் கூரிய முனையால் எழுதப்பட்டது என அறிய முடிகிறது. பொதுவாக ஓலையில் எழுதுவதற்கு எலும்பு, தந்தம், பித்தளை, செம்பு மற்றும் இரும்பால் ஆன எழுத்தாணிகள் பயன்படுத்தப்பட்டன. இவ்வாறு எழுதப் பட்ட ஓலைகளில் மஞ்சள் அல்லது விளக்குக் கரி, கொவ்வை இலைச்சாறு, ஊமத்தை இலைச்சாறு பூசப்பட்டது. இவ்வாறு பூசப்படுவதனால் ஓலையில் எழுதப்பட்ட எழுத்துக்கள் தெளிவாகத் தெரிந்தன; மஞ்சள் பூசுவதால் பூஞ்சை காளாண் பாதிப்பும், கொவ்வை இலை சாறு மற்றும் ஊமத்தை இலை சாற்றினால் பூச்சிகளின் பாதிப்பும் ஓரளவு தடுக்கப்பட்டன. இவ்வாறு செய்யாத சுவடிகள் அதிகமாகப் பூச்சிகளின் பாதிப்பிற்குள்ளாயின. வட இந்தியாவில் மை கொண்டு ஓலையின் மேற்பரப்பில் எழுதும் முறை அதிகமாகக் கையாளப் பட்டது. கருக்கிய சங்கின் பொடி அல்லது விளக்குக் கரியுடன் வேல மரத்துப் பிசின் மற்றும் மழை நீருடன் சேர்த்துச் செய்யப்பட்ட மைகொண்டு எழுதப்பட்டது. வட இந்திய நூலகங்களில் கிடைக்கும் பல சுவடிகள் இம் முறையில் எழுதப் பட்டும் பல வண்ண ஓவியங்களுடனும் இருக்கின்றன.

## சுவடிப்பாதுகாப்பு

இந்தியாவில் ஓலைச் சுவடிகளும் மற்ற எழுது பொருட்களில் எழுதப்பட்ட சுவடிகளும் மக்கள் அனைவரும் கூடும் இடங்களான கோவில்கள் அரண்மனைகள், கல்வியாளர்களின் இல்லங்கள் சமயம் மற்றும் மொழி வளர்ச்சிக்காக ஏற்படுத்தப்பட்ட மடங்கள் ஆகிய இடங்களில் வைத்துப் பாதுகாக்கப்பட்டன. இவ்வாறு பாதுகாக்கப்பட்ட பல நூலகங்கள் இயற்கையின் சீற்றங்களாலும், மன்னர்களுக்கிடையே நடைபெற்ற போர்களாலும், கல்வி, கலையின்பால் ஆர்வமற்ற மன்னர்களாலும், சமயச் சண்டைகள், கவனிப்பின்மை போன்ற பல காரணங்களாலும், அழிவுக்குள்ளாயின. உதாரணமாக, மைசூர் மன்னர் திப்பு சுல்தான் அரண்மனையிலிருந்த நூல்கள் தற்பொழுது அங்கு இல்லை. ஆனால் 1808இல் தயார் செய்யப்பட்ட ஒரு

அட்டவணை தஞ்சை சரஸ்வதி மகால் நூலகத்தில் உள்ளது. இதுபோன்ற அழிவிலிருந்து தப்பிப் பாதுகாக்கப்பட்ட சுவடிகள் தற்பொழுது இயற்கையின் சீற்றம், காலத்தின் மாறுபாடு போன்ற காரணங்களால் பாதிக்கா வண்ணம் பாதுகாப்பு செய்யப்பட்டு வருகின்றது.

சுவடிப்பாதுகாப்பு என்பது மிகச் சிரமமான பணியாகும். இப்பணி மனிதன் எழுதத் தொடங்கிய நாள் முதல் செய்யப்பட்டு வருகின்றது. ஆனால் பாதுகாப்பு முறைகளும், உபயோகிக்கப்படும் பொருள்களும் இடத்திற்கு இடமும் சுவடிகளுக்குத் தகுந்தாற்போலும் வேறுபட்டுள்ளன. எழுதுபொருட்கள் மற்ற நாடுகளைவிட இந்தியா மற்றும் தென்கிழக்காசிய நாடுகளில் மிக விரைவில் அழிவிற்குள்ளாயின. இதற்குக் காரணம் பருவநிலை. வருடந் தோறும் அதிக வெய்யிலும் மழையும் மாறி மாறி ஏற்படுவதால் காலத்தின் மாறுபாட்டிற்கு ஏற்றாற்போல் சுவடிகள் சுருங்கி விரிந்து தனது உறுதிநிலையை இழக்கின்றன. மேலைநாடுகளில் ஒரே மாதிரியான சீதோஷ்ணநிலை இருப்பதால் சுவடிகள் மற்றும் அரும் பொருட்கள் அதிக சேதமின்றிப் பாதுகாப்பாக உள்ளன.

சுவடிகள் அதிக சூரிய ஒளியினால் நிறமாற்றம் ஏற்படும்; வெப்பம் அதிகமானால் சுவடியில் உள்ள நீர் ஆவியாகும். இதனால் வளைந்து கொடுக்கும் தன்மையை இழந்து இறுகி தனது நிலையிலிருந்து சுருங்கிவிடும். காற்றில் ஈரம் அதிகமாக இருக்கும்பொழுது சுவடிகள், ஈரத்தை உறிஞ்சுவதால் விரிவடையும்; இதனால் காற்றில் உள்ள நுண்ணுயிர்கள் சுவடிகளின் மீது பூஞ்சைக் காளான்களாக வளர்ந்து சுவடிகளின் உறுதி நிலையைப் பாதித்து ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொள்ளவும் செய்யும். அது மட்டுமன்றிப் பூஞ்சைக் காளாண்களால் பாதிக்கப்பட்ட சுவடியைச் சாப்பிட பூச்சிகள் வருகின்றன. இவ்வாறு பூச்சிகளினால் ஏற்படும் அழிவினைத் தடுக்க முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்ட பொருள் சீடர் மர எண்ணெய் ஆகும். அதுபோல் பல தாவரங்களின் இலை, பட்டை, பூ, பிசின் போன்றவற்றையும்

பாதுகாப்பிற்காகப் பயன்படுத்தியுள்ளனர். தூசு, ஒளி, வெப்பம் காற்றில் உள்ள ஈரப்பதத்திலிருந்து பாதுகாக்க, பட்டு மற்றும் பருத்தித் துணிகளில் சுவடிகளைச் சுற்றி வைத்துப் பாதுகாத்தனர்.

பனை ஓலை ஒரு கரிமப் பொருள் வகையைச் சார்ந்தது. இதனால் காலத்தின் மாறுபாடு, இயற்கையின் சீற்றம், ஒளி, வெப்பம், நீர், பூச்சிகள் மற்றும் இதர வேதிமப் பொருட்களாலும் பாதிக்கப்படுகின்றன. இவை மட்டுமன்றி ஓலைச்சுவடிகளுக்குப் பின்வரும் பாதிப்புகளும் ஏற்படுகின்றன.

### நிறமாற்றம்

ஓலைகள் சில மிகக் கருப்பு நிறமாக இருக்கும். நாள்பட்ட காரணத்தால் ஆக்சிடேசன் என்ற வேதி மாற்றத்தாலும் ஓலையில் உள்ள லிக்னின் என்ற பொருளில் ஒளியினால் ஏற்படும், வேதிமாற்றத்தாலும், சுற்றுப்புற வளிமண்டல மாசுவினால் ஏற்படும் அமிலத்தன்மையினாலும், பாதுகாப்பிற்காக, பயன்படுத்தும் பொருட்களினாலும், பூஞ்சைக்காளான்களின் பாதிப்பினாலும், ஓலைகளைப் பாதுகாக்கப் பயன்படுத்தும் பலவித எண்ணெய்களை அடிக்கடி பூசுவதாலும், எழுதுவதற்கு ஓலைகளைப் பதப்படுத்திப்பின் சரியாகக் காயவிடாமல் கட்டி வைப்பதாலும் நிறமாற்றம் ஏற்படுகிறது.

வேதி மாற்றத்தாலும், மற்றும் பூஞ்சை காளாண்களின் பாதிப்பிலும் ஏற்படும் நிறமாற்றங்களைத் தவிர ஓலைகளில் ஏற்படும் மற்ற நிற மாற்றங்களை அமிலமில்லாச் சோப்புத் திரவத்தைச் சுத்தமான நீரில் கலந்து சுத்தப்படுத்தலாம். 2% அமோனியா திரவத்தினாலும் மற்றும் அசிடோன் எதில் ஆல்கஹால் கொண்ட கலவையினாலும் சுத்தப்படுத்தலாம்.

### கறைகளும் புள்ளிகளும்

ஓலைச்சுவடிகளின் மேற்பகுதியில் பூச்சிகளின் எச்சத்தினாலோ தூசுகள் படிவதாலோ, பாதுகாப்பிற்குப்

பயன்படுத்தும் பொருட்கள் படிவதாலோ கரி படிவதாலோ, பூஞ்சைக் காளான்களினாலோ ஓலைகளில் கறைகளும் புள்ளிகளும் ஏற்படுகின்றன. இவற்றைப் பொதுவாக சிறுகத்தி அல்லது சாமணம் போன்ற கருவிகளைப் பயன்படுத்தி நீக்கலாம். கடினமான புள்ளிகளைத் தண்ணீரும் ஆல்கஹாலும் கலந்த கலவையினால் நீக்கலாம். அசிடோன், எதிர் ஆல்கஹால், சிட்ரனிலா எண்ணெய், கற்பூர எண்ணெய் போன்றவற்றில் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்தியும் நீக்கலாம்.

## பூஞ்சைக் காளான் பாதிப்பு

காற்றில் உள்ள அதிகப்படியான ஈரத்தை ஓலைகள் உறிஞ்சுவதாலோ, மழை நீரில் நனைவதாலோ ஏற்படும் ஈரப்பதத்துடன் காற்றில் உள்ள நுண்ணுயிர்கள் படிந்து பூஞ்சைக்காளான்களாக வளர்கின்றன. பூஞ்சைக்காளான் வளர்ச்சியினால் சுவடிகள் மீது கறை ஏற்படும்; பளபளப்பான மேற்பகுதி பாதிக்கப்படும். அது ஏற்படுத்தும் ஈரத்தன்மையால் ஏடுகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளும். மற்றும் ஓலைகளைப் பலமிழக்கச் செய்துவிடும். இதனால் ஓலைகள் துகள்களாக உடையும். ஆகையால் பூஞ்சைக்காளான் வளராமல் தடுக்க அக்காலத்தில் ஓலைச்சுவடி எழுதியவுடன் மஞ்சள் அரைத்துப் பூசப்பட்டது அல்லது கோவை இலைச் சாற்றுடன் விளக்குக் கரி கலந்து பூசப்பட்டது. ஓலைகளின்மீது தூசி படியாமலும் நீரில் நனையாமலும் பாதுகாக்கப்பட்டன. ஒன்றோடு ஒன்று ஒட்டியுள்ள சுவடிகளைச் சிட்ரனிலா எண்ணெய் தடவிப் பிரிக்கலாம். எதில் ஆல்கஹால் போன்ற வேதிப்பொருட்களைப் பயன்படுத்தியும் பிரிக்கலாம். அல்லது நீராவியைப் பயன்படுத்தி ஒட்டியுள்ள ஓலைகளைப் பிரிக்கலாம்.

## பூச்சிகளின் பாதிப்பு

ஓலைகள் ஈரத்தை உறிஞ்சி மிகவும் மிருதுவான நிலைக்கு மாறிவிடுகின்றன. பூஞ்சைக்காளானின் பாதிப்பு

ஏற்பட்டவுடன் பூச்சிகள் ஓலைகளைத் தாக்குகின்றன. கொவ்வை இலைச்சாறு அல்லது ஊமத்தை இலைச்சாறு தடவாத ஓலைகள் மிக விரைவில் அதிகப்படியான பாதிப்பிற்குள்ளாகின்றன. ஓலைச்சுவடிகள் கேஸ்ட்ராலஸ் இண்டிகஸ் எனப்படும் புத்தகப்புழு, கரப்பான் பூச்சி மற்றும் கரையான்களால் பாதிக்கப்படுகின்றன. ஓலைகளைத் தாக்கும் புழுவானது சுமார் நூற்றுக்கும் மேற்பட்ட பூச்சிகளின் புழு வடிவம் ஆகும். ஓலைகளின் மீது உள்ள பூஞ்சைக்காளானைச் சாப்பிடவரும் பூச்சிகள் அதன்மீது முட்டை வைத்துச் செல்லும். அம் முட்டைகளிலிருந்து வெளிவரும் புழுக்கள் ஓலையைத் துளை செய்து உள்நோக்கிச் செல்கின்றன. இப் புழுக்கள் ஓலைகளை ஒரு பக்கத்திலிருந்து மற்ற பக்கத்திற்கு ஓட்டையிட்டுச் சாப்பிட்டுக்கொண்டே செல்கின்றன. இப்புழுக்கள் சுமார் 1 செ.மீ. நீளம் உள்ளன. தலைப்பாகம் சிறிது பெரியதாகவும் வால் பகுதி சிறியதாகவும் இருக்கும். இப்புழுக்கள் சுமார் 0.1 மி.மீ. தடிமன் உள்ள உலோகத் தகட்டையும் துளையிடும் வல்லமை கொண்டவை. இப்புழுக்கள் வளர்ந்து பூச்சியாக மாறும் பொழுது மீண்டும் முட்டையிட்டுச் செல்வதால், இது ஒரு தொடர் பாதிப்பாக மாறுகிறது. இப்புழுக்கள் வெளிப்படுத்தும் ஒரு வகைத் திரவத்தால் ஓலைகள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொள்ளும் புழுக்களால் பாதிக்கப்பட்ட சுவடிகளை உடன் வேதிமப் புகையூட்டுதல் முறையில் பாதுகாத்தல் நல்லது. ஏடுகளைப் பிரித்து அதனுள் புழு இருப்பின், அதைக் கொல்வதற்குப் பாரடைகுளோரோபென்சின் என்ற வேதிமப்பொருள் கொண்டு புகையூட்டுதல் செய்யலாம். பின் ஏடுகளைச் சுத்தம் செய்தபின் அவற்றின் மீது ஏதேனும் ஒரு பாதுகாப்புப் பொருள் அல்லது எண்ணெய் பூசலாம். புத்தகப் புழுவைத் தவிர ஓலைகளைப் பாதிக்கக்கூடிய மற்ற இரு பூச்சி வகைகள் கரப்பான் பூச்சியும், கரையான்களும் ஆகும். கரப்பான் பூச்சிகள் ஓலைச்சுவடிகளின் மேற்பகுதியையும் நுனிப் பகுதியையும் கடித்துச் சேதமுறச் செய்யும். கரையான்கள் செப்பனிட முடியாத பாதிப்பை உண்டாக்கும்.

## எழுத்துக்கள் மங்குதல்

எழுத்துக்கள் மங்குதல் என்பது வட இந்தியாவில் மையினால் எழுதப்பட்ட சுவடிகள் ஒன்றோடு ஒன்று உராய்வதால் ஏற்படும். ஆனால் எழுத்தாணி கொண்டு எழுதப்பட்ட சுவடிகளில் எழுத்துத் தெளிவாக இல்லையெனில், அதற்குக் காரணம் எழுதிய ஓலைகளுக்குச் சரியான முறையில் கொவ்வைச்சாறு பூசாததாலும், எழுத்துக்களில் பூசியுள்ள கருப்பு தூள்கள் விழுந்துவிடுவதும் ஆகும். இதை நிவர்த்தி செய்ய விளக்கெண்ணெய் அல்லது இலுப்பை எண்ணெய் கொண்டு விளக்கிட்டு அதன் கரியை எடுத்து சிட்ரினலா எண்ணெய் அல்லது லெமன் கிராஸ் எண்ணெயுடன் சேர்த்துப் பூசுவதால் எழுத்துக்கள் தெளிவாகத் தெரியும்.

## சிதிலமடைதல்:

ஓலைகள் நாளடைவில் காலத்தின் மாறுபாட்டால் சிதிலமடைகின்றன. பொதுவாக ஓலைகளில் உள்ள ஈரத்தன்மை இழக்கப்படும் பொழுதும் அல்லது வளி மண்டல மாசுவினால் உண்டாகும் அமிலத்தன்மை ஓலைகளில் உள்ள லிக்னின் என்ற பொருளுடன் அதிக ஒளி செய்யும் வேதி மாற்றத்தாலும், மற்றும் பூஞ்சைக்காளான் பாதிப்பு ஏற்பட்டுச் சரியாகப் பாதுகாப்பு செய்யாமல் இருந்தாலோ சிதிலமடையலாம். பொதுவாக ஆவியாகக்கூடிய தாவர எண்ணெய்களான சிட்ரனிலா எண்ணெய், லெமன் கிராஸ் எண்ணெய், யூகலிப்டஸ் தைலம், சந்தன எண்ணெய், கற்பூர எண்ணெய் போன்றவற்றில் ஏதாவது ஒன்றைப் பயன் படுத்தலாம். இவற்றுள் சிட்ரனிலா எண்ணெய் நல்ல பலன் கொடுப்பதாக ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர். தற்பொழுது புதிய ஓலைகளை வேகவைத்துக் காய்ச்சி வடித்தல் முறையில் தயாரிக்கப்படும் திரவத்தை வேதிமப் பொருட்களுடன் சேர்த்துப் பூசுவதால் நல்ல பலன் கிடைப்பதாக ஆராய்ச்சி மூலம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஆனால் இன்னும் அம்முறை நடைமுறைப்படுத்தப்படவில்லை.

### செப்பனிடுதல்

பொதுவாக ஓலைச்சுவடிகளைக் கையாளும்பொழுது உடைந்துவிடும் ஏடுகளை ஊசி நூல் கொண்டு தைத்துச் செப்பனிடுகின்றனர். தற்பொழுது உடைந்த அல்லது கிழிந்த ஓலைகளைப் புதிய ஓலைகளின் பவுடர் கொண்டு பெவிக்கால் பயன்படுத்தி ஒட்டலாம். புழுக்களினால் ஏற்பட்ட துளைகளைத் தேன்மெழுகு, ரோசின் கலந்து காய்ச்சி நிரப்பலாம் அல்லது காகிதக் கூழ் கொண்டு செப்பனிடலாம். மிகவும் சிதிலமான ஓலைகளை 1% பாலிவினைல் அசிடேட் என்னும் வேதிப்பொருள் பூசிப் பாதுகாக்கலாம். மிகச் சிதிலமான ஓலைச்சுவடிகளைச் சிப்பான் கொண்டு மெண்டிங் அல்லது செல்லுலோஸ் அசிடேட், தாள், ஜப்பான் டிசு கொண்டு லேமினேசன் முறையில் பாதுகாக்கலாம். ஆனால் இவ்வாறு செய்யும்பொழுது எழுத்துக்கள் தெளிவாகத் தெரியாது. மேலை நாடுகளில் என்க்கேப்சுலேசன் என்ற முறையில் சுவடிகள் பாதுகாப்பு செய்யப்படுகின்றன.

### பாதுகாப்பு செயல்முறைகள்

ஓலைச்சுவடிகளைக் கையாளும் பொழுது சேதமடையாமல் இருக்க இரண்டு பக்கமும் தேக்கு அல்லது மூங்கில் தப்பைகள் வைத்துக் கட்டலாம். சுவடிகளைக் கட்டி வைக்க மஞ்சள் தடவிய நூலை வேண்டிய அளவு நீளத்திற்குச் சுவடி முழுவதும், ஒரே மாதிரியான அழுத்தம் கொடுக்கும் அளவிற்குக் கட்டி வைக்க வேண்டும். மரபீரோவில் ஓலைச் சுவடிகளை ஒன்றன் மீது ஒன்று வைக்காமல் தனித் தனியாக வைத்தல் நல்லது. சுவடிகளை ஒன்றன் மீது ஒன்று வைக்கும் பொழுது ஏற்படும் அழுத்தத்தினால் ஓலைகள் வளைந்து கொள்ளும். வருடத்திற்கு ஒருமுறையேனும் சுவடிகளின் ஏடுகளைப் பிரித்துக் கட்டுதல் வேண்டும். ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை பாதுகாப்பிற்காகச் சிட்ரனிலா எண்ணெய் அல்லது மற்ற ஆவியாகக்கூடிய தாவர எண்ணெய் பயன்படுத்தலாம். இவ்வாறு சிட்ரனிலா எண்ணெய் பயன்படுத்தும்போது சுவடிகளை வார்னிஷ் செய்யாத மர பீரோவில் வைத்தல்

நல்லது. சிட்ரனிலா எண்ணெய் வார்னிஷ் மற்றும் பெயிண்டுகளைக் கரைக்கும் தன்மை கொண்டது. சுவடிகளைப் பாதுகாக்க வைக்கும் தேக்கு ரீப்பர்களுக்கும் வார்னிஷ் செய்தல் கூடாது. இல்லை எனில், பலகைக்குப் பக்கத்தில் உள்ள ஏடுகள் பலகையில் ஒட்டிக்கொள்ளும். இவ்வாறு ஒட்டிக்கொண்ட ஏடுகளை டர்பன்டைன், அதில் ஆல்கஹால் போன்ற பெயிண்ட் கரைப்பான்களைப் பயன்படுத்தி மிக சிரத்தையுடன் எடுக்க வேண்டும். இல்லையெனில் உடைவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

பொதுவாக சுவடிகளின் பாதுகாப்பிற்காகப் பயன்படுத்தும் எண்ணெய் ஓரளவு பூச்சிகள் வராமல் தடுக்கப் பயன்படுகின்றது. மழைக்காலத்திற்குப் பின் பூஞ்சைக் காளான் மற்றும் பூச்சிகள் வராமல் பாதுகாக்கப் பூச்சி எதிர்ப்புப் பொருட்கள் சிலவற்றைப் பயன்படுத்தலாம். பல்லாண்டு காலமாக நம்நாட்டில் உலர்ந்த வேப்ப இலை, புகையிலை, கற்பூரம், வசம்பு போன்ற பொருட்கள் பூச்சிகள் வராமல் இருக்கப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. வேப்பமரத்தில் பூக்கும் தருணத்தில் இலைகளைப் பறித்து நிழலிற் காயவைத்துச் சுவடிகள் வைத்துள்ள பீரோக்களின் அடித்தட்டில் இடலாம். இவைகள் சுமார் 3 மாதம் முதல் 6 மாதம் வரை பயனுள்ளதாக இருக்கும். மீண்டும்; மீண்டும்; ஒரே பொருளைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, மாற்றி மற்ற பொருட்களைப் பயன்படுத்துவதால் நல்ல பலன் கொடுக்கும். சரஸ்வதி மகால் நூலகத்தில் கீழ்க்கண்ட பொருட்களைப் பொடி செய்து பயன்படுத்தப்படுகிறது.

கருஞ்சீரகம் 1 பங்கு, மிளகு 1/4 பங்கு, வசம்பு 1 பங்கு பட்டை 1 பங்கு கிராம்பு 1/4 பங்கு - இப்பொருட்களைத் தனித்தனியாக நிழலில் காயவைத்துப் பொடி செய்து வெள்ளைத் துணியில் ஒரு சிறு கட்டி சூடத்துடன் சேர்த்துச் சிறுசிறு முடிச்சுகளாகச் செய்து பயன்படுத்தல் வேண்டும். பூச்சிகள் இருப்பின் பாரா டை குளோராபென்சின் போன்ற வேதிப்பொருட்களை ஆவியூட்டுதல் முறைகளில் பூச்சிக் கொல்லியாகவும், தைமால் என்ற வேதிப்பொருளைக்

காளான் கொல்லியாகவும் பயன்படுத்தலாம். குறைவான சுவடிகள் உள்ள தனியார் நூலகங்கள் மற்றும் ஆராய்ச்சியாளர்கள், சுவடிகளைச் சிவப்பு நிறப் பருத்தித் துணிகளில் சுற்றி வைப்பதால், தூசி, சீதோஷ்ணநிலை மற்றும் சூரிய ஒளியின் பாதிப்பிலிருந்தும், சிவப்பு நிறம், பூச்சி எதிர்ப்பு நிறம் ஆகையால் பூச்சிகளின் பாதிப்பிலிருந்தும் பாதுகாக்கலாம்.

சுவடிகளை இயற்கையின் பாதிப்பிலிருந்து பாதுகாப்பது மட்டுமின்றி அதைக் கையாளுபவர்களும் சிரத்தையுடன் இருந்தால் மட்டுமே பாதுகாக்க முடியும். ஓலைச்சுவடிகளைப் பீரோக்களில் வைக்கும்பொழுதும் எடுக்கும் பொழுதும் மற்றச் சுவடிகளின்மீது உரையாமல் இருக்குமாறு வைக்கவேண்டும். எடுத்துக்கொண்டு செல்லும் பொழுது ஒரு கையில் தூக்காமல் அதற்கென ஒரு பெட்டி அல்லது அட்டைகளில் வைத்து இரு கைகளால் எடுத்துச் செல்ல வேண்டும். ஓலைச்சுவடியைக் கட்டிவைக்கும் நூல் அதன் துளைகளைவிடச் சிறியதாக இருக்கவேண்டும். இல்லையெனில் ஓலைகளைக் கையாளும்பொழுது துளைகளைச் சேதமுறச் செய்யும்., இவ்வாறு சுவடிகளைக் கவனமாகக் கையாளுவது மிக அவசியம்.

## மேலைநாடுகளில் ஓலைச்சுவடிப் பாதுகாப்பு

இந்தியா, பர்மா, தாய்லாந்து, மலேசியா, இலங்கை போன்ற தென்கிழக்காசிய நாடுகளிலிருந்து பெறப்பட்ட ஓலைச்சுவடிகள் பல்வேறு நாடுகளில் உள்ள நூலகங்களிலும், அருங்காட்சியகங்களிலும் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. சுவடி, நூல்கள் பாதுகாப்புப் பயிற்சிக்காக லண்டன் சென்ற பொழுது விக்டோரியா ஆல்பர்ட் அருங்காட்சியகம், வெல்கம் மருத்துவ ஆராய்ச்சி நிலையம், இந்திய ஆபீஸ் நூலகம், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகம், நூலகம் மற்றும் ஆக்ஸ்போர்டில் உள்ள போர்டிலியன் நூலகம் போன்ற இடங்களில் ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து வருவதைக் காணும் வாய்ப்பு கிட்டியது. அங்குள்ள சீதோஷ்ண நிலையில்

அதிகமாகப் புத்தகங்கள், சுவடிகள், அரும்பொருட்கள் விரைவில் அழிவதில்லை. ஆண்டுதோறும் சீதோஷ்ணநிலையில் மாறுதல் ஏற்படாவண்ணம் சுவடி வைப்பறைகள் பாதுகாக்கப் பட்டு வருகின்றன. இதனால் இங்குப் பூச்சிகளின் பாதிப்பு இல்லை. பூஞ்சைக் காளான் பாதிப்புகளும் இல்லை. பலவகையான தொழிற்சாலைகள் இருப்பதால் காற்று மாசுபட்டு உள்ளது. இதனால் சில இடங்களில் சுற்றுப்புற அமிலத்தன்மையின் பாதிப்பு உள்ளது. மற்றும் இங்கு அதிகப் படியாக மின்சார உபகரணங்கள் பயன்படுத்துவதால் தீயினால் அழிவு ஏற்படும் என்று கருதி அதற்கான முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

இங்கிலாந்து அரசாங்கம் சில வேதிப்பொருள்களைப் பயன்படுத்தத் தடைவிதித்துள்ளதால் அதிகமான பாதுகாப்புப் பிரச்சினை இல்லாத நிலையில் வேதிமப் பொருட்களை அதிகமாகப் பயன்படுத்தாமல் ஒருசில பொருட்களைக் கொண்டு சுத்தம் செய்து துணியில் சுற்றியோ அல்லது அமிலமற்ற அட்டையில் செய்யப்பட்ட பெட்டிகளில் வைத்தோ பாதுகாக்கப்படுகிறது. சிதிலமான சுவடிகளை என்கேப்சுலேசன் என்ற முறையில் ஒவ்வொரு ஓலையையும், ஓலை அளவுள்ள, இரண்டு பாலிஸ்டர் தாள்களுக்கு இடையில் வைத்து ஓரங்கள் அல்ட்ராசோனிக் முறையில் ஒட்டப்பட்டு அட்டைப்பெட்டிகளில் வைத்துப் பாதுகாத்து வருகின்றனர். இந்நூலகங்களில் மூன்று வகையான ஓலைகளில் எழுதப்பட்ட சுவடிகளும், இரண்டு முறையில் எழுதப்பட்ட சுவடிகளும், அழகிய சித்திரங்கள் மற்றும் ஓலைகளின்மீது அரக்கு பூசி அதில் மைகொண்டு எழுதிய சுவடிகளும் உள்ளன. இந்நூலகங்களில் குறைந்த அளவில் ஓலைச்சுவடிகள் இருப்பதால் அவற்றை மிகுந்த சிரத்தையுடன் பாதுகாத்து வருகிறார்கள். அதைப் பாதுகாக்கும்பொழுது அதன் உண்மை நிலை மாறுபடாமல் இருக்குமாறு செய்கிறார்கள். அங்குள்ள சீதோஷ்ணநிலையில் சுவடிகள் சிதிலமடைவதில்லை. அங்கு விஞ்ஞான வளர்ச்சியின் காரணத்தாலும் மக்கள் அனைவரும் பொருட்களைப் பாதுகாக்க அக்கறை கொண்டுள்ளதாலும்,

பயன்படுத்தும் பொருள்களினால் எந்தவிதப் பாதிப்பும் ஏற்படாவண்ணம் மிகச் சிரத்தையுடன் பாதுகாப்பு செய்கின்றனர்.

ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்க ஒருநாட்டில் பயன்படுத்தும் முறைகளை அப்படியே மற்ற நாடுகளில் பின்பற்றுவது மிகவும் கடினம். அந்தந்த நாட்டின் சீதோஷ்ண நிலை மற்றும் பாதுகாப்பு செய்முறை வளர்ச்சியைப் பொறுத்து தேவையான முறைகளைப் பின்பற்றுவது நலம். ஆகையால் ஓலைச்சுவடிகளைப் பாதுகாக்க சுவடிகளின் தன்மையை அறிந்தும் அவற்றைப் பாதிக்கக்கூடிய காரணிகளைத் தெரிந்துகொண்டும் அதன்படி வருமுன் காக்கும் முறையில் பாதுகாப்பு செய்தல் வேண்டும். ஆகையால் அடிக்கடி சுவடி வைத்துள்ள வைப்பறையைத் தூசு படியாமல் கவனித்துக் கொள்ளுதல், சிரத்தையுடன் கையாளுதல், மற்றும் அவ்வப்போது தேவையான பாதுகாப்பு முறைகளை அறிந்து செய்வது போன்றவற்றின் வழி நம்முன்னோர்கள் எழுதிய அறிவுக் களஞ்சியங்களைப் பாதுகாக்கலாம்.

*****

# 30. பழந்தமிழரின் வாசிப்புப் பழக்கம்

முனைவர் எஸ். சௌந்தரபாண்டியன்

அண்மைக்காலங்களில், தொலைக்காட்சி வந்தாலும் தமிழ் மக்களின் வாசிப்புப்பழக்கம் ( Reading habit ) குறையவில்லை என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இத்தகைய வாசிப்புப் பழக்கமானது, பழந்தமிழ் மக்களிடையே எப்படி இருந்தது?

இதனை ஆயுமுன், வாசிப்புப் பழக்கம் பற்றிய வரையறையைத் தெரிந்துகொள்வோம்.

வாசிப்பு வேறு, கற்றல் வேறு.

படித்தலே ( Reading ) வாசித்தல்; சொல்லுதல் அல்லது ஒப்பித்தல் வாசித்தல் ஆகாது. எழுதிய ஒன்றைப் பார்த்து, வாய்விட்டு அல்லது மனதுக்குள் வாசிப்பதே வாசித்தல்.

வாசித்தல் என்ற தமிழ்ச் சொல்லைப் பகுப்பாய்வு செய்வோம்:

வாசித்தல் - வாசி+த்+தல்

வாசி - பகுதி

த் - சந்தி

தல் - தொழிற்பெயர் விகுதி

வா - வேர்ச்சொல்

வா - எனும் இந்த வேர்ச்சொல்லுக்கு விரிதல், அகண்டிருத்தல், பிளத்தல் முதலிய பொருட்பண்புகள் உள. இதனால்தான், வாய் முதலிய சொற்களை இந்த வேர் ஈன்றெடுத்தது.

எனவே, வாய்விட்டு வாசிப்பதே வாசிப்பு என்றாலும், மனத்துள் வாசித்தல் என்ற பழக்கமும் நம்மிடையே தோன்றியதால், வாசித்தல் என்ற பிரிவில் மனத்துள் வாசித்தலும் சேர்த்துக்கொள்ளப்படவே வேண்டும்.

ஆசிரியர்கள் கூறும் பாடத்தை மாணவர் திரும்பத் திரும்பக் கூறுவது வாசிப்பது ஆகாது; அது கற்றலே.

பழங்காலக் கல்வெட்டுகளை மக்கள் படித்தது வாசித்தலே. தமிழகக் கோயில்களிலும், பொது இடங்களில் வடிக்கப்பட்ட கல்வெட்டுகளெல்லாம் பழந்தமிழரின் வாசிப்புப் பழக்கத்திற்குச் சான்றுகளே.

பழங்காலத் தமிழ்ப் புலவர்கள் ஓலைச்சுவடிகளைக் கையில் வைத்துக்கொண்டு, மாணவர்கள் கேட்கும் வகையில் படித்தது வாசித்தலே. ஓலையைக் கையில் வைத்துக்கொண்டு, <u>கையேட்டினர்</u> எழுதிக்கொள்ளும் வகையில் படித்ததும் வாசித்தலே. பழைய கால மாணவர்கள், அரிச்சுவடி ஏட்டைப் பார்த்துத் தமிழ் நெடுங்கணக்கு கற்றது வாசிக்கும் பழக்கம் இருந்ததால்தான்.

எனவே, பழந்தமிழரிடையே வாசிப்புப்பழக்கம் செழித்திருந்தது என்பதில் ஐயமில்லை.

இன்னும், பழங்கால அரசர்களின் அவையில், தூதுவன் கொணர்ந்த செய்திகள் <u>வாசிக்கப்பட்டன</u> என்று வரலாறுகள் கூறுகின்றன. ஆண்டுதோறும், அரசவையிலும், கோயில்களிலும் பஞ்சாங்கம் படிப்பது ஒரு பழக்கமாக அந்நாளில் இருந்துள்ளது. இதுவும் வாசித்தலே.

ஆனால், அரசனின் செய்தியை முரசு அறைந்து தெரிவித்தது வாசித்தல் ஆகாது; அதே போழ்து அரசனின்

எழுத்துச் செய்தியை அவன் பார்த்துப் படித்தால், அது வாசித்தல் ஆகும்.

கி.பி. 2ஆம் நூற்றாண்டுச் சிலப்பதிகாரத்தில் மாதவி எழுதிய மண்ணுடைமுடங்கல் கோவலனால் வாசிக்கப் படுவதாகக் காட்டப்படுகிறது.

சுந்தரமூர்த்தி நாயனாரின் திருமணத்தை நிறுத்திய சிவன், ஓர் ஓலை நறுக்கை அங்கிருந்தோர்க்குக் காட்ட, அவர்கள் அவ்வோலையை வாங்கி வாசித்தனர்; இது கி.பி. 7ஆம் நூற்றாண்டு வரலாறு.

சிற்றரசர்கள் காலத்தில், புலவர்கள் சீட்டுக்கவிகளை எழுதி விடுப்பர்; அக்கவிகள் அரசவையில் வாசிக்கப்பட்டன என்றும் அறிகிறோம்.

கி.பி. 19ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலகட்டத்தில், அம்மானை நூற்கள் வீடுகளில் பெண்களால் வாசிக்கப்பட்டன. பெரிய எழுத்தில் அமைந்த நல்லதங்காள் கதை, அமராவதி கதை முதலிய கதைகளை ஒரு பெண் வாசிக்க, மற்றவர்கள் அதைக்கேட்டு உருகுவார்கள்; வாசிக்கும் திறன் வளர்ச்சி அடைந்ததற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

அருணாசலபுராணம், கந்தபுராணம் போன்ற சில புராணங்களை ஒருவர் அமர்ந்து வாசிக்க, மற்றவர்கள் கேட்கும் மரபு அண்மைக்காலம் வரையில் தமிழகத்தில் இருந்தது; இன்றும்கூட ஆங்காங்கே நடைபெற்று வருகிறது.

உலகில், மற்ற நாடுகளைவிடத் தமிழ்நாட்டில் வாசிப்புப் பழக்கம் நன்கு, உயர்ந்து, அதிக அளவில் இருந்ததற்குக் காரணம், இங்கிருந்த ஓலைச்சுவடிகளே. பனை மரம் தமிழகத்தில் மிகுதி. இதனால், பழங்காலத் தமிழர்கள் பனையோலைகளில் அதிக அளவில் எழுதி, அவற்றை வாசித்து மகிழ இயன்றது. ஓலைச்சுவடிகளில் எழுதும் மரபு வளர்ந்ததுதான், கல்வெட்டுகள் அதிக அளவில் வெட்டப் படவும் காரணமாயிற்று; ஏனெனில், ஓலையில் எழுதியதைப் பார்த்துத்தான் கல்லில் செதுக்கினர்.

இவ்வாறு பழந்தமிழர் நாகரிகக் கூறுகளில் வாசிக்கும் பழக்கமும் ஒன்றாக இருந்து மிளிர்ந்துள்ளது என்பது அறியக் கிடக்கின்றது.

*****

# 31. சுவடி நோக்கில் நவீன கருவிகள்

முனைவர் வே. ஜெயராஜ்

உயர்தனிச் செம்மொழியாகிய தமிழில் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே எழுத்துக்கள் தோற்றம் பெற்றதைத் தொல்பொருளாய்வு உறுதிப்படுத்தியுள்ளது. கல்லில் எழுத்துக்களைச் செதுக்கிய மனிதன் சுவர்கள், மட்கலன்கள், பட்டைகள், தோல், ஓலைகள், காகிதம், துணி ஆகியவற்றில் எழுதப் பழகிவிட்டான். எழுத்தாணி கொண்டு எழுதுவது விரைவாக எழுத வாய்ப்பானது எனக்கண்ட தமிழ் மக்கள், பனை ஓலைகளில் எழுத்தாணி கொண்டு ஓலைகளில் எழுதினர். சுவடி[1] எனின் அடையாளம் எனப்படும். ஒலிகளின் அடையாளமாகிய எழுத்துக்களைக் கொண்டவை - ஒலிச்சுவடுகளைக் கொண்டவை, சுவடிகள் எனப்பட்டன. மனிதனின் இலக்கியப் படைப்புகள், வரலாற்றுச் செய்திகள், குறிப்புகள், மருத்துவச் செய்திகள் பலரின் அறியாமையால் அழிக்கப்பட்டன. எஞ்சியவை ஓலைச்சுவடிகளிலும், காகிதங்களிலும் கிடைக்கின்றன. பல்வேறு அறிஞர்களின் அரிய முயற்சியால் சுவடிகளின் ஒரு பகுதி நூல்கள் வடிவில் அச்சிடப்பட்டுள்ளன. பதிப்பிக்கப்பட்ட சுவடிகளும் பதிப்பிக்கப்படாதவைகளும் பாதுகாக்கப்பட வேண்டியவை. சுவடிகளைப் பாதுகாப்பதோடு, அவற்றை நகலெடுத்தும், பதிப்பித்தும் பாதுகாக்கலாம். இப்பணியில் பல்வேறு நவீன கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இக்கட்டுரையின் நோக்கம் நவீன கருவிகளின் பயன்களை எடுத்தியம்பி இப்பணியில் செயல்படுவோருக்குப் புதிய வேகத்தை அளிப்பதாகும்.

## சுவடிகளின் பாதிப்புகள்

கற்பலகைகள், மட்கலன்கள் தவிர பட்டைகள், தோல், துணி, காகிதம், ஓலை அனைத்துமே உயிரியல்

பொருட்களாகும். இவை பல்வேறு வகைகளில் பாதிக்கப் படுகின்றன. அவை, காற்று, தூசு, ஈரப்பதம், வெப்பம், வெளிச்சம், நுண்ணுயிரிகள்[2] போன்றவையாகும். இவற்றின் பாதிப்பை அறிந்துகொண்டால் அவற்றிலிருந்து சுவடிக்ளைப் பாதுகாப்பது எளிது.

## காற்று, தூசு

காற்று மண்டலத்தில் நைட்டிரஜன், பிராணவாயு, கரியமிலவாயு, கந்தக ஆக்ஸைடுகள், நைட்டிரஜன் ஆக்ஸைடுகள் மற்றும் தூசுகள் உள்ளன. பெரும்பாலான வாயுக்கள் சுவடிகளைப் பாதிக்கும் தன்மையுடையன. நகர்ப் புறங்களில் ஆக்ஸைடுகள் அதிகமாக உள்ளன. இவற்றை அறிய நவீன கருவிகள்[4] உள்ளன. மாசுக்கட்டுப்பாட்டு நிறுவனம் மாசுகளை அறியும் கருவிகொண்டு ஆக்ஸைடுகளையும் தூசுக்களையும் கணக்கிடுகிறது. இவை, கட்டுப்படுத்தப் பட்டால் சுவடிகளின் தன்மை வெகுவாகப் பாதுகாக்கப்படும். குளிர்சாதனக் கருவிகளில் கந்தக ஆக்ஸைடுகள் மற்றும் நைட்டிரஜன் ஆக்ஸைடுகளை உறிஞ்சும் வேதியியல் உப்புகள் பயன்படுத்தப்படுகின்றன. தூசுகளை அகற்றப் பல்வேறு வடிகட்டிகள் பயன்படுத்தப்படுகின்றன. எனவே, நூலகங்கள், ஆவணக்காப்பகங்கள், அருங்காட்சியகங்கள் குளிர்சாதனம் பொருத்தப்படும்போது மேற்குறிப்பிட்ட கருவிகள்[4] பொருத்தப்படுவது நலன் பயக்கும்.

## ஈரப்பதம்

காற்று மண்டலத்தில் பருவநிலைக்கேற்ப ஈரப்பதம் வேறுபடுகிறது. ஒப்பீட்டு ஈரப்பதத்தை அளக்க ஈரமானி பயன்படுகிறது. ஒப்பீட்டு ஈரப்பதம் 0 முதல் 100% வரை வேறுபடும். ஒப்பீட்டு ஈரப்பதம் 45% முதல் 60% வரை இருப்பின் சுவடிகள் பாதிக்கப்படமாட்டாது. 45%க்குக் குறைந்தால் ஓலைச்சுவடிகள் வளையும்; வெடிப்புகள் ஏற்படும். 60%க்கு மேல் ஒப்பிட்டு ஈரப்பதம் இருந்தால் காற்றிலுள்ள வாயுக்கள் ஈரத்துடன் சேர்ந்து சுவடிகளைப் பாதிக்கும். ஈரப்பதத்தை அளக்க பல்வேறு ஈரமானிகள் உண்டு. சுழல் ஈரமானி, ஈர-உலர் ஈரமானி, முடி ஈரமானி, தானியங்கும் ஈரமானி ஆகியவை பெரும்பாலும் பயன்படுகின்றன.[5]

குளிர்சாதனங்கள் பொருத்தப்பட்டிருப்பின் ஈரப்பதத்தைச் சீராக அமைக்க அதற்கான கருவி பொருத்தப்பட வேண்டும். குளிர்சாதனம் அமைப்பது முடியாததாயின் ஈரப்பதத்தைச் சீராக வைக்க வெப்பகாலத்தில் ஈரப்பதம் உருவாக்கும் கருவியையும் ( Humidifier ) மழைக்காலத்தில் ஈரப்பதத்தை நீக்கும் கருவியையும் ( Dehwmidifier ) பயன்படுத்தி ஈரப்பதத்தைக் கட்டுப்படுத்தலாம்.

## வெப்பம்

வெப்ப மாற்றம் சுவடிகளைப் பெரிதும் பாதிக்கும். வெப்பம் $20^0$ - $22^0$ சென்டிகிரேடுக்குள் இருத்தல் நலம். வெப்ப நிலையினைச் சீராக வைத்தால் சுவடிகள் பாதிக்கப் படாமல் இருக்கும். இதற்குப் பல்வேறு வெப்ப மானிகள் பயன்படுத்தப்படுகின்றன. உச்ச-நீச வெப்பமானி ஒரு நாளின் அதிக வெப்பத்தையும் குறைந்த வெப்பத்தையும் தெரிவிக்கும். ஈரப்பத வெப்பமானி தானாக இயங்கி ஒருவார காலத்திற்கு வெப்பத்தையும் ஈரப்பதத்தையும் குறிக்கும். வாரம் ஒருமுறை இக்கருவியை இயக்கினால் வாரம் முழுமைக்கும் ஈரப்பதம், வெப்பம் துல்லியமாக அறிய இயலும். குளிர்சாதனம் பொருத்தும்போது வெப்பநிலை $20\text{-}22^0$ சென்டிகிரேடு இருக்கும்படி உரிய வெப்பநிலை கட்டுப்படுத்தும் கருவி இணைக்கப்பட வேண்டும்.[4]

## வெளிச்சம்

வெளிச்சத்தில் நாம் பார்க்கக்கூடிய ஒளிக்கதிர்கள், பாதிக்கும் ஊதாக்கதிர்கள் மற்றும் சிகப்புக்கதிர்கள் உள்ளன. சூரிய வெளிச்சம் சுவடிகளில் உள்ள வண்ணங்களைப் பாதிக்கும் தன்மையுடையன மட்டுமின்றி சுவடிகள் நாளடைவில் பலமிழக்கச் செய்யும் தன்மையுடையன. எனவே, சுவடிகள் மீது அதிகம் வெளிச்சம் படாமல் பாதுகாப்பது நலம். குறிப்பாக 50 லக்ஸ் வெளிச்சம் வரை பட அனுமதிப்பது ஏற்றது. வர்ணமில்லாத சுவடிகள் 200 லக்ஸ் ஒளி தாங்கும். ஒளிக்கதிர்களின் தன்மையை அறிந்திட ஒளிமானி உள்ளது. இது ஒளிக்கதிர்களின் அடர்த்தியைத் தெரிவிக்கும். ஊதாக்கதிர்மானி வெளிச்சத்திலுள்ள ஊதாக்கதிர் அளவை ( Ultra Violet ) கணக்கிட்டுத் தெரிவிக்கும்.[5] ஊதாக்கதிர்

சுவடிகளை வெளிரப் பண்ணும். நூலகங்கள், ஆவணக் காப்பகங்களில் சூரிய ஒளி மற்றும் குழல் விளக்கு வெளிச்சத்தைத் தவிர்த்தல் நலம். பைபர் ஆப்டிக்ஸ் விளக்குகள் அமைப்பது நலம்.

## நுண்ணுயிரிகள்

ஈரப்பதம் 60%க்கு மேல் இருக்கும்போதும், வெப்பநிலை $20\text{-}22^0$ சென்டிகிரேடுக்கு மேல் இருக்கும்போதும் இந்தியா போன்ற வெப்ப நாடுகளில் நுண்ணுயிரிகள் பெருகிச் சுவடிகளைப் பெரிதும் பாதிக்கின்றன. இவற்றைக் கண்டறிந்து உரிய உயிர்க்கொல்லி மருந்துகள் தெளிக்க நுண்ணோக்கிகள் தேவை.[6] பூச்சிகள், வண்டுகள் ஆகியவற்றினால் சுவடிகள் வெகுவாக அழிக்கப்படுகின்றன. இவற்றைக் கண்டறிய பூச்சிப் பிடிப்பொறிகள் ( Traps ) பயன்படுத்தப்படுகின்றன. இக்கருவிகளில் பூச்சிகள், வண்டுகள் ஒட்டிக்கொள்வதால் அவற்றை அறிந்து அவற்றிற்கேற்ப பூச்சிகொல்லி மருந்துகள் தெளித்துப் பூச்சிகளையும், வண்டுகளையும் அழித்து அல்லது விரட்டிச் சுவடிகளைக் காக்கலாம்.[7]

## உயிரிகளை விரட்டும், கொல்லும் கருவிகள்

பல்வேறு பூஞ்சக்காளான்கள், புழுக்கள், பூச்சிகள், வண்டுகள் போன்றவை சுவடிகளைப் பாதிக்கின்றன; தகுந்த நேரத்தில் அவற்றைக் கட்டுப்படுத்தாவிடில் சுவடிகளை அழிக்கின்றன. இவற்றை விரட்ட/அழிக்கப் பல்வேறு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. காற்று உட்புகாவண்ணம் அமைக்கப்பட்ட புகையூட்டும் பெட்டியினுள் சுவடிகளை அடுக்கி வைத்துத் தைமால், பாராடைக்குளோரோ பென்சீன் போன்ற புகையூட்டும் வேதியியப் பொருட்களை வைத்து மூடி வைத்தால் ஓரிரு தினங்களில் பூஞ்சக்காளான்கள் மற்றும் உயிரினங்கள் விரட்டப்படுகின்றன; அழிக்கப்படுகின்றன. நூற்றுக்கணக்கான நூல்கள், பனை ஓலைச்சுவடிக் கட்டுகள் போன்றவற்றைப் பெரிய புகையூட்டும் கருவிக்குள் அடுக்கி வைத்தல், மூடி, வெற்றிடமுண்டாக்கி ஈத்தாக்ஸைடு ( Etoxide = Ethylene oxide + Carbondioxide ) கலவை செலுத்தி நுண்ணுயிர்கள் அழிக்கப்படுகின்றன. டி.டி.வி.பி என்ற பூச்சி கொல்லி மருந்தினைப் பனிபடலமாக்கும் கருவியின் துணை

கொண்டு சுவடிகள் இருக்கும் அறைகளைப் பனிபடலமாக்கி பூச்சிகளைக் கொல்லலாம். இவ்வித முறைகள் அனைத்தும் நச்சுத்தன்மையுடைய பூச்சிக்கொல்லி மருந்துகளைச் சார்ந்துள்ளதால் பயன்படுத்தும் மற்றும் அறைக்குள் வரும் அனைவரையும் நாளடைவில் கெடுக்கும் தன்மையுடையன.

சமீப காலத்தில் குறைந்த அழுத்தமுடைய நைட்டிரஜன் வாயு நிரம்பிய பெட்டி அல்லது கூட்டினுள் சுவடிகள், நூல்கள், பிற பொருட்களை வைத்து நுண்ணுயிர்களை அழிக்கும் முறை பரவலாகப் பயன்படுத்தப் படுகின்றன.[8] இம்முறையில் சுவடிகளுக்கும் மனிதர்களுக்கும் பாதிப்பில்லை; செலவும் மிகக் குறைவாகும்.

## சுவடிகளைப் பலப்படுத்தும் கருவிகள்:

சுவடிகள் நாளடைவில் நுண்ணுயிர்களினாலும், வெப்பம், வெளிச்சம், வேதியியல் மாற்றம் மற்றும் கையாளும் முறைகளாலும் பெரிதும் பாதிக்கப்படுகின்றன; பலமிழக்கின்றன. அவை பலப்படுத்தப்பட வேண்டும். இப்பணியில் பல்வேறுநவீன கருவிகள் பயன்படுத்தப் படுகின்றன. பூச்சிகளால் அரிக்கப்பட்ட பகுதிகளைக் கேப்சுலேட்டர் ( Capsulator ) என்ற கருவியின் உதவியுடன் நிரப்பிப் பாதுகாக்கலாம். பாலித்தின் உரைகளுக்குள் சுவடி போடப்பட்டு வெற்றிடம் உண்டாக்கி ஒட்டும் கருவியும் பல நூலகங்களில் உபயோகத்திலுள்ளன. அமிலத்தன்மையால் பாதிக்கப்பட்ட சுவடிகளின் அமிலத்தன்மையை அளவிட அமிலமானி ( PH Meter ) பயன்படுத்தப்படுகிறது. வெப்ப முறையிலும், அழுத்த முறையிலும் செல்லுலோஸ் அசிட்டேட் காகிதத்தையும் மெல்லிய காகிதத்தையும் பயன்படுத்திச் சுவடியைப் பலப்படுத்த லேமினேஷன் கருவி பயன்படுத்தப் படுகிறது. இம்முறையில் பலப்படுத்தப்பட்ட சுவடி, தேவைப்படின் அசிட்டோன் துணையுடன் செல்லுலோஸ் அசிட்டேட்டால் கரைக்கப்பட்டுத் தனியாக எடுக்கப்படலாம்.

## நகலெடுக்கும் கருவிகள்

சுவடிகளில் உள்ள செய்தியை அப்படியே படம் எடுக்க புகைப்படங்கள் எடுக்கப்பட்டன. பின்னர், நுண்நிழற்படக்

கருவி பயன்படுத்தப்பட்டது. இதன்மூலம் படச்சுருள்களில் செய்தியானது ஏற்றப்பட்டு அதனை ஒளியூட்டு கருவிமூலம் துல்லியமாகப் படிக்கலாம்; நகலும் எடுக்கலாம். பின்னர், இன்னும் நுண்ணிய முறையில் மைக்ரோ பிஷ் என்ற பட அட்டையில் அதிக அளவு செய்தி அடக்கப்பட்டது. சீராக்ஸ் கருவி, கெஸ்டெட்னர் நகலெடுக்கும் கருவி ஆகியவையும் புழக்கத்தில் உள்ளன. இவை, பல்வேறு நூல்நிலையங்கள், ஆவணக் காப்பகங்களில் பயனில் இருந்தாலும் நாளடைவில், அவற்றின் பயன்படு நிலை குறைந்து வருகிறது. சமீப காலத்தில், சுவடிகளில் உள்ள செய்திகள் கணனி (Computer) யில் பதிவு செய்யப்பட்டுப் பாதுகாக்கப் படுகின்றன.

நுண்நிழற்படம் என்பது செல்லுலோஸ் அசிட்டேட் தகட்டில் வெள்ளி புரோமைடு பசை பூசப்பட்டதாகும். படம் எடுத்ததும் அதனை ஐப்போ கொண்டு கழுவி, படச் சுருளாக்கப்படுகிறது.[9] சரியான முறையில் கழுவப்படாமலிருந்தால் விரைவில் பாதிக்கப்படும். ஈரமும், வெப்பமும் இச்சுருளைப் பாதிக்கும். எனவே, ஈரப்பதமும், வெப்பமும் கட்டுப்படுத்தப்பட்ட அறையில் அவை வைக்கப்பட்டு பாதுகாக்கப்பட வேண்டும். மைக்ரோபிஷ்-ம் இவ்விதமாகவே பாதுகாக்கப்பட வேண்டும்.

சமீபகாலத்தில் கணினியில் பிளாப்பி டிஸ்க்குகள் பயன்படுத்தப்பட்டு சுவடிகளின் செய்திகள் அவற்றில் பதிவு செய்யப்படுகின்றன. விரைவாகவும், அதிகமாகவும் செய்தியைப் பதிவு செய்து, சேமித்து வைக்கக்கூடிய தன்மை உடையது. காந்தத்தின் துணையுடன் இது செயல்படுவதால் சில நெறிமுறைகளைக் கையாண்டால் பிளாப்பிகளைச் செவ்வனே பாதுகாக்கலாம்.[10] சுவடிகளைச் சேகரித்து வைக்கலாம்.

1. பிளாப்பிகளை நேரடி சூரிய வெப்பத்தில் வைக்கக் கூடாது. $10^0$ முதல் $52^0$ சென்டிகிரேடு வெப்பநிலைக்குள் இருக்க வேண்டும்.

2. ஈரப்பதம் இதனைப் பாதிப்பதால் உலர்ந்த இடத்தில் சேமித்து வைக்க வேண்டும்.

3. காந்த சக்தி, தொலைபேசிக்கருவி, எக்ஸ் கதிர் கருவிக் கருகில் வைக்கக் கூடாது.

4. வளைக்கவோ, தொடவோ, அதின்மீது எதையும் வைக்கவோ, தூசு படவிடவோ கூடாது.

5. எண்ணெய், கொழுப்பு ஆகியவை படக்கூடாது.

### அச்சிடும் கருவிகள்

கையெழுத்துப் பிரதிகளை உருவாக்கிய காலம் கல்லில் செதுக்கி அச்சிட்ட காலம் ( Lithography ), அச்சு இயந்திரம் ( Letter Press ) பயன்படுத்தி அச்சிட்ட காலம் போய் இன்று உடனுக்குடன் பல்வேறு வண்ணங்களில் நூல்கள் அச்சிடும் காலத்தில் நாம் இருக்கிறோம்.

### மேசைப் பதிப்பகம்

மேஜைப் பதிப்பகம் என்று சொல்லக்கூடிய ( Desk Top Publication ) கணினியின் துணையுடன் உடனுக்குடன் நூல் வெளியாகும் நிலை உருவாகியுள்ளது. சுவடியிலுள்ள செய்தியைத் தட்டச்சு செய்வதுபோலக் கணினியில் சேமித்துப் பக்கங்களாக்கி உடனேயே காகிதத்தில் தேவையான நகல்கள் பெறப்பட்டு நூல்கள் உருவாக்க உதவுவது மேஜைப் பதிப்பகமாகும். ஏற்கெனவே அச்சான நூலாக இருப்பின் ஸ்கேனர் ( Scanner ) மூலம் அப்படியே கணினியில் பதிவு செய்து தேவையான நகல்கள் உடனேயே எடுக்கலாம். இம்முறையில் மிக அதிகமான நகல்கள் விரைவில் எடுக்க இயலாது; பணச்செலவும் அதிகமாகும்.

### ஆப்செட் அச்சிடும் கருவி

ஆப்செட் அச்சிடும் கருவிகள் இந்நாட்களில் பெருமளவில் உபயோகத்தில் உள்ளன. இவை ஒரு வண்ணத்திலிருந்து நான்கு வண்ணங்களில் அச்சிடும் தகுதி பெற்றவை. இக்கருவியைப் பயன்படுத்த மூன்று கட்டப் பணிகள் ஆற்றப்பட வேண்டும்.

முதலில் அச்சிடவேண்டிய செய்தியை மேசைப் பதிப்பக கணினி மூலம் காகிதத்தில் பெறல் வேண்டும். படங்கள் உள்ளிட்ட செய்தியைச் ஸ்கேன் செய்து நெகட்டிவாக்கி, பின் பாசிட்டிவாக மாற்றி ஆப்செட் இயந்திரத்தில் பொருத்தப்பட வேண்டும். இதில் ஒரே வேளையில் பதினாறு பக்கங்கள் அச்சிடலாம்.

இரண்டாவதாக, ஆப்செட் கருவியில் பொருத்தப் பட்ட பாசிட்டிவ் படத்தினைப் பயன்படுத்தி மஞ்சள், சிவப்பு, நீலம், கருப்பு ஆகிய நான்கு வண்ணங்களின் உதவியுடன் வேண்டிய நிறம் பெறப்பட்டு செய்திகள் அச்சிடப்படுகின்றன. தானாகவே மடித்து, வெட்டும் கருவிகளும் உள்ளன.

மூன்றாவதாக அச்சிடப்பட்ட காகிதங்கள் அடுக்கிச் சேர்க்கப்பட்டு, அட்டை ஒட்டப்பட்டு, வெட்டப்பட்டு நூல்களாக வெளியிடப்படுகின்றன. விலை நிர்ணயம் செய்வதில் பல கோட்பாடுகள் கையாளப்படுகின்றன. காகித விலை, அச்சுக்கூலி, நூலாக்குதல், மின்கட்டணம், வளர்ச்சிக் கட்டணம் எனப் பல்வேறு செலவினங்களைக் கருத்தில் கொண்டு நூலின் விலை நிர்ணயம் செய்யப்படுகிறது.

நூல்கள் வெளியீட்டுச் (பொது நூலகங்கள்) சட்டம் 1934இன் கீழ் அச்சிடப்பட்ட நூல் கீழ்க்கண்ட நூலகங்களுக்கு அனுப்பிப் பாதுகாக்கப்பட வேண்டும்[12]:

1) மைய நூலகம், டவுன் ஹால், மும்பை-1

2) தேசிய நூலகம், பெலவெடரே, கல்கத்தா-27

3) தேசிய நூலகம், சரோஜினி நகர், புதுதில்லி-23

4) கன்னிமாரா பொது நூலகம், சென்னை-8.

### நிறைவுரை

சுவடிகள் பல்வேறு முறைகளில் சுவடி நூலகங்கள், ஆவணக்காப்பகங்கள், அருங்காட்சியகங்கள் ஆகியவற்றில் சேகரிக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டாலும் ஏராளமான சுவடிகள் எவ்விதமான பாதுகாப்பு நடவடிக்கைகளும் எடுக்கப் படாமல், கோயில்கள், தொடர்பு நிறுவனங்கள் மற்றும் தனிநபர்களிடம் காணப்படுகின்றன. இவை, தொடர்புடைய

பாதுகாப்பு நிறுவனங்களின் உதவியுடன் பாதுகாக்கப்பட்டு நிறுவனங்களாலும் தனி நபர்களாலும் பாதுகாக்கப்படலாம்; அல்லது அவற்றைப் பாதுகாக்கும் நிறுவனங்களுக்குக் கொடுக்கப்படலாம். சேமிக்கப்பட்டுள்ள சுவடிகள் போதிய பாதுகாப்புச் சுவடிகள் போதிய பாதுகாப்பு வசதிகள் இல்லாமையால் அந்தந்த நிறுவனங்களில் சிறிதுசிறிதாகப் பாதிக்கப்பட்டு வருகின்றன. தொடர்புடைய அலுவலர்களுக்குப் பயிற்சி கொடுக்கப்பட வேண்டும். அரசிடமிருந்து, உரிய நிதி ஒதுக்கீடு பெற்றுச் சிறப்பாகப் பாதுகாக்கப்பட வேண்டும். பாதுகாத்து, அச்சிட்டு வெளியிட பொது நோக்குடைய நிறுவனங்கள் உதவலாமே. எப்படியும் நமது பழமை வாய்ந்த சுவடிகள் நமது இளைய தலைமுறையினருக்காகப் பாதுகாக்கப்பட வேண்டும்.

**Bibliography**

1. அரங்கசாமி, கா, ஓலைச்சுவடிகள், பெரியார் மாவட்ட வரலாற்று ஆவண ஆய்வுக்குழு செய்திமலர் (தொகுப்பாளர் வே. ஜெயராஜ்) மலர் 2, ஜூலை, 1989.

2. Plenderleith, H.J., Warner, A.E.A., Conservation of Antiqui ties and Works of Art, Oxford University Press, London. 1976.

3. Jeyaraj, V. Conservation Problems and Their Conservation Measures.

4. Garry Thomson, The Museum Environment, Butterworth-Heinemann, 1994.

5. Agrawal, O.P. Preservation of Art Objects and Library Materials, National Book Trust, India, 1993.

6. Singh R.S., Conservation of Documents in Libraries, Archives and Museums, Aditya Prakashan, New Delhi, 1993.

7. Child, R.E., Pinniger, D.B., Insect Trappping in Museums and Historic Horecco, Proceedings of the First International

*Conference on Insect Pests on the Urban Environment, Cambridge, UK, 1993.*

8. *Vonod Daniel, Gordon Hanlon and Shin Mackawa, Eradication of Insect Pests in Museums Using Nitrogen, WAAC Newsletter, Volume 15, No.3, September, 1993.*

9. *Harinaraiyana, N., The Science of Archives-keeping, The State Archives, Government of Andra Pradesh, Hyderabad.*

10. *Jeyaraj, V., Hand Book on Conservation in Museums, Government Museum, Madras-8, 1995.*

11. *Short Term Course on Offset Printing, Institute of Printing Technology, Tharamani, Madras-113, 1996.*

12. *Publication of Books ( Public Libraries ) Act 1954.*

*****

# 32. ஓலைச்சுவடிகளில் எழுத்து முறை

திரு. சு. இராசகோபால்

பழங்கால முதல் எழுதப்படும் பொருள்களாக கல், களிமண், பலகை, உலோகம், மரப்பட்டை, தோல், மரம், தந்தம், சங்கு, சிப்பி, துணி, ஓலை போன்ற பொருள்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. தமிழகத்தைப் பொறுத்த மட்டில் இவற்றில் அதிகம் பயன்பட்டது ஓலையாகும். ஓலையிலும் பனை ஓலை மிகுதியும் பயன்படுத்தப்பட்டது. சில வேளைகளில் தாழை இலைகள் பயன்படுத்தப்பட்டன. பனை ஓலைகளைவிடத் தாழை இலைகள் அகலமாக இருக்கும். ஆதலால் அவற்றில் நிறைய வரிகள் எழுத முடியும். இலக்கியம், கல்வெட்டு மற்றும் வழக்கு நடையில் எழுதப்பட்ட ஓலைகள் ஓலை, ஏடு, சுவடி, முறி, பத்திரம், நுகும்பு, பொத்தகம், தீட்டு, தோடு, நூல் என்று பலவாறாக அழைக்கப்பட்டிருக்கின்றன.[1]

பனை மரங்கள் எழுதும் ஓலைகளுக்காக மட்டும் பயன்பட்டபோது அம்மரங்கள் ஓலை வெட்டுப்பனை[2] என்றே அழைக்கப்பட்டன. குருத்தாக வெட்டப்பட்ட பனை ஓலைகள் நடுவில் உள்ள ஈக்குச்சி எடுக்கப்படாமல் அப்படியே இரட்டையாகவும், குச்சி நீக்கப்பட்டுத் தனியாகவும் பயன்படுத்தப்பட்டன. இப்படித் தனித்தனியாகப் பிரிக்கப் பட்டவை ஓலைச்சிறகு[3] எனப்பட்டன. ஓலைச்சிறகுகளே அதிகம் பயன்பாட்டில் இருந்தன. இச்சிறகுகள் ஏறத்தாழ 40 செ.மீ. நீளம் வரை இருந்தன. இன்னும் நீளமான சிறகுகளில் எழுதும்போது அவை தனித்தனிச் சிறகுகளாகச் சுருட்டி வைக்கப்பட்டன. இவை ஓலைச்சுருள், செந்திரிக்கம்[4] எனப்பட்டன. நில வருவாய் கணக்குகள் எழுதப்பட்ட ஓலைகள் 75 செ.மீ. நீளம்கூட இருந்தன. ஒரே கட்டில் 200, 300 என்று சிறகுகள் சேரும்போது அக்கட்டு அடி பருத்தும் நுனி சிறுத்தும் பராமரிக்க எளிதாக இல்லாமல் இருந்தது.

ஓலைகளைச் சுத்தம் செய்து வெட்டுவதற்குப் பயன்பட்ட கத்தி ஓலைவாரி[5] எனப்பட்டது. எழுதும் ஆணி ஊசி, ஆணி, எழுத்தாணி என்று வழங்கப்பட்டது.[6] ஓலைகளின் ஒரு பக்கமோ அல்லது இருபக்கமுமோ துளைகள் இடப்பட்டுக் கயிறு கோர்க்கப்பட்டது. இத்துளைகள் ஓலைக்கண் என்றழைக்கப்பட்டன. இத்துளைகள் இடுவதற்காக எழுத்தாணியுடனோ அல்லது தனியாகவோ வட்டமாகத் திருப்பித் துளையிடும் ஆணிகள் இருந்தன. இவை ஒரு நுனியில் ஏற்ற இறக்கமாக இரு நுனிகளைக் கொண்டிருந்தன. ஓலைகள் எழுதப்படுவதற்கு முன்பே சீராக வெட்டப்பட்டு ஓலைக்கண் இடப்பட்டுக் கட்டு கட்டுகளாக வைத்துக் கொண்டனர். ஓலையில் எழுதுபவர்கள் சொந்தமாக இவற்றைத் தயார் செய்து கொண்டனர். ஒருவேளை இவை கடைகளில் விற்கப் பட்டிருக்கவும் கூடும். சங்கப் புலவர்களில் மதுரை ஓலைக் கடையத்தார் நல்வெள்ளையார், ஓலைக் கடையத்தார் மகன் வெண்ணாகன் ஆகியோர் ஓலைகளை விற்பனை செய்தவர்களாக இருக்கலாம். ஓலைக் கடை என்பதை நகைக்கடை என்று சொல்வாரும் உண்டு. எனினும் இக்காலக் கட்டத்தில் கடை என்பதற்கு அங்காடி என்ற பொருள் வழக்கு இருந்ததா? என்பது தெரியவில்லை. வாயில், இறுதி, கடைசி போன்ற பொருள்களே இருந்துள்ளன.

எழுத்தாளன், ஓலைக்கணக்கர், திணைகள், நூலியலார் முதலியோர் இலக்கியங்களில் ஓலைகள் எழுதியவர்களாகவும்,[8] பயன்படுத்தியவர்களாகவும் காணப்படுகின்றனர். கல்வெட்டுகளில் மத்யஸ்தன், கரணத்தான், ஊர்-கோயில்-நகரக் கணக்கர்கள், திருமந்திர ஓலை, திருமந்திர ஓலை நாயகம், திணை முதலியோர் ஓலை ஆவணங்கள் எழுதுவோராகச் சொல்லப்பட்டுள்ளனர்.[9]

ஓலைகள் பட்டோலை, பொன்னோலை, மந்திர ஓலை, வெள்ளோலை, பாயோலை என்று இலக்கியங்களிலும்[10] அறையோலை, கையோலை, சபையோலை, இறையோலை, கீழ்ஓலை, தூதுஓலை, ஓலை பிடிபாடு என்று கல்வெட்டுகளிலும் பல வகைகளாகச் சொல்லப்பட்டுள்ளன.[11]

ஓலைகள் பாதுகாத்தல் பொருட்டு அவற்றின்மீது மஞ்சள் பூசப்பட்டது. அவை உடைந்துவிடாமல் இருக்க

ஓலைப்பெட்டிகளிலும் மரப்பெட்டிகளிலும் சிவப்பு அல்லது காவித்துணிகளில் சுற்றியும் வைக்கப்பட்டன. மரப்பெட்டிகளும் ஓலைப்பெட்டிகளும் கரையான் அரித்துவிடாமல் இருக்கத் தொங்கவிடப்பட்டன. அப்படித் தொங்குவது அசை எனப்பட்டது. ஓலைகளில் எழுதப்பட்ட எழுத்துக்கள் மை பூசப்பட்டுத் தெளிவாகத் தெரியச் செய்யப்பட்டன. மேற் சொன்னவற்றைத் தமிழ்விடு தூதுவின் பாடல் வரிகள் கீழ்வருமாறு சொல்கின்றன.

கண்மணிபோற்
பள்ளிக்கூடத்தசையாம் பற்பல தொட்டிற் கிடத்தித்
தள்ளிச் சிறார் கூடித்தாலாட்டி உள்ளிலகு
மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
மிஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்[12]

எழுதப்பட்ட ஓலைகள் கோயில் மற்றும் மடங்களில் அமைந்த பண்டாரங்களில் பாதுகாக்கப்பட்டன. இப்பண்டாரங்கள் கோயில் பண்டாரம், சரஸ்வதி பண்டாரம்[13] என்ற பெயர்களில் இருந்தன. பெரியபுராணம், சுந்தரர் கதையில் தந்தையின் கையெழுத்தைச் சரிபார்ப்பதற்காக பழைய ஓலைகள் அரண்தரு காப்பு[14] என்ற இடத்திலிருந்து எடுத்து வரப்பட்டதாகச் சொல்லும்.

தமிழகத்தில் கல்லில் எழுதப்பட்ட எழுத்துக்கள் கி.மு. 3ஆம் நூற்றாண்டு முதல் கிடைக்கின்றன. அவற்றில் கி.பி. 3ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் அறச்சலூர் கல்வெட்டில் தான் முதல்முதலாக எழுத்து என்ற சொல் காணப்படுகிறது.[15] கி.பி. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூலாங் குறிச்சிக் கல்வெட்டில்தான் முதன்முதலாக ஓலை என்ற சொல் காணப்படுகின்றது.[16] ஆனால் இவற்றிற்கு முன் சங்க இலக்கியம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் ஓலை, எழுத்து பற்றி செய்திகள் அறியக் கிடைக்கின்றன.[17]

தமிழகத்தில் கிடைக்கும் ஓலைச்சுவடிகள், இலக்கியம், மருத்துவம், மாந்திரியம், சோதிடம், சமயம், வணிகம், ஆவணங்கள், பள்ளி மாணவர்களுக்கான அரிச்சுவடி, எண்சுவடி என்ற வகைகளில் அடங்கிவிடக்கூடியவை. பொதுவாக எல்லாச் சுவடிகளும் ஒரே மாதிரியாக

இருந்தாலும் ஒவ்வொரு வகை ஓலைச்சுவடியிலும் ஒவ்வொரு வகையில் எழுதும் முறை தனித்துவம் பெற்றிருக்கும். இலக்கியச் சுவடிகளில் பாடல்களின் முடிவில் எண்களைக் காணலாம். இடதுபுற ஓரங்களில் அத்தியாயத் தலைப்புப் பெயர்களைக் காணலாம். மாந்திரிகச் சுவடிகளில் பலவகைச் சக்கரங்களின் (இயந்திரம்) படங்களைக் காணலாம். சோதிடச் சுவடிகளில் ராசி சக்கரங்களைக் காணலாம்; வணிகச் சுவடிகளில் பல்வேறு எண்களையும், குறியீடுகளையும் காணலாம். பள்ளிச்சுவடிகளில் பக்கவாட்டில் மூன்று நான்கு பத்திகள் பிரித்து எழுதப்பட்டுள்ளதைப் பார்க்கலாம்.18

ஓலைகளில் எழுதப்பட்டுள்ள செய்திகளை அறிந்து கொள்ள அவை எழுதப்பட்ட முறையைத் தெரிந்துகொள்ள வேண்டும். பொதுவாக ஒரு கட்டில் உள்ள சுவடிகள் ஒருவரால் எழுதப்பட்டிருந்தால் முதலிரு ஏடுகளைச் சிரமப்பட்டு படித்தால் அவர் எழுதுகின்ற முறை நமக்குப் புரிந்துபோகும். அதனை மனதில் கொண்டால் அடுத்த ஏடுகள் அவரது கையெழுத்து பழக்கப்பட்டதால் படிக்க எளிதாகிவிடும்.

ஓலைகளின் நார்த்தன்மை குறுக்கு வாட்டாக இருப்பதனால் ஆணியால் கிழித்து எழுதும்போதும், புள்ளியிடும்போதும், ஆணியை அடிக்கடி எடுத்து வைத்து எழுதும் போதும் இடர்பாடுகள் அதிகம் இருக்கும். எனவே ஓலை எழுத்துக்கள் புள்ளிகள் இல்லாமலும் மயங்கி மாறுபட்டும், கூட்டெழுத்துக்களாகவும், சுருக்கெழுத்துக்க ளாகவும் அமைந்தன. கணிதம், ஆவணம் மற்றும் வணிகச் சுவடிகளில் ஆண்டு, மாதம், தேதி, நிலம், பணம், ரூபாய், சாதிப் பெயர்கள் போன்றவை திரும்பத் திரும்ப வரும்போது அவை சுருக்கி எழுதப்பட்டு, பழக்கமான குறியீடுகளாக மாறின. அது மட்டும் அல்லாமல் தமிழுக்கென்றே தனி எண்கள் இருந்தமையும், பின்ன எண்கள் (கீழ் இலக்கம், கீழ்வாய் இலக்கம்) இருந்தமையும் அவை இன்று வழக்கில் இல்லாமல் போனமையும் சுவடிகளில் அவற்றைத் தெரிந்து பழகிக்கொள்ள வேண்டிய கட்டாயத்தை ஏற்படுத்தியுள்ளன.

அழியும் நிலையில் உள்ள ஏடுகள் புதிதாகப் படியெடுக்கப்பட்டன. ஒருவரிடம் உள்ள நூல் மற்றவருக்கு தேவைப்படும்போதும் படியெடுக்கப்பட்டது. அப்படி

படியெடுப்பது ஏடு திருப்புதல், பிரிநகல், சபாது என்று அழைக்கப்பட்டது.

ஏடுகள் எழுதும்போது ஏற்படும் தவறுகள் ஏட்டுக் குத்தம், எழுத்துக் குற்றம், சொற்குற்றம், வாசகப் பிழை, வரிமாறாட்டம் எனப்பட்டன. எலிகடி, வெட்டுச் செதுக்கு, செல் அரிப்பு முதலியவையும் குற்றங்களே.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ள பட்டியல்களில் எழுத்து மயக்கம், கூட்டெழுத்து, சுருக்கெழுத்து, குறியீடுகள், எண்கள் ஆகியவை சில ஓலைச்சுவடிகள் காணுமாறே வரைந்தெழுதி விளக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஊரிலும் பலர் ஓலைகள் எழுதியதாலும் இவ்வோலைகள் பல்வேறு காலம் மற்றும் எண்ணற்ற இடங்களைச் சேர்ந்தவை ஆதலாலும் எண்ணற்ற கையெழுத்து முறைகள் இருப்பது இயற்கை. எனவே இங்குப் பட்டியலில் வரைந்து தரப்பட்டதை விடப் பல்மடங்கு வேறுபாடுகளுடன் எழுத்துக்கள் அமையும். ஏற்கனவே சொல்லியது போல ஒரு சுவடிக்கட்டில் முதல் ஒன்றிரண்டு ஏடுகளைச் சிரமப்பட்டுப் படித்த பிறகு எழுதுவோரின் எழுத்து முறை நமக்குப் பழக்கம் ஏற்பட்டு அடுத்து வரும் ஏடுகள் படிப்பது நமக்கு எளிதாகிவிடும்.

## அடிக்குறிப்புகள்

1. கயிறு குழிசி ஓலை ( அகம்: 77 )

ஓலைக் கணக்கர் ஓலியடங்கு புள்செக்கர் ( நாலடி: 397 )

எழுதாத புத்தகத் தேட்டின் ( திருமந்திரம்: 2885 )

ஏடு கோளாளரெனையரென் றெண்ணி ( பெருங்கதை. உஞ்சை: 57, 153 )

பாட்டுப்புறமெழுதிய கட்டமை சுவடி ( பெருங்.மகத:1.12 )

பத்திரங் கொடுத்தொதுங்கிப் பத்திரன் பணிந்துநின்றான் ( திருவாலவாய் புராணம்: 55, 19 )

எதிர்போயேனும் பத்திரம் வென்றதாக ( மேலது 38, 24 )

பனைநுகும்பன்ன ( புறம்: 249 )

உண்ணுகுப்போலையுட் கண்விரித்தியற்றிய
( பெருங்.இலாவ:2, 130 )

நுகும்பினுவிடைப்பட வெழுதுக ( பெருங்.நரவான:2,130 )

இறை இழிச்சி இழிந்தினபடி நிலமுதல் பொத்தகத்தும் கைத்தடியினும் இறை இழிச்சி ( தென்னிந்தியக் கல்வெட்டுகள், தொகுதி 13, எண்.106 )

வியவஸ்தைத் தீட்டு, மேலது தொகுதி 7, எண்.109.

விலைப் பிரமாணத் தீட்டு, மேலது, தொகுதி 8, எண்.767, 708, 709.

இசைவுத்தீட்டு, புதுக்கோட்டை கல்வெட்டுகள், எண்.111.

வண்டோட்டுத் தொங்கின் ( பெரும்பாண். 353 )

கண் நூல் போனவன் ( சீவக. 113 உரை )

நூலறி புலவரை நோக்க ( சிலம். 25, 116 )

2. தமிழ்ப் பேரகராதி, சென்னைப் பல்கலைக் கழகம், 1962,

3-5. மேலது.

6. பொன்னோலை செம்பொனூசியாலெழுதி ( சீவக. 369 ), ஊசிவாசி, ஊசிக்காக, ஊசிகிரந்தம் முதலியவை கல்வெட்டுகளிலும், சுவடிகளிலும் எழுதுபவர் கொடுக்கும் அல்லது எழுதுபவருக்குக் கொடுக்கும் கட்டணமாகக் காட்டப்பட்டுள்ளன.

7. தமிழ்ப் பேரகராதி.

8. ஓலைக்கணக்கர், நாலடியார் 397.
மதுரை எழுத்தாளர் சேந்தம்பூதனார், அகம் 207, குறுந். 20, 226, மதுரை எழுத்தாளன், அகம். 84.

இவை பணியால் எழுதினேன் பெருந்திணை மாணி கெல்லன் எழுத்து; தெ.இ.க. தொகுதி 19, கல்வெட்டு எண்.254; மேலும் பார்க்க: தெ.இ.க. தொகுதி 14, க.எண்:453; தெ.இ.க. தொகுதி எண்.8, எண்கள் 278, 611, 618, 623.

9. மத்யஸ்தன் தெ.இ.க. தொகுதி 4 க.எண்.295, 297, 342.
காரணத்தான், தெ.இ.க. தொகுதி 4, க.எண்: 516, தொகுதி 5, க.எண்.592; நாட்டுக் கணக்கு.
தெ.இ.க. தொகுதி 7 க.எண்.22, 401; கோயில் கணக்கு, புதுக்கோட்டை கல்வெட்டுகள், 285, 304.
ஊர் சபைக் கணக்கு, தெ.இ.க. தொகுதி 14, 74, 19, 131, 141; நகரக் கணக்கு மேலது, தொகுதி 5, எண்.439.
திருமந்திரவோலை, திருமந்திர ஓலைநாயகம், தெ.இ.க. தொகுதி 8, க.எண். 222, 223; திணை - தெ.இ.க. தொகுதி 8, க.எண்.278, 611; 618.

10. எண்ணிய பாவமெங்கள் பட்டோலைக் குட்படுமோ
மேற்கோள், தமிழ்ப்பேரகராதி பொன்னோலை, சீவக.369; மந்திரவோலை போக்கிய வண்ணமும்; திருமுகம்
(பெருங்கதை மகத. 25, 39)
வெள்ளோலை கண் பார்க்க கையாலெழுதானை
முத்திரையிடப்படாத ஓலை் மேற்கோள், தமிழ்ப் பேரகராதி.
வாயோலை உத்திரமேரூர் கல்வெட்டு.

11. சபையோலை, தெ.இ.க. தொகுதி 23, 114: கையோலை - மேலது 8, 206;
இறையோலை, மேலது 10, 378; அறையோலை, அறவோலை பள்ளன்கோயில், கரந்தை செப்பேடுகள், கீழ்ஓலை, இரகசிய ஓலை, தெ.இ.க. தொகுதி 7, 118; தூது ஓலை, மேலது 4, 456; ஓலை பிடிபாடு, மேலது 4, 361, 373.

12. தமிழ் விடு தூது 23, 25 கண்ணிகள், கழக வெளியீடு, 1964.

13. பண்டாரம் தெ.ம.க. தொகுதி எண்.8, 44, 53, 55, சரஸ்வதி பண்டாரம். இ.க.130, 1938-39; 696, 1916.

14. அரண்தரு காப்பில் வேறொன்றமைத்துடன் ஒப்புநோக்கி, பெரியபுராணம் 1:5:62.

15. எழுத்துப்புணருத்தான் மணிய வண்ணக்கன் தேவன் சாத்தன், கல்வெட்டியல், பக்.66, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை.

16. ஓலை எழுதுவான்றாமன்காரி, கடைப்பி ஓலை காற்கண்டு, பூலாங்குறிச்சிக் கல்வெட்டு, வரிகள் 12-13.

17. கூர்உளி குயின்ற கோடுமாய் எழுத்து, அகம்.343.
எழுத்துடைக்கல் நிரக்கவாயில், ஐந்திணை எழுபது: 29.
தூது ஓய் பார்ப்பான் மடிவெள்ஓலை, அகம்:337.
எழுதினான் ஓலை பழுது, பழமொழி: 29.
அவயத்தூர் ஓலை பகடுகாப்பு யாத்துவிட்டாங்கு, கலி.94.

18. எண்சுவடியில் ஐந்தாம் வாய்ப்பாடு குறியீடுகளால் பின்வருமாறு இருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| 1x5 = 5 | 2x5 = 10 | 3x5 = 15 | 4x5 = 20 |
| 10x5 = 50 | 20x5 = 100 | 30x5 = 150 | 40x5 = 200 |
| 100x5 = 500 | 200x5 = 1000 | 300x5 = 1500 | 400x5 = 2000 |

## எழுத்து மயக்கம்

| | |
|---|---|
| அணிந்தார் | உம்பர் |
| அய்யன் | உமிந்ததுவும் |
| அர்ச்சுணன் | ஒரு |
| அன்னேரம் | ஓம் |
| அன்று | கல்லன் |
| ஆடகமண்டப | கருணை |
| ஆணை | குலை |
| ஆதித்தன் | கேட்டான் |
| ஆதிதாளம் | சீரங்கள் |
| ஆர்வடமுத்து | சிவகாமி |
| ஆனால் | சிறுபூளை மாலை |
| இச்சித்தேன் | சிறுவயிறு |
| இவர் | சுப்பராயகவுண்டன் |
| இனி | சேர்ந்தார் |
| ஈட்டி | சேனை |
| ஈழம் | சோராமலே |
| சொர்ன்னகோபுரம் | வெளி |
| தம்பிறானை | மாகாளி |
| தலையை | |
| தீர்த்தம் | |
| தில்லை | |

